ஓம்.

பரப்ரம்மணேநம:

சோபநிஷத் பதவுரையோடு கூடிய

# திராவிடபாஷியம்.

இதிலுள்ளவை

சங்கர ராமாநுஜ மத்வ பாஷ்யத்துடன்

கேந, கட, ப்ரஸ்ந, முண்டக, மாண்டூக்ய கௌடபாத

காரிகை, தைத்திரீய, ஐதரேய, ப்ரஹதாரணிய,

சாந்தோக்கிய உபநிஷத்துக்கள்.

மதத்ரய வித்வான்களைக்கொண்டு

தமிழில் மொழிபெயர்ப்பித்து,

கெ. அநந்தாசாரியரவர்களால்

சென்னை :

மதராஸ் ரிப்பன் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

---

1900.



இதன் விலை ரூபா 6-0-0.

# தசோபநிஷத் பாஷ்யம்

## தமிழில் மொழிபெயர்ப்பு.

| | | ரூ. | அ. | பை. | வி. | | |
|---|---|---|---|---|---|---|---|
| ஈசாவாஸ்யோபநிஷத் | .. | 0 | 2 | 0 | | | |
| கேனோபநிஷத் | .. | 0 | 2 | 0 | | | |
| கடோபநிஷத் | .. | 0 | 9 | 0 | | | |
| ப்ரச்நோபநிஷத் | .. | 0 | 7 | 0 | | | |
| முண்டகோபநிஷத் | .. | 0 | 6 | 0 | | | |
| மாண்டூக்யோபநிஷத் கௌடபாதகாரிகை | .. | 0 | 14 | 0 | | | |
| தைத்திரீயோபநிஷத் | .. | 1 | 2 | 0 | | | |
| ஐதரேயோபநிஷத் | .. | 0 | 2 | 0 | | | |
| ப்ருஹதாரண்யகோபநிஷத் | .. | 1 | 4 | 0 | | | |
| சாந்தோக்யோபநிஷத் | .. | 1 | 4 | 0 | | | |
| 10-சேர்க்க உள்பட ஆகமொத்தம் | ... | 6 | 0 | 0 | 0 | 8 | |

இவ்வுபநிஷத்துகள் தனித்தனியே கொடுக்கப்படமாட்டா.

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| பதபதம் பகவத்கீதை கிரந்தம் தமிழ் எழுத்தில் கிரந்த சுலோகம் மொழி பெயர்ப்பு சங்கர ராமாநுஜ மத்வபாஷ்யத்துடன் சேர் கிலிட் பயிண்டு. | | 1 | 0 | 0 | 0 | 4 | 0 |
| பகவத்கீதை கிரந்த சுலோகம் தமிழ் சுலோகம் சங்கர ராமாநுஜ மத்வ பாஷ்யம் தமிழில் மொழிபெயர்ப்பு. | | 0 | 12 | 0 | | | |
| தைத்திரீயோபநிஷத் பயிண்டுடன் | ... | 1 | 4 | 0 | 0 | 4 | 0 |
| தேசிகப்பிரபந்த வியாக்கியானம் | ... | 3 | 0 | 0 | 0 | 5 | 0 |
| வடகலை குருபரம்பரை | ... | 0 | 12 | 0 | 0 | 4 | 0 |
| தென்கலை ௸ ... | ... | 0 | 12 | 0 | 0 | 4 | 0 |
| ரக்ஷையில் தெலுங்குலிபி ருத்ரபாஷ்யம். | | 1 | 12 | 0 | 0 | 4 | 0 |

இப்புத்தகங்கள் வேண்டியவர்கள் சென்னை பெத்துநாயக்கன்பேட்டை ராகி மடத்துக்கு அடுத்த போலீஸ் இராகவாசாரி தெரு 8-ெந. வீடு அநந்தாசாரியவர்களிடம் கிடைக்கும்.

மேல்கண்ட புஸ்தகங்கள் தவிர இதர புஸ்தகம் வாங்கி அனுப்பப்படமாட்டாது.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# அவதாரிகை.

[illegible]
[illegible]

[illegible]
[illegible]

యేనాత్మనా పరేణేశా వ్యాప్తం విశ్వమశేషతః। సోఽహం దేహద్వయోస్సాక్షీ పశ్యన్ దేహాంతరస్థితః॥
అతసీగుచ్ఛసచ్ఛాయమంచితోరస్థలం శ్రియా। అంజనాచలశృఙ్గారమఞ్జలిర్మమ గాహతామ్॥

---

உலகத்திலெல்லோரும சுகத்தை விரும்புவது ப்ரத்யக்ஷமாயிருக்கிறது. ஆகையாலது புருஷார்த்தமென்று சொல்லப்படுகிறது. புருஷனுலர்த்திக்கப்படுவது புருஷார்த்தமென்று வழங்கி வருகிறது. இங்கு புருஷர்கள் என்பது நல்லறிவுடையோர். இதனுல் ஸ்திரீகளும் கூட்டிக்கொள்ளப்படுகிறார்கள். நல்லறிவென்றதினுல் புல் முதலியது தள்ளப்பட்டது. அவற்றுக்கும் "[illegible]" என்கிற மனுவசனத்தின்படி அறிவு, சுகம், துக்கம் இவைகள் உண்டாயிருந்தபோதிலும் அவைகள் சுகத்தை விரும்புவது முதலியவை பிறரால் அறிந்துகொள்ளமுடியாததாதலின் அவைகளையுங் கூட்டுவதிற்பயனில்லை. ஆகவிப்படி எல்லோராலும் விரும்பப்படுவது புருஷார்த்தமெனப் பெறப்பட்டது. அதுதான் சுகமேயல்லது வேறில்லை என்பதை முன்னமே சொன்னோம். இந்த சுகமும் நித்யசுகமென்றும் அநித்யசுகமென்று மிரண்டுபடியாயிருக்கும் இதில் அநித்யசுகம் காமம் ஆதலாலிதனைத் தமிழரும் சிற்றின்பமென்பர், நித்யசுகம் பிரம்மம். இதனையே மோக்ஷமென்றும்சொல்லுகிறது. "[illegible]" என்று பகவான்தானே சொன்னான். தர்மம், அர்த்தம் என்பவை யிரண்டும் சுகமாகாவிடினும் சுகத்திற்கு ஸாதநமாக விரும்பப்படுதலால் புருஷார்த்தமென்று பெயர் பெற்றது. இந்த நான்கு புருஷார்த்தங்களில் மோக்ஷமே சிறந்தது. நிலையான சுகம் அற்ப

மாஞலும், அதற்கு விரோதமாக, சிலகால மனுஷிகஸுகம் கிடைத்தாலும் புத்திமான்கள் அதை விரும்புகிறதில்லை. ஆகையால் எல்லையில்லாபேரின்பமான மோக்ஷசுகமுண்டென்றறிந்தவன், சிற்றின்பத்தைத் தள்ளி மோக்ஷத்தையே விரும்புவான். இப்படி யறிவுடையோர் முக்யமாய் விரும்புகிற மோக்ஷத்தைப் பெறுதற்குச் சாதனம் தத்வஜ்ஞானமே யல்லது மற்றொன்று காணப்படாது. அதாவது பிரம்மத்தை யுள்ளபடியறிதல். இப்பிரபஞ்சமானது ஜகஜ்ஜன்மாதிகாரணமான பிரம்மத்திஞல் வ்யாபிக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் பிரம்மம் என்று பெயர்பெற்றது இந்த பிரம்ஸ்வரூபத்தை "வேதைச்சஸர்வைரஹமேவவேத்ய:" "வசஸாம்வாச்யமுத்தமம்" இத்யாதிகளின்படியே, இருக்கு, யஜுஸ்ஸு, ஸாமம், அதர்வணம் என்கிற நான்கு வேதங்களும், வேதோப ப்ரம்மணங்களான பதினெண் புராணங்களும், ஈசாவாஸ்ய முதலான உபனிடதங்களும் நன்குணர்த்துகின்றன. ஆஞலும், பூர்வபாகங்களில் பிரம்மாராதனமான கர்மங்களைப் பெரும்பாலும் பேசும். உபனிடதங்களென்று பெயர்பெற்ற உத்தரபாகங்களில் பிரம்மஸ்வரூபத்தையே மிகவும் சொல்லுகிறது. ஆகையால் ஜனங்கள் மோக்ஷமாகிற உயர்ந்த மித்தையின்பேரி லேறுவதற்கு, உபநிடதங்களாகிற படிகள் முக்கியமாயிருக்கும். ஆகையால் இதினுடைய அர்த்தங்களை எல்லோரும் அறிந்து தெளியும்பொருட்டு, தமிழில், முன்னோர்களான மத்வ, சங்கர, ராமானுஜாசாரியர்கள், செய்த பாஷ்யத்தின்படி வ்யாக்யானம் செய்யப்படுகிறது. இந்த உபனிடங்களின் பாவார்த்தங்களை எல்லாமெடுத்துச் சொல்ல ஆயிரம் நாவைப்படைத்த ஆதிசேஷனும் முடியாதாகையால் கூறியவளவு சந்தோஷிக்கவேண்டியது. "தர்மஸ்யதத்வம் நிஹிதம்குஹாயாம்" என்பதையுங் கைக்கொள்ளவேண்டியது.

பரப்ரஹ்மணே நம:.

மதத்ரய பாஷ்யத்ரயத்தை யநுஸரித்த

# தசோபநிஷத்துக்களின்

த்ராவிடப்ரதிபத பாஷ்யம்.

## ஈசாவாஸ்யோபநிஷத்.

க. ௐ. ஈசாவாஸ்யமிதம் ஸர்வம் யத்கிஞ்ச ஜகத்யாம் ஜகத் ।
தேந த்யக்தேந புஞ்ஜீதா மா க்ருத: கஸ்யஸ்வித் தநம் ॥

౧. ఈశావాస్యమిదం సర్వం యత్కించ జగత్యాం జగత్ ।
తేన త్యక్తేన భుఞ్జీథా మా గృధః కస్యస్విద్ధనమ్ ॥

(ப்ரதிபதம்.)

ஜகத்யாம் - பூமியில், யத்கிஞ்ச - எது, எது. (அஸ்தி-தோற்றுகிறதோ,) ஸர்வம் - இந்த சமஸ்தமான, ஜகத் - லோகமெல்லாம், ஈசா - ஈச்வரனாலே, வாஸ்யம் - வாஸம்செய்யப்பட்டிருக்கிறது (எல்லாம்பகவானுடைய உடைமை என்றபடி,) தேந - ஆகையாலே, த்யக்தேந - நமக்கென்கிற புத்தியை விடுவதினாலே, (ஆத்மாநம் - தன்னை,) புஞ்ஜீதா: - காப்பாற்றவேண்டும், கஸ்யஸ்வித் - எவனுடையவும், தநம் - பொருளை, மாக்ருத: - விரும்பாதே.

ஶங்கரபாஷ்யம்.

இந்த ஈசாவாஸ்யத்தில்-௰அ-மந்திரங்கள் ஆத்மாவுக்கு கர்மத்தைப்போக்கி நிஜமான விஜ்ஞானத்தை உண்டாக்குகின்றன. நாமரூப விகாராத்மகமான இந்த பிரபஞ்சமானது ஈச்வரனாலே வியாபிக்கப்பட்டிருக்கிறது. ஈச்வரபாவனையினாலே நாமரூபவிகாரங்கள் விட்டுப்போம். இந்த பாவத்தோடே கூடினவனுக்கு சந்நியாசமே அதிகாரம், இந்த சந்நியாசத்தினாலே ஆத்மாவை ரக்ஷித்துக்கொள்ளவேண்டும் உன் ஸம்பந்தம் தவிர இதர சம்பந்தத்தை விரும்பாதேயென்று ஆத்மக்ஞானிக்கு இந்த முதன் மந்திரம் ஸர்வகர்மஸந்யாஸ பூர்வகமான ஞானநிஷ்டையாலே ஆத்மஸ்வரூபமானது இரக்ஷிக்கப்படவேண்டுமென்று போதிக்கிறது.

# ஈசாவாஸ்யோபநிஷத்

*ரங்க ராமாநுஜபாஷ்யம்.*

இந்த சராசராத்மகமான பிரபஞ்சமானது, ஸர்வ ஜகத் கர்த்தாவாய ஸ்ரீயஃபதியாலே வியாபிக்கப்பட்டிருப்பதால் இந்த ஜகத்தோடே கூட்டிக்கொண்டு ஸ்ரீயஃபதியை யுபாஸிக்கவேண்டியதேகத்தோடு கூடினவனுக போக்கியவஸ்துக்களை யனுபவிக்கவேண்டும். ஆகிலும் பிறர்பொருளை யபஹரிக்கக்கூடாது. முமுக்ஷுவுக்கு ஸர்வவைராக்கிய மிருக்கவேண்டியது அவசியமென்று இந்த முதன்மந்திரமானது வுபதேசிக்கிறது.

௨. 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍𑌨𑍇𑌵𑍇𑌹 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌜𑌿𑌜𑍀𑌵𑌿𑌷𑍇𑌚𑍍𑌛𑌤𑌂𑌸𑌮𑌾𑌃 ।
𑌏𑌵𑌂 𑌤𑍍𑌵𑌯𑌿 𑌨𑌾𑌨𑍍𑌯𑌥𑍇𑌤𑍋𑌽𑌸𑍍𑌤𑌿 𑌨 𑌕𑌰𑍍𑌮 𑌲𑌿𑌪𑍍𑌯𑌤𑍇 𑌨𑌰𑍇 ॥

౨. కుర్వన్నేవేహ కర్మాణి జిజీవిషేచ్ఛతగ్ం సమాః।
ఏవం త్వయి నాన్యథేతోఽస్తి న కర్మ లిప్యతే నరే॥

(ப்-ம்.) 𑌇𑌹 - இவ்விடத்தில், 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 - அக்கினிஹோத்திராதி கர்மங்களை, 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍𑌨𑍇𑌵 - செய்துகொண்டே, 𑌶𑌤𑌂𑌸𑌮𑌾𑌃 - நூறுவருஷங்களும், 𑌜𑌿𑌜𑍀𑌵𑌿𑌷𑍇𑌤𑍍 - பிழைத்திருக்க விரும்பக்கடவன், 𑌏𑌵𑌂 - இந்த ப்ரகாரம், 𑌨𑌰𑍇 - மனுஷ்யாபிமானியாகிற, 𑌤𑍍𑌵𑌯𑌿 - உன் விஷயத்தில், 𑌇𑌤𑌃 - இந்த அக்கினிஹோத்திராதி கர்மங்களைக்காட்டிலும், 𑌅𑌨𑍍𑌯𑌥𑌾 - வேறுவிதம், 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 - இல்லை, (𑌏𑌵𑌂 - இந்த பிரகாரத்தினால்,) 𑌕𑌰𑍍𑌮 - அக்கினிஹோத்திராதி கர்மமானது; 𑌨 𑌲𑌿𑌪𑍍𑌯𑌤𑍇 - ஒட்டாது.

ஸம்-ஸா.—இவ்விரண்டாவது மந்திரமானது, முதன் மந்திரத்தில் சொன்ன ஆத்மதத்வம் தெரிந்துகொள்ள சக்தியில்லாதவனுக்கு, புருஷாயுஃ பிரமாணமான நூறுவருஷங்களும் சாஸ்த்ரோக்தமான கர்மங்களை எவ்விதத்திலே நீ கட்டப்படமாட்டாயோ அந்த விதமாய்ச்செய். உனக்கு இதைவிட வேறே மார்க்கமில்லையென்று போதிக்கிறது.

ரா-ஸா.—புருஷாயுஃ பிரமாணமான நூறுவருஷபரியந்தம், நித்திய நைமித்திக கர்மங்களைச்செய்து பிழைக்கவேண்டும். நீ ஸர்வேச்வர பரதந்திரனாயிருப்பதைக்காட்டிலும் வேறே அனுஷ்டானம் கிடையாது. பக்தியோகமானது அடையுமென்று இந்த மந்திரம் கூறுகிறது.

௩. 𑌅𑌸𑍁𑌰𑍍𑌯𑌾 𑌨𑌾𑌮 𑌤𑍇 𑌲𑍋𑌕𑌾 𑌅𑌨𑍍𑌧𑍇𑌨 𑌤𑌮𑌸𑌾𑌽𑌽𑌵𑍃𑌤𑌾𑌃 ।
𑌤𑌾𑌂𑌸𑍍𑌤𑍇 𑌪𑍍𑌰𑍇𑌤𑍍𑌯𑌾𑌭𑌿𑌗𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑌿 𑌯𑍇 𑌕𑍇 𑌚𑌾𑌤𑍍𑌮𑌹𑌨𑍋 𑌜𑌨𑌾𑌃 ॥

3. అసుర్యా నామ తే లోకా అంధేన తమసావృతాః।
తాగ్ంస్తే ప్రేత్యాభిగచ్ఛన్తి యే కే చాత్మహనో జనాః॥

(ப்-ம்.) 𑌅𑌸𑍁𑌰𑍍𑌯𑌾𑌃 𑌨𑌾𑌮 - அஸுரர் முதல் பிரசித்தமான தேவாதி ஜன்மங்கள், (𑌯𑍇 - எதுவோ,) 𑌤𑍇 - அந்த, 𑌲𑍋𑌕𑌾𑌃 - கர்மபலமான துக்கங்களையனுபவிக்கிற ஜன்மங்கள், 𑌅𑌨𑍍𑌧𑍇𑌨 - அஞ்ஞானரூபமான, 𑌤𑌮𑌸𑌾 - அந்தகாரத்தினால், 𑌆𑌵𑍃𑌤𑌾𑌃 - மூடப்பட்டு இருக்கின்றன, 𑌆𑌤𑍍𑌮𑌹𑌨𑌃 - ஆத்மாவைக் கொல்லுகிற, 𑌜𑌨𑌾𑌃 - ஜனங்கள், 𑌯𑍇 𑌕𑍇 𑌚 - எவரெவரோ, 𑌤𑍇 - அவ

, வெ௷த்ய - மரணமடைந்து, தாநு - அந்த தேவாதி ஸ்தாவராந்த ன ஜன்மங்களை, அபி஗ச்஛ந்தி - அடைகிறார்கள்,

ஸம-ஹா.—தேவாதிஜன்மங்கள் கர்மபலனை அனுபவிக்கிற ஜன்மங்கள்.—அஞ்ஞானிகள், இந்த தேகம் விட்டபிறகு, அஞ்ஞானத்தினாலே மூடப்பட்ட தேவாதி ஸ்தாவரம் வரையிலிருக்கிற ஜன்மங்களில் அவரவர்கள் கர்மானுரூபமான ஜன்மங்களை அடைகிறார்கள்.—என்று இம்மூன்றாவது மந்திரம் அஞ்ஞானத்தை தூஷிக்கிறது.

ஶா-ஹா.—அசுரசுபாவங்கள் இருளினாலே மூடப்பட்டிருக்கின்றன, எவர்கள், மனுஷ்யஜாதியா யிருந்தாலும் தேவஜாதியான பிரம்மாதிகளா யிருந்தாலும் ஆத்மஞானமில்லாமல் கேவலமான கர்மநிஷ்டர்களா யிருக்கிறார்களோ,—அவர்கள் மரணத்தை அடைந்த பிறகு பூமி, ஆகாயம், சுவர்க்கமென்கிற நரகங்களை யடைகிறார்கள்.

௪. அநேஜதேகம் மநஸோ ஜவீயோ நைநத்தேவா ஆப்நுவந்பூர்வமர்ஷத் | தத்தாவதோऽந்யாநத்யேதி திஷ்டத்தஸ்மிந்நபோ மாதரிஶ்வா ததாதி ||

౪. అనేజదేకంమనసోజవీయోనైనద్దేవాఆప్నువన్పూర్వమర్షత్ |
తద్ధావతోఽన్యానత్యేతి తిష్ఠత్తస్మిన్నపోమాతరిశ్వాదధాతి॥

(ப-ம்.) அநேஜத் - சலியாததும், ஏகம் - ஒன்றானதும், மநஸ: - மனதைக்காட்டிலும், ஜவீய: - வேகமுள்ளதும், பூர்வம் - முன்னமே, அர்ஷத் - அடையப்பட்டு இருக்கிறதுமான, ஏநத்-இந்தவிடத்தில்சொல்லியிருக்கிற ஆத்மாவை, தேவா: - விளங்கிக்கொண்டிருக்கிற இந்திரியங்கள், நாப்நுவந் - அடையா, தத்-அந்த ஆத்மாவனது, தாவத: - ஓடுகிற, அந்யாந் - ஆத்மாவைக்காட்டிலும் வேறான மனோவாக் காயங்களை, அத்யேதி - அதிக்கிரமித்துக்கொண்டே இருக்கிறது, தஸ்மிந்-அந்த ஆத்மசுவரூபத்தில், திஷ்டத் - இருக்கிற, மாதரிஶ்வா-வாயுவானது, அப: - பிராணிகளுடைய சேஷ்டாரூபகர்மங்களை, ததாதி - தரிக்கிறது.

ஸம-ஹா.—அஞ்ஞானிகள், ஆத்மதத்துவங்களைத் தெரிந்துகொள்ளாமல், ஜனனமரணரூபமான சம்சாரத்தில் அமிழ்ந்திருக்கிறார்கள்? அவர்கள் ஜனனமரணங்களையடையும் சரீரத்தை அடைகிறார்கள், ஆத்மதத்துவங்களை யறிந்துகொண்டவர்கள், ஜனனமரணங்களை அடைகிறதில்லை.—என்று இந்த மந்திரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

ஶா-ஹா.—எக்காலத்திலும் சலித்துக் கொண்டிருக்கிற மனதைக் காட்டிலும் வேகமான பரபிரம்மத்தை பிரம்மருத்திராதிகள் அடைகிறதில்லை. எவ்விடத்திலும் வியாபித்துக் கொண்டு பிரம்மருத்திராதிகளை அதிக்கிரமிக்கிறது. வாயுதேவனிடத்தில் இருக்கிற காற்றானது ஜலம் முதலானதுகளை யடைகிறது. "யத்ஸூர்யாக்நிநக்ஷத்ரம் ஸம்பிரோக்ஷாத்ரீ | வாயுதேவஸ்ய வீர்யேண வித்யுத்காதிஸாக்ஷிண:" என்று சொல்லப்பட்டது.

௫. 𑌤𑌦𑍇𑌜𑌤𑌿 𑌤𑌨𑍍𑌨𑍈𑌜𑌤𑌿 𑌤𑌦𑍍𑌦𑍂𑌰𑍇 𑌤𑌦𑍍𑌵𑌨𑍍𑌤𑌿𑌕𑍇 ।
𑌤𑌦𑌨𑍍𑌤𑌰𑌸𑍍𑌯 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌤𑌦𑍁 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯𑌾𑌸𑍍𑌯 𑌬𑌾𑌹𑍍𑌯𑌤𑌃 ॥

౫. తదేజతి తన్నైజతి తద్దూరే తద్వంతికే।
తదంతరస్య సర్వస్య తదు సర్వస్యాస్య బాహ్యతః॥

(ப-ம்.) (𑌯𑌤𑍍-எந்த ஆத்மதத்துவமானது, 𑌵𑍍𑌯𑌾𑌖𑍍𑌯𑌾𑌤𑌂-இப்போது சொல்லப்பட்டதோ) 𑌤𑌤𑍍-அந்த ஆத்மதத்துவமானது, 𑌏𑌜𑌤𑌿-சலிக்கிறது, 𑌤𑌤𑍍-அந்த ஆத்மதத்துவமானது, 𑌨𑍈𑌜𑌤𑌿-சலிக்கிறதில்லை, 𑌤𑌤𑍍-அந்த ஆத்மதத்துவம், (𑌅𑌵𑌿𑌦𑍁𑌷𑌾𑌂-அஞ்ஞானிகளுக்கு,) 𑌦𑍂𑌰𑍇 - வெகுதூரத்திலும், 𑌤𑌦𑍁 - அந்தப்பிரகாரமே, (𑌵𑌿𑌦𑍁𑌷𑌾𑌂 - ஞானிகளுக்கு,) 𑌅𑌨𑍍𑌤𑌿𑌕𑍇 - சமீபத்திலும், 𑌤𑌤𑍍-அந்த ஆத்மதத்துவமானது, 𑌅𑌸𑍍𑌯-இந்த, 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯-சமஸ்த உலகத்திற்கும், 𑌅𑌨𑍍𑌤𑌃-நடுவிலும், 𑌤𑌤𑍍-அந்த ஆத்மதத்துவமே, 𑌅𑌸𑍍𑌯-இந்த ஜகத்திற்கு, 𑌬𑌾𑌹𑍍𑌯𑌤𑌃 - வெளியிலும், (𑌅𑌸𑍍𑌤𑌿 - இருக்கிறது).

ஸம்-ஹா.—இப்போது சொல்லப்பட்ட அந்த ஆத்மதத்துவமானது, சலிக்கப்பட்டு அஞ்ஞானிகளுக்கு தூரமாயிருக்கிறது. ஞானிகளுக்கு சமீபமாயிருக்கிறது. சர்வபிரபஞ்சமும் அழிவுள்ளதென்று இந்தமந்திரம் சொல்லுகிறது.

ரா-ஹா.—பிரம்மமானது சலிக்கிறதுபோலத் தோன்றும். உண்மையில் சர்வவியாபியான பிரம்மமானது சலிக்கிறதில்லை. அந்த பிரம்மமானது அஞ்ஞானிகளாகிய அசுரப்பிரகிருதிகளுக்கு தூரத்திலும், ஞானிகளாகிய தேவபிரகிருதிகளுக்குச் சமீபத்திலுமிருக்கிறது. அந்த பிரம்மமானது, இந்த பிரபஞ்சத்துக்குள்ளேயும் வெளியேயுமிருக்கிறதென்று இந்த மந்திரமானது சொல்லுகிறது.

௬. 𑌯𑌸𑍍𑌤𑍁 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌨𑍍𑌯𑍇𑌵𑌾𑌨𑍁𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 ।
𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 𑌚𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌤𑌤𑍋 𑌨 𑌵𑌿𑌜𑍁𑌗𑍁𑌪𑍍𑌸𑌤𑍇 ॥

౬. యస్తు సర్వాణి భూతాన్యాత్మన్యేవానుపశ్యతి।
సర్వభూతేషు చాత్మానం తతో న విజుగుప్సతే॥

(ப-ம்.) 𑌯𑌸𑍍𑌤𑍁 - யாதொரு ஞானியானவன், 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 - சமஸ்தமான பூதங்களையும், 𑌆𑌤𑍍𑌮𑌨𑍍𑌯𑍇𑌵 - தன்னிடத்திலேயே, 𑌅𑌨𑍁𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 - பார்க்கிறானோ, 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 - ஸமஸ்த பிராணிகளிடத்திலும், 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 - தன்னை, 𑌅𑌨𑍁𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 - பார்க்கிறானோ, (𑌸𑌃 - அந்த ஞானியானவன்,) 𑌤𑌤𑌃-அந்த காரணத்தினால், 𑌨 𑌵𑌿𑌜𑍁𑌗𑍁𑌪𑍍𑌸𑌤𑍇-நிந்தை செய்கிறதில்லை.

ஸம்-ஹா.—ஆத்மதத்துவம் தெரிந்துகொண்ட எந்த ஞானியானவன், தான் எல்லாப் பிராணிகளிடத்திலும் இருப்பதாயும் தன்னிடத்தில், எல்லாப் பிராணிகளுமிருப்பதாயும் பார்க்கிறானோ.—அவன் ஒருபோதும் நிந்தைசெய்கிறதில்லை யென்று இந்தமந்திரம் போதிக்கிறது.

ரா-ஹா.—எந்த ஞானியானவன், சமஸ்த பிராணிகளையும் தன்னிடத்திலிருப்பதாயும் தான், சர்வபிராணிகள் ரூபமான பிரம்மாதி ஸ்தாவராந்தங்களிடத்திலுமி

ருப்பதையும் பார்க்கிறானோ, அந்த ஞானியானவன் நிந்தைபண்ணுகிறதில்லையென்று அர்த்தம்.

𑌯𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿𑌭𑍂𑌤𑌾𑌨𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑍈𑌵𑌾𑌭𑍂𑌦𑍍𑌵𑌿𑌜𑌾𑌨𑌤𑌃 ।
𑌤𑌤𑍍𑌰𑌕𑍋𑌮𑍋𑌹𑌃𑌕𑌃𑌶𑍋𑌕𑌏𑌕𑌤𑍍𑌵𑌮𑌨𑍁𑌪𑌶𑍍𑌯𑌤𑌃 ॥

౭. యస్మిన్సర్వాణిభూతాన్యాత్మైవాభూద్విజానతః।
తత్రకోమోహఃకశ్శోకఏకత్వమనుపశ్యతః॥

(ப-ம்.) 𑌯𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 - எந்த ஆத்மஸ்வரூபத்தில், 𑌵𑌿𑌜𑌾𑌨𑌤𑌃 - ஆத்மதத்வம் தெரிந்தவனுக்கு, 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿-சமஸ்தங்களான, 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿-பூதங்கள், ஆத்மைவ - ஆத்துமஸ்வரூபமே, 𑌅𑌭𑍂𑌤𑍍-ஆகிறதோ, 𑌤𑌤𑍍𑌰 - அந்த ஆத்மஸ்வரூபத்தில், 𑌏𑌕𑌤𑍍𑌵𑌂 - ஒன்றாயிருக்கையை, 𑌅𑌨𑍁𑌪𑌶𑍍𑌯𑌤𑌃-பார்க்கிறவனுக்கு, 𑌮𑍋𑌹𑌃 - மோஹமானது, 𑌕𑌃-ஏது, 𑌶𑍋𑌕𑌃-துக்கமானது, 𑌕𑌃 - ஏது.

𑌸𑌂-ஸா.—முன்சொன்ன ஆத்மதத்துவம் தெரிந்துகொண்டு தன் ஸ்வரூபமும் ஸர்வஸ்வரூபமும் ஒன்றென்று தெரிந்துக்கொண்டவனுக்கு, ஸம்ஸாரத்திலுண்டான சோகமோஹங்களெல்லாம் நாசமாய் விடுகிறதென்று இம்மந்திரம் சொல்லுகிறது.

ரா-ஸா.—இந்த பிரகாரம் உபதேசகாலத்தில், ஸ்வதந்திரபரதந்திரரூபபேதத்தாலே, ஜீவாத்ம பரமாத்மாக்களை அறிந்தவனுக்கு, ஸ்தாவரஜங்கமங்கள்யாவும் தானேயாகிறது. அப்படி தியானிக்கிற ஸமயத்தில், இராம சுக்கிரீவர்கள்போல் ஜகத்தும் பிரம்மமும் ஸம்பந்தத்தாலே ஒன்றென்று தெரிந்துக்கொண்டவனுக்கு தான்ஸ்வதந்திரன் என்கிறமோஹம் கிடையாது. ஸர்வம் பரமாத்மாவினுலேயாகிறது. ஆகையால் புத்திராதிமரணத்தில் துக்கமும் கிடையாது.

அ. 𑌸𑌪𑌰𑍍𑌯𑌗𑌾𑌚𑍍𑌛𑍁𑌕𑍍𑌰𑌮𑌕𑌾𑌯𑌮𑌵𑍍𑌰𑌣𑌮𑌸𑍍𑌨𑌾𑌵𑌿𑌰𑌂𑌶𑍁𑌦𑍍𑌧𑌮𑌪𑌾𑌪𑌵𑌿𑌦𑍍𑌧𑌂।
𑌕𑌵𑌿𑌰𑍍𑌮𑌨𑍀𑌷𑍀𑌪𑌰𑌿𑌭𑍂𑌸𑍍𑌸𑍍𑌵𑌯𑌂𑌭𑍂𑌰𑍍𑌯𑌾𑌥𑌾𑌤𑌥𑍍𑌯𑌤𑍋𑌽𑌰𑍍𑌥𑌾𑌨𑍍𑌵𑍍𑌯𑌦𑌧𑌾𑌚𑍍𑌛𑌾𑌶𑍍𑌵𑌤𑍀𑌭𑍍𑌯𑌸𑍍𑌸𑌮𑌾𑌭𑍍𑌯𑌃 ॥

౮. సపర్యగాచ్ఛుక్రమకాయమవ్రణమస్నావిరంశుద్ధమపాపవిద్ధం।
కవిర్మనీషీపరిభూస్స్వయంభూర్యాథాతథ్యతోఽర్థాన్వ్యదధాచ్ఛాశ్వతీభ్యస్సమాభ్యః॥

(ப-ம்.) 𑌶𑍁𑌕𑍍𑌰𑌂 - தேஜசுடையவனும், 𑌅𑌕𑌾𑌯𑌂 - சரீரமில்லாதவனும், 𑌅𑌵𑍍𑌰𑌣𑌂 - காயமில்லாதவனும், 𑌅𑌸𑍍𑌨𑌾𑌵𑌿𑌰𑌂 - நரம்பில்லாதவனும், 𑌶𑍁𑌦𑍍𑌧𑌂-பரிசுத்தமானவனும், 𑌅𑌪𑌾𑌪𑌵𑌿𑌦𑍍𑌧𑌂 - தர்மாதர்மமில்லாதவனும், 𑌸𑌃 - அந்தமுன்மந்திரத்தில் சொன்னவனும், 𑌪𑌰𑍍𑌯𑌗𑌾𑌤𑍍-வ்யாபித்தவனும், 𑌪𑌰𑌿𑌭𑍂𑌃-சர்வகர்த்தாவும், 𑌸𑍍𑌵𑌯𑌂𑌭𑍂𑌃-தானாகவேபிறந்தவனும், 𑌕𑌵𑌿𑌃-எல்லாவற்றையுமறிந்தவனுமாக, 𑌮𑌨𑍀𑌷𑍀-ஸர்வமும் தெரிந்தவீசனே, 𑌯𑌾𑌥𑌾𑌤𑌥𑍍𑌯𑌤𑌃-யதார்த்தமாய், 𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑍀𑌭𑍍𑌯𑌃-நித்தியமான, 𑌸𑌮𑌾𑌭𑍍𑌯𑌃-வருஷங்களின்பொருட்டு, 𑌅𑌰𑍍𑌥𑌾𑌨𑍍 - பதார்த்தங்களை, 𑌵𑍍𑌯𑌦𑌧𑌾𑌤𑍍-ஏற்பாடுசெய்தான்.

𑌸𑌂-ஸா.—புண்ணியாபுண்ணியரகிதமாய் சரீரமில்லாத பரிசுத்தமாய் தேஜோவந்தமாய் இதற்கு பூர்வமந்திரத்தில் சொல்லப்பட்டதாய் ஆகாயம்போல் எங்கும்

நிறைந்து இருப்பதாய் எல்லாவற்றிற்கு மேலான்தான பிரம்மம் நித்தியுளான ஸம்வத்ஸர ப்ரஜாபதிகளின்பொருட்டு எல்லா வஸ்துக்களையும் வேருய்ப்பிரித்த தென்று இந்த மந்திரம் சொல்லுகிறது.

ஙா-ஹா.—ஸர்வபூதங்களையும், பரபிரம்ம ஸ்வரூபமாயறிந்தவன், ஹேருப்பா யும் ஹேயமான சரீரமில்லாததும் காயமில்லாததும் நரம்பு எலும்பு சிலேத்தும்ணீர் முதலான துர்க்கந்தமில்லாததும் பரிசுத்தமுமான பரமாத்மதத்வத்தை அடை வான். வியாஸ பராசராதிகளைப்போல் பரதத்வ விரோதிகளை அவமதிக்கத்தக் கச் சக்தியுடையவனுகி யதார்த்தமான பிரணவார்த்தங்களைத் தன் சிஷ்யர்களுக்குப தேசிப்பான்..

௯. அந்தம் தம: ப்ரவிசந்தி யே அவித்யாமுபாஸதே ।
ததோ பூய இவ தே தமோ ய உ வித்யாயாம் ரதா: ॥

౯. అన్ధంతమః ప్రవిశంతియేఽవిద్యాముపాసతే।
తతోభూయఇవతేతమోయఉవిద్యాయాగ్ం రతాః॥

(ப-ம்.) யே - எவர்கள், அவித்யாம் - ஞானவ்யதிரிக்தமான கர்மத் தையே, உபாஸதே - அனுஷ்டிக்கிறார்களோ, தே - அவர்கள், அந்தம் தம: - காடாந்தமான இருளை, ப்ரவிசந்தி - அடைகின்றனர், யே உ - யாவ ரெனின், வித்யாயாம் - தேவதாஞ்ஞானமாத்திரத்தில், ரதா: - ஆசையுள்ளவ ர்களோ, தே - அவர்கள், தத: - அந்த அந்தகாரத்தைக்காட்டிலும், பூய: - விஸ்தாரமான, தம: - இருளை, ப்ரவிசந்தி - பிரவேசிக்கின்றனர்.

ஸம்-ஹா.—இந்த ஈசாவாஸ்யம், முதல் மந்திரத்தில் சொன்ன - ஞானநிஷ்டா திகாரிக்கு, ஞானிகளுக்கு விஷயமான பிரமஸ்வரூபத்தை, அஞ்ஞானநிந்தாபூர்வகமாக ஸபர்யகாச்சுக்ரமென்ற மந்திரம் வரையில் உபதேசித்து அந்தஞ்ஞான நிஷ்டையில் அஸமர்த்தமாக இரண்டாம் மந்திரத்தில் சொல்லியிருந்த கர்மநிஷ்டையில் ஆஸக்தி யுண்டாகி கர்மம் செய்கிறவர்களுக்கு இனிமேல் சொல்லப்படுகிறது. எவர் ஞானத் திற்கு இதரமான காமத்தைச் செய்கிறார்களோ அவர் பரமாத்மதர்சனமில்லாமல் அஞ்ஞானரூபமான இருளை அடைகிறார்கள். எவர் தங்களுக்கு விதிக்கப்பட்ட கர் மத்தை விட்டு சில விஷ்ணுவாதி தேவதாஞ்ஞானத்தில் ஆசக்தியுண்டானவர்களைப் போலிருக்கிறார்களோ அவர்களும் அந்த கர்மத்தை செய்கிறவர்கள் அடைகிற இரு ளைக்காட்டிலும் அதிகமான இருளை அடைகிறார்கள்.

விஷ்ணுவாதி தேவதாஞானத்தோடு விதிப்படி கர்மம் செய்கிறவர்கள் அந்தகர் மத்திற்குச் சொல்லியிருக்கிற தேவாதிலோகங்களை யடைவார்கள்.

ஙா-ஹா.—எவன், பிரம்மவித்தியாரஹிதமான கர்மத்தை அடைகிறானோ? அவன் நரகத்தை அடைகிறான், எவர்கள், தங்கள் தங்கள் ஆசிரமத்தின் கர்மங்களைவிட்டு வித்யையில் விருப்பமுள்ளவர்களோ, அவர்கள், கேவல கர்மத்தினுலடையப்பட்ட நரகத்திலும் அதிக கோரரூபமான நரகத்தை அடைகிறார்கள். ஆகையால் வர்ணாச்ர மங்களுக்குத் தக்க கர்மத்தோடு ப்ரம்மவித்தையை அநுஷ்டித்தால் பரமாத்மாவை யடையலாமென்று கருத்து.

௧௦. அந்யதேவாஹுர்வித்யயா அந்யதேவாஹுரவித்யயா ।
இதி ஸுச்ரும தீராணாம் யே நஸ்தத்விசசக்ஷிரே ॥

౧౦. అన్యదేవాహుర్విద్యయా అన్యదాహురవిద్యయా ।
ఇతి శుశ్రుమ ధీరాణాం యే నస్తద్విచచక్షిరే ॥

(ப-ம்.) யே - எவர்கள், தத் - அந்த கர்மத்தையும், ஜ்ஞானத்தையும் நஃ-நமக்கு, வ்யாசசக்ஷிரே-சொல்லுகிறார்களோ, (தே-அவர்கள்,) வித்³யயா - ஜ்ஞானத்தினாலேயும், அந்யதேவ-இதரபலத்தையே, ஆஹுஃ - சொல்லுகிறார்கள், அவித்³யயா - கர்மத்தினாலேயும், அந்யதேவ-இதரபலத்தையே ஆஹுஃ-சொல்லுகிறார்கள் ;இதி-இந்தப்பிரகாரம், தீ⁴ராணாம்- ஜ்ஞானிகளுடைய, (வசநம்-வார்த்தையை,) ஶுஶ்ரும-கேட்கிறோம்.

ஸம-ஹா.—எந்த ஆசாரியர் எனக்கு ஞானத்தையும் கர்மத்தையும் சொன்னாரோ, அவரே தேவதாவிஞ்ஞானத்தால் தேவலோக பிராப்தியென்றும், கர்மத்தினால்பித்ருலோக பிராப்தியென்றும், இந்தப்பிரகாரம் கர்மஜ்ஞானங்களிரண்டிற்கும் பலங்கள் வேறென்றுசொல்லுகிறார்? இப்படி அந்த ஆசாரியனுடைய வாக்கியக்கேட்கிறோம் என்று இந்த மந்திரம் சொல்லுகிறது.

ரா-ஹா.—கேவலபிரம்மத்யானத்தாலே யுண்டான பலமானதுவேறு, கேவல கர்மானுஷ்டானத்தினால் பலம்வேறு என்று ஜ்ஞானிகள் சொல்லுகிறார்கள்.

கக-மந். வித்³யாஞ்சாவித்³யாஞ்ச யஸ்தத்³வேதோ³ப⁴யꣳ ஸஹ।
அவித்³யயா ம்ருத்யும் தீர்த்வா வித்³யயாம்ருதமஶ்நுதே॥

౧౧. విద్యాంచావిద్యాంచ యస్తద్వేదోభయగ్ం సహ ।
అవిద్యయా మృత్యుం తీర్త్వా విద్యయామృతమశ్నుతే ॥

(ப-ம்.) யஃ-எவன், வித்³யாஞ்ச - தேவதாஜ்ஞானத்தையும், அவித்³யாஞ்ச - கர்மத்தையும், தத்-அந்த விரண்டையும், ஸஹ-ஒன்றாய், (ஸஹைகேநைவ புருஷேண - ஒரேமனிதனாலே, அநுஷ்டே²யம் - செய்யத்தக்கினதென்று) வேத³-அறிந்துக்கொண்டானோ, (ஸஃ-அவன்,) அவித்³யயா - கர்மத்தினால் - ம்ருத்யும் - ஸம்ஸாரத்தை, தீர்த்வா - தாண்டி, வித்³யயா - ஜ்ஞானத்தினால் அம்ருதம்-பிரம்மத்தை, அஶ்நுதே-அடைகிறான்.

ஸம-ஹா.—எவன். கர்ம, தேவஜ்ஞானங்களிரண்டும், ஒருவனாலே செய்வதற்கு ஸாத்யமென்று தெரிந்துக்கொண்டு அந்தப் பிரகாரம் செய்கிறானோ, அவன், கர்மத்தினால் பயரூபமான மிருத்யுவைத்தாண்டி தேவதாஜ்ஞானத்தினால் தேவ, தாத்மபாவத்தை அடைகிறானென்றும் இந்த மந்திரம் சொல்லுகிறது.

ரா-ஹா.—எவன்,பரபிரம்மதத்துவத்தையும் அதினங்கபூதமான கர்மத்தையும் ஒன்றாக யறிகிறானோ? அவன் அந்தப்பிரம்மவித்தியாங்க கர்மத்தினால் பிரம்மதத்துவத்திற்குப் பிரதிபந்தகமான பூர்வகர்மத்தைக்கடந்து பிரம்மதத்துவத்தினால் மோக்ஷத்தை அடைகிறான்.

கஉ-மந். அந்த⁴ம் தமஃ ப்ரவிஶந்தி யே(அ)ஸம்பூ⁴திமுபாஸதே।
ததோ பூ⁴ய இவ தே தமோ ய உ ஸம்பூ⁴த்யாꣳ ரதாஃ॥

౧౨. అన్ధం తమః ప్రవిశన్తి యేఽసంభూతిముపాసతే ।
తతో భూయ ఇవ తే తమో య ఉ సంభూత్యాగ్ం రతాః ॥

(ப்-ம்.) யெ - எவர்கள், அஸம்பூதிம் - ஈச்வரோபாதி மாயாரூபமான ப்ரகிருதியை, உபாஸதெ - உபாஸக்கிறார்களோ, தெ - அவர்கள், அந்தம் தம: - காடாந்தமான இருளை, ப்ரவிஶந்தி - அடைகிறார்கள். யெ உ - எவராகில், ஸம்பூத்யாம் - ஹிரண்யகர்ப்பன் முதலான காரியபிரம்மத்தில், ரதா: - ஆசையுள்ளவர்களோ, தெ - அவர்கள், தத: - அதைக்காட்டிலும், பூய: - அதிகமான, தம இவ - அஜ்ஞான இருளையே - ப்ரவிஶந்தி - ப்ரவேசிக்கிறார்கள்.

ஸ0-ஹா.—எவர்கள் அவ்யாக்ருதமான மாயையை அடைகிறார்களோ? அவர்கள் பரமார்த்தத்துவமல்லாத அஜ்ஞானாந்தகாரத்தை யடைகிறார்கள். எவர்கள் அந்தமாயையினு லுற்பத்தியாகிற காரியஸ்வரூபமான ஹிரண்யகர்ப்ப னென்கிற பிரம்மதேவனைச்சேவிக்கிறார்களோ அவர்கள்முன்சொல்லிய அஜ்ஞானாந்தகாரத்தைக்காட்டிலும் அதிகமான அந்தகாரத்தை யடைகிறார்கள்.

ரா-ஹா—எந்தமனிதர்கள் கேவலகர்மதத்துவங்களையுபாஸிக்கிறார்களோ அவர்கள் அஜ்ஞானமாகிற அந்தகாரத்தை யடைகிறார்கள். எவர்கள் கேவலஸமாதிரூபமான ஸம்பூதியில் இஷ்டமுடையவர்களோ அவர்களும் முன்சொன்ன இருளைக்காட்டிலும் மேலான இருளை யடைகிறார்கள்.

௧௩-மொ. அந்யதேவாஹு: ஸம்பவாதந்யதாஹுரஸம்பவாத்|
இதி ஶுஶ்ரும தீராணாம் யே நஸ்தத்விசசக்ஷிரே||

౧౩. అన్యదేవాహుస్సంభవాదన్యదాహురసంభవాత్ ;
ఇతిశుశ్రుమధీరాణాంయేన స్తద్విచచక్షిరే||

(ப்-ம்.) யெ - எவர்கள், ந: - நமக்கு, தத் - அந்தப்பிரமதத்தவத்தை, விசசக்ஷிரெ — சொன்னார்களோ? (தெ - அவர்கள், மோக்ஷஸாதனம் - மோக்ஷோபாயத்தை,) ஸம்பவாத் - கர்மபிரம்மத்தைக் காட்டிலும், அந்யதெவ - வேறாகவே, ஆஹு: - சொல்லுகிறார்கள், அஸம்பவாத் - அவ்யாக்ருதத்தைக்காட்டிலும், அந்யதெவ - வேறாகவே, ஆஹு: - சொல்லுகிறார்கள். இதி - இந்தப்பிரகாரம், தீராணாம் - ஜ்ஞானிகளுடைய, (வசநம் - வார்த்தையை,) ஶுஶ்ரும - கேட்கிறோம்.

ஸ0-ஹா.—அவ்யாகிருதோபாஸநத்தையுங்காரியப்பிரம்மத்தினுடைய உபாஸநத்தையும் சொன்னவர்கள், அவ்யாகிருதோபாஸநத்தால் அந்தகாரத்தையும் அதாவது பிரகிருதிலயத்தையும் அவ்யாகிருதத்தினுலுண்டான காரியப்பிரம்மத்தினுடைய உபாஸநத்தால் அணிமாதி யைச்வர்யங்களையும் பெறலாமென்று சொல்லுகிறார்கள். இந்தப்பிரகாரம் அவ்யாகிருத, காரிய பிரம்மங்களினுபாஸநங்கள் பிந்நபலங்கள் கொடுக்குமென்று சொல்லுகிற ஜ்ஞானிகளின் வாக்கியத்தைக்கேட்கிறோம் என்று சொல்லுகிறது.

ரா - ஹா.—பிரம்மஸமாதியாலடையப்பட்ட பலம் வேறென்றும், அகங்காரம், டம்பம், ஹிம்சை, திருடுதல், முதலானவைகளை நீக்கிவிடுகிற நிவ்ருத்திதர்மத்தினுல் அடையப்பட்ட பலம் வேறாக விருக்குமென்றும், இந்தமந்திரமுபதேசிக்கிறது.

கச-மம். ஸம்பூ⁴திஞ்ச விநாஶஞ்ச யஸ்தத்³வேதோ³ப⁴யꣳ ஸஹ|
விநாஶேந ம்ருத்யும் தீர்த்வா ஸம்பூ⁴த்யாம்ருதமஶ்நுதே ||

౧౪. సమ్భూతించవినాశంచయస్తద్వేదోభయగ్ం సహ।
వినాశేనమృత్యుంతీర్త్వాసంభూత్యామృతమశ్నుతే॥

(ப்-ம்.) யஃ - எவன், ஸம்பூ⁴திம் - அவ்யாக்ருதோபாஸநத்தையும், விநாஶம் ச - காரியப்பிரமோபாஸநத்தையும், தத் - அந்த, உப⁴யம் - இரண்டையும், ஸஹ - கூட, வேத³ - தெரிந்துகொள்ளுகிறானோ ? (ஸஃ - அவன்,) விநாஶேந - காரியப்பிரம்மோபாஸநத்தால், ம்ருத்யும் - மரணத்தை, தீர்த்வா - தாண்டி, ஸம்பூ⁴த்யா - அவ்யாக்ருதோபாஸநத்தால், அம்ருதம் - ப்ரக்ருதிலயத்தை, அஶ்நுதே - அடைகிறான்.

ஶா - பா.—எவன் காரியப்பிரம்மத்தையும் - அவ்யாக்ருதத்தையும் - தெரிந்துகொண்டு உபாஸிக்கிறானோ அவன் காரியப்பிரம்மோபாஸநத்தால் ஸம்ஸாரமாகிற மிருத்யுவைக்கடந்து, அவ்யாக்ருதோபாஸநத்தால் பிரகிருதிலயமான மோக்ஷத்தை யடைகிறான் என்று இந்தமந்திரம் சொல்லுகிறது.

ரா-பா.—எவன் பிரம்மஸமாதியையும் காமக்ரோத லோப மோகம்முதலானவைகளை நீக்த நிவ்ருத்திதர்மத்தையும் அறிகிறானோஅவன், யோகவிரோதியான மிருத்யுவையும் - பிராப்தி விரோதியான பாபத்தையும் கடந்து - பிரம்மாநுபவரூபமான மோக்ஷத்தையடைகிறானென்று இந்த மந்த்ரம் சொல்லுகிறது.

கரு-மம். ஹிரண்மயேந பாத்ரேண ஸத்யஸ்யாபிஹிதம் முக²ம்|
தத்த்வம் பூஷந்நபாவ்ருணு ஸத்யத⁴ர்மாய த்³ருஷ்டயே ||

౧౫. హిరణ్మయేనపాత్రేణసత్యస్యాపిహితంముఖం|
తత్త్వంపూషన్నపావృణుసత్యధర్మాయదృష్టయే॥

(ப்-ம்.) ஹிரண்மயேந - தேஜோமயமான, பாத்ரேண - பாத்திரத்தினால், ஸத்யஸ்ய - ஸூரியமண்டல மத்யத்திலிருக்கிற பிரம்மத்தினுடைய, முக²ம் - துவாரம், அபிஹிதம் - மூடப்பட்டிருக்கிறது, ஹே பூஷந் - ஓய் ஸூரியனே, த்வம் - நீ, (தவ - உன்னை,) த்³ருஷ்டயே - அடைவதற்கு, ஸத்யத⁴ர்மாய - ஸத்யதர்மரூபியான எனக்கு, தத் - அந்தவழியை, அபாவ்ருணு - தெரியும்படி செய்யும்,

ஶா - பா—இதற்கு முன் மந்திரத்திற்சொன்ன பிரகாரம் கர்மத்தைச்செய்கிறவன் மரணகாலம்சமீபத்தில் வரும்போது பிரம்மஸ்வரூபத்தையடைவதற்கு வழியாகிய ஸூரியஸ்வரூபத்தை யாசிக்கிறான். ஓசூரியா உன்னுடைய மண்டலமத்யத்திலிருக்கிற பிரம்மஸ்வரூபத்திற்கு மார்க்கமானது தேஜோமயமான பாத்திரத்தினால் மூடப்பட்டிருக்கிறது. ஸத்தியஸ்வரூபியான உன்னுடைய உபாஸநத்தால் ஸத்தியவந்தனான எனக்கு அந்த பிரம்மஸ்வரூபத்தை யடைவதற்குரியவழியைக்காட்ட வேண்டுமென்று இந்த மந்தம் பிரார்த்திக்கிறது.

ரா-பா.—ஓ! சூரியனுடைய மத்யவர்த்தியானவனே-ஸத்யமான ஜீவாத்மாவினுடைய முகமாகியமனதானது, பொன்னுக்கு ஸமானமான பாத்திரத்தினால் மூ

டப்பட்டிருக்கிறது. ஆகையால் அந்த ஸத்யமான ஸ்வரூபத்தையுடைய பகவானைப் பார்க்கும்பொருட்டு அந்தவழியைக்காட்டும்.

கசு-ம. பூஷந்நேகர்ஷே யம ஸூர்ய ப்ராஜாபத்ய வ்யூஹ ரஸ்மீந் ஸமூஹ தேஜ: । யத்தே ரூபம் கல்யாணதமம் தத்தே பஸ்யாமி யோஸாவஸௌ புருஷ: ஸோஹமஸ்மி ॥

౧౬. పూషన్నేకర్షే యమ సూర్య ప్రాజాపత్య వ్యూహ రశ్మీన్ సమూహ తేజః।
యత్తే రూపం కల్యాణతమం తత్తే పశ్యామి యోసావసౌ పురుషః సోహమస్మి॥

(ப-ம்.) பூஷந் - ஜகத்தை யெல்லாமிரக்ஷிக்குந்தன்மையுள்ளவனே, ஏகர்ஷே - தனக்குத்தானேயுண்டானவனே, யம - ஸர்வத்தையும் ஶிக்ஷிக்கவல்லவனே ஸூர்ய - கிரணங்களாலேஜலத்தைக்கிரகிக்கும் தன்மையுள்ளவனே, ப்ராஜாபத்ய - பிரம்மனுக்கு சந்தாநரூபமான ஓ சூரியனே, ரஸ்மீந் - கிரணங்களை, வ்யூஹ - போக்கடித்துக்கொள், தேஜ: - தேஜஸ்ஸை, ஸமூஹ - ஸம்ஹரித்துக்கொள், தே - உனக்கு, யத் - எந்த, ரூபம் - ரூபமானது, கல்யாணதமம் - அதிக சுபமானதோ, தத் - அந்தரூபத்தை, தே - உன்னுடைய, (ப்ரஸாதாத் - அநுக்கிரகத்தினால்,) பஸ்யாமி - பார்க்கிறேன், அஸௌ - இந்த சூரிய மண்டலத்தில் வஸிக்கிறவன், ய: - எவனோ, அஸௌபுருஷ: - அப்பேர்ப்பட்டயிந்த புருஷனனவன், அஹம் - நானே, அஸ்மி - ஆகிறேன்.

ஶம-ஹா.—ஓய்சூரியனே உன்மண்டலத்திலிருக்கிற புருஷனாகவேயாகிறேன். உன் கிரணங்களெல்லாவற்றையும் அடக்கிக்கொண்டு உன்தேஜஸ்ஸை உபஸம்ஹாரம் செய்துகொண்டால் ஆத்மஸ்வரூபத்தை யுடைத்தாயிருக்கிற உன்னுடைய அநுக்கிரகத்தினாலே மிகவும் சுபமான நிஜரூபத்தை நான்பார்க்கக்கடவேனென்று இந்தமந்திரமானது சொல்லுகிறது.

ரா-ஹா.—அடியார்களை யிரக்ஷிப்பவனே! இரண்டாவ தில்லாதவனே ஸர்வ ப்ராணிகளை யடக்கும் தன்மையுள்ளவனே! உலகத்தைப்படைக்கும் தன்மையுள்ளவனே உன்னுடைய கிரணங்களை யடக்கிக்கொள் உன்னுடைய நிரதிசய போக்யமான ரூபத்தைக்காண்கிறேன் கண்டால் உன்னைப்போலாவேன் அப்படி உன்னைப்போலானலுநீயே நானுகிறேன்.

கஎ-ம. வாயுரநிலமம்ருதமதேதம் பஸ்மாந்தம் ஸரீரம் ॥
ஓம் க்ரதோ ஸ்மர க்ருதம் ஸ்மர க்ரதோ ஸ்மர க்ருதம் ஸ்மர ॥

౧౭. వాయురనిలమమృతమథేదం భస్మాంతం శరీరం।
ఓం క్రతో స్మర కృతం స్మర క్రతో స్మర కృతం స్మర॥

(ப-ம்.) அத - பிற்பாடு, இதம்ஸரீரம் - இந்த சரீரமானது, பஸ்மாந்தம் - பஸ்மத்தையே முடிவாகவுடையதாய், (பூயாத் - ஆகக்கடவது,) வாயு: - சரீரத்திலிருக்கிற பிராணனனது, அம்ருதம் - நாசமில்லாத, அநிலம் - ஸூக்ஷ்ம பிராணனை, (ப்ரதிபத்யதாம் - அடையக்கடவது.) ஓம்க்ரதோ - ஓ சங்கற்ப பரமாத்துமாவே, ஓம் - ஓ மென்கிறதை, ஸ்மர - ஸ்மரணை பண்ணு, (அக்ரே - முன்னே.) க்ருதம் - சொன்னபடி. ஸ்மர - ஸ்மரணைபண்ணு,

ஹெகுதோ - ஓய் ஸங்கல்பரூப பரமபுருஷா, ஓம் - ஓமென்று, ஸ்மர - ஸ்மரணை பண்ணு, (ஸதாவதுபட்டிருக்கும் - இதுபரியந்தம், க்ருதம் - முன்னே,) க்ருதம் - சொல்லப்பட்டதுபோல், ஸ்மர - ஸ்மரணைபண்ணு.

ஸம்-ஷா.—முன் சொல்லப்பட்டகர்மத்தை யாசரித்துக்கொண்டு மரணத்தை யடையுமாத்மாவினுடைய தேகத்தைவிட்டு பிராணவாயு சூக்ஷ்மாத்மாவான வாயுவையடைவதற்கும் இந்தச்சரீரத்தை பஸ்மமாய்ப்பண்ணுவதற்கும் ஓமென்று பரமாத்மாவைஸ்மரணைசெய்ய வேண்டுமென்று இந்தமந்திரம்சொல்லுகிறது பரமாத்மாவே தானுகையால், பரமாத்மாவே நீ ஸ்மரணம்பண்ணென்று சொல்லப்பட்டது.

ரா-ஷா.—சரீரேந்திரியங்களைக்காட்டிலும் வேறான தன்னாத்மாவை முதலில் பரிசுத்தம் செய்துக்கொண்டு விசுத்தமானரூபத்தை பிரமத்தினிடத்தில் வைக்க வேண்டுமென்று பிரார்த்திக்கிறான். வாயுபோல் சஞ்சரிக்கிற அணுவானஜீவனுனது இந்த கர்ம சரீரம் பஸ்மமாய்ப் போனபிறகு அசங்கமாய் நிரஞ்சனமாய் நிர்விகல்பமாய் இருக்கும் பிரம்மஸ்வரூபத்தை யடைவதற்குஓங்காரரூபியான பிரம்மத்தை ஸ்மரணைபண்ணுகிறேன் பிரம்மமே நீயென்னை ஸ்மரிக்கவேண்டும். அஹம்ஸ ரோதிஷ்டம் நயாமிவரஸம்மதம் - என்று இந்த மந்திரம்சொல்கிறது.

கஅ-ம்,அக்னெநயஸுபதாராயெஅஸ்மாநுவிஸ்வாநிதெவவயுநாநிவித்வாநு யுயொத்யஸ்மஜ்ஜுஹுராணமெநொபூயிஷ்டாம் தெநம உக்திம் விதெம॥

౧౮. అగ్నే నయ సుపథా రాయే అస్మాన్ విశ్వాని దేవ వయునాని విద్వాన్ ।
యుయోధ్యస్మజ్జుహురాణమేనో భూయిష్ఠాం తే నమ ఉక్తిం విధేమ ॥

(ப-ம்) ஹெஅக்நெ - அக்கினிசப்தவாச்யனான ஓ பகவானே, அஸ்மாநு - எங்களை, ராயெ - சம்பத்தின்பொருட்டு, ஸுபதா - நல்வழியால் நய - அழைத்துக்கொண்டுபோம், ஹெதெவ - ஓய் பிரகாசஸ்வரூப, விஸ்வாநி - ஸமஸ்தமான, வயுநாநி - கர்மங்களை, வித்வாநு - தெரிந்துகொண்டு, அஸ்மத் - என்னிடத்திலிருந்து, ஜுஹுராணம் - குடிலமான, எநஃ - பாபத்தை, யுயொதி - போக்கடியும், தெ - உனக்கு, பூயிஷ்டாம் - அதிகமான, நமஉக்திம் - தோத்திரங்களை, விதெம - செய்கிறோம்.

ஸம்-ஷா.—இப்பிரகாரம் ஸர்வகர்ம ஸந்யாச பூர்வஜ்ஞானத்தில் சக்தி இல்லாதவன் கர்மஞ்செய்து தேகத்தைவிட்டு மரணத்தையடைகிறஸமயத்தில் ஓஸ்வாமி ஸமஸ்தகர்மத்தையும் தெரிந்துக்கொண்டு என்னுடைய குடிலமான பாபத்தைப்போக்கடிப்பதற்கும் கர்மத்தினுலடையப்பட்ட தக்ஷிணாயநமார்க்கத்தைவிட்டு ஜ்ஞானமார்க்கத்தினுலடையப்பட்ட உத்தராயணமார்க்கத்தை யடைவதற்கும் உன்பொருட்டுநமஸ்காரம் செய்கிறேன்.

ரா - ஷா —ஓ அக்கினியில் அந்தராத்மாவாய் வஸிப்பவனே! ஓ ஸர்வபிராணிகளால் உபாஸிக்கத் தக்கவனே! சதுர்வித புருஷார்த்தங்களை யறிந்த உன்னை யடைவதற்கு பிரதிபந்தகமான குடிலமான பாபத்தை யென்னிடத்தி லிருந்து போக்கடிக்கவேண்டியது. என்னை அர்ச்சிராதிமார்க்கத்தினால் உன் சமீபத்தை அடைவிக்கவேண்டும். தெரிந்தவா தத்வங்களையறிந்தநாங்கள் மறுபடியும் ஜனனமில்லாம லிருக்கும் பொருட்டு உன்னை வணங்குகிறோமென்று இந்தமந்திரம்சொல்லுகிறது

ஈஸாவாஸ்யோபநிஷத்ஸமாப்தா.

# 𑌕𑍇𑌨𑍋𑌪𑌨𑌿𑌷𑌤𑍍 𑌪𑍍𑌰𑌾𑌰𑌮𑍍𑌭𑌃.

## 𑌪𑍍𑌰𑌥𑌮𑌖𑌣𑍍𑌡𑌃.

௧ - 𑌮ம. 𑌕𑍇𑌨𑍇𑌷𑌿𑌤𑌂 𑌪𑌤𑌤𑌿 𑌪𑍍𑌰𑍇𑌷𑌿𑌤𑌂 𑌮𑌨𑌃 𑌕𑍇𑌨 𑌪𑍍𑌰𑌾𑌣𑌃 𑌪𑍍𑌰𑌥𑌮𑌃 𑌪𑍍𑌰𑍈𑌤𑌿 𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 । 𑌕𑍇𑌨𑍇𑌷𑌿𑌤𑌾𑌂 𑌵𑌾𑌚𑌮𑌿𑌮𑌾𑌂 𑌵𑌦𑌨𑍍𑌤𑌿 𑌚𑌕𑍍𑌷𑍁𑌃 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌂 𑌕 𑌉 𑌦𑍇𑌵𑍋 𑌯𑍁𑌨𑌕𑍍𑌤𑌿 ॥

౧. కేనేషితంపతతి ప్రేషితంమనః కేన ప్రాణః ప్రథమః ప్రైతియుక్తః।
కేనేషితాంవాచమిమాంవదంతిచక్షుశ్శ్రోత్రంకఉదేవోయునక్తి॥

(ப-ம்.) 𑌮𑌨𑌃-நெஞ்சம், 𑌕𑍇𑌨-யாராலே, 𑌪𑍍𑌰𑍇𑌷𑌿𑌤𑌂𑌸𑌤𑍍 - ப்ரேரேபிக்கப்பட்டதனால், 𑌇𑌷𑌿𑌤𑌂 - இஷ்டத்தைக்குறித்து, 𑌪𑌤𑌤𑌿 - விழுகிறது, 𑌪𑍍𑌰𑌥𑌮𑌃-முதலில், 𑌪𑍍𑌰𑌾𑌣𑌃 - பிராணமானது, 𑌕𑍇𑌨 - யாராலே, 𑌯𑍁𑌕𑍍𑌤𑌸𑌨𑍍 - பிரேரேபிக்கப்பட்டதாய்க்கொண்டு, (𑌸𑍍𑌵𑌵𑍍𑌯𑌾𑌪𑌾𑌰𑌂𑌪𑍍𑌰𑌤𑌿 - தன் காரியத்தைக்குறித்து.) 𑌪𑍍𑌰𑍈𑌤𑌿-அடைகிறது, 𑌲𑍌𑌕𑌿𑌕𑌾𑌃 - லோகத்திலிருக்கப்பட்ட ஜனங்கள், 𑌕𑍇𑌨-யாராலே, 𑌇𑌷𑌿𑌤𑌾𑌂 - பிரேரேபிக்கப்பட்ட, 𑌇𑌮𑌾𑌂 - இந்தசப்தலக்ஷணமான, 𑌵𑌾𑌚𑌂 - வாக்கை, 𑌵𑌦𑌨𑍍𑌤𑌿 - சொல்லுகிறார்கள், 𑌚𑌕𑍍𑌷𑍁𑌃 - கண்ணையும், 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌂 - செவியையும் 𑌕𑌉𑌦𑍇𑌵 - எவர், (𑌸𑍍𑌵𑌸𑍍𑌵𑌵𑌿𑌷𑌯𑍇 - அந்தந்தவிஷயத்தில்.) 𑌯𑍁𑌨𑌕𑍍𑌤𑌿 - பிரேரேபிக்கிறார்.

ஸ-ஹா.—இந்த உபநிஷத்தில் விரக்தியுள்ளவனுக்கு ப்ரம்மஞானம் - ஶிஷ்யாசார்யருடைய ப்ரச்நோத்தரமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. ஒரு சிஷ்யன் ஆசாரியனிடத்தில் ப்ரஶ்நம்பண்ணுகிறான். மனதானது யாராலே பிரேரேபிக்கப்பட்டதாய்க்கொண்டு இஷ்டமானபொருளைவிரும்புகிறது. பிராணவாயுவானது யாரோடு கூடிக்கொண்டு தன்வியாபாரத்தை நடத்துகிறது. உலகத்துஜனங்கள் யாராலே பிரேரேபிக்கப்பட்டு இந்த சப்தலக்ஷணமான வார்த்தையைச் சொல்லுகிறார்கள். ஐம்புலன்களும் யாராலெ தத்தம் வேலையைச்செய்கின்றன.

ரா-ஹ.—மனதானது யாராலே ஏவப்பட்டு ப்ரவர்த்திக்கிறது. வாயுவானது யாரோடுசேர்ந்து வீசுகிறது. யாராலே பிரேரேபிக்கப்பட்ட ஶப்த ரூபமானவார்த்தயை உலகம்சொல்லுகிறது. செவி கண் முதலிய வைம்புலனும் யாராலே தன் தன்வேலையைச்செய்கிறது.

௨ - 𑌮ம. 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌸𑍍𑌯 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌂 𑌮𑌨𑌸𑍋 𑌮𑌨𑍋 𑌯𑌦𑍍𑌵𑌾𑌚𑍋 𑌹 𑌵𑌾𑌚𑌂 𑌸 𑌉 𑌪𑍍𑌰𑌾𑌣𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌾𑌣𑌃 । 𑌚𑌕𑍍𑌷𑍁𑌷𑌶𑍍𑌚𑌕𑍍𑌷𑍁𑌰𑌤𑌿𑌮𑍁𑌚𑍍𑌯 𑌧𑍀𑌰𑌾𑌃 𑌪𑍍𑌰𑍇𑌤𑍍𑌯𑌾𑌸𑍍𑌮𑌾𑌲𑍍𑌲𑍋𑌕𑌾𑌦𑌮𑍃𑌤𑌾 𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 ॥

௨. శ్రోత్రస్య శ్రోత్రం మనసో మనో యద్వాచో హ వాచం స ఉ ప్రాణస్య ప్రాణః।
చక్షుషశ్చక్షురతిముచ్య ధీరాః ప్రేత్యాస్మాల్లోకాదమృతా భవంతి॥

(ப-ம்.) யத்-எந்தவஸ்து, ஶ்ரோத்ரஸ்ய-சப்தத்தைமேட்பதற்குக்காரணமானதுகாதுக்கு, ஶ்ரோத்ரம்-ச்ரோத்திரேந்திரியமோ, யத்-எந்தவஸ்து, மநஸ:-மநநம்செய்வதற்குக் காரணமான மனத்திற்கும், மந:-மன இந்திரியமோ, யத் எந்தவஸ்து, வாச:-வார்த்தை சொல்வதற்குக் காரணமானவாக்குக்கும், வாசம்ஹ வாக்குமோ, (ய:-எந்தவஸ்து,) ப்ராணஸ்ய-பிராணத்துக்கு, ப்ராண:-பிராணமுமோ, யத்-எந்தவஸ்து, சக்ஷுஷ:-ரூபத்தை கிரகிக்கிறதற்குச்சாதனமானகண்ணுக்கு, சக்ஷு:-கண்ணுமோ, ஸஉ-அதேவஸ்துவை, தீரா:- ஜ்ஞானிகள், ஜ்ஞாத்வா - தெரிந்துக்கொண்டு, ஶ்ரோத்ராதிகம் - செவிமுதலானதை,) அதிமுச்ய-விட்டு, அஸ்மாத் - இந்தலோகத்தினின்று, ப்ரேத்ய - மரணத்தை யடைந்து, அம்ருதா: - மரணமில்லாமல், பவந்தி - ஆகிறார்கள்.

ஸம்-ஸா.—ஓய் சிஷ்ய மனமுதல் ஸமஸ்தமானதும் அப்போதைக்கப்போது காரியத்தில் பிரவர்திக்கிறதற்கு அந்தபிரம்மமேகாரணம். ஆகையால் இப்படி தெரிந்துக்கொள்தேவமரணகாலத்துக்குப்பின்மோக்ஷத் தையடையஸாதநமானது.

ரா-ஸா.—ஶப்தங்களையறிவதற்குச் ஶ்ரோத்திரியத்தைக் கேட்கச்செய்கிறவர் அந்தபரமாத்மா. நேத்திரேந்திரியங்களைப் பார்கச்செய்வது அந்தபரம்புருஷன் வசநேந்திரியங்களை யொலிக்கச்செய்வது அந்தபகவான். பிராணனை ஸஞ்சரிக்கச் செய்வதும் அந்தபரமாத்மாவென்று எந்த ஞானிகள் நினைத்துக்கொண்டு மரணத்தையடைகிறார்களோ அவர்கள் இந்தபூமியைவிட்டு மறுபிறவி இல்லாதலோகமாகிய பரமபதத்தையடைந்து பிரம்மஸாரூபத்தை யடைகிறார்கள்

௩ - ௨௦. ந தத்ர சக்ஷுர்கச்சதி ந வாக்கச்சதி நோ மந:।
ந வித்மோ ந விஜாநீமோ யதைதத நுஶிஷ்யாத்॥

3. న తత్ర చక్షుర్గచ్ఛతి న వాగ్గచ్ఛతి నో మనః। న విద్మో న విజానీమో యథైతదనుశిష్యాత్ ॥

(ப-ம்.) தத்ர - அந்தப்ரம்மத்தினிடத்தில், சக்ஷு: - கண்ணானது நகச்சதி - போகிறதில்லை, வாக் - வாக்கானது, நகச்சதி-அடைகிறதில்லை, மந:, மனதானது, நோகச்சதி-அடைகிறதில்லை, அத:-ஆகையால், தத்-அந்தபிரம்மத்தை,) நவித்ம: அறியவில்லை, ஏதத் - இந்த பிரம்மஸ்வரூபத்தை, யதா - எந்தப்பிரகாரம், அநுஶிஷ்யாத்- சிஷனுக்கு உபதேசிக்கிறானோ, ததா-அந்தப்பிரகாரம், நவிஜாநீம:-தெரிந்துக்கொள்ளவில்லை.

ஸம்-ஸா.—ஶிஷ்யா இந்தபிரம்மம்கண்ணாலே பார்க்கிறதற்கு வாயினால் சொல்வதற்கும் மனதினால் நினைப்பதற்கும் சக்கியமல்லாதது. ஆனாலும் ஶிஷ்யனுக்குஎவ்விதமாயுபதேஶிக்கப்படுமோ அந்தப்பிரகாரம் தெரிந்துகொள்ளவேண்டியது

ரா-ஸா.—ஆத்ம விஷயத்தில் எந்த கண்ணானது பிரவத்திக்கிறதில்லையோ அந்தகண் அந்தராத்ம பூதபரமாத்மாவை பார்கிறதில்லை. எந்தவாக்கானது ஆத்மவிஷயத்தில் பிரவேசிக்கிவில்லையோ அதுஅந்த பரமாத்மாவினுடைய ப்ரபாவத்

தைச்சொல்ல சக்தி இல்லாதது மனதினாலு மறியப்படாதது பாஹ்யேந்திரியங்க ளாது மறிவதற்கு அஶக்யமென்று சிஷ்யனுக்குபதேசித்ததா யிந்த மந்திம் சொல்லுகிறது.

ச - மூ. அந்யதேவ தத்விதிதாதயோ அவிதிதாததி |
இதி ஶுஶ்ரும பூர்வேஷாம் யே நஸ்தத்வ்யாசசக்ஷிரே ||

4, అన్యదేవ తద్విదితాదథో అవిదితాదధి। ఇతి శుశ్రుమ పూర్వేషాం యే నస్తద్వ్యాచచక్షిరే॥

(ப்-ம்.) யே-எவர்கள், தத்-அந்தபிரம்மஸ்வரூபத்தை, நஃ - நமக்கு, வ்யாசசக்ஷிரே-சொன்னாரோ, (தேஷாம்-அந்த.) பூர்வேஷாம்-பெரியவர்களுடைய, வசநம் — வார்த்தையை, தத் - அந்தப்பிரம்ம ஸ்வரூபத்தை, விதிதாத் - வோசனகோசரமான பிரபஞ்சஸமுதாயத்தைக் காட்டிலும், அயஃ-கீழே, அவிதிதாத்-தெரியப்படாதபிரபஞ்ச காரணத்துக்குக்காரணமான அவ்யாக்ருதத்தைக்காட்டிலும், அதி-மேலே, அந்யதேவ - இதரமானதாகவே, பவதி-ஆகிறது, இதி-இந்தப்பிரகாரம், ஶுஶ்ரும-கேட்டோம்.

ஸம்-ஹ.—ஓ ஶிஷ்யா பரபிரம்மமானது சக்ஷுராதி இந்திரியங்களாலே பார்க்கத்தக்க பிரபஞ்சத்தைக் காட்டிலும் சக்ஷுராதிகளாலே அறியப்படாத அவ்யக்தத்தைக்காட்டிலும் இதரமென்று உபதேச பரம்பரையாலே தெரிந்துகொள்ளத் தக்கதென்று எனக்கு ஆசாரியர் உபதேசித்தார்.

ரா-ஸா.—எந்த பூர்வாசாரியர்கள் நமக்கு பரபிரம்ம ஸ்வரூபத்தை உபதேசம் பண்ணினார்களோ அந்த பூர்வசாரியர்கள் அந்தபிரம்மத்தைத் தாங்கள்கண்டு தாங்கள் கண்டபிரகாரம் எங்களுக்குபதேசம் பண்ணினதை நாங்கள்கேட்டோம்.

ரு-மூ. யத்வாசாநப்யுதிதம் யேந வாகப்யுத்யதே |
ததேவ ப்ரஹ்ம த்வம் வித்தி நேதம் யதிதமுபாஸதே ||

5. యద్వాచానభ్యుదితం యేన వాగభ్యుద్యతే। తదేవ బ్రహ్మ త్వం విద్ధి నేదం యదిదముపాసతే॥

(ப்-ம்.) வாசா-வாக்கினால், யத்-எந்தபிரம்மமானது, அநப்யுதிதம்-பிரகாசிப்பிக்கப்படாதோ, யேந-எந்தபிரம்மஸ்வரூபத்தினால், வாக்-வாக்கானது, அப்யுத்யதே - பிரகாசிப்பிக்கப்படுகிறதே, ததேவ - அதுவே, த்வம்-நீ ப்ரஹ்ம-பிரம்மஸ்வரூபமாக, வித்தி-அறிந்துக்கொள், யத்-எந்த, இதம்-இந்த ஈஶ்வராதிகம்-ஈச்வரன் முதலானதை, உபாஸதே-உபாஸிக்கிறார்களோ தத்-அதை. ப்ரஹ்ம-பிரம்மமாய், ந-என்றுதே.

ஸம்-ஹா.—ஓய் ஶிஷ்யா ஜனமானது பிர்ரூபமானது உபாதியோடே கூடின அநாத்ம ஸ்வரூபமாயே இந்த் ஈசுவராதிவஸ்துவை யுபாஸிக்கிறதோ அது பிரும்மமென்று வாக்குமுதலான இந்திரியங்களை பிரகாசமாய் பண்ணப்பட்டதே பிரும்மமென்றறியவேண்டும்.

ரா-ஹா.—எந்த பிரம்மமானது வாக்கினால் பிரகாசிப்பிக்கப் படமாட்டாது எந்த பிரம்மத்தினால் வாக்கானது பிரகாசிக்கிறதோ அதுவே பிரும்மமென்று அறிந்துக்கொள். எதை ஜனமானது இதென்று உபாஸிக்கிறதோ அந்தபிரபஞ்சமானது பரபிரம்மமாகமாட்டாது.

ஸூ-௬. யந்மநஸா ந மநுதே யேநாஹுர்மநோ மதம்।
ததேவ ப்ரஹ்ம த்வம் வித்தி நேதம் யதிதமுபாஸதே॥

౬. యన్మనసా న మనుతే యేనాహుర్మనో మతమ్।
తదేవ బ్రహ్మ త్వం విద్ధి నేదం యదిదముపాసతే॥

(ப-ம்.) மநஸா-மனதினால், யத்-எந்த பிரம்மஸ்வரூபமானது, ந மநுதே - சிந்திப்பதற்கசக்யமோ, (ப்ரஹ்மவித: - ப்ரம்மஜ்ஞானிகள்) யேந - எந்தப்ரம்மஸ்வரூபத்தினால், மந:-மனதானது, மதம் - அறியப்பட்டதென்று, ஆஹு:-சொல்லுகிறார்களோ, ததேவ - அதையே, த்வம் - நீ, ப்ரஹ்ம-ப்ரம்மஸ்வரூபமாய், வித்தி- அறி, யத்-எந்த, இதம் - இந்தஈச்வரஸ்வரூபத்தை, உபாஸதே - உபாஸிக்கிறார்களோ, இதம்-இது, ப்ரஹ்ம-பரப்ரம்மமாய்,) ந- ஆகமாட்டாது.

ஸம-ஹா.—ஓய் சிஷ்யா! ஜநங்களெந்த ஈச்வரஸ்ரூபம் முதலானதை யுபாஸிக்கிறனவோ அது ப்ரம்ம ஸ்வரூபமாகமாட்டாது; எந்த ஸ்ரூபத்தினால் மனதானது வியாபிக்கப்பட்டிருக்கிறதோ, அதுவேப்ரம்ம ஸ்வரூப மென்று அறிந்துக்கொள்.

ரா-ஹா.—எந்த ப்ரம்மமானது மனதினாலறிவதற்கசக்யமோ; எந்த ப்ரம்மத்தினால் மனதானது அறியப்பட்டதாய் சொல்லுகிறார்களோ; அதுவே ப்ரம்மமென்று நீ அறிந்துக்கொள்.

எ - ஸூ. யச்சக்ஷுஷா ந பச்யதி யேந சக்ஷூம்ஷி பச்யதி।
ததேவ ப்ரஹ்ம த்வம் வித்தி நேதம் யதிதமுபாஸதே॥

౭. యచ్చక్షుషా న పశ్యతి యేన చక్షూంషి పశ్యతి।
తదేవ బ్రహ్మ త్వం విద్ధి నేదం యదిదముపాసతే॥

(ப-ம்) (லோக:-ஜநமானது) சக்ஷுஷா-கண்ணால், யத் - எந்த ப்ரம்மஸ்வரூபத்தை, ந பச்யதி - பார்க்கவில்லையோ, (லோக: - ஜநமானது) யேந-எந்த அந்தக்கரணத்தோடு கூடிக்கொண்டு இருக்கிறப்ரம்மத்தினால் சக்ஷூம்ஷி-கண்களை, பச்யதி-பார்க்கிறதோ, ததேவ-அதையே, த்வம்-நீ ப்ரஹ்ம-பரப்ரம்மமென்று, வித்தி-அறிந்துக்கொள், (ஜநா:-ஜனங்கள்) யத் எந்த, இதம்-இந்தபிம்பரூபமாய் அநாத்மாவான ஈச்வரனை, உபாஸதே - உபாஸிக்கிறார்களோ, இதம்- இது, ந-ப்ரம்மமாகமாட்டாது.

ஸம-ஹா,—ஓய் சிஷ்யா ஜனங்கள்,பிம்பரூபமாக உபாஸிக்கிற ஈச்வரன் முதலானதுப்ரம்மமாகமாட்டாது. ஜனங்கள்கண்களாலே பார்க்கப்பட்டதை, அந்தக்கரணத்தோடுகூடிக் கொண்டிருக்கிறஎந்த ப்ரம்ம ஸ்வரூபத்தினால் நேத்திரவியாபாரங்களைக்கொண்டு பார்க்கிறார்களோ அதையேநீ பிரம்ம ஸ்வரூபமென்றறிந்துக்கொள்.

ரா-ஹா.—எந்த பரப்ரம்மத்தை சக்ஷுரிந்த்ரிய மானது பார்க்கவில்லையோ எந்தப்ரம்மத்தினால் சக்ஷுரிந்திரியம் ப்ரகாசிக்கிறதோ அதுவே ப்ரம்மமென்று நீ அறிந்துக்கொள்ளென்று இந்த மந்திரம் சொல்லுகிறது.

அஸூ. யச்ச்ரோத்ரேண ந ச்ருணோதி யேந ச்ரோத்ரமிதம் ச்ருதம்॥
ததேவ ப்ரஹ்ம த்வம் வித்தி நேதம் யதிதமுபாஸதே॥

౫. యచ్ఛ్రోత్రేణ న శృణోతి యేన శ్రోత్రమిదం శ్రుతమ్।
తదేవ బ్రహ్మ త్వం విద్ధి నేదం యదిదముపాసతే॥

(ப-ம்.) (ஜநா:-ஜனமானது) ஶ்ரோத்ரேண-காதினால், யத்-எந்த, ப்ரம்மஸ்ரூபத்தை, ந ஶ்ருணோதி-கேட்கவில்லையோ, யேந-எந்த அந்தக்கரணத்தோடேகூடின ப்ரம்மத்தினால், இதம்-இந்த, ஶ்ரோத்ரம்-ஶ்ரவணவிஷயமான ஶப்தமானது, ஶ்ருதம்-கேட்கப்படுகிறதோ, ததேவ-அதையே, த்வம்-நீ, ப்ரஹ்ம-ப்ரம்மஸ்வரூபமென்று, வித்தி-அறி, (ஜநா: - ஜனங்கள்) யத்-எந்த, இதம் - இந்த அனாத்மாவான ஈஶ்வரன்முதலானதை, உபாஸதே-உபாஸிக்கிறார்களோ, இதம்-இது, ப்ரஹ்ம-பரப்ப்ரம்மமாய், ந-ஆகமாட்டாது.

ஸம்-ஸா.—ஓய் சிஷ்யா ஜனங்கள் உபாஸிக்கிற ஈச்வரன்முதலானது ப்ரம்மஸ்வரூபமாகமாட்டாது. காதினால் எந்த ஸ்வரூபமானது அறியப்படமாட்டாதோ எந்த ப்ரம்மஸ்வரூபத்தினால் காதுக்குவிஷயமான ஸப்தமானதறியப்பட்டதோ அதுவே ப்ரம்மஸ்வரூபமென்று அறிந்துக்கொள்.

ரா-ஸா.—எந்தபர ப்ரம்மமானது காதினால்கேட்கப் படவில்லையோ எந்தபர ப்ரம்மத்தினால் செவியின் ஶப்தமானது கேட்கப்படுகிறதோ அதுவே ப்ரம்மமாயறிந்துகொள்.

சு-ம். யத்ப்ராணேந ந ப்ராணிதி யேந ப்ராண: ப்ரணீயதே|
ததேவ ப்ரஹ்ம த்வம் வித்தி நேதம் யதிதமுபாஸதே ||

౬. యత్ప్రాణేన న ప్రాణితి యేన ప్రాణః ప్రణీయతే।
తదేవ బ్రహ్మ త్వం విద్ధి నేదం యదిదముపాసతే॥

(ப-ம்.) ப்ராணேந-நாஸாபுடமத்யத்திலிருக்கப்பட்ட பிராணவாயுவினால், யத் - எந்தப்ரமமஸ்வரூபமானது, ந ப்ராணிதி - பிராணவியாபாரமுடையதன்றே; யேந-எந்தப்ரமமஸ்வரூபத்தினால், ப்ராண: — ப்ராணவாயுவானது, ப்ரணீயதே - பிராணவியாபாரத்தைச் செய்விக்கப்படுகிறதோ, ததேவ-அதையே, த்வம்-நீ, ப்ரஹ்ம—பிரம்மஸ்வரூபமென்று, வித்தி-தெரிந்துக்கொள், நேதம் யதிதமுபாஸதே - என்கிறவாக்யத்திற்குஇரண்டிடத்தில் பொருள் சொல்லப்பட்டது அதுபோல் இங்குமறிந்துகொள்க.

ஸம்-ஸா.—ஓய் சிஷ்யா ஜனங்களாலுபாஸிக்கப்பட்ட ஈச்வரன் முதலானது பரப்ரம்ம ஸ்வரூபமாகமாட்டாது. பிராணவாயுவினால் எந்த பிரம்ம ஸ்வரூபமானது ப்ராண வியாபாரத்தைச் செய்யவில்லையொ எந்த ப்ரம்ம ஸ்வரூபத்தினால் ப்ராண வியாபாரமானது செய்விக்கபடுகிறதோ அதுவே ப்ரம்மமென்று அறியத்தக்கது.

ரா-ஸா.—எந்த ப்ரப்மமானது ப்ராணவாயுவினால் விஷயமா யாகமாட்டாதொ எந்த பர ப்ரம்மத்தினால் ப்ராணவாயுவானது ப்ரகாசிப்பிக்கப் படுகிறதொ அதுவே பிரம்மமென்று சிஷ்யனே நீ அறிந்துக்கொள்.

ப்ரதமகண்டஸ்ஸமாப்த:.

## த்³விதீய க²ண்ட³ வ்யாக்²யாநம்.

௧ - ௨௰. யதி³ மந்யஸே ஸுவேதே³தி த³ப்⁴ரமேவாபி நூநம் த்வம் வேத்த² ப்³ரஹ்மணோ ரூபம் । யத³ஸ்ய த்வம் யத³ஸ்ய தே³வேஷ்வத² நு மீமாம்ஸ்யமேவ தே மந்யே விதி³தம் ॥

౧. యదిమన్యసే సువేదేతి దభ్రమేవాపి నూనం త్వం వేత్థ బ్రహ్మణో రూపం।
యదస్య త్వం యదస్య దేవేష్వథను మీమాంస్యమేవ తే మన్యే విదితం॥

(ப.) ப்³ரஹ்ம - ப்ரஹ்மஸ்வரூபத்தை, ஸுவேதே³தி - செவ்வையாய் தெரிந்துகொண்டேனென்று, த்வம் - நீ, மந்யஸே யதி³ - நினைக்கும் பக்ஷத்தில், (ததா² - அப்படி என்றால்) ஏனெனில், நூநம் - நீ, (இஹ - இவ்விடத்தில்), அஸ்ய - இந்தப்ரம்மத்திலுடைய, யத் ரூபம் - எந்த ஸ்வரூபத்தை, வேத்த² - தெரிந்துகொண்டாயோ, தத் - அதுவும், தே³வேஷு - தேவதைகளிடத்தில், அஸ்ய - இந்தப்ரம்மத்திலுடைய, யத் ரூபம் - எந்தஸ்வரூபத்தை, வேத்த² - தெரிந்துகொண்டாயோ, தத³பி அதுவும், த³ப்⁴ரமேவ - அல்பமானதேயாகும், நூநம் - நிச்சயம். ஆகநீயறிந்த விராண்டுரூபமும் அல்பமாயிருந்தால் ப்ரம்மஸ்வரூபத்தை நன்கறிந்தேனென்று நீ எண்ணுவது கூடாதென்றபடி. அத² நு - ஆகையால், தே - உனக்கு தத் ரூபம் - அந்த ப்ரம்மஸ்வரூபமானது, மீமாம்ஸ்யமேவ - விசாரித்து அறிந்துக்கொள்ளத்தக்கதே. இப்படி ஆசாரியன்சொன்னதைக் கேட்டு சிஷ்யன் ப்ரம்மஸ்வரூபத்தை யுள்ளபடி நன்குயோசித்து தெரிந்துகொண்டு ஆசாரியனைநோக்கிச் சொல்லுகிறான், மந்யே விதி³தம் விதி³தா - அறியப்பட்டதாகவே, மந்யே - என்றுநினைக்கிறேன்.

பா-ஆ,—ஓ சிஷ்யா நீ, பிரம்மஸ்வரூபத்தை இவ்விடத்தில் தேவாலயத்திலாவது தேவதைகளிடத்திலாவது தெரிந்துக்கொண்டேனென்று நினைக்கிறாயோ அப்படியாகில் அது அல்பமானது. ஆகையால உனக்கு அந்த பிரம்மஸ்வரூபம் விசாரிக்கத்தக்கதென்று ஆசாரியர்சொல்லவே சிஷ்யன்கேட்டு ஏகாந்தத்தில் உட்கார்ந்துக்கொண்டு குருவினால் சொல்லப்பட்ட வேதார்த்தத்தை யுக்தியால் விசாரித்து ஸ்வாநுபவத்தில் நிர்த்தாரணம்செய்துக்கொண்டு ஸமீபத்திற்குவந்து நான் அந்த ப்ரம்மஸ்வரூபம் தெரியும்படியாகவே எண்ணுகிறேனென்று சொன்னான்.

ஸா-ஹ.—இந்த மந்திரமானது சிஷ்யனைக்குறித்து ஆசாரியன் சொல்வது நீ ப்ரம்மஸ்வரூபத்தை அறிந்ததாய் நினைப்பாயேயானால் அதுநிச்சயமாய் அல்பம்தான். அந்த ப்ரம்மத்திலுடைய இந்த லோகத்திலிருக்கிற ராமகிருஷ்ணாதிகளுடைய ரூபத்தை அறிந்தேனென்று நீ நினைத்தபோதிலும் அதுவும் அல்பம்தான். ப்ரம்மருத்ராதிகளிடத்தில் அந்த பிரம்ம மிருக்கிறதென்று நினைப்பாயேயானாலும் அதுவும் அல்பம்தான். ஆகையால் எல்லாம் பிரம்மஸ்வரூபமென்று நினைக்கவேண்டும். ஓ சிஷ்யா விபவ வியூஹாதிகளைக்காட்டிலும் மேலான பரப்ரம்ம ஸ்வரூபமானது உன்னால் செவ்வையாயறியத்தக்கது. அதற்குமேல் சிஷ்யன் சொல்வதாவது;

ஆசாரியரே நீங்கள் ப்ரம்மஸ்வரூபத்தை யுபதேசிப்பதற்கு முன்னே அந்த ப்ரம்மஸ்வரூபமானது அறியப்படவில்லை. இப்பொழுது என்னால் அறியப்பட்டதென்று நினைக்கிறேன்.

உ - ஶ்ல. நாஹம்மந்யே ஸுவேதேதி நோ ந வேதேதி வேத ச|
யோ நஸ்தத்வேத தத்வேத நோ ந வேதேதி வேத ச||

௨. నాహంమన్యే సువేదేతి నో న వేదేతి వేదచ।
యో నస్తద్వేద తద్వేద నో న వేదేతి వేదచ॥

(ப்-ம்) அஹம் - நான், தத் - அந்த ப்ரம்மஸ்வரூபத்தை, ஸுவேதேதி - நன்றாய்தெரிந்துக் கொண்டேனென்று, நமந்யே - நினைக்கவில்லை, (அஹம்-நான்), தத்-அந்த ப்ரம்மஸ்வரூபத்தை, நவேதேதி - தெரிந்துக் கொள்ளவில்லை என்றும். நோமந்யே-நினைக்கவில்லை, வேதேதிச-தெரிந்துக்கொண்டேனென்றும், மந்யே-எண்ணுகிறேன் யஃ-எவன், - நஃ - நமக்குள், தத் - அந்த நோநவேதேதிவேதச - நோநவேதேதி வேதச, என்கிற இந்தவாக்கியத்தினுடைய அர்த்தத்தை, வேத - தெரிந்துக்கொண்டானோ, (ஸஃ - அவன்) தத்-அந்த ப்ரம்மஸ்வரூபத்தை, வேத-தெரிந்துக் கொள்ளுகிறான்.

ஸம்-ஹா.—ஓய் ஸ்வாமி நான் ப்ரம்மஸ்வரூபத்தை தெரிந்துக் கொண்டேனென்று நினைக்கிறேன். நானந்த ப்ரம்மஸ்வரூபத்தை செவ்வையாய்தெரிந்துக்கொள்ளவில்லையென்று நினைக்கிறேன். நன்றாய் தெரிந்துக்கொண்டேனென்கிற ஜ்ஞானமானது விபரீதம். ஆனாலும், வெளியில் இந்திரியங்களாலே தெரிந்துக்கொள்ளத்தக்கதெல்லாம் நாசத்தையடைவதினால் ஸம்சயவிபரீத ரூபமான வைகளின் ஜ்ஞானத்தைவிட்டு ப்ரம்மஸ்வரூபத்தை தெரிந்துக்கொண்டேன். இந்தபிரகாரம் நான் ப்ரம்ம ஸ்வரூபத்தை தெரிந்துக்கொண்டேனென்று நினைக்கிறேன். தெரிந்துக் கொள்ளவில்லையென்றும் நினைக்கிறேன். நான் சொன்னவாக்கியார்த்தத்தை ஸப்ரம்மசாரிகளில் எவன் அறிகிறானோ அவன் அந்தபிரம்ம ஸ்வரூபத்தை தெரிந்துக்கொண்டவனென்று சிஷ்யன் சொன்னான்.

பா-ஹா.—நான் அந்தப்ரம்ம ஸ்வரூபத்தை செவ்வையாயறிந்தேனென்று நினைக்கவில்லை அறியவில்லையென்றும் நினைக்கவில்லை ஆனால் பிரம்ம ஜ்ஞானிகளுடைய மத்யத்தில்இவன்பிரம்மஸ்வரூபத்தை யறிந்தவன் இவன் அறியாதவனென்று எவன் தத்துவத்தை யறிந்தானோ அவனே பிரம்மத்தையறிந்தவன்.

ந. ஶ்ல. யஸ்யாமதம் தஸ்ய மதம் மதம் யஸ்ய ந வேத ஸஃ|
அவிஜ்ஞாதம் விஜாநதாம் விஜ்ஞாதமவிஜாநதாம்||

3. యస్యామతంతస్యమతం మతంయస్యనవేదసః
అవిజ్ఞాతంవిజానతాం విజ్ఞాతమవిజానతాం||

(ப்-ம்.) யஸ்ய - எந்தபிரம்மவேத்தாவுக்கு, (ப்ரஹ்ம - பிரம்மஸ்வரூபமானது) அமதம் - தெரியவில்லையென்கிற அபிப்பிராயமோ, தஸ்ய-அந்தபிரம்ம வேத்தாவுக்கு, மதம் - பிரம்மம்தெரிந்தது - அவனால் ப்ரம்மமறியப்பட்டதென்கை. யஸ்ய — எவனுக்கு, (ப்ரஹ்ம - பிரம்மஸ்வரூப

மானது) மதம் - அரியப்பட்டதென்கிற அபிப்ராயமோ, ஸ: - அவன், ப்ரஹ்ம - பிரம்மஸ்வரூபத்தை, நவேத - அறியவில்லை. ஏனெனில், ப்ரஹ்ம - பிரம்மஸ்வரூபமானது, விஜாநதாம் - தெரிந்தவர்களுக்கு, அவிஜ்ஞாதம் - அறியப்படாது, அவிஜாநதாம் - அறியப்படமாட்டாதென்கிற ஜ்ஞாநமானது எவர்களுக்கு இருக்கிறதோ, (தேஷாம் - அவர்கள்,) விஜ்ஞாதம் - செவ்வையாயறியப்பட்டதாயாகிறது.

ஶம்-ஹா.—எவனுக்கு, புத்திமுதலானதுகளாலே யறியத்தகாதது பிரம்ம ஸ்வரூபமென்கிற நிச்சயமோ; அவனுக்கு தெரிந்தது ப்ரம்மமென்று நிச்சயம்.

ரா-ஹா.—எவனுக்கு பிரம்மஸ்வரூபமானது அறிவதற்குக்கூடாதது என்கிற அபிப்பிராயமொ அவனால்தான் பிரம்மமறியப்பட்டது, எவனுக்கு பிரம்மமானது அறியத்தகதென்கிற அபிப்ராயமோ அவனால் பிரம்மமானது அறியப்படமாட்டாது.

மூ. ௪. ப்ரதிபோதவிதிதம்மதமம்ருத த்வம்ஹிவிந்ததே|
ஆத்மநாவிந்ததேவீர்யம் வித்யயாவிந்ததேऽம்ருதம்॥

౪. ప్రతిబోధవిదితంమతమమృతత్వంహివిందతే।
ఆత్మనావిందతేవీర్యం విద్యయావిందతేమృతమ్॥

(ப-ம்.) ஹி - எந்தகாரணத்தினால், (மதிமத: - புத்திமானுக்கு,) ப்ரஹ்ம - ப்ரம்மஸ்வரூபமானது, ப்ரதிபோதவிதிதம் - ஜ்ஞாநந்தோறும் கோசரிக்கிறதாயாகிறதோ அதாவது ஒவ்வொருஸாக்ஷி சைதந்யத்திலும் தோற்றுகிறதோ, தத - அந்தகாரணத்தால், மதம் - தெரியப்பட்டதாய், (பவதி - ஆகிறது) அப்படியறியப்பட்டால், அம்ருதத்வம் - மோக்ஷத்தை விந்ததே - அடைகிறான்,-அதெப்படியெனில், ஆத்மநா-ஆத்மாவினால், வீர்யம் - ஸாமர்த்யத்தை, விந்ததே - அடைகிறான், வித்யயா-ஜ்ஞாநத்தால், அம்ருதம் - மோக்ஷத்தை, விந்ததே - அடைகிறான்.

ஶம்-ஹா.—முன்னால் சொல்லப்பட்ட ச்ருதியினுடைய தாத்பர்யத்தினால் பிரம்ம ஸ்வரூபம்தெரிந்துக்கொண்டவனுக்கும் தெரியாதவனுக்கும் பேதமானது இங்கே ஏர்படுத்தப்பட்டிருக்கிறது. பிரம்மவேத்தாவுக்கு எப்பொழுது இரண்டும் அதாவது ஜீவனும் பரமாத்மாவும் ஒன்றாய் தெரிகிறதோ; அப்பொழுதான் பிரம்மத்தையறிந்தவனென்று அறியவேண்டியது. பிரம்மஜ்ஞாநிக்கு தன் கண்ணுக்கு தோன்றினவையெல்லாம் எப்பொழுது பேதமில்லாமல் ஒரேரூபமாய் தோன்றுகிறதோ அப்பொழுததான் மோக்ஷப்ராப்திரூபமான சாமர்த்யத்தை யடைந்து, ஆத்மஜ்ஞாநத்தினால் மோக்ஷத்தை, அடைகிறானென்று இந்தமந்திரம் சொல்லுகிறது.

ரா-ஹா.—ஸத்யம்ஜ்ஞாநமநந்தம்ப்ரஹ்ம என்கிறச்ருதியின்படி ஸத்யஜ்ஞாந ஸ்வரூபமாய் அநந்தமான பரம்மத்தின் ஜ்ஞானமானது மோக்ஷஸுகத்தையடைவிக்கும். அடையும்வழியாதெனில், தன்னை யடைந்தவனிடத்தில் தயாளுவான பரமாத்மாவினால் வித்யாபலத்தை யடைகிறான் வித்யாபலத்தால் மோக்ஷத்தையடைகிறான்.

ரு. இஹ சேத3வேதீ3த3த2 ஸத்யமஸ்தி ந சேதி3ஹாவேதீ3ந்மஹதீ விநஷ்டி꞉ பூ4தேஷு பூ4தேஷு விசித்ய தீ4ரா꞉ ப்ரேத்யாஸ்மால்லோகாத3ம்ருதா ப4வந்தி ॥

౫. ఇహ చేదవేదీదథ సత్యమస్తి న చేదిహావేదీన్మహతీ వినష్టిః।
భూతేషు భూతేషు విచిత్య ధీరాః ప్రేత్యాస్మాల్లోకాదమృతా భవంతి॥

(ப-ம்.) இஹ இவ்விடத்தில், (ஆத்மாநம்-ஆத்மஸ்வரூபத்தை), அவேதீ3த்-அறிவனேயாகில், அத2-அப்போது, ஸத்யம்-ஸத்யஸ்வரூபமாக, அஸ்தி-இருக்கிறான், இஹ-இந்தலோகத்தில், (ஆத்மாநம் - ஆத்மஸ்வரூபத்தை) ந அவேதீ3த்-தெரிந்துக்கொள்ளாமல் போவானேயானால், மஹதீ-அதிகமான, விநஷ்டி꞉-நாசமானது, (ப4வதி - உண்டாகிறது) ஆகையால் தீ4ரா꞉-ஜ்ஞாநிகள், பூ4தேஷு பூ4தேஷு-ஸமஸ்தப்ராணிகளிடங்களிலும், விசித்ய-ப்ரமத்தைத் தெரிந்துக்கொண்டு, அஸ்மாத்-இந்தலோகத்திலிருந்து, ப்ரேத்ய-லோகாந்தரம்சென்று, அம்ருதா꞉-மறுபிறவி இல்லாமல் ப4வந்தி-ஆகிறார்கள்.

ஸ0-ஸா.—இந்தலோகத்தில் ப்ரம்மஸ்வரூபத்தை தெரிந்துக்கொண்டவனுக்கு ஸத்ய ஸ்வரூபமேயாகிறது. இந்தஉலகத்தில் ப்ரம்மஸ்வரூபத்தை தெரிந்துக்கொள்ளாதவனுக்கு நாசமானது ஸம்பவிக்கிறது ஜ்ஞாநிகள் எல்லாப்பிராணிகளிடத்திலும் அத்விதீயமான ஆத்மாவை அறிந்துக்கொண்டு மரணமடைந்தபிறகு புநர்ஜந்மமில்லாத மோக்ஷத்தை யடைந்து ப்ரம்மாநந்தத்தை யடைகிறார்கள்.

ரா-ஸா.—எந்தமனிதர்கள் இந்தஜன்மத்தில் ப்ரம்ம ஸ்வரூபத்தை அறிகிறார்களோ அவர்கள் மறுஜன்மத்தை யடைகிறதில்லை ஸத்யம். இந்த ஜன்மத்தில் ப்ரம்மஜ்ஞாநிகளாகாமல் போவார்களேயானால் அவர்களுக்காத்மவிநாசமான துண்டாகிறது. ஆகையால் வித்வான்கள் ஸமஸ்தமான ப்ராணிகளிடத்திலிருக்கிற பரமாத்மாவை தன்னைக்காட்டிலும் விலக்ஷணமான வஸ்துவென்று த்யாநம்பண்ணி இந்த லோகத்தில் நின்றும் அர்ச்சிராதி மார்க்கத்தினுல் முக்தர்களாகிறார்கள்.

இதி த்3விதீய꞉ க2ண்ட3꞉.

---

த்ருதீய꞉ க2ண்ட3꞉.

க. ப்3ரஹ்ம ஹ தே3வேப்4யோ விஜிக்3யே தஸ்ய ஹ ப்3ரஹ்மணோ விஜயே தே3வா அமஹீயந்த । த ஐக்ஷந்தாஸ்மாகமேவாயம் விஜயோஸ்மாகமேவாயம் மஹிமேதி ॥

౧. బ్రహ్మహ దేవేభ్యో విజిగ్యే తస్యహ బ్రహ్మణో విజయే దేవా అమహీయంత।
త ఐక్షంతాస్మాకమేవాయం విజయోస్మాకమేవాయం మహిమేతి॥

(ப-ம்.) ப்3ரஹ்ம-முன்னால்சொல்லப்பட்ட பிரம்மஸ்வரூபமே, தே3வேப்4ய꞉-தேவதைகளையும்பொருட்டு, (அஸுரான்-இராக்ஷஸர்களை) விஜிக்3யே-ஜயித்தது, தஸ்ய ப்3ரஹ்மண꞉ - அந்த பிரம்மத்தினுல் செய்யப்பட்ட

விஜயே இராக்ஷஸஜயத்தில், தேவா: தேவதைகள், அமஹீயந்த-கொண்டா டப்பட்டார்கள், தே-அந்த தேவர்கள், அஸ்மாகம் விஜய:-இந்த அஸுரவிஜயமானது, அஸ்மாகம் ஏவ-நம்முடையது, அஸ்மாகம் மஹிமா-இந்த ஸாமர்த்யமானது, அஸ்மாகம்-நம்முடையது. இதி-என்று, ஐக்ஷந்த-பார்த்தார்கள்.

ஸம்-ஹா.—முன்னால் சொல்லப்பட்ட ப்ரமாணத்தில் நிச்சயிக்கப்பட்ட ப்ரம்மஸ்வரூபானது மந்தபுத்தியான ஜனத்திற்கு தெரியமாட்டாது. ப்ரம்மஸ்வரூபம் இல்லையென்று வியாமோகப்படும் என்று பரப்ரம்மசக்திக்கி த்ருஷ்டாந்தமாக இந்தமந்த்ரம் துடங்கி கதையாய் ப்ரம்மத்தின் சக்தியைத்தெரியப்படுத்துகிறது.

ரா-ஹா.—ஆத்மநாவிந்ததே வீர்யமென்று முன்சொன்னதற்கு த்ருஷ்டாந்தமாய் இது தொடங்கி ஒருகதைசொல்லப்படுகிறது. பரமாத்மாவானவர் தேவதைகளுடைய க்ஷேமத்திற்காக, அசுராதிகளாகிய சத்ருக்களை ஜயித்தபடியால் அந்ததேவர்கள் பூஜிக்கபபட்டவர்களாய் இந்த அஸுரவிஜயமானது நம்மால் செய்யப்பட்டதென்றும், அந்தஜயத்திற்கு அநுகூலமான சாமர்த்யமும் நம்முடையது தானென்றும், நினைத்தார்கள்.

உ. தத்தைஷாம்விஜஜ்ஞௌ தேப்யோ ஹ ப்ராது3ர்ப3பூ4வ தந்ந வ்யஜாநந்த கிமித3ம்யக்ஷமிதி॥

௨. తద్ధైషాంవిజజ్ఞౌతేభ్యోహప్రాదుర్బభూవతన్నవ్యజానంతకిమిదంయక్షమితి॥

(ப்-ம்.) தத்-அந்த ப்ரம்மஸ்வரூபமே, ஏஷாம் இந்த தேவதைகளுடைய, (மித்யாக்ஞானம்-அசத்யமானஜ்ஞானத்தை) விஜஜ்ஞௌ-தெரிந்துக்கொண்டது, தேப்ய:-அந்த தேவர்களையும்பொருட்டே, ப்ராதுர்பபூவ-யக்ஷரூபம்கொண்டு தோன்றிற்று, தே-அந்ததேவர்கள், தத்-அப்படிக்கிவந்த ப்ரம்மஸ்வரூபத்தை, கிமிதம்யக்ஷமிதி - நம்மிடத்தில் அநுக்ரகத்தால் யக்ஷரூபங்கொண்டுவந்த பரப்ரம்மமென்று, ந வ்யஜாநந்த-தெரிந்துக்கொள்ளவில்லை.

ஸம்-ஹா, —ப்ரம்மஸ்வரூபமானது ஸர்வாந்தர்யாமியாய் எல்லாவற்றையும் தெரிந்துக்கொள்ளும் தன்மையுடையதாகையால் தேவதைகளுக்கு, அஸுரர்களை நாமே ஜயித்தோமென்கிற மித்யாஜ்ஞானம் பிறந்ததென்றறிந்துக்கொண்டு, மித்யாஜ்ஞானமானது நாசத்தை யுண்டுபண்ணும் தன்மையதாகையால், தேவதைகளுக்குப் பிறந்த, ப்ரம்மத்தின் மகிமையினலாகிய அஸுரவிஜயத்தைத் தங்கள்மகிமையினலானதாய் நினைக்கையாகிற கீழ்ச்சொல்லிய மித்யாஜ்ஞானமானது, இவர்களுக்கு அஸுரர்களால் விநாசத்தையுண்டுபண்ணி வைக்குமே என்று நினைத்து இப்படி விநாசத்தை யுண்டுபண்ணுகிற மித்யாஞானமானது தேவதைகளைவிட்டு நீக்கவேணுமென்று, அனுக்ரகத்தினல் தன்மகிமையைக்கொண்டு பெரிய யக்ஷரூபத்தைத் தரித்து முன்னேநின்ற பரப்ரம்மத்தை இன்னதென்று தேவர்களறியமாட்டாமல் போனர்கள் என்று இந்த மந்த்ரத்தின் பொருள்.

ரா-ஹா.—முன் சொல்லப்பட்ட ஜ்ஞானமானது, எந்த ப்ரப்ரம்ம ஸ்வரூபத்தை தெரிந்துக்கொண்டதோ அந்த பரமாத்மாவினுடைய ஸ்வரூபத்தை யறியாமலிருக்கிற தேவர்களுடைய க்ஷேமத்துக்காக யக்ஷரூபமெடுத்த பகவானுடைய ரூபத்தைப் ரம்மஸ்வரூப மென்றறியாமல் இதென்ன பூஜ்யமானதென்று நினைத்தார்கள்.

ரா-ஹா.—கர்மத்தாலாகிய சரீரமில்லாதவனும் நித்யனும் அப்ராக்ருத ஸ்வா ஸாதாரண திவ்யமங்கள விக்ரஹயுக்தனு மிருக்கிற பரமாத்மாவை யறிந்தவனுக்கு சோகமில்லை.

உங. நாயமாத்மா ப்ரவசநேந லப்யோ ந மேதயா ந பஹுநா ஶ்ருதேந । யமேவைஷ வ்ருணுதே தேந லப்யஸ் தஸ்யைஷ ஆத்மா விவ்ருணுதே தநூꣳ ஸ்வாம்॥

౨౩. నాయమాత్మా ప్రవచనేన లభ్యో న మేధయా న బహునా శ్రుతేన ।
యమేవైష వృణుతే తేన లభ్య స్తస్యైష ఆత్మా వివృణుతే తనూꣳ స్వామ్॥

(ப-ம்.) அயம்-இந்த ஆத்மாவானவன், ப்ரவசநேந - மநநத்தாலும், மேதயா-புத்தியாலும், பஹுநா ஶ்ருதேந - அதிகமாய்க்கேட்டதாலும், ந லப்ய:-அடையத்தக்கவனன்று, யம்-யாதொருவனை, ஏஷ: - இந்தபரமாத்மா, வ்ருணுதே-வேண்டுகிறானோ, தேந - அவனால், லப்ய: - அடையத்தக்கவன், தஸ்ய - அவனுக்கு, ஏஷ: - இந்தபரமாத்மா, ஸ்வாம் - தநூம்-தன் ஸ்வரூபத்தை, விவ்ருணுதே-காட்டுகிறார்.

ஶம்-ஹா.—இப்படி ஆத்மா அடையக்கூடாதவனாயினும், உபாயத்தாலே அடையத்தக்கவனென்று சொல்லுகிறது. அந்த உபாயமானது, அத்யயநம், தாரணம், ப்ரவசநம், முதலிய இவைகள் மாத்திரமன்று. நிஷ்காமனாகிய ஆத்மாவை விரும்புதலே இதற்கு முக்யோபாயம். அப்படி விரும்புகிறவனுக்கே, இந்த ஆத்மஸ்வரூபம் ப்ரகா

ரா-ஹா.—கேவலச்ரவண, மநந, நிதித்யாஸநங்களால், இந்த ஆத்மா அடையப்பட்டான். அந்தபரமாத்மாவின் ப்ரீதியைப்பெற்றால், அவனையடையலாகும். அவன் ப்ரீதியைப்பெறுதல், அவனிடத்தி லிவனுக்கு ப்ரீதியுண்டானாலேயாகும் ஆகையால், பரமாத்மாவினிடத்தில் அதிசயப்ரீதியைப்பண்ணி யவனையுபாஸித்தால் அவனுடைய வநுக்ரகத்தாலே அவனுடைய நித்யவிபூதியில், நித்யாநந்த ஸ்வரூபமா யிருக்கிற திவ்யமங்கள விக்ரஹ விஶிஷ்ட திவ்யாத்மஸ்வரூபத்தை கண்டு மகிழலாகும்.

உச. நாவிரதோ து³ஶ்சரிதாந் நாஶாந்தோ நாஸமாஹித: । நாஶாந்தமாநஸோ வாபி ப்ரஜ்ஞாநேநைநமாப்நுயாத் ॥

౨౪. నావిరతో దుశ్చరితాన్నా శాన్తో నాసమాహితః ।
నాశాంతమానసోవాపి ప్రజ్ఞానేనైనమాప్నుయాత్ ॥

(ப-ம்.) து³ஶ்சரிதாத்-நிஷித்தங்களில் நின்றும், அவிரத: - நீங்காதவனும், அஶாந்த:-சாந்தியில்லாதவனும், அஸமாஹித: - நிலையில்லாதவனும், அஶாந்தமாநஸ: - மநச்சாந்தியில்லாதவனும், ஏநம் - இந்த ஆத்மாவை, ப்ரஜ்ஞாநேந-உபாஸநத்தால், நாப்நுயாத்-அடையுமாட்டான்.

ஶம்-ஹா.—ஶ்ருதிஸ்ம்ருதி முதலியவற்றில் நிஷேதிக்கப்பட்டக்ருத்யங்களைச் செய்துகொண்டு, உபசாந்தியில்லாமலிருக்கிற புருஷன் ஆத்மாவைப் பெறமாட்டான். சாஸ்திரப்படி இருப்பவனே பெறுவான்.

ஶ்ரீ-ஸா.—உபாஸநாங்கமாயிருக்கிற நிஷித்தநிவ்ருத்தியில்லாதவனுக்கு, அங்க வைகல்யத்தால், உபாஸநாஸாத்குண்யமில்லாமையாலே, பரமாத்மப்ராப்திகிடையாது. ஆகையால், துச்சரிதங்களைவிட்டு, ஸதநுஷ்டாநங்களோடு கூடிய புருஷனே, அந்தபரமாத்மாவை யடைவான்.

பதாந்வயார்த்தபேதங்கள்.

இந்தச்லோகத்தில், 'ந' என்கிறபதம், நாலிடங்களிலிருக்கிறபடியால், இதை நாலுவாக்யங்களாக்கி அந்வயித்துக்கொள்க.

உரு. யஸ்ய ப்ரஹ்ம ச க்ஷத்ரம் ச உபே பவத ஓதந: ।
ம்ருத்யுர்யஸ்யோபஸேசநம் க இத்தா வேத யத்ர ஸ: ॥

௨௫. యస్యబ్రహ్మచక్షత్రంచ ఉభేభవతఓదనః ।
మృత్యుర్యస్యోపసేచనం కఇత్థావేదయత్రసః ॥

(ப-ம்.) யஸ்ய-யாதொருபரமாத்மாவுக்கு, ப்ரஹ்ம-ப்ராம்மணர்களும், க்ஷத்ரம்-க்ஷத்திரியர்களும், ஓதந: - அந்நமாய், பவத:-ஆகிறார்களோ, யஸ்ய-எந்தபரமாத்மாவுக்கு, ம்ருத்யு: யமன், உபஸேசநம்-வ்யஞ்சனமோ; ஸ:-அந்தபரமாத்மா, யத்ர-யாதொரு ப்ரகாரத்தி லிருக்கிறானோ, அந்தப்ரகாரத்தை, க:-எவன், இத்தா-இப்படிப்பட்டதென்று, வேத-அறிவான்.

ஶ்ரீ-ஸா.—இந்தஸாதகனைப்போல்,ஸகலசராசரங்களையும் ம்ருத்யுவை உபஸேசநமாக்கிக்கொண்டு,ஸம்கரிக்கிற (அதாவது, ம்ருத்யுமுதலான சகலத்தையுமழிக்கிற) பரமாத்மாவை, மற்றொருவன்காணமாட்டான்.

ஶ்ரீ-ஸா.—ப்ராம்மணன், க்ஷத்ரியன், என்கிறஜாதியோடு குடிகொண்டிருக்கிற சராசரங்களெல்லாவற்றையும், எவன், அந்நமாக்கிக் கொள்ளுகிறானோ; அதாவது, எவனாலழிக்கப்படுகிறதோ;யாதொருவன்,ம்ருத்யுவைக்கொண்டு,அந்யங்களை புசித்து, ம்ருத்யுவையும் புசிக்கிறானோ; ஸகலஜகத்தையுமழிக்கிற அந்த பரமாத்மா, எப்படிப் பட்டவரா யிருக்கின்றாரோ; அந்த உண்மையை, இப்படிப் பட்டதென்று எவனறிவான்.

கடோபநிஷத் த்விதீயவல்லி முடிந்தது.

## த்ருதீயவல்லீ ப்ராரம்ப:.

க. ருதம் பிபந்தௌ ஸுக்ருதஸ்ய லோகே குஹாம் ப்ரவிஷ்டௌ பரமே பரார்த்தே । சாயாதபௌ ப்ரஹ்மவிதோ வதந்தி பஞ்சாக்நயோ யே ச த்ரிணாசிகேதா: ॥

౧. ఋతంపిబంతౌసుకృతస్యలోకే గుహాంప్రవిష్టౌపరమేపరార్థే ।
ఛాయాతపౌబ్రహ్మవిదోవదంతి పఞ్చాగ్నయోయేచత్రిణాచికేతాః ॥

(ப-ம்.) ருதம் - கர்மபலத்தை, பிபந்தௌ , அநுபவிக்கிறவர்களாய், ஸுக்ருதஸ்ய-புண்யத்தாலுண்டாகிய, லோகே - இந்தலோகத்திலிருப்பவர்களாய், குஹாம் - ஹ்ருதயகுகையில், ப்ரவிஷ்டௌ - ப்ரவேசித்திருப்

பவர்களாய், பரமே பரார்த்தே - ஹார்தாகாசத்திலிருக்கிற, சாயா தபௌ-ஜீவன், பரமாத்மா இவர்களை, பஞ்சாக்நய: - க்ருகஸ்தர்களாயும், யே ச த்ரிணாசிகேதா: - த்ரிணாசிகேதர்களாயுமிருக்கிற, ப்ரஹ்மவித: - ப்ரம்மவித்துக்கள், வதந்தி - சொல்லுகிறார்கள்.

ஸம்-ஹா.—நன்றாய் ஆத்மஸ்வரூபத்தைத் தெரியப்படுத்தச், சொல்லுகிறது. தன்னால்செய்யப்பட்ட கர்மபலத்தை யநுபவித்துக்கொண்டு, இந்தசரீரத்தில் ஹ்ருதயகுகையிலிருந்து, ஹார்தபரமாகாசத்தில் தோற்றுகிறஜீவன், பரமாத்மா, இவர்களை, பஞ்சாக்நிகளும் அவாவது க்ருகஸ்தர்களும் த்ரிணாசிகேதர்களும், ப்ரம்மவித்துக்களும், சொல்லுகிறார்கள். இவர்களில், ஒருவன், ஸம்ஸாரி ஒருவன் அஸம்ஸாரி ஆகையால், அஸம்ஸாரியான பரமாத்மாவுக்கு, கர்மபலாநுபவ மெப்படியென்றால்; கூடியிருக்கையால், சத்திரிந்யாயத்தால் இருவரையும் கர்மபலத்தை யநுபவிக்கிறவர்களாகச்சொல்லுகிறது. கார்ஹபத்யம், தக்ஷிணாக்நி, ஆஹவநீயம், ஸப்யம், ஆவஸத்யம், என்கிறவிவைகள், பஞ்சாக்நிகள்.

ரா-ஹா.—"கஹாயாம்" என்று யெவனாலுமறியப்படாததாய், ஆத்மஸ்வரூபம் சொல்லப்படுகையால், நாமுபாஸித்துப்பெறுவ தெப்படி என்று ஸந்தேஹிக்க வேண்டாம்; ஜீவபரமாத்மாக்கள், ஒரிடத்தில் சேர்ந்திருக்கையால், நாம, ஸுகமாயுபாஸிக்கலாகுமென்று சொல்லுகிறது. புண்யம், பாபம், இவைகளின்பலத்தை யநுபவித்துக்கொண்டு, புண்யத்தாலாகிய இந்தலோகத்தில் ஹ்ருதயகுகையில் பரமாகாசத்தில், அதாவது ஹார்தாகாசத்தில் சேர்ந்திருக்கிற, அஜ்ஞ ஸர்வஜ்ஞர்களாகிய ஜீவாத்மா, பரமாத்மா, இவர்களை த்ரிணாசிகேதர்களாயும், பஞ்சாக்நிகளாயுமிருக்கிற ப்ரம்மவித்துக்கள், சொல்லுகிறார்கள். இப்படி கூடியிருக்கும்போது, பரமாத்மாவை ஜீவாத்மா அறியாமலிருப்பதற்குக் காரணம், அந்தபரமாத்மாவின் ஸங்கல்பத்தாலுண்டாயிருக்கிற கர்பமென்கிற அவித்யையினால் மறைக்கப்பட்டிருக்கிற ஸ்வஸ்வரூபத்தை யுடைத்தாயிருக்கை. இங்கு, பரமாத்மாவுக்கு கர்மபலாநுபவம், ப்ரயோஜக கர்த்ருத்வத்தாலே சொல்லப்பட்டது.

உ. யஸ்ஸேதுரீஜாநாநாமக்ஷரம் ப்ரஹ்ம யத்பரம் ।
அபயம் திதீர்ஷதாம் பாரம் நாசிகேதம் ஸகேமஹி ।

௨. యస్సేతురీజానానామక్షరం బ్రహ్మయత్పరం ।
అభయంతితీర్షతాం పారంనాచికేతగ్ంశకేమహి ॥

(ப-ம்.) ஈஜாநாநாம்-யஜ்ஞாதிகர்மங்களை யநுஷ்டிப்பவர்களுக்கு, ஸேது:-பலத்தைக்கொடுப்பது, ய: - எதுவோ, அக்ஷரம் - அருவில்லாமலிருக்கிற, பரம்ப்ரஹ்ம - பரப்ரம்மமானது, யத் - எதுவோ, தத் - அந்த, திதீர்ஷதாம்-முமுக்ஷுக்களுக்கு, அபயம் பயமில்லாத, பாரம் - கரையாய், (அதாவது ப்ராப்யமாய்) நாசிகேதம் — நாசிகேதாக்நியினாலடையப்படுகிற பரமாத்மாவை, (உபாஸிதும் - உபாஸிப்பதற்கு,) ஸகேமஹி-சக்தர்களாயிருக்கிறோம்.

ஸம்-ஹா.—வேண்டினபலத்தைத் தருகிற நாசிகேதாக்நியையும், பயமில்லாத மோக்ஷத்தைத்தருகிற ப்ரம்மத்தையும், அறிந்துக்கொள்ள நாம் சக்தர்களாயிருக்கிறோம்.

ரா-ஹா.—எல்லா பலங்களையும் விரும்பினபடி, அவ்வோஸாதநங்களை யநுஷ்டித்தபேர்களுக்கு, கொடுப்பதாய், முமுக்ஷுக்களுக்கு மோக்ஷத்தைத் தருவதான அக்ஷரபரப்ரம்மத்தை, நாமுபாஸிப்பதற்கு சக்தர்களாயிருக்கிறோம். ஆகையால், எப்படி, உபாஸிக்கப்போகிறோமென்று பயப்படவேண்டாம்.

3. ఆత్మానగ్ం రథినంవిద్ధి శరీరగ్ం రథమేవతు ।
బుద్ధింతుసారథింవిద్ధి మనఃప్రగ్రహమేవచ ॥

(ப-ம்.) ஆத்மாநம் - ஆத்மாவை, ரதிநம் – தேராளியாய், வித்தி - அறி, ஶரீரம் - தேகத்தை, ரதமேவ - தேராய், வித்தி - அறி, புத்திம் - புத்தியை, ஸாரதிம் - ஸாரதியாய், வித்தி-அறி, மந꞉ - மனஸ்ஸை, ப்ரக்ரஹமேவ-கடிவாளமாய், வித்தி-அறி.

ஸம்-ஹா.—உபாதியாலேர்பட்ட ஸம்ஸாரியாகிய ஜீவன், வித்யை, அவித்யை, என்கிற இரண்டினையும் தன்னிச்சைப்படி, யநுஷ்டித்து, மோக்ஷம், ஸம்ஸாரம் இவைகளையடைவதற்கு ஸாதநமாக இரதம் முதலியவைகள் ஏர்ப்படுத்தப் படுகின்றன. ஆத்மா தேராளியென்றும், சரீரம் இரதமென்றும் அத்யவஸாய மென்னப்படுகிற புத்தியை ஸாரதியென்றும், மனதைக் கடிவாளமென்றும், நீயறிந்துகொள். அதாவது, புத்தியினாலேவைப்பட்ட நெஞ்சுபோகிற வழியில், சரீரம்முதலியவைகள் செல்லுகின்றன என்கை.

ரா-ஹா.—இந்த மந்திரம் முதல் "ஸோத்வந꞉ பாரமாப்நோதி" என்கிற மந்திரகண்ட பர்யந்தம், ஸம்ஸாரத்திற் கக்கரையாகிய மோக்ஷத்தை யடைவதற்கு, பரிகரங்களைச்சொல்லிக்கொண்டு, ப்ராப்தாவான ஜீவாத்மாவின் ஸ்வரூபத்தை யுபதேசிக்கிறது. ஆகையாலிப்படி யறிந்து தேகேந்திரியாதிகளை வசப்படுத்திக்கொள்ள

௪. இந்த்ரியாணி ஹயாநாஹுர் விஷயாꣳஸ்தேஷு கோசராந் |
ஆத்மேந்த்ரியமநோயுக்தம் போக்தேத்யாஹுர்மநீஷிண꞉ ||

4. ఇంద్రియాణిహయానాహు ర్విషయాగ్ంస్తేషుగోచరాన్ ।
ఆత్మేంద్రియమనోయుక్తం భోక్తేత్యాహుర్మనీషిణః॥

(ப-ம்.) இந்த்ரியாணி-இந்திரியங்களை, ஹயாந் - குதிரைகளாக, ஆஹு꞉ சொல்லுகிறார்கள், தேஷு, அவைகளுக்குள், விஷயாந் - விஷயங்களை, கோசராந் மார்க்கங்களாக, ஆஹு꞉-சொல்லுகிறார்கள், மநீஷிண꞉ - மண்டிதர்கள், ஆத்மேந்த்ரியமநோயுக்தம்-சரீரம், இந்த்ரியம், மனஸ்ஸு, இவைகளோடு கூடிக்கொண்டிருக்கிற புருஷனை, போக்தேதி-போக்தாவென்று ஆஹு꞉-சொல்லுகிறார்கள்.

ஸம்-ஹா.—சரீரத்தை இழுக்கிறபடியால் இந்த்
இந்திரியங்கள் செல்லுகிறவிடம்சப்தாதிவிஷயங்களாகையால், சப்தாதிவிஷயங்களை

மார்கமென்றும் சொல்லுகிறார்கள். அறிவுடையோர், கேவலாத்மாவுக்குபோக்த்ருத்வமில்லாமையால் சரீரம் முதலியவற்றோடு கூடியிருக்கிற ஆத்மாவையே போக்தாவென்று சொல்லுகிறார்கள்.

ரா-ஸூ.—இரதம்முதலியவைகளாக ரூபிக்கப்பட்ட சரீரம் முதலியவைகளோடு கூடாதபோது ஆத்மாவுக்குகர்த்ருத்வம், போக்த்ருத்வம், இவைகளில்லாமையால்சரீராதிகளோடு குடியிருக்கிற ஆத்மாவையே, பண்டிதர்கள், போக்தாவென்று சொல்லுகிறார்கள்.

௫. யஸ்த்வவிஜ்ஞாநவாந்பவத்யயுக்தேந மநஸா ஸதா।
தஸ்யேந்த்ரியாண்யவஶ்யாநி துஷ்டாஶ்வா இவ ஸாரதே:॥

౫. యస్త్వవిజ్ఞానవాన్భవత్యయుక్తేన మనసా సదా।
తస్యేంద్రియాణ్యవశ్యాని దుష్టాశ్వా ఇవ సారథేః॥

(ப-ம்.) யஸ்து-யாதொருவன், ஸதா-எப்போதும், அயுக்தேந-நியமிக்கப்படாமலிருக்கிற, மநஸா-மனஸ்ஸாலே, அவிஜ்ஞாநவாந்-புத்தியில்லாதவனாய், பவதி-ஆகிறானோ; தஸ்ய-அவனுக்கு, இந்த்ரியாணி-இந்த்ரியங்கள், ஸாரதே:-ஸாரதிக்கு, துஷ்டாஶ்வா:இவ-பொல்லாக்குதிரைகள்போல், அவஶ்யாநி-அஸ்வாதீநங்களாய், (பவந்தி-ஆகின்றன.)

ஸம்-ஸூ—புத்தியென்கிற ஸாரதி, மநஸ்ஸாகிற கடிவாளத்தைக்கொண்டு, குதிரைகளென்கிற இந்த்ரியங்களை, நன்றாய் நியமிக்கசக்தியில்லா மூடனாயிருப்பக்ஷத்தில், துஷ்டக்குதிரைகள்போல் அவனுக்கு, இந்திரியங்கள்வசப்படுவதில்லை.

ரா-ஸூ—இம்மந்திரத்தாலும், மேலுள்ள ஒருமந்திரத்தாலும் சரீரம்முதலியவை, தேர்முதலியதாய் ரூபித்ததற்கு ப்ரயோஜநம்சொல்லப்படுகிறது. உலகத்தில் ஸாரதிமுதலியது, நன்றாயிருந்தால், குதிரைகள் வசப்பட்டிருப்பதுபோல், ஸாரதிமுதலானதாய் ரூபிக்கப்பட்டபுத்திமுதலியது நன்றாயிருக்கிறபக்ஷத்தில், இந்திரியங்கள் வசப்பட்டிருக்கும் இல்லாவிட்டால், ஸ்வாதீநங்களாயிரா.

௬. யஸ்து விஜ்ஞாநவாந்பவதி யுக்தேந மநஸா ஸதா।
தஸ்யேந்த்ரியாணி வஶ்யாநி ஸதஶ்வா இவ ஸாரதே:॥

౬. యస్తు విజ్ఞానవాన్భవతి యుక్తేన మనసా సదా।
తస్యేంద్రియాణి వశ్యాని సదశ్వా ఇవ సారథేః॥

(ப-ம்.) யஸ்து-யாதொருவன், ஸதா-எப்போதும், யுக்தேந-வசம்செய்துகொள்ளப்பட்ட, மநஸா-மனஸ்ஸோடு, விஜ்ஞாநவாந்-புத்தியுடையவனாய், பவதி-ஆகிறானோ; தஸ்ய-அவனுக்கு, இந்த்ரியாணி-இந்திரியங்கள், ஸாரதே:-ஸாரதிக்கு, ஸதஶ்வா:இவ-நல்லகுதிரைகள்போல், வஶ்யாநி-வசங்களாய், பவந்தி-ஆகின்றன.

ஸம்-ஸூ—யாதொருவன், முன்சொன்னபடியில்லாமல், நெஞ்சை வசப்படுத்துகிறபுத்திமானாயிருக்கிறானோ; அவனுக்கு, இந்திரியங்கள், ஸாரதிக்குநல்லகுதிரைகள்போல் வசங்களாயிருக்கும்.

# கடோபநிஷத்.

## பதாந்வயார்த்தபேதங்கள்.

இந்தமந்த்ரத்தின் கருத்தும் இராமாநுஜபாஷ்யத்தில், முன்ச்லோகத்திலேயே, சொல்லப்பட்டது ஆகையால் இந்த ச்லோகத்திற்கு,இராமாநுஜமுநி, பாஷ்யம் செய்யவில்லை.

எ. யஸ்த்வவிஜ்ஞாநவாந் பவத்யமநஸ்க: ஸதா(அ)சுசி:।
ந ஸ தத்பதமாப்நோதி ஸம்ஸாரஞ்சாதிகச்சதி॥

౭. యస్త్వవిజ్ఞానవాన్ భవత్యమనస్కస్సదాశుచిః ।
నసతత్పదమాప్నోతిసంసారంచాధిగచ్ఛతి ॥

(ப-ம்) யஸ்து-யாதொருவன், அவிஜ்ஞாநவாந்-புத்தியில்லாமல், அமநஸ்க:-வசப்படாத மனஸ்ஸையுடையவனாய், ஸதா - எப்போதும், அசுசி:-சுத்தியில்லாதவனாய், பவதி-ஆகிறானோ; ஸ:-அவன், தத்பதம்-அந்த ஸ்தானத்தை, நாப்நோதி-அடைகிறதில்லை, ஸம்ஸாரஞ்ச-ஸம்ஸார துக்கத்தையும், அதிகச்சதி- அநுபவிக்கிறான்.

ஸம-ஸா—நெஞ்சைவசப்படுத்திக்கொள்ளாத புத்தியாகிற ஸாரதிக்கு வருகிற அநிஷ்டத்தைச் சொல்லுகிறது. யாதொருவன், நெஞ்சைவசப்படுத்தாமல். அசுத்தனாயிருக்கிறானோ; அவன், அந்த அக்ஷரப்ரஹ்மஸ்தாநத்தை அடைகிறதில்லை;மேலும், ஸம்ஸாரதுக்கத்தையே அநுபவிக்கிறான்.

ரா-ஸா—எந்தமூடன், அஸ்வாதீநமானமனஸ்ஸையுடையவனாய், அசுசியாயிருக்கிறானோ; அவன், அந்தபரமபதத்தைஅடைகிறதில்லை. துக்கத்தையடைகிறான். எந்த தீரன் இப்படியில்லாமல் புத்திமானாயிருக்கிறானோ; அவன். அந்தபதத்தை அடைகிறான், என்று, இரண்டுமந்திரங்களாலே, இந்திரியங்களை, ஸ்வாதீநமாக்கிக் கொள்ளுகையிலும், அப்படியில்லாமலிருப்பதிலும், வருகிறஸுகதுக்கங்கள் சொல்லப்படுகிறன.

அ. யஸ்து விஜ்ஞாநவாந் பவதி ஸமநஸ்க: ஸதா சுசி:।
ஸ து தத்பதமாப்நோதி யஸ்மாத்பூயோ ந ஜாயதே॥

౮. యస్తువిజ్ఞానవాన్భవతిసమనస్కస్సదాశుచి !
సతుతత్పదమాప్నోతియస్మాద్భూయోనజాయతే॥

(ப-ம்) யஸ்து-யாதொரு, விஜ்ஞாநவாந் - புத்திமானானவன், ஸதா எப்போதும். ஸமநஸ்க:-ஸ்வாதீநமானநெஞ்சையுடையவனாய், சுசி:-பரிசுத்தனாய். பவதி-ஆகிறானோ; ஸது-அவன், யஸ்மாத்-யாதொருபதத்தினின்றும், பூய:-மறுபடியும், நஜாயதே-பிறப்பதில்லையோ; தத்பதம் அந்தஸ்தாநத்தை, ஆப்நோதி-அடைகிறான்.

ஸம-ஸா—இந்திரியங்களை வசமாகவுடையவன் புநராவ்ருத்தியில்லாத பத[illegible]கிறான்.

பதாந்வயார்த்தபேதங்கள்.

இங்கும், முன் ச்லோகத்திலேயே, இந்த ச்லோகத்தின் தாத்பர்யம் சொன்னபடியால், இதற்கு இராமானுஜமுனி, பாஷ்யம் செய்யவில்லை.

௯. விஜ்ஞாநஸாரதிர்யஸ்து மந:ப்ரக்ரஹவாந்நர:|
ஸோऽத்⁴வந: பாரமாப்நோதி தத்³விஷ்ணோ: பரமம் பத³ம்||

౯. విజ్ఞానసారథిర్యస్తుమనః ప్రగ్రహవాన్నరః।
సో౽ధ్వనః పారమాప్నోతి తద్విష్ణోః పరమం పదమ్॥

(ப-ம்) யஸ்து-எந்த, நர:-மநுஷ்யன், விஜ்ஞாநஸாரதி:-விவேகத்தை ஸாரதியாக்கிக்கொண்டு, மந:ப்ரக்ரஹவாந்- மனஸ்ஸை வசப்படுத்திக் கொள்ளுகிறானே; ஸ:-அவன், அத்⁴வந:-ஸம்ஸாரமார்க்கத்திற்கு, பாரம் - அக்கரையாயிக்கிற, விஷ்ணோ: - வாசுதேவனுடைய, தத்-அந்த, பரமம் - ச்லாக்யமான, பத³ம்-ஸ்தாநத்தை, ஆப்நோதி-அடைகிறான்.

ஸம்-ஸா—கீழ்ச்சொல்லியஸ்தாநம் இன்னதென்று சொல்லுகிறது. யாதொருவன் விவேகியாய்நெஞ்சை ஸ்வாதீநம்செய்து கொள்ளுகிறானோ; அவன், விஷ்ணுவினுடைய பரமஸ்வரூபத்தை அடைகிறான்.

ரா-ஸா—முன்சொன்ன ரூபணத்திற்கு பலம்சொல்லிமுடிக்கிறதுஎவன், நல்ல ஜ்ஞாநத்தோடு மநஸ்ஸைஸ்வாதீநப்படுத்திக்கொண்டிருக்கிறானோ; அவன விஷ்ணு ஸ்தாநத்தையடைகிறான்.

௧௦. இந்த்³ரியேப்⁴ய: பரா ஹ்யர்தா² அர்தே²ப்⁴யஶ்ச பரம் மந:|
மநஸஸ்து பரா பு³த்³தி⁴ர்பு³த்³தே⁴ராத்மா மஹாந்பர:||

౧౦. ఇంద్రియేభ్యః పరాహ్యర్థా అర్థేభ్యశ్చ పరం మనః।
మనసస్తు పరాబుద్ధిర్బుద్ధేరాత్మా మహాన్పరః॥

(ப-ம்) இந்த்³ரியேப்⁴ய:-இந்திரியங்களைக்காட்டிலும், அர்தா²:- விஷயங்கள், பரா ஹி-உயர்ந்தவைகள், அர்தே²ப்⁴யஶ்ச-விஷயங்களைக்காட்டிலும், மந:-மனஸ்ஸானது, பரம்-உயர்ந்தது, மநஸஸ்து - மநஸ்ஸைக்காட்டிலும், பு³த்³தி⁴:-புத்தியானது, பரா-உயர்ந்தது, பு³த்³தே⁴:-புத்தியைக்காட்டிலும், மஹாந்-பெரியவனான, ஆத்மா-ஆத்மாவானவன், பர:-உயர்ந்தவன்.

ஸம்-ஸா—ஆத்மாவையடைவதற்கு, புத்தி முதல் இந்திரியபர்யந்தமுள்ளவைகளோடுசேர்ந்து, அந்தந்தநாமங்களையடைகிற ஆத்மாவுக்கு உண்டாயிருக்கிற ஸ்வரூபம் நிரூபிக்கப்படுகிறது. ஸ்தூலங்களான இந்திரியாதிகளைக்காட்டிலும், மகானான ஆத்மாசிறந்தவன்.

ரா-ஸா—வசப்படுத்திக் கொள்ளவேண்டியவைகளில் முக்யாமுக்யங்கள் சொல்லப்படுகிறன. ஆகையாலிதையறிந்துக்கொண்டு அப்படி செய்ய வேண்டும்.

௧௧. மஹத: பரமவ்யக்தமவ்யக்தாத் புருஷ: பர:|
புருஷாந்ந பரம் கிஞ்சித் ஸா காஷ்டா ஸா பரா க³தி:||

౧౧. మహతఃపరమవ్యక్తమవ్యక్తాత్పురుషఃపరః।
పురుషాన్నపరంకించిత్సాకాష్ఠాసాపరాగతిః॥

(ப-ம்) மஹத:-மஹத்தைக்காட்டிலும், அவ்யக்தம்-அவ்யக்தமானது, பரம்-சிறந்தது. அவ்யக்தாத்-அவ்யக்தத்தைக்காட்டிலும், புருஷ:-புருஷனானவன், பர:-சிறந்தவன். புருஷாத்-புருஷனைக்காட்டிலும், பரம்-சிறந்தது, நகிஞ்சித்-ஒன்றுமில்லை. ஸா-அவன், காஷ்டா- எல்லாவற்றிலுமுயர்ந்தவன். ஸா-அவன், பராகதி:-உத்தமமாகியகதியாயிருப்பவன்.

பா-ஷ:—கீழ்மந்திரத்தாலும், இம்மந்திரத்தாலும், உண்மையாயுள்ள (பரமார்த்தமான) ஆத்மஸ்வரூபத்தை அறியப்படுத்துகைக்கு, உலகத்தில், தூரத்திலிருக்கிற ஒருநல்லநகரத்தை, நடக்கைக்குச்சோம்பின மனிதனுக்குக்காட்டவிரும்பினவன், ஸமீபத்திலிருக்கிற சோலையைக்காட்டி, இதுநல்லநகரம்; இங்குபோவோமென்றுமுன்னே, அந்தநகரத்திற்கு அழைத்துக்கொண்டுபோய், இதைக்காட்டிலும் சிறந்த நகரம், இதற்குச்சமீபத்திலிருக்கிறதென்றுசொல்லி, அங்கு அழைத்துக்கொண்டுபோய், அவன், முன்கண்டநகரத்திலுமிது சிறந்ததாயிருக்கிறதென்று ஸந்தோஷித்தபிறகு, இதிலும் சிறந்தநகரம், இதற்குச் சமீபத்திலிருக்கிறதென்றுசொல்லி, அங்கழைத்துக்கொண்டுபோய், இவ்வண்ணமே, மேன்மேலுமழைத்துக்கொண்டுபோய் உத்தமோத்தமமாயிருக்கிற நகரத்தைக்காட்டி, இதற்குமேலானதொன்றுமில்லை; இதைக்காட்டிலும் சிறந்ததொன்றுமில்லை; இதையே, நான், உனக்குக்காட்டவிரும்பினேனென்றுசொல்வதுபோல், அதிஸூக்ஷ்மமாயிருக்கிற அந்த ஆத்மஸ்வரூபத்தை அறிவதில், அதிகப்ரயாஸமிருக்கையாலறியாதபுத்தி, ஸுகமாயறியும்படி, ஸ்தூலங்களான இந்திரியங்களை, ஆத்மாவென்றுசொல்லி, ஸ்தூலமாகையால், புத்தி, அதிலறியவே; அர்த்தங்களை, ஆத்மாவென்றுசொல்லி, அதிலறியவே; அவைகளைக்காட்டிலும் ஸூக்ஷ்மமானமனஸ்ஸை ஆத்மாவென்றுசொல்லி, அதிலறியவே; அதைக்காட்டிலும் ஸூக்ஷ்மமானபுத்தியை, ஆத்மாவென்றுசொல்லி, அதிலறியவே; அதைக்காட்டிலும் ஸூக்ஷ்மமான மகானை, ஆத்மாவென்றுசொல்லி, அதிலறியவே; அதைக்காட்டிலும் ஸூக்ஷ்மமான அவ்யக்தத்தை, ஆத்மாவென்றுசொல்லி, அதிலறியவே; எல்லாவற்றிலும் ஸூக்ஷ்மமாயிருக்கிற பரமார்த்தமான ஆத்மஸ்வரூபத்தை, ஆத்மாவென்றுசொல்லி, அதிலறியச்செய்து, இதைக்காட்டிலும் மேலானபொருளொன்றுமில்லை; வேறுபொருளுமில்லை, இதுவேபரகதி: பரகாஷ்டை; என்றுசொல்லி, இவ்விதம் பெறயத்நஞ்செய்யவேணுமென்றுபதேசிக்கிறது. ஸ்தூலங்களை, க்ரமமாயறிந்தாலன்றோ; ஸூக்ஷ்மங்களை அறியக்கூடும். சிலர், மனதையே, பரமார்த்தமாகிய ஆத்மாவென்பர் ஒருவிதபூதஸூக்ஷ்மமே மனதென்னப்படுகிறதாதலாலது பொருந்தாது, "அன்னமயம் ஹி ஸோம்ய மந:" என்கிற ச்ருதியால், மனது; பூதஸூக்ஷ்மமேயெனவிளங்குகிறதன்றோ. சிலர், புத்தியை, பரமார்த்தமான ஆத்மாவென்பர். புத்தியென்பது கரணமாகையாலிதுவும் சேராது. இது, மனதில்வேறாயதும், மனதினாலாகிய ஸங்கல்பவிகல்பங்களுக்குக் காரணமானது மென்றறிக, மகானென்பது, எல்லாவற்றிலும் பெரியதும், அவ்யக்தமென்கிற தத்வத்திலிருந்து பிறந்ததும், ஸூத்ரமென்று பெயர்பெற்றது, மென்றுணர்க. அவ்யக்தமென்பது, எல்லாவுலகத்திற்கும்காரணமானதும், அவ்யாக்ருதமென்னப்படுவதும், பீஜத்திலும் விருக்ஷம்போல பரமார்த்தமான ஆத்மாவைப்பற்றியொட்டிக்கொண்டுகிடப்பது மென்றுகொள்க. இப்படி, எல்லாவற்றிலும் சிறந்த ஆத்மாவையறிந்துக்கொண்டால், அந்த ஆத்மஸ்வ

ரூபத்தையடையலாகும். இந்த ஆத்மஸ்வரூபமே 'பத'மென்கிற சப்தத்தால், ப்ராப்யஸ்தாநமாய், முன் சொல்லப்பட்டது.

ஸா-ஹா—இம்மந்திரத்தாலும், முன்மந்திரத்தாலும், மோக்ஷத்தைப் பெறுகிறவன், வசப்படுத்திக்கொள்ளவேண்டிய இந்திரியம்முதலியவற்றில், இன்னது, இன்னதைக்காட்டிலும், முக்யமாய், வசப்படுத்தக்கடவதென்று சொல்லப்படுகிறது. இப்படி, முக்யம், அமுக்யம், அறிந்துகொள்வதற்கே, இவைகளை குதிரைமுதலானவைகளாய் ரூபித்தது. குதிரைகளாய் ரூபிக்கப்பட்ட இந்திரியங்களைக்காட்டிலும், வழிகளாய் (மார்க்கங்களாய்) ரூபிக்கப்பட்டபொருள்களை (விஷயங்களை) முக்யமாய்வசப்படுத்திக்கொள்ளவேண்டும். இந்திரியங்களை ஜயித்தவனும், விஷயங்களைக்கண்டு, இந்திரியங்கள்மேல்விழும்போது மீட்கவருந்தப்படுகிறானன்றோ; அவைகளைக்காட்டிலும் கடிவாளமாய்ரூபிக்கப்பட்ட நெஞ்சைமுக்யமாய்வசப்படுத்திக் கொள்ளவேண்டும். நெஞ்சுவிஷயங்களில்சென்றபோது, விஷயங்களை நீக்கிப் பயனில்லையன்றோ; அதைக்காட்டிலும், ஸாரதியாய் ரூபிக்கப்பட்டபுத்தியை முக்யமாய் வசப்படுத்திக்கொள்ளவேண்டும். இதைக்காட்டிலும், கர்த்தாவாகிய ஆத்மாவைமுக்யமாய்வசப்படுத்திக்கொள்ளவேண்டும். இவன், ப்ரதாநனாகையாலே, மகான், என்றுசொல்லப்படுகிறான் இவனிச்சித்தபடி மற்றவைகள்நிற்கிறனவன்றோ; இவனைத் தேராளியாய்ரூபித்துச்சொன்னதுமிது பற்றியன்றோ, தேராளிவிரும்பினபடியன்றோ, ஸாரதிமுதலானோர் நடப்பது. இந்த ஆத்மாவைக்காட்டிலும்' தேராய்ரூபிக்கப்பட்ட சரீரத்தை, முக்யமாய்வசப்படுத்திக்கொள்ளவேண்டும். இந்த ஆத்மா, எல்லாபுருஷார்த்தங்களை ஸாதிப்பதும் சரீரத்தாலன்றோ, இந்தஜீவனைக்காட்டிலும், இவனுக்குமந்தராத்மாவாயிருந்துகொண்டு ஸம்ஸாரத்தில்நின்றுமிவனைக் கரையேற்றுகிற பரமபுருஷனை, முக்யமாய்வசப்படுத்திக்கொள்ளவேண்டும். கீழ்ச்சொன்ன ஆத்மபர்யந்தமாயுள்ள எல்லாவற்றின் ப்ரவ்ருத்தியமந்த பரமபுருஷன் ஸங்கல்பித்தபடியன்றோ; அவனேயன்றோ அந்தர்யாமியாயிருந்து உபாஸநத்தையும் நிறைவேற்றிவைப்பவன். ஜீவாத்மாவுக்கு, கர்த்ருத்வம், பரமாத்மாவின் ஸ்வாதீநமாயிருக்கிறதென்று "பராத்து தச்ச்ருதே:" என்கிறவதிகரணத்தில் நிச்சயிக்கப்பட்டிருக்கிறது. இந்தபரமபுருஷனே, உபாயம். இவனே உபேயம். (பலம்) என்றுணர்க. "ஸோத்வந: பாரமாப்நோதி" என்கிறவாக்யதாத்பர்யம், இதுவேயாகும். இந்த அர்த்தம், ஆநுமாநிகாதிகரணத்தில், பகவத்பாஷ்யகாரரால் அருளிச்செய்யப்பட்டது. விஷயங்களென்பது: சந்தநம், குங்குமம். தாம்பூலம், ஸ்த்ரீ, முதலியவைகள். வசப்படுத்துகிற க்ரமத்தின்படி, எல்லாவற்றையும் வசமாக்கிக்கொள்ளவேண்டியது. சரீரமானது அவ்யக்தசப்தத்தாலிங்கு சொல்லப்படிருக்கிறது. இது பலந்யாயங்களாலும் ஏற்படுகிறது.

## பதாந்வயார்த்தபேதங்கள்.

இங்கு பாஷ்யத்தில் சொல்லியபடி, சுருக்கமாயுரைக்கிலறியப்படாதென்றுதாஹரணங்களுடன் விஸ்தாரமாய்ச் சொல்லப்பட்டது. சங்கரபாஷ்யத்திற்கும், இராமாநுஜ பாஷ்யத்திற்கும், ஸ்வயமாகவேபேதமறியப்படுகிறது. இராமாநுஜபாஷ்யத்தில், பரமபுருஷனை வசப்படுத்திக்கொள்வது, அவனைச் சரணமடைந்த மாத்திரத்தில் கூடுமென்று சொல்லப்பட்டிருக்

கஉ. 𑌏𑌷 𑌸𑌰𑍍𑌵𑌷𑍁 𑌭𑍂𑌤𑌷𑍁 𑌗𑍂𑌢𑍋𑌽𑌤𑍍𑌮𑌾 𑌨 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌤𑍇 |
𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍇 𑌤𑍍𑌵𑌗𑍍𑌰𑍍𑌯𑌯𑌾 𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌯𑌾 𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌯𑌾 𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌦𑌰𑍍𑌶𑌿𑌭𑌿𑌃 ||

౧౨. ఏష సర్వేషు భూతేషు గూఢోత్మా న ప్రకాశతే।
దృశ్యతే త్వగ్ర్యయా బుద్ధ్యా సూక్ష్మయా సూక్ష్మదర్శిభిః॥

(ப-ம்) 𑌸𑌰𑍍𑌵𑌷𑍁 𑌭𑍂𑌤𑌷𑍁-எல்லாப்ராணிகளிடத்திலும். 𑌆𑌤𑍍𑌮𑌾 ஆத்மாவாயிருக்கிற, 𑌏𑌷𑌃-இவன், 𑌗𑍂𑌢𑌃 - மறைந்தவனாய், 𑌨 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌤𑍇-ப்ரகாசிப்பதில்லை. 𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌦𑌰𑍍𑌶𑌿𑌭𑌿𑌃-ஸூக்ஷ்மத்தையறிகிற புத்திமான்களாலே, 𑌅𑌗𑍍𑌰𑍍𑌯𑌯𑌾𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌯𑌾𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌯𑌾 - கூர்மையடையஸூக்ஷமமான புத்தியைக்கொண்டு, 𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍇 𑌤𑍁-காணப்படுகிறான்.

பதாந்வயார்த்தபேதங்கள்.

எல்லா ப்ராணிகளுக்கு மாத்மாவாயிருக்கிற இந்த ஆத்மா, அவித்யையினால் மறைக்கப்பட்டிருப்பதாலனைவராலு மறியப்படுகிறதில்லை, ஸூக்ஷ்மத்தையறிகிற புத்திமான்களால், நன்றாயாராய்ந்தறியப்படுகிறான். என்று சங்கரபாஷ்யத்திலு மிராமானுஜபாஷ்யத்திலு மொருவிதமாகவே சொல்லப்பட்டிருக்கிறது. இராமானுஜபாஷ்யத்தில், அவித்யையினாலென்கிறவிடத்தில், 'த்ரிகுணங்களோடுகூடிய மாயையென்கிற ப்ராக்ருதியினால், என்று ஹேதுபேதமே விசேஷம்.

கங. 𑌯𑌚𑍍𑌛𑍇𑌦𑍍𑌵𑌾𑌙𑍍𑌮𑌨𑌸𑍀 𑌪𑍍𑌰𑌾𑌜𑍍𑌞𑌸𑍍𑌤𑌦𑍍𑌯𑌚𑍍𑌛𑍇𑌜𑍍𑌜𑍍𑌞𑌾𑌨 𑌆𑌤𑍍𑌮𑌨𑌿 |
𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌿 𑌮𑌹𑌤𑌿 𑌨𑌿𑌯𑌚𑍍𑌛𑍇𑌤𑍍𑌤𑌦𑍍𑌯𑌚𑍍𑌛𑍇𑌚𑍍𑌛𑌾𑌨𑍍𑌤 𑌆𑌤𑍍𑌮𑌨𑌿 ||

౧౩. యచ్ఛేద్వాఙ్మనసీ ప్రాజ్ఞస్తద్యచ్ఛేజ్జ్ఞాన ఆత్మని।
జ్ఞానమాత్మని మహతి నియచ్ఛేత్తద్యచ్ఛేచ్ఛాన్త ఆత్మని॥

(ப-ம்) 𑌪𑍍𑌰𑌾𑌜𑍍𑌞𑌃-விவேகியானவன், 𑌵𑌾𑌕𑍍-வாக்கை, 𑌮𑌨𑌸𑍀-மனஸ்ஸில், 𑌯𑌚𑍍𑌛𑍇𑌤𑍍-சேர்க்கக்கடவன். 𑌤𑌤𑍍-அதை, 𑌆𑌤𑍍𑌮𑌨𑌿, ஆத்மாவிலிருக்கிற, 𑌜𑍍𑌞𑌾𑌨𑍇, ஜ்ஞானத்தில், 𑌯𑌚𑍍𑌛𑍇𑌤𑍍-சேர்க்கக்கடவன். 𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑍍-ஜ்ஞானத்தை, 𑌮𑌹𑌤𑌿-பெரியதான, 𑌆𑌤𑍍𑌮𑌨𑌿-ஆத்மாவினிடத்தில், 𑌨𑌿𑌯𑌚𑍍𑌛𑍇𑌤𑍍 - சேர்க்கக்கடவன், 𑌤𑌤𑍍-அந்த ஆத்மாவை, 𑌶𑌾𑌨𑍍𑌤𑍇-சாந்தமாயிருக்கிற, 𑌆𑌤𑍍𑌮𑌨𑌿-பரமாத்மாவினிடத்தில், 𑌯𑌚𑍍𑌛𑍇𑌤𑍍-சேர்க்கக்கடவன்.

ஶா-பா.— இவ்வாத்மாவை யறியும்வழி சொல்லுகிறது.—வாக்குமுதலிய எல்லா இந்த்ரியங்களையும், மனஸ்ஸில்சேர்த்து, மனஸ்ஸை, ப்ரகாசமான புத்தியில்சேர்த்து, புத்தியை, மகானை ஆத்மாவில்சேர்த்து, இதை பேதங்களொன்றுமில்லாத விஶாந்தஸ்வரூபத்தில் சேர்க்கக்கடவன்.

ரா-பா.—"அத்யாத்மயோகாதிகமேந" என்கிறவிடத்தில் சொன்ன ஜீவாத்மஜ்ஞானத்தின் ப்ரகாரத்தை க்ரமமாய்ச்சொல்லுகிறது. குதிரைமுதலியதாய் ரூபிக்கப்பட்ட இந்திரியங்கள் முதலியவற்றை வசம்செய்துகொள்ளுகிறவழிஇதாகும்.கர்மேந்திரியங்கள் ஜ்ஞானேந்த்ரியங்கள் இவற்றை மனஸ்ஸில் நியமித்து; மனஸ்ஸைஜ்ஞா

நத்திலும், ஜ்ஞாநத்தை கர்த்தாவான ஆத்மாவிலும் நியமித்து, ஆத்மாவை, ஸர்வாந்தர்யாமியாயிருக்கிற பரப்ரம்மத்தில் நியமிக்கக்கடவன். இப்படிப்பட்டவனால், விஷ்ணுஸ்தாநமடையத் தக்கதாகும். இந்திரியங்கள் போனவழிவிடாமல் நிறுத்துகை - மனஸ்ஸில் நியமிக்கை. தான்செய்த நிச்சயத்திற்கு மாறுதலின்றியிருக்கை - மநஸ்ஸை புத்தியில் நியமிக்கை. இங்கு புத்தி என்பது வைராக்ய புத்தியை. புத்தியை ஆத்மாவில் நியமிக்கையாவது - ஆத்மஸாக்ஷாத்காரம் செய்ய நினைக்கை. ஆத்மாவை, ப்ரம்மத்தில் நியமிக்கையாவது. பரப்ரமமத்திற்கு சேஷமென்றறிகை.

பதாந்வயார்த்தபேதங்கள்.

ஆத்மநி, ஜ்ஞாநே, என்கிற பதங்களுக்கு, ஸாமாநாதிகரண்யம் சங்கர பாஷ்யத்தில், வையதிகரண்ய மிராமாநுஜபாஷ்யத்தி லென்றறிக.

கச. உத்திஷ்டத ஜாக்ரத ப்ராப்ய வராந்நிபோதத। க்ஷுரஸ்ய தாரா
நிசிதா துரத்யயா துர்கம் பதஸ்தத் கவயோ வதந்தி॥

౧౪. ఉత్తిష్ఠత జాగ్రత ప్రాప్య వరాన్నిబోధత।
క్షురస్యధారానిశితాదురత్యయాదుర్గం పథస్తత్కవయోవదన్తి॥

(ப-ம்) உத்திஷ்டத-எழுந்திருங்கோள், ஜாக்ரத - உறக்கத்தைவிடுங்கோள். வராந்-வரங்களை, ப்ராப்ய-பெற்று, நிபோதத-அறியுங்கோள கவய:-பண்டிதர்கள், தத்-அந்த ஆத்மஸ்வரூபத்தை, துர்கம்பத:-கஷ்டமானவழியாய், வதந்தி - சொல்லுகிறார்கள். க்ஷுரஸ்ய - வாளினுடைய, தாரா-நுனியானது, நிசிதா-கூர்மையுடைய தாகையால், துரத்யயா - அடையக்கூடாததன்றோ.

ஸம - ஸா.—மித்யாஜ்ஞாநத்தை நீக்கி, ஆத்மஸ்வரூபத்தை யறிந்தால், இரஜ்ஜுஸர்ப்பம், கானல் தண்ணீர், ஆகாயத்திலழுக்கு, இவைகள் உண்மையறிந்தபிறகு நீங்கிப்போகிறாப்போலே இந்த ஜகத்து இல்லையாய்விடும். அப்போது க்ருதக்ருத்யராகலாம். ஆகையா லெழுந்திருங்கோள். அநேகஸங்கடங்களுக்குக்காரணமாய், கோரமாய் ' அவித்யை, என்று சொல்லப்படுகிறஅஜ்ஞாநத்தில்உறக்கத்தைநீக்கிஆத்மஸ்வருபத்தை யறியப்பாருங்கோள். ஆசாரியர்களைக்கிட்டி அவர்கள் கொடுத்த ஜ்ஞாநத்தைக்கொண்டு, நானே, எல்லாப்பொருளுக்கு மந்தராத்மாவாயிருக்கிற பரமாத்மாவென்றறியுங்கோள்- உபேக்ஷிக்கவேண்டாமென்று, தாய், ஹிதஞ்சொல்லுகிறாப்போலே, அது வாளின் கூர்மையைப்போல்ஸூக்ஷ்மமாகையாலே, ஶ்ருதி உபதேசிக்கிறது, ஆகையாலே வருத்தப்பட்டு அறிந்துகொள்ளவேணுமென்று பண்டிதர்கள்சொல்லுகிறார்கள்.

ரா-ஸா.—இப்படி வசப்படுத்துகிற வழியைச்சொல்லி அதிகாரமுள்ளவர்களுக்கு அறிவிக்கிறது. பகவானால், அல்லது, ப்ரம்மவித்துக்களால், வரங்களைக்கொள்ளுங்கோள்; எழுந்திருங்கோள்; உறக்கம்வேண்டாம்; கூராயிருக்கிறவாளின் நுனியில் நடக்கிறபோது கொஞ்சம் தப்பினாலு மெப்படி மோசம்வருமோ; அப்படியேகொஞ்சம் பிழைவந்தாலுமாத்மஸ்வரூபத்தையறிவது கஷ்டமென்று பண்டிதர்கள் சொல்லுகிறார்கள், ஆகையால் தக்கபடியே அறியுங்கோள்.

கரு. அசப்தமஸ்பர்சமரூபமவ்யயம் ததாரஸம் நித்யமகந்தவச்ச யத்।
அநாத்யநந்தம் மஹத: பரம் த்ருவம் நிசாய்ய தம் ம்ருத்யுமுகாத் ப்ரமுச்யதே॥

౧౫. అశబ్దమస్పర్శమరూపమవ్యయంతథాఽరసంనిత్యమగంధవచ్చయత్।
అనాద్యనంతంమహతఃపరంధ్రువంనిచాయ్యతంమృత్యుముఖాత్ప్రముచ్యతే॥

(ப-ம்) யத்-எந்தப்ரம்மமானது, அசப்தம், அஸ்பர்சம், அரூபம், அரஸம், அகந்தவச்ச-சப்தம், ஸ்பர்சம், ரூபம், இரஸம், கந்தம், இவைகளில்லாததாய், அநாதி, அநந்தம் - ஆத்யந்தமில்லாததாய், அவ்யயம்-வ்யயமில்லாததாய், த்ருவம்-அசையாததாய், நித்யம்-எப்போதுமுள்ளதாய், மஹத: - மகானென்ற ஜீவனைக்காட்டிலும், பரம்-வேறாயிருக்கிறதோ; தம்-அந்த ப்ரம்மமான பரமபுருஷனை, நிசாய்ய-ஸாக்ஷாத்கரித்து, ம்ருத்யுமுகாத் - ஸம்ஸாரத்தில் நின்றும், ப்ரமுச்யதே-விடப்படுகிறான்.

பூ - ஸா.—கீழ்ச்சொல்லியபடி ப்ரம்மம் ஸூக்ஷ்மமென்பதற்குக் காரணங்கள் சொல்லப்படுகின்றன.—சப்தம்முதல், கந்தபர்யந்தமான ஐந்து குணங்களுமுள்ள பூமி, ஸ்தூலமாயிருக்கிறது. ஜலமானது, கந்தமொன்று குறையவே; அதைக்காட்டிலும் ஸூக்ஷ்மமாயிருக்கிறது. தேஜஸ்ஸானது, கந்தம், இரஸம், இரண்டுகுறையவே ஜலத்தைக்காட்டிலும் ஸூக்ஷ்மமாயிருக்கிறது. வாயுவானது, கந்தம், இரஸம், ரூபம், மூன்றுகுறையவே; தேஜஸ்ஸிலும்ஸூக்ஷ்மமாயிருக்கிறது. ஸ்பர்சமுண்டாகி நான்குங் குறையவே: ஆகாசம் எல்லாபூதங்களிலும்ஸூக்ஷ்மமாயிருக்கிறது இப்படியே; இந்த குணங்களொன்றுமில்லாத ப்ரம்மம் ஸர்வ ஸூக்ஷ்மமாயிருக்கிறது. இப்படிப்பட்ட நித்யமான ப்ரம்மத்தையறிந்தால், ஸம்ஸாரத்தில் நின்றும் விடுபடுகிறான்.

ரா - ஸா.—குணபஞ்சகவிஹீநமாய், அத்யந்தமில்லாதவனாய், பரிணாமவிகாரசூந்யமாய், ஸகலரக்ஷகமாய், நித்தியமாய், ஜீவாத்மாவில்வேறுபட்டதாயுள்ளபரப்ரம்மமாயிருக்கின்ற பரமபுருஷனை உபாஸநத்தாலேஸாக்ஷாத்கரித்தால், ஸம்ஸாரபந்தத்தில் நின்றும் விடுபடுகிறான். ரூபமுடையபொருளை அழியுமாகையால் ரூபம்முதலிய குணமில்லாத பொருளழியமாட்டாது. ஒருகாரணமுண்டாயிருந்தால் கார்யம் காரணத்தில் லயத்தையடையலாகும். காரணமில்லாத ப்ரம்மத்திற்கு நாசமெப்படிகூடும். காலம்போலே, ப்ரஹ்மம் நித்யமாயிருக்கும். மஹத: என்கிற பதத்திற்குஜீவனென்றுபொருள், 'ஜ்ஞாநமாத்மநிமஹதி' என்கிற முன் ச்லோகத்தால், ஸ்பஷ்டமாகிறது. 'நித்ய' என்பதை, எல்லாவிசேஷணங்களோடும்கூட்டி அந்வயித்துக்கொள்க.

கசு. நாசிகேதமுபாக்யாநம் ம்ருத்யுப்ரோக்தம் ஸநாதநம்।
உக்த்வா ச்ருத்வா ச மேதாவீ ப்ரஹ்மலோகே மஹீயதே॥

౧౬. నాచికేతముపాఖ్యానంమృత్యుప్రోక్తగ్ంసనాతనమ్।
ఉక్త్వాశ్రుత్వాచమేధావీబ్రహ్మలోకేమహీయతే॥

(ப-ம்.) நாசிகேதம் - நசிகேதஸ்ஸாலடையப்பட்டதாய், ம்ருத்யுப்ரோக்தம்-யமனுல் சொல்லப்பட்டதாய், ஸநாதநம் - நித்யமாயிருக்கிற, உபாக்யாநம்-வ்ருத்தாந்தத்தை, உக்த்வா-சொல்லியும், ச்ருத்வா-கேட்டும், மேதாவீ-புத்திமானாய்க்கொண்டு, ப்ரஹ்மலோகே-ப்ரம்மலோகத்தில் மஹீயதே-கொண்டாடப்படுகிறான்.

இச்சந்-மோக்ஷத்தை விரும்பினவனாய், ப்ரத்யகாத்மாநம்-ப்ரத்யங்முகமா யிருக்கிற ஆத்மாவை, ஐக்ஷத்-பார்க்கிறான்.

ஶம்-ஹா.—ஆத்மஸ்வரூபத்தை அறியவொட்டாமல், தடைசெய்கிற ப்ரதிபந்தகங்களைச்சொல்வதற்கு, இந்தவல்லிதொடங்கப்படுகிறது. ப்ரதிபந்தகத்தையறிந்தாலன்றோ; அதைநீக்கிக்கொள்ளயத்நம்செய்யலாகும். அறியப்படாமலே நீக்கிக்கொள்வது சக்யமில்லையன்றோ, ஈச்வரன், இந்த்ரியங்களையெல்லாம் ஆத்மாவைக்காண்கிறசக்தியோடுஸ்ருஷ்டித்திருந்தால், ஆத்மஸ்வரூபத்தை யதனால் ஸுலபமாயறிந்து எல்லாரும் மோக்ஷமடையலாகும். அப்படிசெய்யாமல், ஸ்தூலவஸ்துக்களைக்காட்டுகிறசக்தியோடுமாத்திரம் இந்த்ரியங்களைவைத்தால்; அந்தஇந்த்ரியங்கள், ஆத்மஸ்வரூபவிஷயத்தில் ப்ரவேசமில்லாதவையாயின. ஆகிலுமிவைகளைஸ்தூலவிஷயங்களில் செலுத்தாமல், மோக்ஷத்தையேவிரும்பி, எந்ததீரபுருஷன், நியமிக்கிறானோ, அவன், ப்ரத்யகாத்மாவைக்காண்கிறான்.

ரா-ஹா.—ஸ்வதந்த்ரனானஸர்வேச்வரன், இந்த்ரியங்களைபராக்விஷயங்களாக ஏற்படுத்துகையாலே,சப்தாதிவிஷயங்களிலேயே செல்லாநிற்கின்றன. ஆகிலும், விவேகியானதீரன், ஆறுவெள்ளமோடுகிறபோது, எதிர்நீந்துவதுபோல், வருத்தப்பட்டு,விஷயங்களினின்றும், மீட்டு, ஆத்மவிஷயத்தில்சேர்த்து தயாநித்து, மோக்ஷத்தையடையவேணுமென்று விரும்புகிறான்.

௨. பராச: காமாநநுயந்தி பாலாஸ்தே ம்ருத்யோர்யந்தி விததஸ்ய பாஶம் | அத தீரா அம்ருதத்வம் விதித்வா த்ருவமத்ருவேஷ்விஹ ந ப்ரார்த்தயந்தே ||

௨. పరాచః కామాననుయంతి బాలాస్తే మృత్యోర్యంతి వితతస్య పాశమ్। అథ ధీరా అమృతత్వం విదిత్వా ధ్రువమధ్రువేష్విహ న ప్రార్థయంతే॥

(ப-ம்.) பாலா:-அஜ்ஞர்கள், பராச:-பராஞ்சங்களான, காமாந்-ஸம்ஸாரபந்தத்துக்குக் காரணமான விஷயங்களை, அநுயந்தி-அநுஸரிக்கிறார்கள், தே-அவர்கள், விததஸ்ய-விஸ்தரிக்கப்பட்ட, ம்ருத்யோ:-ஸம்ஸாரத்தினுடைய, பாஶம்-கயிற்றை, யந்தி-அடைகிறார்கள், அத-இவர்களில்வேறுபிருக்கிற, தீரா:-தீரர்கள், த்ருவம்-ஸ்திரமான, அம்ருதத்வம்-மோக்ஷத்தை, விதித்வா-அறிந்து, இஹ-இந்தஜகத்தில், அத்ருவேஷு- அநித்யங்களிலொன்றையும். ந ப்ரார்த்தயந்தே-விரும்பமாட்டார்கள்.

ஶம்-ஹா.—அவித்யையினால் மறைக்கப்பட்டஆத்மஸ்வரூபத்தையறியாமையாலும், அவித்யையினால் காட்டப்பட்டபொருள்களில் விருப்பத்தாலும், ப்ரத்யகாத்மாவை ப்ராபிக்க, எல்லோரும், யத்நம்செய்கிறதில்லை. சிலதீரர்களோ, நித்யமான மோக்ஷத்தையறிந்து, அநித்யமான விஷயங்களைவிரும்புகிறதில்லை.

ரா-ஹா.—அஜ்ஞர்கள், அநித்யங்களைவிரும்பி, பரமாத்மாவை ப்ராபியாமல் போகிறார்கள். புத்திமான்கள், நித்யஜ்ஞானவானையறிந்து மோக்ஷத்தைவிரும்பி, அநித்யங்களைவிடுகிறார்கள்.

௩. யேந ரூபம் ரஸம் கந்தம் ஶப்தாந் ஸ்பர்ஶாம்ஶ்ச மைதுநாந் |
ஏதேநைவ விஜாநாதி கிமத்ர பரிஶிஷ்யதே || ஏதத்வை தத் ||

3. యేన రూపం రసం గంధం శబ్దాన్ స్పర్శాంశ్చ మైథునాన్ ।
ఏతేనైవ విజానాతి కిమత్ర పరిశిష్యతే ॥

(ப்-ம்.) யேந-யாதொரு, ஆத்மநா-இந்த ப்ரம்மரூபஸாதநத்தாலே, ரூபம்-ரஸம்-கந்தம் - சப்தாந்-ஸ்பர்சாந் - மைதுநாந்-வ-ரூபம், ரஸம், கந்தம், சப்தம், ஸ்பர்சம், மைதுநம், இவைகள் முதலான எல்லாவற்றாலுமுண்டாகிற ஸுகத்தை, விஜாநாதி-அறிகிறானோ, அத்ர-இந்தப்ரம்மத்தில், கிமபரிசிஷ்யதே-இல்லாமல்போனதென்ன. ஆகையால், தத்-ப்ராப்யமாய்ச்சொன்ன அந்தவஸ்துவானது ஏதத்வை-இந்தப்ரம்மமே.

ஸம்-ஹா.—எல்லாஸுகங்களும் ஆத்மாவினாலறியப்படுகிறனவாகையால் இதுவே பரமஸ்தாநம். அசின்சரீரமேபரமஸ்தாநம், சரீரத்தாலன்றோ; ஸுகம்முதலியதறியப்படுகிறது, என்றுநிக்கவேண்டாம். ரூபம்முதலியவற்றோடு கூடினசரீரத்திற்கு, அறிகிறசக்திஇல்லையன்றோ; இருந்தால் சுவர்முதலியவற்றாலுமெல்லாமறியப்படலாமன்றோ; ஆகையால் ரூபாதிகளில்லாத ஆத்மா, ரூபம்முதலியவற்றோடுகூடின சரீரத்தைக்காட்டிலும் வேறுபட்டதே. அதுவேபரமஸ்தாநம்.

பதார்வயார்த்தபேதங்கள்.

இராமானுஜபாஷ்யத்தில், எல்லாம்பரமாத்பரமாய் யோஜிக்கப்பட்டிருக்கிறது. பதப்பொருள்கருத்தில்பேதமில்லை.

௪. ஸ்வப்நாந்தம் ஜாகரிதாந்தம் சோபௌ யேநாநுபச்யதி। மஹாந்தம் விபுமாத்மாநம் மத்வா தீரோ ந சோசதி॥ ஏதத்வை தத்॥

౪. స్వప్నాంతం జాగరితాంతం చోభౌ యేనానుపశ్యతి ।
మహాంతం విభుమాత్మానం మత్వా ధీరో న శోచతి ॥ ఏతద్వై తత్ ॥

(ப்-ம்.) ஸ்வப்நாந்தம்-ஸ்வப்நமத்யத்தையும், ஜாகரிதாந்தம்-ஜாகரமத்யத்தையும், உபௌ-இரண்டையும், யேந - யாதொருப்ரம்மத்தால், அநுபச்யதி-பார்க்கிறானோ, (தத்-அந்த.)

ஸம்-ஹா.—அரும்பொருளென்று தோற்றுகைக்காகவும், ஒருக்கால்சொன்னமாத்திரத்தாலறியப்படாதென்றும், மறுத்துச்சொல்லுகிறது.

ரா-ஹா.—இந்திரியம்முதலியரூபத்தை யடைந்திருக்கிற பரமபுருஷனாலே, உறக்கம், உணர்ச்சி, இவைகளில் எல்லாவற்றையும்காண்கிறான்.

பதார்வயார்த்தபேதங்கள்.

இந்தச்லோகத்தில் பின்னடிகளின்பதப்பொருள்முதலிய விசேஷங்களை, இரண்டாம்வல்லி, ௨௨-வது ச்லோகத்தில்காண்க.

௫. ய இமம் மத்வதம் வேத ஆத்மாநம் ஜீவமந்திகாத்।
ஈசாநம் பூதபவ்யஸ்ய ந ததோ விஜுகுப்ஸதே॥

ூ. యఇమంమధ్వదం వేదఆత్మానంజీవమంతికాత్ ।
ఈశానంభూతభవ్యస్యనతతో విజుగుప్సతే॥

(ப-ம்) யஃ-எவன், மத்வதம்-கர்மபலத்தையநுபவிக்கிற, ஜீவம், ஜீவம், ஆத்மாநம்-இந்தஜீவாத்மாவையும், அந்திகாத்- அவனுக்குஸமீபத்திலிருப்பவனாய், பூதபவ்யஸ்ய-ஸமஸ்தவஸ்துக்களுக்கும், ஈசாநம்-ப்ரபுவாயிருக்கிற பரமாத்மாவையும், வேத-அறிகிறானோ, ததஃ - அந்தபுருஷனை, நவிஜுகுப்ஸதே-நிந்திக்கக்கடவனல்லன்.

ஸம-ஸா.—யவன், கர்மங்களின் பலத்தையநுபவித்துக்கொண்டு,ப்ராணாதிகளை தரித்திருக்கிற இந்த ஜீவாத்மாவை, எல்லாவற்றிற்கு மீசனான பரமாத்மாவென்றறிகிறானோ; அவன், பயமடைந்து, தன்னை,இரக்ஷித்துக்கொள்ள, யத்நம்செய்யான். இந்தஜீவாத்மா, பரமாத்மாவேயாகையால், நித்யனாயிருக்கிற இந்தஆத்மாவுக்கு, ஒரு காரணத்தாலுமழிவில்லையென்றறிந்தபின், பயப்படவேண்டமன்றோ.

ரா-ஸா.—மூன்றாம் வல்லி முதல் ச்லோகத்தில்ச்சொல்லியபடி, ஒருசரீரத்தில் ஸமீபத்தில், சேர்ந்திருக்கிற, ஜீவன், பரமாத்மா, இவர்களையறிந்தபுருஷன், தோஷங்களோடு கூடியிருந்தாலும், அவனை, நிந்திக்கைதகாதது.

பதார்த்வயார்த்தபேதங்கள்.

"ஏதத்வைதத்" என்கிறவாக்கியத்திற்கு, முன்போலவே, பதப்பொருள் முதலியவையுணர்க. "மத்வதம்" என்றும்பாடம்.

சு. யஃபூர்வம்தபஸோஜாதமத்ப்யஃபூர்வமஜாயத| குஹாம்ப்ரவிச்ய திஷ்டந்தம்யோபூதேபிர்வ்யபச்யத॥ ஏதத்வைதத்॥

౬. యఃపూర్వంతపసోజాతమద్భ్యఃపూర్వమజాయత ।
గుహాంప్రవిశ్యతిష్ఠంతంయోభూతేభిర్వ్యపశ్యత॥ఏతద్వైతత్॥

(ப-ம்) யஃ-எவன், அத்ப்யஃ - ஜலத்திலநின்றும, பூர்வம் - முன்னே அஜாயத-பிறந்தானோ, தம்-அந்த, தபஸஃ-ஸங்கல்பத்தினால், பூர்வம்-தேவர்களுக்குமுன், ஜாதம்-உண்டானவனாய், குஹாம்-ஹ்ருதயகுஹையை, ப்ரவிச்ய-அடைந்து, திஷ்டந்தம்-இருப்பவனாய், பூதேபிஃ-சரீரேந்திரியங்களோடு கூடியிருக்கிற ஹிரண்யகர்பனென்கிற சதுர்முகப்ரம்மாவை, யஃ-எந்தபரமாத்மா, வ்யபச்யத-கடாக்ஷித்தானோ, அவனே பரப்ரம்மமாகிய பரமபுருஷன.

ஸம-ஸா.—எவன்ப்ரத்யகாத்மாவென்றுசொல்லப்பட்டானோ;அவனே,எல்லாவற்றிற்கு மாத்மாவென்று சொல்லுகிறது. ஜ்ஞாநஸ்வரூபமாகிய ப்ரம்மத்திலிருந்து தோற்றுகிற ஜலம்முதலிய பஞ்சபூதங்களுக்கும் முன்னேயுண்டான ஹிரண்யகர்பனென்கிற, ஸகலஹ்ருதயகுஹாவாஸியாய், சப்தாதிகளையறிபவதாய், கார்யகாரணபூதங்களோடுகூடியிருக்கிற ஸ்வரூபத்தையறிந்தவன், ப்ரம்மத்தையறிந்தவனாகிறான்.

ரா-ஸா.—வ்யஷ்டி ஸ்ருஷ்டிக்குமுன், ஜலதத்வத்தில், தன்னுடையஸங்கல்பத்தாலே, சதுர்முகப்ரம்மதேவனை, எல்லாதேவதைகளுக்கும் முதல்வனாய் ஸ்ருஷ்டித்து, சரீரேந்திரியங்கள்முதலிய எல்லாவற்றையுங்கொடுத்து; இவன், எல்லாஜகத்தை

யும் ஸ்ருஷ்டிசக்திரசக்தியுள்ளனுமாக்கடவன்; என்று, எவன்கடாக்ஷித்தானோ. அந்த பரமபுருஷனே பரப்ரம்மம்.

பதாந்வயார்த்தபேதங்கள்.

இங்கு, இரண்டுபாஷ்யங்களையும் நன்றாயறிந்து, பேதஸ்வாரஸ்யங்களைக்காண்க. "ஏதத்வை தத்" என்கிறவாக்யத்திற்கு முன்போலேபொருள்கண்டுகொள்க.

௭. யா ப்ராணேந ஸம்பவத்யதிதிர்தேவதாமயீ । குஹாம் ப்ரவிஶ்ய திஷ்டந்தீம் யா பூதேபிர்வ்யஜாயத ॥ ஏதத்வை தத் ॥

౭. యా ప్రాణేన సంభవత్యదితిర్దేవతామయీ।
గుహాం ప్రవిశ్య తిష్ఠంతీం యా భూతేభిర్వ్యజాయత॥ ఏతద్వై తత్ ॥

(ப-ம்) யா - எந்தஜீவனானவன், ப்ராணேந ஸம்பவதி - ப்ராணங்களோடே கூடியிருக்கிறானோ, அதிதி: - கர்மபலங்களை யநுபவிக்கிறானோ, தேவதாமயீ-இந்திரியங்களால் போகத்தையடைகிறானோ, யா-எந்தஜீவனானவன், குஹாம், ப்ரவிஶ்ய, திஷ்டந்தீ - ஹ்ருதயகுஹையை ப்ரவேசித்திருக்கிறானோ, பூதேபி:- ப்ருதிவ்யாதி பூதங்களை சரீரமாக்கிக்கொண்டு, வ்யஜாயத-நாநாரூபனாய் பிறக்கிறானோ; ஏதத்வை தத்॥

ஸம-ஹா.—இந்தஜீவனே பரப்ரம்மம்.

ரா-ஹா.—இந்தஜீவனை சரீரமாகவுடையது, பரப்ரம்மம்.

பதாந்வயார்த்தபேதங்கள்.

கர்மத்தின்படி, தேவஜாதி, மநுஷ்யஜாதி, ம்ருகஜாதிமுதலியவற்றில் தேகேந்திரியாதிகளோடு கூடிக்கொண்டு பிறக்கிறஜீவனே, பரப்ரம்மம். அல்லது, அந்தஜீவனைசரீரமாகவுடையதே, பரப்ரம்மம். என்றுகருத்து.

௮. அரண்யோர்நிஹிதோ ஜாதவேதா கர்ப்ப இவ ஸுப்ருதோ கர்ப்பிணீபி: । திவேதிவ ஈட்யோ ஜாக்ருவத்பிர்ஹவிஷ்மத்பிர்மநுஷ்யேபிரக்நி: ॥ ஏதத்வை தத் ॥

౮. అరణ్యోర్నిహితో జాతవేదా గర్భ ఇవ సుభృతో గర్భిణీభిః।
దివే దివ ఈడ్యో జాగృవద్భిర్హవిష్మద్భిర్మనుష్యేభిరగ్నిః॥ ఏతద్వై తత్॥

(ப-ம்) கர்ப்பிணீபி:-கர்ப்பஸ்த்ரீகளால், கர்ப்ப இவ-கர்ப்பம்போல், அரண்யோ:-கீழும்மேலுமாய்சேர்க்கப்பட்ட அரணிக்கட்டைகளில், நிஹித:-வைக்கப்பட்டதாய், திவேதிவே - நாள்தோறும், ஜாக்ருவத்பி:, ஹவிஷ்மத்பி: மநுஷ்யேபி: - ஜாகரூகர்களாய் ஹவிஸ்ஸைக்கொடுக்கிற மநுஷ்யர்களாலே, ஈட்ய:-ஸ்துதிக்கத்தக்கதாயிருக்கிற, ஜாதவேதா:-ஜாதவேதஸ்ஸென்கிற, அக்நி: - அக்நியானது ஏதத்வை தத் - இந்தப்ராம்மமே, அல்லது இந்தப்ராம்மத்திற்குசரீரமே.

ஸம-ஹா.—யஜ்ஞத்தில், அரணி, என்கிறகட்டைகளின் நடுவில், வைக்கப்பட்ட அக்நியும், இந்தப்ரம்மமே.

ரா-ஹா.—எல்லோரும், எந்த அக்நியையாகத்தில்பூஜித்து, ஹவிஸ்ஸுக்களைக் கொடுக்கிறார்களோ அந்த அக்நியும், பகவானுடையசரீரமே.

௯. 𑌯𑌤𑌶𑍍𑌚𑍋𑌦𑌤𑌿 𑌸𑍂𑌰𑍍𑌯𑍋𑌽𑌸𑍍𑌤𑌂 𑌯𑌤𑍍𑌰 𑌚 𑌗𑌚𑍍𑌛𑌤𑌿।
𑌤𑌂 𑌦𑍇𑌵𑌾𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑍇𑌽𑌰𑍍𑌪𑌿𑌤𑌾𑌸𑍍𑌤𑌦𑍁 𑌨𑌾𑌤𑍍𑌯𑍇𑌤𑌿 𑌕𑌶𑍍𑌚𑌨॥

౯. యతశ్చోదేతిసూర్యోఽస్తంయత్రచగచ్ఛతి।
తందేవాస్సర్వేఽర్పితాస్తదునాత్యేతికశ్చన॥

(ப-ம்) 𑌯𑌤𑌶𑍍-எந்தவஸ்துவிலிருந்து, 𑌸𑍂𑌰𑍍𑌯𑌃-ஸூர்யன், 𑌉𑌦𑍇𑌤𑌿-உதிக்கிறானோ; 𑌯𑌤𑍍𑌰-யாதொருவஸ்துவில், 𑌅𑌸𑍍𑌤𑌂-லயத்தை, 𑌗𑌚𑍍𑌛𑌤𑌿-அடைகிறானோ; 𑌤𑌂-அந்தவஸ்துவை, 𑌸𑌰𑍍𑌵𑍇𑌦𑍇𑌵𑌾𑌃-எல்லாதேவர்களும், 𑌅𑌰𑍍𑌪𑌿𑌤𑌾𑌃-அடைந்திருக்கிறார்கள், 𑌤𑌦𑍁-அதை, 𑌕𑌶𑍍𑌚𑌨-ஒருவனும், 𑌨𑌾𑌤𑍍𑌯𑍇𑌤𑌿-அதிக்ரமிப்பதில்லை, 𑌏𑌤𑌦𑍍𑌵𑍈𑌤𑌤𑍍-இப்படிப்பட்டவஸ்து அந்தப்ரம்மமே.

ஶாம்-ஹா.—ஸூர்யோதயம் முதலியவற்றுக்கு, ஹேதுவாய், அத்யாத்மம், அதிதைவதம், என்றுசொல்லப்படுகிற எல்லாப்பொருளுக்கு மாதாரமாயிருக்கிறப்ரம்மத்தை அதிக்ரமித்ததில்லை. அதாவது, ப்ரம்மத்தில்வேறாய் பொருளொன்று மில்லை என்கை.

ரா-ஹா.—ஸர்வாதாரமாய், ஸர்வகாரணமாயிருக்கிற ப்ரம்மமெல்லாப்பொருளுக்கு மந்தர்யாமியாயிருப்பதாதலால், ப்ரமத்தையொருவனு மதிக்ரமிக்கமாட்டான். தன்னைவிட்டுநீங்காத பொருளைத்தானதிக்ரமிப்பதுகூடாததன்றோ; தனது நிழலைத்தானதிக்ரமிக்கமாட்டானன்றோ.

௧௦. 𑌯𑌦𑍇𑌵𑍇𑌹 𑌤𑌦𑌮𑍁𑌤𑍍𑌰 𑌯𑌦𑌮𑍁𑌤𑍍𑌰 𑌤𑌦𑌨𑍍𑌵𑌿𑌹 ।
𑌮𑍃𑌤𑍍𑌯𑍋𑌸𑍍𑌸 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌮𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌯 𑌇𑌹 𑌨𑌾𑌨𑍇𑌵 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿॥

౧౦. యదేవేహతదముత్రయదముత్రతదన్విహ।
మృత్యోస్సమృత్యుమాప్నోతియఇహనానేవపశ్యతి॥

(ப-ம்) 𑌇𑌹-இவ்விடத்தில், 𑌯𑌦𑍇𑌵-யாதொருவஸ்து இருக்கிறதோ; 𑌤𑌦𑍍-அந்தவஸ்துவே, 𑌅𑌮𑍁𑌤𑍍𑌰-பரலோகத்திலுமிருக்கிறது, 𑌯𑌦𑍍-யாதொருவஸ்து, 𑌅𑌮𑍁𑌤𑍍𑌰-பரலோகத்திலிருக்கிறதோ; 𑌤𑌦𑌨𑍁-அந்தவஸ்துவே, 𑌇𑌹-இந்தலோகத்திலுமிருக்கிறது, 𑌇𑌹-இந்தவஸ்துவிஷயத்தில். 𑌨𑌾𑌨𑍇𑌵-பேதமிருப்பதாய், 𑌯𑌃-எவன், 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿-நினைக்கிறானோ, 𑌸𑌃-அவன், 𑌮𑍃𑌤𑍍𑌯𑍋𑌃-ஸம்ஸாரத்திலிருந்து, 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌮𑍍-ஸம்ஸாரத்தை 𑌆𑌪𑍍𑌨𑍋𑌤𑌿-அடைகிறான்.

ஶாம்-ஹா.—பிரமன்தொடங்கி,ஸ்தாவரங்களீறாகவுள்ள ஸமஸ்தப்ராணியிலுமாத்மாவாயிருந்துகொண்டு அந்தந்தஉபாதிஸம்பந்தத்தால், பரப்ரம்மத்தில் வேறாயது போல்தோற்றுகிற ஸம்ஸாரியானஜீவாத்மா, பரப்ரம்மத்தில் வேறுபட்டதென்ற அறிவில்லாதரும் நினையாமலிருக்கும்படி, பரப்ரம்மத்திற்கும், ஜீவாத்மாவுக்குப் பேதமில்லையென்பதை ஸ்பஷ்டமாய்ச்சொல்லுகிறது. இங்கு, கார்யகாரணோபாதி ஸம்பந்தத்தால், ஸம்ஸாரிபோல் அவிவேகிகளுக்குத் தோற்றுகிறஜீவனே, அங்கு,

த்யவிஜ்ஞானஸ்வரூபியாய், ஸம்ஸாரதர்மங்களொன்றுமில்லாதாயிருக்கிற ப்ரம்மம். அந்த சுத்தப்ரம்மமே, நாமரூபவ்யாகரணத்தாலுண்டாகிய உபாதியையநுபவிக்கிற ஜீவன் ஜீவாத்மா, பரமாத்மா, இரண்டுமொன்றேயன்றோ; இப்படியிருக்கவிதையறியாமல், எந்தமூடன், உபாதிபேதத்தைக்காட்டுகிற அவித்யையினாலழிக்கப்பட்டவி வேகத்தையுடையவனாய், பேதசூந்யமானப்ரம்மத்தை, பரமாத்மாவாகிய ப்ரம்மம் வேறானது; ஜீவாத்மாவாகியவன்வேறானவன்; இருவருமொருவரன்றென்கிற பேதமுடையதென்று நினைக்கிறானோ; அவன்மரணமடைந்தடைந்து ஸம்ஸாரியாகிறான். ஆகையாலப்படிநினையாமல், ஆகாயம்போல் பூர்ணமாய், விஜ்ஞானஸ்வருபமானப்ரம்மம், நானேயாகிறேனென்று வாக்யார்த்தம்.

ரா-ஸா.—பரமாத்மா, எல்லாப்ராணிகளுக்கு மந்தராத்மாவாயிருப்பதுகூடாது நானென்றுதோற்றுகிறவனன்றோ; ஆத்மாவென்று சொல்லப்படுவான். அப்படிநானென்று தோற்றுகிற ஆத்மாவோ; நானிங்கேயேயிருக்கிறேன், என்று, ஓரிடத்திலளவுபட்டிருப்பவனாய் தோற்றுகிறான்; ஆதலால், எல்லாப்ராணிகளுக்கும், பரமாத்மா ஒருவனே யந்தராத்மாயிருப்பது எப்படிகூடும்; என்கிறசங்கையைநீக்குகிறது. இவ்வுலகத்தில் நானென்றுதோற்றுகிற ஆத்மாவுக்கு, எந்தபரமாத்மா அந்தராத்மாவாயிருக்கிறானோ; அவனேலோகாந்தரத்திலுள்ள நானென்றுதோற்றுகிற ஆத்மாக்களுக்குமந்தராத்மாவாயிருக்கிறான். பரமாத்மபேதமில்லையென்கை. தத்வவித்துக்களுக்குண்டாகிற நானென்கிறதோற்றம் கொண்டு, பரமாத்மாவை அளவுபட்டவனாய்ச்சொல்லவொண்ணாது. அவர்களுக்கு, எல்லாக்காலத்திலுமெந்ததேசத்திலும், நானென்கிற தோற்றமுண்டாகையாலே. அறிவில்லாதாருடைய நானென்கிறதோற்றம், ஜீவாத்மாவையேபற்றி நிற்பதானதால், இந்தமூடர்களின்தோற்றம் பரமாத்மா, எல்லாப்பொருளுக்கு மந்தராத்மாவாயிருப்பதைத் தடைப்படுத்துகிறவலியுற்றதன்று. ஆகையால், ஆத்மாக்களெல்லோர்க்கும்பரமாத்மா, அந்தராத்மாவாயிருக்கையில்விரோதமுமில்லை. இந்தஸர்வாந்தர்யாமியாயிருக்கிற பரமாத்மாவை, நானாவாகநினைப்பவன் ஸம்ஸாரத்தையடைகிறான். ஜீவாத்மாக்களைப்போல பரமாத்மாவும், சரீரந்தோறும்வேறுபட்டவனன்று. ஆதலால், பரமாத்மாவுக்கு பேதத்தைநினைப்பவன், ஸம்ஸாரியாவானென்றுகருத்து.

௧௧. 𑌮𑌨𑌸𑍈𑌵𑍇𑌦𑌮𑌾𑌪𑍍𑌤𑌵𑍍𑌯𑌂𑌨𑍇𑌹𑌨𑌾𑌨𑌾𑌸𑍍𑌤𑌿𑌕𑌿𑌞𑍍𑌚𑌨|
𑌮𑍃𑌤𑍍𑌯𑍋𑌸𑍍𑌸𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌂𑌗𑌚𑍍𑌛𑌤𑌿𑌯𑌇𑌹𑌨𑌾𑌨𑍇𑌵𑌪𑌶𑍍𑌯𑌤𑌿||

౧౧. మనసైవేదమాప్తవ్యం నేహనానాస్తికించన |
మృత్యోస్సమృత్యుంగచ్ఛతియఇహనానేవపశ్యతి||

(ப-ம்) 𑌇𑌦𑌮𑍍-இந்தபரமாத்மஸ்வரூபமானது, 𑌮𑌨𑌸𑍈𑌵-நெஞ்சினாலேயே, 𑌆𑌪𑍍𑌤𑌵𑍍𑌯𑌮𑍍-அறியத்தக்கது, 𑌇𑌹-இந்தஸ்வரூபத்தில், 𑌨𑌾𑌨𑌾-வேறுபாடானது, 𑌕𑌿𑌞𑍍𑌚𑌨-ஒன்றும், 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿-இல்லை, 𑌗𑌚𑍍𑌛𑌤𑌿- (அடைகிறான்.

௱௦-ஸா.—இந்தப்ரம்மத்தை யொன்றாயறிவதற்குமுன், ஜ்ஞாத்ரு ஜ்ஞேய, பேதம்தோற்றுகிறது. பின்னில்லை. இந்தஸ்வரூபத்தை மனதினாலறியவேணும். இப்படியொருவிதத்தாலும், பேதமில்லாதப்ரம்மத்தில் கிஞ்சித்தாகிலும் பேதத்தை எவன் நினைக்கிறானோ; அவன், ஸம்ஸாரத்தையடைகிறான்.

ரிஃ-ஸா—இப்படி எல்லாவற்றிற்கு மாத்மாவாகிய பரமாத்மாவை சுத்தமான நெஞ்சாலறியலாகும், இதில்விரோதமில்லை. இப்படிகீழ்ச்சொல்லியதை, நிலைநிறுத்துகைக்கு, மறுபடியும் 'ம்ருத்யோஸ்ஸம்ருத்யும்கச்சதியஇஹநாநேவபச்யதி'' என்கிறது.

பதாந்வயார்த்தபேதங்கள்.

உத்தரார்த்தத்திற்கு, அடுத்தமுன் ச்லோகத்தில் பதப்பொருள் முக்கியதுசொல்லப்பட்டிருக்கிறது. அதுபோலிங்குமுணர்க.

கஉ. அங்குஷ்டமாத்ர: புருஷோ மத்ய ஆத்மநி திஷ்டதி।
ஈஶாநோ பூதபவ்யஸ்ய ந ததோ விஜுகுப்ஸதே॥ ஏதத்வை தத்॥

౧౨. అంగుష్ఠమాత్రః పురుషో మధ్య ఆత్మని తిష్ఠతి।
ఈశానో భూతభవ్యస్య న తతో విజుగుప్సతే॥ ఏతద్వై తత్॥

(ப-ம்) பூதபவ்யஸ்ய-எல்லாப்பொருளுக்கும், ஈஶாந:-ஈச்வரனாயிருக்கிற, புருஷ:- விஷ்ணுவானவர், மத்ய ஆத்மநி - சரீரத்தின்நடுவில், அங்குஷ்டமாத்ர:-பெருவிரலளவிள்ளவராய், திஷ்டதி-இருக்கிறார், தத: அந்தசரீரத்தில். நவிஜுகுப்ஸதே - ஜுகுப்ஸைப்படுகிறதில்லை, ஏதத்வைதத்-இதுவேயின்சொன்னப்ரம்மம்.

ஸம்-ஸா— அந்தப்ரம்மஸ்வரூபத்தையேசொல்லுகிறது. பெருவிரலளவுள்ளஹ்ருதயபுண்டரீகமத்யத்தில் அங்கஉபாதிஞலளவுபட்டிருக்கிற பூர்ணபுருஷனை அதாவது ஆகாயம் வ்யாபிவஸ்துவாஞலும், சிறியவிரந்திரத்தால் சிறுத்துக் காட்டுவதுபோல், அளவுபட்டிருக்கிற ஸம்ஸாரி ஜீவனையே, எல்லாப்பொருளுக்கு மீசனுகியபரமாத்மாவென்றறிந்தால், பின்பு ஒருவஸ்துவிலும்ஜுகுப்ஸையடையான்.

ரா-ஸா— காலத்ரயத்திலுமுள்ள எல்லாப்பொருளுக்கு மீசனுயிருக்கிற விஷ்ணுஹ்ருதயபுண்டரீகத்தில், அங்குஷ்டமாத்ரராய் எழுந்தருளியிருக்கிறார். இந்தவஸ்துக்களோடுதனக்குண்டான ஸம்பந்தத்தாலாகிய வாத்ஸல்யத்தால், சரீரம்முதலியவற்றிலிருக்கிறதோஷங்களையும் போக்யமாய்க்கொள்ளுகிருர். இவரேமுன்சொன்னலக்ஷணமுள்ள ப்ரப்ரம்மம்.

கங. அங்குஷ்டமாத்ர: புருஷோ ஜ்யோதிரிவாதூமக:।
ஈஶாநோ பூதபவ்யஸ்ய ஸ ஏவாத்ய ஸ உ ஶ்வ:॥ ஏதத்வை தத்॥

౧౩. అంగుష్ఠమాత్రః పురుషో జ్యోతిరివాధూమకః।
ఈశానో భూతభవ్యస్య స ఏవాద్య స ఉ శ్వః॥ ఏతద్వై తత్॥

(ப-ம்) அதூமக:-புகையில்லாத, ஜ்யோதி:இவ- தேஜஸ்ஸைப்போல் ப்ரகாசஸ்வரூபியாய்க்கொண்டு, ஸ:ஏவ-அவரே, அத்ய - இப்போதிலும், ஸ:உ-அவரே, ஶ்வ:-வருங்காலத்திலும், (அஸ்தி - இருக்கிறார்) மற்றப்பதங்களுக்குமுன் ச்லோகத்திலேசொன்னபடிபொருளுணர்க.

ஸம்-ஸா— இப்படிபுகையில்லாத ஜ்யோதிஸ்ஸாய் விளங்குகிற ஜீழ்ச்சொல்லியபடியோகிகளால் த்யாநிக்கப்படுகிறவஞன பரமாத்மா, எக்காலத்திலு மிப்படிப்பட்டவஞயிருக்கிருன். இவனையொப்பாரொருவருமில்லை. ஆகையால், இந்தஆத்மாஅநித்யனென்கிறபக்ஷமும், க்ஷணபங்கபக்ஷமும் நிரஸிக்கப்பட்டது.

ரா-ஸா— ஸமஸ்தபதார்த்தங்களுக்கு மந்தராத்மாவாயிருக்கிற பரமாத்மா ஜ்யோதிஸ்வரூபியாய் ப்ரகாசிக்கிருர்.

கச. யதோ₂த₃கம் து₃ர்கே₃ வ்ருஷ்டம் பர்வதேஷு விதா₄வதி ।
ஏவம் த₄ர்மாந் ப்ருத₂க் பஶ்யம்ஸ்தாநேவாநுவிதா₄வதி ॥

౧౪. యథోదకం దుర్గే వృష్టం పర్వతేషు విధావతి ।
ఏవం ధర్మాన్ పృథక్ పశ్యం స్తానేవానువిధావతి ॥

(ப-ம) து₃ர்கே₃ - துர்க்கப்ரதேசத்தில், வ்ருஷ்டம் - வர்ஷிக்கப்பட்ட, உத₃கம்-ஜலமானது, யதா₂-எப்படி, பர்வதேஷு-மலைகளில், விதா₄வதி-பிரிந்தோடுகிறதோ; ஏவம்-இப்படியே, த₄ர்மாந் - தர்மங்களை, ப்ருத₂க் வேறுபட்டவைகளாய், பஶ்யந்-நினைப்பவன், தாநேவ - அவைகளையே, அநுவிதா₄வதி - அநுஸரிக்கிறான்.

ஸம-ஸா—மறுபடியும், ப்ரம்மத்தில் பேததர்சநம்செய்யத் தகாதென்று, சொல்லுகிறது. துர்க்கமாய்உயர்ந்திருக்கிற தேசத்தில், பெய்தமழையானது பள்ளத்திலங்களில்விழுந்து பிரிந்துசிதறியோடி அழிகின்றதோ; இப்படியே ஆத்மாவின்தர்மங்களில் பேதத்தைப்பார்க்கின்றவன், அடிக்கடிபிறந்து துன்பப்பட்டழிகிறான்.

ரா ஸா—நாநாசரீரங்களிலு மந்தர்யாமியாயிருக்கிறவந்தவொருவனுடைய, தேவாந்தர்யாமித்வம், மநுஷ்யாந்தர்யாமித்வம், முதலியதர்மங்களை, வேறுவேறிடத்தனவாகநினைப்பவன், மலையருவியை யொற்றவனாய் சிதறியழிந்துவிடுகிறான்.

கரு. யதோ₂த₃கம் ஶுத்₃தே₄ ஶுத்₃த₄மாஸிக்தம் தாத்₃ருகே₃வ ப₄வதி ।
ஏவம் முநேர்விஜாநத ஆத்மா ப₄வதி கௌ₃தம ॥

౧౫. యథోదకం శుద్ధే శుద్ధమాసిక్తం తాదృగేవ భవతి ।
ఏవం మునేర్విజానత ఆత్మా భవతి గౌతమ ॥

(ப-ம) கௌ₃தம - ஓகௌதமனே, ஶுத்₃தே₄ - சுத்தமாயிருக்கிற, (உத₃கே - ஜலத்தில்) ஆஸிக்தம்-சேர்ந்திருக்கிற, ஶுத்₃த₄ம்-சுத்தமான, உத₃கம்-ஜலமானது, யதா₂ எப்படி, தாத்₃ருகே₃வ-அப்படிப்பட்டதாயே, ப₄வதி-ஆகிறதோ, விஜாநத:-ஞானியான, முநே:-முனிக்கு, ஆத்மா-ஆத்மாவானது, ஏவம்-இப்படி, ப₄வதி-ஆகிறது.

ஸம-ஸா—உபாதியினாலாகிய பேதத்ருஷ்டியைநீக்கி, விசுத்தமும், விஜ்ஞாநரூபமும், பேதமில்லாததுமான ப்ரஹ்மத்தை, அறிந்துமநநம் செய்பவனுக்கு, ஜீவாத்மா பரமாத்மா, இவ்விரண்டும், நீருடன்கலந்த நீர்போல், ஒன்றய்விளங்குகிறது. ஆகையால் குதார்க்கிகர்கள்சொல்லுகிற பேதத்தையும், நாஸ்திகன் செய்கிறகுத்ருஷ்டியையும் விட்டு, ஆயிரம் தாய்தந்தைகளினும் சிறந்ததான வேதம் சொன்னபடி, ஆத்மா, ஒன்றே என்றறிதல், சாந்தியுடையோர்க்குத் தக்கது.

ரா-ஸா பரமாத்மா, ஒருவனே, எல்லோருக்கு மந்தராத்மாவா யிருக்கிறான். என்றுணர்ந்தவன், பரமாத்மாவையொற்ற ஸ்வரூபத்தைப் பெறுகிறான்.

கடோபநிஷத் இரண்டாமத்தியாயத்தில்

நாலாம்வல்லி முற்றும்.

## 𑌪𑌞𑍍𑌚𑌮𑌵𑌲𑍍𑌲𑍀𑌪𑍍𑌰𑌾𑌰𑌮𑍍𑌭𑌃.

க. 𑌪𑍁𑌰𑌮𑍇𑌕𑌾𑌦𑌶𑌦𑍍𑌵𑌾𑌰𑌮𑌜𑌸𑍍𑌯𑌾𑌵𑌕𑍍𑌰𑌚𑍇𑌤𑌸𑌃।
𑌅𑌨𑍁𑌷𑍍𑌠𑌾𑌯 𑌨 𑌶𑍋𑌚𑌤𑌿 𑌵𑌿𑌮𑍁𑌕𑍍𑌤𑌶𑍍𑌚 𑌵𑌿𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇॥ 𑌏𑌤𑌦𑍍𑌵𑍈 𑌤𑌤𑍍॥

౧. పురమేకాదశద్వారమజస్యావక్రచేతసః।
అనుష్ఠాయ న శోచతి విముక్తశ్చ విముచ్యతే॥ ఏతద్వై తత్ ॥

(ப-ம்) 𑌅𑌜𑌸𑍍𑌯-நித்யனாய், 𑌅𑌵𑌕𑍍𑌰𑌚𑍇𑌤𑌸𑌃 - பரிசுத்தமான நெஞ்சையுடைய, ஜீவாத்மாவுக்கு. 𑌏𑌕𑌾𑌦𑌶𑌦𑍍𑌵𑌾𑌰𑌮𑍍 - பதினொரு வாசலையுடைய, 𑌪𑍁𑌰𑌮𑍍-நகரமானது, (𑌭𑌵𑌤𑌿-இருக்கிறது) இதை, 𑌅𑌨𑍁𑌷𑍍𑌠𑌾𑌯 - அறிந்துகொண்டு, 𑌨 𑌶𑍋𑌚𑌤𑌿-சோகிக்கிறதில்லை, 𑌵𑌿𑌮𑍁𑌕𑍍𑌤𑌃-விடுபட்டவனாகி, 𑌵𑌿𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇-முக்தனாகிறான்.

ஸம்-ஹா-ரா-ஹா. பதினொருவாசல்களாவது, பதினொரு இந்த்ரியங்கள் நகரமென்பது - சரீரத்தை.

பதாந்வயார்த்தபேதங்கள்.

"𑌏𑌤𑌦𑍍𑌵𑍈 𑌤𑌤𑍍" என்பதற்குமுன்போல சங்கரபாஷ்யத்தில், இந்த ஜீவன், பரமாத்மாவேயென்றும், இராமாநுஜபாஷ்யத்தில், இந்தஜீவனும் பரமாத்ம சரீரமேயென்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

உ. 𑌹𑌂𑌸𑌃 𑌶𑍁𑌚𑌿𑌷𑌦𑍍𑌵𑌸𑍁𑌰𑌨𑍍𑌤𑌰𑌿𑌕𑍍𑌷𑌸𑌦𑍍𑌧𑍋𑌤𑌾 𑌵𑍇𑌦𑌿𑌷𑌦𑌤𑌿𑌥𑌿𑌰𑍍𑌦𑍁𑌰𑍋𑌣𑌸𑌤𑍍। 𑌨𑍃𑌷𑌦𑍍𑌵𑌰𑌸𑌦𑍃𑌤𑌸𑌦𑍍𑌵𑍍𑌯𑍋𑌮𑌸𑌦𑌬𑍍𑌜𑌾 𑌗𑍋𑌜𑌾 𑌋𑌤𑌜𑌾 𑌅𑌦𑍍𑌰𑌿𑌜𑌾 𑌋𑌤𑌂 𑌬𑍃𑌹𑌤𑍍॥

౨. హంసశ్శుచిషద్వసురంతరిక్షసద్ధోతా వేదిషదతిథిర్దురోణసత్ ।
నృషద్వరసదృతసద్వ్యోమసదబ్జా గోజా ఋతజా అద్రిజా ఋతం బృహత్ ॥

(ப-ம்) 𑌶𑍁𑌚𑌿𑌷𑌤𑍍-க்ரீஷ்மகாலத்திலிருக்கிற, 𑌹𑌂𑌸𑌃-ஸூர்யனும், 𑌅𑌨𑍍𑌤𑌰𑌿𑌕𑍍𑌷𑌸𑌤𑍍-ஆகாயத்திலிருக்கிற, 𑌵𑌸𑍁𑌃-வாயுவும், 𑌵𑍇𑌦𑌿𑌷𑌤𑍍-வேதிகையிலிருக்கிற, 𑌹𑍋𑌤𑌾 - ஹோமம்பண்ணுகிறவனும், 𑌦𑍁𑌰𑍋𑌣𑌸𑌤𑍍-க்ருகத்திலிருக்கிற, 𑌅𑌤𑌿𑌥𑌿𑌃-அதிதியும், 𑌨𑍃𑌷𑌤𑍍-மநுஷ்யர்களிலிருப்பதும், 𑌵𑌰𑌸𑌤𑍍 - தேவதைகளிடத்திலிருப்பதும், 𑌋𑌤𑌸𑌤𑍍 - யஜ்ஞத்திலிருப்பதும் 𑌵𑍍𑌯𑍋𑌮𑌸𑌤𑍍-ஆகாசத்திலிருப்பதும், 𑌅𑌬𑍍𑌜𑌾𑌃-ஜலத்தி லுண்டானவைகளும், 𑌗𑍋𑌜𑌾𑌃-பூமியிலுண்டானவைகளும், 𑌋𑌤𑌜𑌾𑌃-ஸ்வர்க்கத்தி லுண்டானவைகளும், 𑌅𑌦𑍍𑌰𑌿𑌜𑌾𑌃 - மலையிலுண்டானவைகளும், 𑌬𑍃𑌹𑌤𑍍-பெரிதாயிருக்கிற 𑌋𑌤𑌮𑍍-ஸத்யஸ்வரூபமான ப்ரம்மமே.

ஸம்-ஹா.—இவைகளுக்கும் ப்ரம்மத்திற்கும் பேதமில்லை எல்லாம் ப்ரம்மம்.

ரா-ஹா.—எல்லாவற்றிற்கு மந்தராத்மாவாயிருப்பது ப்ரம்மம் - ஜீவப்ரக்ருதிகள், பராபரசரீரங்களன்றோ.

௩. 𑌊𑌰𑍍𑌧𑍍𑌵𑌂 𑌪𑍍𑌰𑌾𑌣𑌮𑍁𑌨𑍍𑌨𑌯𑌤𑍍𑌯𑌪𑌾𑌨𑌂 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌗𑌸𑍍𑌯𑌤𑌿।
𑌮𑌧𑍍𑌯𑍇 𑌵𑌾𑌮𑌨𑌮𑌾𑌸𑍀𑌨𑌂 𑌵𑌿𑌶𑍍𑌵𑍇 𑌦𑍇𑌵𑌾 𑌉𑌪𑌾𑌸𑌤𑍇॥

౩. ఊర్ధ్వం ప్రాణమున్నయత్యపానం ప్రత్యగస్యతి!
మధ్యే వామనమాసీనం విశ్వేదేవా ఉపాసతే॥

(ப-ம்) ப்ராணம் - ப்ராணவாயுவை, ஊர்த்வம் - மேலே, உந்நயதி - தள்ளுகிறான், அபாநம் - அபாநவாயுவை, ப்ரத்யக் - கீழே, அஸ்யதி - தள்ளுகிறான், இப்படி செய்துகொண்டு, மத்யே - நடுவில், ஆஸீநம் - எழுந்தருளியிருக்கிற, வாமநம் - அங்குஷ்டப்ரமாணனாயிருக்கிற, பரமாத்மாவை, விச்வே தேவா: - எல்லாத்தேவர்களும், உபாஸதே - உபாஸனம் செய்கிறார்கள்.

ஸம்-ஹா.—ப்ராணாபானாதி வாயுக்கள் நியமமாய் ஸஞ்சரிக்கையால், இதற்குக் காரணமான ஆத்மா, சரீரத்தில் வேறாயவனொருவனுளனென்றறியலாகும். அவனே ஜீவாத்மா, அவனே, பரமாத்மா, என்று இதற்குபாவம்.

ரா-ஹா.—ஸத்வகுணமுடையவர்களுக்கு, இந்த பரமாத்மா உபாஸநத்தால் தோற்றுகிறான்,

௪. அஸ்ய விஸ்ரம்ஸமாநஸ்ய சரீரஸ்தஸ்ய தேஹிந:।
தேஹாத்விமுச்யமாநஸ்ய கிமத்ர பரிசிஷ்யதே॥ ஏதத்வைதத்॥

౪. అస్యవిస్రంసమానస్యశరీరస్థస్యదేహినః !
దేహాద్విముచ్యమానస్య కిమత్రపరిశిష్యతే ॥

(ப-ம்) அஸ்ய - இந்த உபாஸநனிஷ்டியுடைய, தேஹிந: - ஜீவனுக்கு, சரீரஸ்தஸ்ய - தன் சரீரத்திலிருக்கும்போதும், விஸ்ரம்ஸமாநஸ்ய - பலஹீனனாயிருக்கும்போதும், தேஹாத் - தேகத்திருந்து, விமுச்யமாநஸ்ய - மரணத்தையடையும்போதும், அத்ர - இந்தசரீரத்தில், கிம் பரிசிஷ்யதே - என் செய்யத்தக்கதுண்டு.

ஸம்-ஹா.—இந்த ஆத்மா, இந்த சரீரத்தின் வலிவுகுறையவே, இதைவிட்டு நீங்கிப்போகும்போது, இந்த சரீரத்தில் ப்ராணம், இந்திரியங்கள் முதலானவை யொன்றும் நிற்பதில்லை. ஒரு நகரத்தில், அரசனில்லாதபோது, நகரத்து வேலைக்காரர்களெல்லாம் நகரத்தைவிட்டுப்போவதுபோல் ஆத்மா இதைவிட்டவுடனே, எல்லாமிதை விடுகின்றன. ஆகையால் சரீரத்தில் வேறாய் ஆத்மா ஒருவனுளன்.

ரா-ஹா.—இங்கு, பரமாத்மாவை உபாஸித்து, அவனுடைய அநுக்ரஹம்பெற்றவன், ப்ராரப்தகர்மம் நீங்கிய உடனே, முக்தனாகிறான். பின்பவனுக்கு செய்யத்தக்கவைகளொன்றுமில்லை.

பதார்த்தபேதங்கள்.

“ஏதத்வைதத்” என்பதற்கு முன்போலவே பொருள்.

௫. ந ப்ராணேந நாபாநேந மர்த்யோ ஜீவதி கச்சந।
இதரேண து ஜீவந்தி யஸ்மிந்நேதாவுபாச்ரிதௌ॥

౫. నప్రాణేననాపానేనమర్త్యోజీవతికశ్చన ।
ఇతరేణతుజీవంతి యస్మిన్నేతావుపాశ్రితౌ ॥

(ப-ம்) மர்த்ய꞉, மநுஷ்யன், கஶ்சந - ஒருவனும், ப்ராணேந - ப்ராணவாயுவினால், நஜீவதி - ஜீவித்திருப்பதில்லை, அபாநேந - அபாநவாயுவினாலும், நஜீவதி - ஜீவித்திருப்பதில்லை. யஸ்மிந் - யாதொரு ஆத்மாவில், ஏதௌ-இந்தவாயுக்கள், உபாஶ்ரிதௌ - நிற்கின்றனவோ, (ஏதந - அந்த) இதரேண து - சரீரத்தில்வேறான ஆத்மாவினால், ஜீவந்தி-ஜீவித்திருக்கிறார்கள்.

ஶம்-ஹா.—ப்ராணாபாநவாயுக்கள் ஆத்மாவல்ல - இவைகளில் வேறானவனே ஆத்மா. இவைகளவனால் சேர்க்கப்பட்டவைகள். ஆகையால் சேர்ந்தவனந்யன். இவைகள் ஸ்வயமாய்ச்சேரா. சேர்ந்தவையெல்லாமொருவனால் சேர்க்கப் பட்டவைகளாயே காணப்படுகின்றன. ஆதலால், ஆத்மாவேறானவன்.

ரா-ஹா.—எல்லா ஜீவாத்மாக்களும் ஜீவித்திருப்பது பரமாத்மாவினாலேயாகையால் ஜீவாத்மாக்களை ஜீவிக்கப்பண்ணுகிறவன், ஜீவாத்மாக்களில்வேறாய் பரமாத்மா. ஆகையால் ஜீவாத்ம பரமாத்மாக்களுக்கு ஐக்யமில்லை. இப்படிப்பட்ட மகிமையுடையவன் பரமாத்மா - ப்ராணன். அபாநன், என்கிற வாயுக்கள் முதலான எல்லாமவனாலாகியது.

கூ. ஹந்த த இதம் ப்ரவக்ஷ்யாமி குஹ்யம் ப்ரஹ்ம ஸநாதநம் ।
யதா ச மரணம் ப்ராப்ய ஆத்மா பவதி கௌதம ॥

౬. హన్త త ఇదం ప్రవక్ష్యామి గుహ్యం బ్రహ్మ సనాతనమ్।
యథా చ మరణం ప్రాప్య ఆత్మా భవతి గౌతమ ॥

(ப-ம்) ஹே கௌதம-கௌதமனே, ஆத்மா - ஆத்மாவானவன், மரணம், ப்ராப்ய-முக்தனானபிறகு, யதா-எப்படி, பவதி- ஆகிறானோ, இதம்-இந்த, குஹ்யம்-இரகஸ்யத்தையும், ஸநாதநம் - நித்யமான, ப்ரஹ்ம-ப்ரம்மத்தையும், ஹந்த-ஆச்சரியமாய், ப்ரவக்ஷ்யாமி-சொல்லுகிறேன்.

ஶம்-ஹா.—எந்த ப்ரம்மத்தை யறிந்துகொண்டு முக்தனாகிறானோ எதை யறியாமல் ஸம்ஸாரியாகிறானோ; அந்த ப்ரம்மஸ்வரூபத்தை உனக்குச் சொல்லுகிறேன் கௌதமனே கேள்.

ரா-ஹா.—பரமாத்மஸ்வரூபத்தையும் நிஷ்க்ருஷ்ட ஜீவாத்ம ஸ்வரூபத்தையும் யோக்யனாயிருக்கிற சிஷ்யனான கௌதமனே உனக்குச்சொல்லுகிறேன்.

எ. யோநிமந்யே ப்ரபத்யந்தே ஶரீரத்வாய தேஹிந꞉ ।
ஸ்தாணுமந்யேऽநுஸம்யந்தி யதாகர்ம யதாஶ்ருதம் ॥

౭. యోనిమన్యే ప్రపద్యన్తే శరీరత్వాయ దేహినః ।
స్థాణుమన్యేఽనుసంయన్తి యథాకర్మ యథాశ్రుతమ్ ॥

(ப-ம்) அந்யே-முக்திபெறாத, தேஹிந꞉-ஜீவர்கள், யோநிம் - யோநியை, ஶரீரத்வாய-சரீரப்ராப்திகின்பொருட்டு, ப்ரபத்யந்தே- அடைகிறார்கள், அந்யே தேஹிந꞉-மற்றுமுள்ளசிலஜீவர்கள், யதாஶ்ருதம்-சாஸ்த்ர

ப்படி, யதாகர்ம-கர்மத்திற்குத்தக்கபடி, ஸ்தாணும் - ஸ்தாவரசரீரத்தை, அநுஸம்யந்தி-அநுஸரிக்கிறார்கள்.

ஸ0· ஹா-ரா-ஹா.—ப்ரம்மஜ்ஞாநமில்லாத ஜீவர்கள் தங்கள் கர்மத்திற்குத்தக்க படி ஸ்தாவர சரீரத்தையும் ஜங்கமசரீரத்தையும் அடைகிறார்கள் ஆகையால்ப்ரம்மத்தை யறியவேணும்.

அ. ய ஏஷ ஸுப்தேஷு ஜாகர்தி காமம் காமம் புருஷோ நிர்மிமாண: । ததேவ ஶுக்ரம் தத்ப்ரஹ்ம ததேவாம்ருதமுச்யதே । தஸ்மிம்ல்லோகா: ஶ்ரிதா: ஸர்வே ததுநாத்யேதி கஶ்சந ॥ ஏதத்வை தத் ॥

౮. యఏషసుప్తేషుజాగర్తికామంకామంపురుషోనిర్మిమాణః ।
తదేవశుక్రంతద్బ్రహ్మతదేవామృతముచ్యతే ।
తస్మింల్లోకాఃశ్రితాఃసర్వే తదునాత్యేతికశ్చన ॥ ఏతద్వైతత్ ॥

(ப-ம்) ய:, ஏஷ:, புருஷ:-யாதொருபுருஷன், ஸுப்தேஷு-உறங்கும்போதும், காமம்காமம்-ஸங்கல்பித்துஸங்கல்பித்து, நிர்மிமாண:-ஸ்ருஷ்டிபண்ணிக்கொண்டு, ஜாகர்தி-உணர்ந்திருக்கிறானோ, ததேவ-அந்தபரமபுருஷனே, ஶுக்ரம்-ப்ரகாசஸ்வரூபி, தத்-அந்தபரமபுருஷனே, ப்ரஹ்ம-பரப்ரம்மம், ததேவ-அந்தபரமபுருஷனே, அம்ருதம் - மோக்ஷஸ்வரூபி, உச்யதே-இப்படிசொல்லப்படுகிறான், தஸ்மிந்-அந்தபரமபுருஷனிடத்தில், ஸர்வேலோகா:-எல்லாலோகங்களும், ஶ்ரிதா:-இருக்கின்றன, தத்- அந்தபரமபுருஷனை, கஶ்சந-ஒருவனும், நாத்யேதி-அதிக்ரமிக்கிறதில்லை, ஏதத்வைதத்-இந்தபரமபுருஷனே பரப்ரம்மம்.

ஸ0- ஹா.—ப்ரம்மஸ்வரூபத்தைச் சொல்லுகிறேனென்றுமுன் ப்ரதிஜ்ஞைசெய்தபடி சொல்லத்தொடங்குகிறது.

ரா-ஹா.—இப்படி சிஷ்யனை ப்ரரோசனைசெய்து அபிமுகனாக்கிக்கொண்டு ப்ரக்ருதத்தை யநுஸரிக்கிறது. இந்த ச்லோகதாத்பர்யத்தால், முக்தாத்மாவுக்கும் ப்ரம்மத்திற்கும் பேதமில்லை என்கிற பக்ஷம் தள்ளப்பட்டது.

௯. அக்நிர்யதைகோ புவநம் ப்ரவிஷ்டோ ரூபம் ரூபம் ப்ரதிரூபோ பபூவ । ஏகஸ்ததா ஸர்வபூதாந்தராத்மா ரூபம் ரூபம் ப்ரதிரூபோ பஹிஶ்ச ॥

౯. అగ్నిర్యథైకోభువనంప్రవిష్టో రూపంరూపంప్రతిరూపోబభూవ ।
ఏకస్తథాసర్వభూతాంతరాత్మా రూపంరూపంప్రతిరూపోబహిశ్చ ॥

(ப-ம்) ஏக:-ஒருவனாயிருக்கிற, அக்நி:-அக்நியானவன், புவநம்-லோகத்தை, ப்ரவிஷ்ட:- ப்ரவேசித்தவனாய், ரூபம்ரூபம் - ரூபங்கள்தோறும் ப்ரதிரூப:-வேறுபட்டரூபத்தையுடையவனாய், யதா-எப்படி, பபூவ ஆனானோ, ததா-அப்படி, ஏக:-ஒருபரமபுருஷனே, ஸர்வபூதாந்தராத்மா - எல்லா ஜீவர்களுக்கு மந்தராத்மாவாய், ரூபம்ரூபம் . வ்யக்திகள்

ஸரத்திற்கும், அவச்சேத்யாவச்சேதகபாவத்தாலாகிய ஐக்யத்தைப்பற்றி, ஸூர்யனுக் குண்டாகிய எழுகுதிரைகளையும், ஸம்வத்ஸரத்திற்குண்டான ஆறுருதுக்களையும் ஸம்வத்ஸரத்திற்கே சேர்த்து, சக்கிரங்களாகவும், அரங்களாகவும் ரூபித்துச்சொல்லப்பட்டதென்கை.

ஶா-ஹா—வத்ஸரம், ஸம்வத்ஸரம், பரிவத்ஸரம், இடாவத்ஸரம், அநுவத்ஸரம், என்கிற ஐந்துபாதங்களையுடைத்தாய், எல்லாவற்றிற்கும் காரணமாய், பன்னிரண்டுமாஸங்களை யாகாரமாகவுடைத்தாய், புரீஷமென்கிற ஸுவர்ணபூமிக்கு ஸமீபமான ப்ரம்மாண்டகோளகாவரணத்தை ஸ்தாநமாகவுடைத்தா யிருக்கிறதென்று சிலரும், ஏழுக்ரகங்களாகிற சக்கிரத்தையுடைத்தாய், எல்லாவற்றிக்கு மாதாரமாயிருக்கிறதென்று காலதத்வத்தையறிந்த ச்ரேஷ்டர்களும், ஸம்வத்ஸரப்ரஜாபதியைச்சொல்லுகிறார்கள். இப்படி, ஸம்வத்ஸரப்ரஜாபதி ஸ்வரூபம் சொல்லப்பட்டது.

கஉ. மாஸோவை ப்ரஜாபதிஃ தஸ்ய க்ருஷ்ணபக்ஷ ஏவ ரயிஃ ஶுக்லஃ ப்ராணஸ்தஸ்மாதேத ருஷயஃ ஶுக்ல இஷ்டம் குர்வந்தீதர இதரஸ்மிந் ॥

(ப - ம்.) மாஸஃஏவ-மாஸமானது, ப்ரஜாபதிஃ - ப்ரஜாபதிஸ்வரூபமானது. தஸ்ய - அந்த மாஸரூபியான ப்ரஜாபதிக்கு, க்ருஷ்ணபக்ஷஃஏவ - க்ருஷ்ணபக்ஷமானது, ரயிஃ - ரயி, என்னபடுகிறது. ஶுக்லஃ - சுக்லபக்ஷமானது, ப்ராணஃ-ப்ராணனென்று சொல்லப்படுகிறது. தஸ்மாத்-ஆகையால், ஏதே-ருஷயஃ-இந்திரியங்களுக்கெட்டாத விஷயங்களையறிகிற சக்தியையுடைய விந்த மகர்ஷிகள், ஶுக்லே-சுக்லபக்ஷத்தில், இஷ்டம்-யாகம்முதலிய நல்ல கர்மங்களை, குர்வந்தி-செய்கிறார்கள், இதரே - அறிவில்லாத மற்றவர்கள், இதரஸ்மிந்-சுக்லபக்ஷத்தைக்காட்டில் வேறானக்ருஷ்ணபக்ஷத்தில், குர்வந்தி-கர்மங்களைச் செய்கிறார்கள்.

ஶம-ஹா.—எல்லாவற்றிற்கு மிருப்பிடமாகிய ஸம்வத்ஸரப்ரஜாபதியை மாஸரூபப்ரஜாபதியாகச் சொல்லுகிறது கீழ்ச்சொல்லிய லக்ஷணத்தோடு கூடின விந்த மாஸப்ரஜாபதியினுடைய பாகங்களாகிய விரண்டுபக்ஷங்களில் க்ருஷ்ணபக்ஷம் ரயி என்கிற சந்திரோபலக்ஷிதமான போகலோகமார்க்கம். சுக்லபக்ஷமானது, ப்ராணனென்கிற ஸூர்யோபலக்ஷிதமான மோக்ஷமார்க்கம். ஆகையால், ப்ராணஸ்வரூபமாகவே ஸகலத்தையுமறிந்த மகர்ஷிகள் க்ருஷ்ணபக்ஷத்தில், கர்மங்களைச்செய்தாலும் ப்ராணஸ்வரூபமான சுக்லபக்ஷத்திலேயே செய்தவர்களாகிறார்கள். ப்ராணஸ்வரூபமாகாத வஸ்துவாயொன்று மவர்களுக்குத் தோற்றுகிறதன்றே; அஜ்ஞாநிகளாகிய மற்றோர், சுக்லபக்ஷத்தில் கர்மங்களைச்செய்தாலும், க்ருஷ்ணபக்ஷத்தில் செய்தவர்களாகிறார்கள். இவர்கள் ப்ராணஸ்வரூபத்தை யறியாதவர்களானதால் சுக்லபக்ஷமும் ப்ராணஸ்வரூபமாய் தோற்றுகிறதன்றே; இதனால், சுக்லபக்ஷம் ப்ராணஸ்வரூபமென்றறிந்தவர்கள் ஸ்துதிக்கப்படுகிறார்கள்.

ஶா-ஹா.—உபாஸநத்திற்காக, ஸம்வத்ஸரம், ரயி, ப்ராணன், என்று பிரிக்கப்பட்டதுபோல், மாஸமும், ரயி, ப்ராணன், என்று பிரித்துச்சொல்லப்படுகிறது. மாஸரூபியான ப்ரஜாபதியினுடைய க்ருஷ்ணபக்ஷ பாகமானது, ரயி ரூபமாகையால் தாழ்ந்தது, சுக்லபக்ஷபாகமானது, ப்ராணரூபமாகையாலே சிறந்தது. ஆகையா

வுடையோர் சுக்லபக்ஷங்களிலே: நல்ல கர்மங்களைச்செய்கிறார்கள். அறிவிலரோ க்ருஷ்ணபக்ஷத்தில் கர்மங்களைச்செய்கிறார்கள்.

௧௩. 𑌅𑌹𑍋𑌰𑌾𑌤𑍍𑌰𑍋 𑌵𑍈 𑌪𑍍𑌰𑌜𑌾𑌪𑌤𑌿𑌸𑍍𑌤𑌸𑍍𑌯𑌾𑌹𑌰𑍇𑌵 𑌪𑍍𑌰𑌾𑌣𑍋 𑌰𑌾𑌤𑍍𑌰𑌿𑌰𑍇𑌵 𑌰𑌯𑌿𑌃 𑌪𑍍𑌰𑌾𑌣𑌂 𑌵𑌾 𑌏𑌤𑍇 𑌪𑍍𑌰𑌸𑍍𑌕𑌨𑍍𑌦𑌨𑍍𑌤𑌿 𑌯𑍇 𑌦𑌿𑌵𑌾 𑌰𑌤𑍍𑌯𑌾 𑌸𑌂𑌯𑍁𑌜𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌚𑌰𑍍𑌯𑌮𑍇𑌵 𑌤𑌦𑍍𑌯𑌦𑍍𑌰𑌾𑌤𑍍𑌰𑍌 𑌰𑌤𑍍𑌯𑌾 𑌸𑌂𑌯𑍁𑌜𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 ॥

*அஹோராத்ரோவைப்ரஜாபதிஸ்தஸ்யாஹரேவ ப்ராணோராத்ரிரேவரயிஃப்ராணம்வாஏதேப்ரஸ்கந்தி | யெதிவாரத்யாஸம்யுஜ்யந்தேப்ரஹ்மசர்யமேவதத்யத்ராத்ரௌரத்யாஸம்யுஜ்யந்தே.*

(ப-ம்.) 𑌅𑌹𑍋𑌰𑌾𑌤𑍍𑌰𑍋 𑌵𑍈 - அஹோராத்ரமானது, 𑌪𑍍𑌰𑌜𑌾𑌪𑌤𑌿𑌃 - ப்ரஜாபதிஸ்வரூபமானது, 𑌤𑌸𑍍𑌯 - அந்த அஹோராத்ரரூபப்ரஜாபதிக்கு, 𑌅𑌹𑌃 𑌏𑌵 - பகலானது, 𑌪𑍍𑌰𑌾𑌣𑌃 - ப்ராணனென்று சொல்லப்படுகிறது, 𑌰𑌾𑌤𑍍𑌰𑌿𑌃 𑌏𑌵, இரவானது, 𑌰𑌯𑌿𑌃 - ரயி, என்று சொல்லப்படுகிறது, 𑌯𑍇 - யாவர் 𑌦𑌿𑌵𑌾 - பகலில், 𑌰𑌤𑍍𑌯𑌾 - ஸுரதத்தைச்செய்வதற்கு, 𑌸𑌂𑌯𑍁𑌜𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 - ஸ்த்ரீஸங்கம் பண்ணுகிறார்களோ; 𑌏𑌤𑍇 - இவர்கள், 𑌪𑍍𑌰𑌾𑌣𑌂 𑌵𑌾, ப்ராணஸ்வரூபத்தை, 𑌪𑍍𑌰𑌸𑍍𑌕𑌨𑍍𑌦𑌨𑍍𑌤𑌿 - அழிக்கிறார்கள். 𑌰𑌾𑌤𑍍𑌰𑍌, 𑌰𑌤𑍍𑌯𑌾, 𑌸𑌂𑌯𑍁𑌜𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 யத்-தத்-இராக்காலத்தில் ரதிசெய்வதற்கு ஸ்வபத்நியோடுசேருதலானது 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌚𑌰𑍍𑌯𑌮𑍍 - 𑌏𑌵 - ஸ்த்ரீஸங்கத்தை யெக்காலத்திலுமொழித்து விரக்தியோடிருக்கையாகிற ப்ரம்மசர்யமேயாகும்.

பதார்த்வயார்த்தபேதங்கள்.

பகற்காலத்தில் ஸ்த்ரீஸங்கம் செய்வது தகாதென்றும், இராக்காலத்தில், தன் பத்நியோடு ஸம்போகிப்பது குற்றமல்லவென்றும் சொல்லப்பட்டது மற்றெல்லாம் முன்போலவே கண்டுகொள்வது.

௧௪. 𑌅𑌨𑍍𑌨𑌂 𑌵𑍈 𑌪𑍍𑌰𑌜𑌾𑌪𑌤𑌿𑌸𑍍𑌤𑌤𑍋 𑌹 𑌵𑍈 𑌤𑌦𑍍𑌰𑍇𑌤𑌸𑍍𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑌿𑌮𑌾𑌃 𑌪𑍍𑌰𑌜𑌾𑌃 𑌪𑍍𑌰𑌜𑌾𑌯𑌨𑍍𑌤 𑌇𑌤𑌿 ॥

*அந்நம்வைப்ரஜாபதிஃததோஹவைதத்ரேதஸ்தஸ்*
*மாதிமாஃப்ரஜாஃப்ரஜாயந்தஇதி ||*

(ப-ம்.) 𑌅𑌨𑍍𑌨𑌂 𑌵𑍈 - அந்நமானது, 𑌪𑍍𑌰𑌜𑌾𑌪𑌤𑌿𑌃 - ப்ரஜாபதிஸ்வரூபமானது, 𑌤𑌤𑌃 - அந்த, 𑌰𑍇𑌤𑌃 - ரேதஸ்ஸானது, 𑌤𑌦𑍍 𑌹 𑌵𑍈 - அந்த அந்நத்தினுலுண்டாகிறதன்றோ, 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 - அந்த ரேதஸ்ஸிலிருந்து, 𑌇𑌮𑌾𑌃 - 𑌪𑍍𑌰𑌜𑌾𑌃 - இந்த ஜனங்கள், 𑌪𑍍𑌰𑌜𑌾𑌯𑌨𑍍𑌤𑍇 - உண்டாகிறார்கள். 𑌇𑌤𑌿 - என்று சொல்லப்பட்டது.

𑌸𑌾𑌰-𑌮𑌾.—இந்த ப்ரஜைகளெவ்விடத்தி விருந்துண்டாகிறார்களென்று செய்த ப்ரச்நத்திற்கு, நேராயுத்தரம் சொல்லப்படுகிறது. க்ரமத்தில் அந்நரூபத்தையடை

ந்த ப்ரஜாபதி, ரேதோரூபமாகி யவ்வழியாலே ப்ரஜைகளை யுண்டுபண்ணுகையால் எல்லாம், ப்ரஜாபதி ஸ்வரூபமாகிய சந்திரன், ஸூர்யன், மிதுநம், முதலிய பரம்பரையாலே வந்த சுக்லசோணிதங்களுடைய சேர்க்கையால் ஸகலப்ரஜைகளுமுண்டாகிறார்கள்.

ஸாரா.—கீழ்ச்சொல்லிய எல்லா விஷயங்களாலும், ப்ரக்ருதி, ஜீவன், காலம், இவைகளை சரீரமாகவுடைய ப்ரம்மத்திலிருந்து ஸகல ப்ரஜைகளுமுண்டாகிறார்களென்றுதோற்றுகிறது. இஃதெப்படிகூடும், ப்ரத்தியக்ஷத்தில் ஸ்திரீபுருஷ ஸம்யோகத்தாலாகிய சுக்லசோணிதங்களால் ஸகல ப்ரஜைகளுக்கு முத்பத்தி காணப்படுகிறதன்றோ; என்கிற விந்த ஸந்தேகம் நீங்கும்படி சொல்லுகிறது. அந்நம், ரேதஸ்ஸு முதலிய ஸர்வமுமந்த ப்ராஜாபதி என்கிற பரமாத்மாவின் சரீரமாகையால்; ப்ரக்ருதியின் பரிணாமமாகிய அந்நாதிகளால் ப்ரஜோத்பத்தியானாலும், ப்ரக்ருதி ஜீவர்களை சரீரமாகவுடைய பரமாத்மா எல்லாவற்றுக்கு முபாதாந காரணமென்பதில் ப்ரத்தியக்ஷவிரோதம் கிஞ்சித்து மில்லை என்பது ஸ்பஷ்டமன்றோ.

கரு. கூ. தத்³யே ஹ வை தத்ப்ரஜாபதிவ்ரதம் சரந்தி தே மிது²நமுத்பாத³யந்தே । தேஷாமேவைஷ ப்³ரஹ்மலோகோ யேஷாம் தபோ ப்³ரஹ்மசர்யம் யேஷு ஸத்யம் ப்ரதிஷ்டி²தம் ॥ தேஷாமஸௌ விரஜோ ப்³ரஹ்மலோகோ ந யேஷு ஜிஹ்மமந்ருதம் ந மாயா சேதி ॥

(ப-ம்.) தத்-ஆகையால், யே ஹ-எவர்கள், ப்ரஜாபதிவ்ரதம்-அந்த வக்ஷணத்தை, சரந்தி-பண்ணுகிறார்களோ, தே-அவர்கள், மிது²நம் - ஸ்திரீபுமான்களை, உத்பாத³யந்தே-உண்டுபண்ணுகிறார்கள். தேஷாமேவ- அவர்களுக்கே, ஏஷ:-ப்³ரஹ்மலோக:- ஸ்தூலமாயிருக்கிற விந்தப்ரம்மலோகவாமுண்டாகிறது, யேஷாம் - எவர்களுக்கு, தப: - தபஸ்ஸும், ப்³ரஹ்மசர்யம்-ப்ரம்மசர்யமுமோ, யேஷு-எவர்களிடத்தில், ஸத்யம்ஸத்தியமானது, ப்ரதிஷ்டி²தம்-நிலைபெற்றிருக்கிறதோ, யேஷு-எவர்களிடத்தில், ஜிஹ்மம்-குடிலமானது, ந-இல்லையோ, அந்ருதம்-பொய்யானது, ந - இல்லையோ, மாயா-மாயையும், ந-இல்லையோ, தேஷாம்-அவர்களுக்கு, அஸௌ விரஜ:,ப்³ரஹ்மலோக:-நிர்தோஷமான ப்ரம்மஸ்வரூபமான துஸித்திக்கிறது

ஸாரா.—இந்த விஷயத்தில், எந்த க்ருகஸ்றர்கள், ருதுகாலத்தில் ஸ்வபார்யையோடு ஸம்போகிக்கையாகிற ப்ரஜாபதி வ்ரதத்தைச்செய்கிறார்களோ, அவர்களு இந்தலோகத்திலேயே ஸந்தாநரூபமான பலமுண்டாகிறது. தாநம், இஷ்டா பூர்த முதலிய கர்மங்களையும், தபஸ்ஸு, ஸ்நாதகவ்ரதம் முதலிய வ்ரதங்களையும், செய்கி வவர்களுக்கு, சந்திரஸம்பந்தமுடைய வித்த புத்ருயாணத்தாலடையத்தக்க ப்ரம்ம லாகமாகிய அத்தருஷ்டபலமுமுண்டாகிறது; அதாவது - ருதுகாலமல்லாத ஸமயங்களில் ஸம்போகம் செய்யாமையாகிற ப்ரம்மசர்யம், பொய்யை நீக்கி மெய்யையே சொல்லுகை முதலான தர்மங்கள், யவர்களிடத்தில், தங்கியிருக்கின்றனவோ; அவ களுக்கு இந்த லோக ஸுகத்தோடு லோகாந்தரமாகிய ஸ்வர்க்காதிஸுகமும்,

திக்கிறது என்கை. கிரஹஸ்தர்களுக்குப், பலவகைப்பட்ட சார்டங்களின் பலத்தைப் பற்றி கபடமும், க்ரீடை முதலிய காரணங்களால் பொய்யும், வெளியிலொருபடியு முள்ளொருபடியுமாய் வர்த்திக்கையாகிற மாயையும் தப்பாதாகலின், க்ருகஸ்தர்களைக் காட்டில் வேறான கீழ்ச்சொல்லிய குற்றமொன்றுமில்லாத குடீசராஸந்யாஸிகளுக்கு நிர்தோஷமான ப்ரம்மலோக ப்ராப்தியுண்டாகிறது. என்று ஜ்ஞாநகர்மிகள் கதி சொல்லப்பட்டது.

ராஹா.—இத்தால் முமுக்ஷுக்கள் நிந்திக்கப்பட்டு, முமுக்ஷுக்கள் ஸ்துதிக்கப் படுகிறார்கள். எவர்கள் விரஜாபதி ரவ்தாசரணம் பண்ணுகிறார்களோ, அதாவது "அந் நம்வை ப்ரஜாபதி:" என்று ப்ரஜாபதி சப்தத்தாலே சொல்லப்பட்ட அந்நத்தை பக்ஷிக்கிறார்களோ, என்கை. அப்படி கேவல பக்ஷணபரர்களாய் வைராக்கிய மில்லாதவர்கள், புத்ரன், பசு, முதலான ஸம்ஸாரத்தை யடைந்து துக்கப்படுகிறார்கள். இந்த காமிகளுக்குண்டாகிய தோஷங்களை நீக்கி ஆத்மஸ்வரூபத்தில் விருப்பமுடையவர்கள், நிர்தோஷமான ப்ரம்மலோகத்தை யடைகிறார்கள். இப்படி, ஸர்வவ்யாக்யாநாதிகரணத்தில், வ்யாஸாசார்யரால், ச்ருதப்ரகாசிகையில் வ்யாக்யாநம் பண்ணப்பட்டது. 'இதி' என்றதினால் ப்ரச்நப்ரதிவசநம் ஸமாப்தமாயிற்றென்னப்பட்டது.

பதார்த்வயார்த்தபேதங்கள்.

சங்கரபாஷ்யத்தில், மூன்றந்வயங்களாகப்பிரித்து வ்யாக்யாநம் செய்யப்பட்டது. இராமாநுஜபாஷ்யத்தில், இரண்டந்வயமாக்கி விவரிக்கப்பட்டதென்றறிக. ஆகவித்தால் வைராக்கியமுடையவனுக்கு ப்ரம்மஸ்வரூபாவாப்தி க்ரமத்தில் ஸித்திக்குமென்று சொல்லப்பட்டது.

ப்ரச்நோபநிஷத்தில், முதல்ப்ரச்நம் முற்றிற்று.

பரப்ரம்மணே நம:

ப்ரச்நோபநிஷத்.

த்விதீயப்ரச்நம்.

ஹரி: ஓம் ||

அத ஹைநம் பார்க்கவோ வைதர்பி: பப்ரச்ச | பகவந் கத்யேவ தேவா: ப்ரஜாம் விதாரயந்தே கதர ஏதத் ப்ரகாசயந்தே க: புநரேஷாம் வரிஷ்ட இதி ||

க. அதஹைநம் பார்க்கவோவைதர்பி: பப்ரச்ச | பகவந்கத்யேவதேவா: ப்ரஜாம்விதாரயந்தேகதர ஏதத்ப்ர காசயந்தேக: புநரேஷாம்வரிஷ்ட-இதி.

(ப - ம்.) அத-அநந்தரமாகி ப்ரச்நம்செய்ததிறகு, ஏநம், வைதர்பி - இந்த பிப்பலாதமகர்ஷியை, பார்க்கவ:-ப்ருகுகோத்திரத்திலிறந்த, வைதர்பி-

† "வரிஷ்ட இதி" என்றொருபாடம் காணுகிறது. பாடநிர்ணயம் ஸம்ப்ரதாயசுத்தியாலாகவேணும்.

விதர்ப்பகுமாரரானவர், ஃமவநு-பூஜ்யரே, கதி; ஊவ- தேவா꞉ -எத்தனை தே வர்கள், ஃஜா꞉-ப்ரஜைகளை, வியாரயமெ - தரிக்கிறார்கள். கதமெ - எவர் கள், ஊதக்-இதை, ஃகாமயமெ-ப்ரகாசிக்கச்செய்கிறார்கள். ஊஷா꞉ - இவர்களுக்குள், கஃ꞉ புந꞉, யவன், வரிஷ்ட꞉ - ச்ரேஷ்டன், இதி - என்று, வஃ-வினவினார்.

ஸ0-ஸா.—கீழ், ப்ராணனை, அத்தாவென்றும், ப்ரஜாபதி என்றும் சொல்லிற் று. இங்கு, இந்த சரீரத்திலே அத்தைக்கண்டறியும் வழிசொல்வதற்கு இந்த ப்ரச்நம் தொடங்கப்படுகிறது. இந்த சரீரத்தை, எத்தனை யிந்திரியங்கள், தரிக்கின்றன. இவை களுக்குள் எவைகளால் இந்த சரீரம் ப்ரகாசிப்பிக்கப்படுகிறது. இவைகளுக்குள்ளே சிறந்ததென்று பிப்பலாதரை, வைதர்பி ப்ரச்நம் பண்ணினார்.

ரா-ஸா—தேகம், இந்திரியங்கள், மநஸ்ஸு, ப்ராணன், இவை முதலானவற் றைக்காட்டிலும் வேறான ப்ரத்யகாத்மாவினுடைய ஸ்வரூபத்தை சோதிக்கைக்காக விந்த ப்ரச்நம் தொடங்கப்படுகிறது. ஸ்தாவரஜங்கமங்களை தரிக்கிற தேவர்கள் யா வர். கார்யமான சரீரத்தை ப்ரகாசிக்கச் செய்பவர். என்றிப்படி கபந்திப்ரச்நம் செய்தபிறகு, வைதர்பி, பிப்பலாதரை ப்ரச்நம் பண்ணினார்.

பதார்த்தவ்யார்த்தபேதங்கள்,

இங்குதேவர்களென்பது சரீரத்தைதரிக்கிற இந்திரியம் முதலியவற்றை. இவைகளுக்கு, அதிஷ்டாநதேவதைகளோடு அபேதத்தை யத்யவஸித்து இப் படி சொல்லுகிறது. இதனால் மேல்சொல்லுகிற வ்யவஹாரங்களும், அதிஷ்டாநதேவதைகளுக்குண்டானவைகளாகையால், அசேதநங்களானவிந் திரியம் முதலியவைகளுக்கு வ்யவஹாரம் கூடாமையாலிது கல்பநை, என்கிற ஸந்தேகத்திற் கிடமில்லையென்றறிக.

உ. தஸ்மை ஸ ஹோவாசாகாஶோ ஹ வா ஏஷ தேவோ வாயுரக்நிராப꞉ ப்ருதிவீ வாங்மநஶ்சக்ஷு꞉ ஶ்ரோத்ரம் ச। தே ப்ரகாஶ்யாபிவதந்தி வயமேதத்பாணமவஷ்டப்ய விதாரயாம꞉ ॥

உ. தஸ்மைஸஹோவாசாகாசோஹவா ஏஷதேவோவாயுரக்நிராப꞉ ப் ருதிவீவாங்மநச்சக்ஷு꞉ ச்ரோத்ரம்ச । தேப்ரகாச்யாபிவதந்திவயமேதத்பா ணமவஷ்டப்யவிதாரயாம꞉

(ப-ம்.) தஸ்மை - அந்தவைதர்பிக்கு, ஸ꞉, ஹ,—அந்தபிப்பலாத ம கர்ஷியானவர், உவாச - சொன்னார். ஊஷ꞉ - இந்த, ஆகாச꞉ - ஆகாயமா னது, தேவ꞉ - தேவஸ்வரூபமானது. ஹவா - இதச்ருதிகளிலே ப்ரஸித்தம் இப்படியே, வாயு꞉-அக்நி꞉ - ஆப꞉. ப்ருதிவீ - கால், எரி, நீர், மண், என்கி ன்ற மற்றநான்குபூதங்களும், வாக்-மந꞉ - சக்ஷு꞉ ச்ரோத்ரம் - ச - வாய், நெஞ்சு. கண், காது, இவைகளும், (பஞ்சஜ்ஞாநேந்த்ரியங்களும், பஞ்சகர் மேந்திரியங்களுமென்கை.) தேவஸ்வரூபங்கள். தே - அவைகள், ப்ரகா ச்ய - விளங்கச்செய்து, அபிவதந்தி - சொல்லுகின்றன. என்ன வென்றால், வயம்-நாங்கள், ஊதத் - பாணம் - இந்த பாணம்போன்றதேகத்தை, அவ ஷ்டப்ய-பிடித்துக்கொண்டு, விதாரயாம꞉-நிற்கச்செய்கிறோமென்று.

ஸம்ஹா.—இப்படிக்கேட்ட வைதர்ப்பியைநோக்கி, இச்சரீரத்தை தரித்துக் கொண்டிருக்கிறவஸ்து யாதென்கிறவர் சங்கை தீரும்படி யுணர்த்துகிறது. ஆகாய, முதலியவைந்து பூதங்களும், சரீரத்தைத்தொடங்க முக்யகாரணங்கள். இவையும் செவி வாய் கண் மூக்கென்கிற அறிவுக்குக் காரணங்களாய் ஜ்ஞாநேந்திரியங்களைத் தும், வாக் பாணி பாத பாயூபஸ்தங்களென்கிற செயலுக்குக்காரணங்களான கர்மேந்திரியங்களேந்தும் மனமென்கிற நெஞ்சமும், இச்சரீரத்தை விளங்கச்செய்கின்றன. இப்படிப்பட்டவிவைகள் தனித்தனியே ஒன்றொன்றும், தன்னையுயர்ந்த பொருளாய் நினைத்துக்கொண்டு தங்கள் மேன்மையைச் சொல்லிக்கொண்டன. என்று பிப்பலாதர் விதர்ப்பிக்கச்சொன்னார்.

ப்ரகா.—இச்சரீரத்தை, இந்த ஜீவாத்மாவே தரிக்கிறுனென்று சொல்லத்தொடங்கி, மற்றவைகளிலொன்றும் தாரகமல்லவென்று காட்டற்பொருட்டு, தாரகத்வம், அதாவது, கீழ்விழாமலிருக்கும்படி செய்கை, ப்ரகாசகத்வம், அதாவது, விளங்கச்செய்கை. ச்ரேஷ்டத்வம், அதாவது, உயர்ந்ததாயிருக்கை. இவைகள் ஜீவாத்மாவுக்கேயென்றுஸ்புடமாகும்படி, வைதர்ப்பிக்கு, பிப்பலாதமகர்ஷி யொருகதை சொல்லுகிறார். இந்திரியங்களும் பூதங்களும், இச்சரீரத்தை 'நான் தரிக்கிறேன்; 'நான் தரிக்கிறேனென்று சொல்லிக்கொண்டன. ஒவ்வொன்றுக்கும், தன்னிடத்தில், தாரகத்வம், ப்ரகாசகத்வம், ச்ரேஷ்டத்வம், இவைகளிருக்கின்றனவென்று, எண்ணமுண்டாயிருந்தது.

பதாந்வயார்த்தபேதங்கள்.

இங்கு, வாக்குமுதலிய சிலைற்றைச்சொன்னது கர்மஜ்ஞாநேந்த்ரியங்களுக்கு பலக்ஷணமென்றுகொண்டு வ்யாக்யாநமிரண்டு பாஷ்யங்களிலும், செய்யப்பட்டிருக்கிறது. தேவஸ்வரூபங்களென்றது - அதிஷ்டாநதேவர்களைக் கொண்டாதல், தேவசப்தத்தின்பொருள் இவைகளிருப்பது பற்றியாதலாகும். "அபிமாநிவ்யபதேசஸ்து விசேஷாநுகதிப்யாம்." என்கிற நியாயத்தாலும், "ஸாக்ஷாதப்யவிரோதம்ஜைமிநி:" என்கிற நியாயத்தாலும், இவ்வாறு சொல்லாகுமென்றறிக. இந்நியாயங்களின் கருத்துமேலே விளங்கச் சொல்லப்படும். அங்குகண்டுகொள்க.

௩. தாநுவரிஷ்ட: ப்ராண உவாச [illegible] ஹமேவை-
தத் பஞ்சதாத்மாநம் ப்ரவிபஜ்யைதத்பாணமவஷ்டப்ய விதாரயாமீதி ||

௩. தாந்வரிஷ்ட: ப்ராண உவாச | மாமோஹமாபத்யதாஹமேவைதத் பஞ்சதாத்மாநம் ப்ரவிபஜ்யைதத்பாணமவஷ்டப்யவிதாரயாமீதி.

(ப்-ம்.) வரிஷ்ட: - சிறந்ததான, ப்ராண: - முக்கியப்ராணபானது அவைகளை-நானே, ஆத்மாநம் - என்னை, பஞ்சதா-ஐவகையாக. ப்ரவிபஜ்ய - பிரித்துக்கொண்டு, ஏதத் - பாணம் - இந்தபாணம்போன்ற சரீரத்தை, அவஷ்டப்ய - பிடித்துக்கொண்டு, விதாரயாமி - தரிக்கிறேன். ஆகையால், நீங்கள், மோஹம்-நாம்தரிக்கிறோமென்கிற ப்ராந்தியை, மா - ஆபத்யத-அடையவேண்டாம். என்று தாந்-ஆகாயம் முதலியவைகளை நோக்கி, உவாச-சொல்லிற்று.

பதாந்வயார்த்தபேதங்கள்.

ப்ராணனென்கிற பெயரொன்றாயிருப்பதுபற்றி "ஆத்மாநம்பஞ்சதாவிப ஜ்ய" என்று சொல்லப்பட்டது. முக்யப்ராணனாகிய வென்னால் சரீரம் தரிக்கப்படுகையால் நீங்கள் நினைத்திருக்கிறபடி உங்களாலிந்த சரீரம் தரிக்கப்படாமையால், உங்கள் ஜ்ஞாநம் ப்ராந்திஜ்ஞாநமென்று ஆகாயம் முதலியவற்றை நோக்கி, முக்யப்ராணன் சொல்லிற்று. சங்கரராமாநுஜபாஷ்யங்களில் பதவுரைக்குமேல்பட விசேஷமில்லை.

௪. தே(அ)ஶ்ரத்³த³தா⁴னா ப³பூ⁴வு: ஸோ(அ)பி⁴மானாதூ³ர்த்⁴வமுத்க்ரமத இவ தஸ்மின்னுத்க்ராமத்யதே²தரே ஸர்வ ஏவோத்க்ராமந்தே தஸ்மிꣳஶ்ச ப்ரதிஷ்ட²மானே ஸர்வ ஏவ ப்ராதிஷ்ட²ந்தே । தத்³யதா² மக்ஷிகா மது⁴கரராஜானமுத்க்ராமந்தꣳ ஸர்வா ஏவோத்க்ராமந்தே தஸ்மிꣳஶ்ச ப்ரதிஷ்ட²மானே ஸர்வா ஏவ ப்ராதிஷ்ட²ந்த ஏவம் வாங்மனஶ்சக்ஷு: ஶ்ரோத்ரம் ச தே ப்ரீதா: ப்ராணꣳ ஸ்துன்வந்தி ॥

௪. தேஅபஶ்ரத்த தாநாபபூவுஃ ஸோபிமாநாதூர்த்வமுத்க்ராமத இவத ஸ்மிந்நுத்க்ராமத்யதேதரே ஸர்வ ஏவோத்க்ராமந்தே தஸ்மிம்ஶ்சப்ரதிஷ்டமாநே ஸர்வ ஏவப்ரதிஷ்டந்தே | தத்யதா மக்ஷிகா மதுகரராஜாந முத்க்ராமந்தம் ஸர்வா ஏவோத்க்ராமந்தே தஸ்மிம்ஶ்சப்ரதிஷ்டமாநே ஸர்வா ஏவப்ரதிஷ்டந்த ஏவம்வாங்மநஶ்சக்ஷு-ஶ்ரோத்ரஞ்சதேப்ரீதாஃப்ராணம் ஸ்துந்வந்தி |

(ப-ம்.) தே - அந்த வாகாயம் முதலியவைகள், அஶ்ரத்³த³தா⁴னா: - நம்பிக்கையில்லாதவைகளாய், ப³பூ⁴வு: - இருந்தன. ஸ: - அந்த முக்யப்ராணனானது, அபி⁴மானாத் - கோபத்தாலே, ஊர்த்⁴வம் - மேலே, உத்க்ரமத இவ - வெளியேசென்றான்போல. தஸ்மின் - அந்தமுக்யப்ராணன், உத்க்ராமதி - வெளிவரும்போது, அத² இதரே - ஸர்வே ஏவ - மற்றப்ராணங்கள் முதலியவையெல்லாம், உத்க்ராமந்தே - வெளிவருகின்றன. தஸ்மின் ப்ரதிஷ்ட²மானே - அந்த முக்யப்ராணன் நிற்கும்போது. ஸர்வே ஏவ - எல்லோரும், ப்ரதிஷ்ட²ந்தே - நிற்கிறார்கள், தத்³யதா² - அதெப்படியென்றால், ஸர்வா: ஏவ மக்ஷிகா: - எல்லா வண்டுகளும் மது⁴கரராஜானம் - தலைவண்டு, உத்க்ராமந்தம் - வெளியேறும்போது, உத்க்ராமந்தே - வெளியேறுகின்றன. தஸ்மின் - ச - ப்ரதிஷ்ட²மானே - தலைவண்டு நிற்றபோது, ஸர்வா: - ஏவ ப்ரதிஷ்ட²ந்தே - வண்டுகளெல்லாம் நிற்கின்றனவன்றோ, ஏவம் - இப்படியே வாக் - மன: - சக்ஷு: - ஶ்ரோத்ரம், தே ச - இந்திரியங்களெல்லாம். ப்ரீதா: - ப்ரியமுள்ளவைகளாய், ப்ராணம் - முக்யப்ராணனை, ஸ்துன்வந்தி - ஸ்தோத்ரஞ்செய்தன.

ஶம்-ஸா.—இப்படி, முக்யப்ராணன் சொன்ன விஷயத்தைக்கேட்டு, இப்படி கூடுமாவென்று, ஸந்தேகப்பட்டு நம்பாமல் போனபோது; இவைகளுக்குண்டாயிருக்கிற விச்சந்தேகத்தை நீக்குதற்கு, தான், இச்சரீரத்தை விட்டாப்போலிருக்க, அப்போதே மற்றவிந்த்ரியம் முதலியவைகள், சரீரத்தில் தங்கியிருக்க சக்தியற்று வெளிப்பட்டத்தையுணர்ந்து, முக்யப்ராணனிடத்தில் ப்ரேமங்கொண்டு மற்றவைகள் ஸ்துதிசெய்து புகழ்ந்தன. இதற்கு த்ருஷ்டாந்தமும் சொல்லப்பட்டது.

ஶா-ஸா.—நூற்றெட்டு, ஸ்தாநங்களுக்கும், தன்னையே தாரகனாகவும், ப்ரகாசகனாகவும், ச்ரேஷ்டனாகவும், தான் சொன்னவித்தை மற்றவைகள் நம்பாதபோது முக்யப்ராணன் கோபங்கொண்டு, கொஞ்சம் சரீரத்தைவிட்டு வெளிவந்தான். அப்போது தாங்கள் தரிக்கமாட்டாமையை யுணர்ந்து முக்யப்ராணனை நீயே தாரகன், நீயே ப்ரகாசகன், என்றிப்படி கொண்டாடத்தொடங்கின.

௫. ஏஷோऽக்நிஸ்தபத்யேஷ ஸூர்ய ஏஷ பர்ஜந்யோ மகவாநேஷ வாயு: । ஏஷ ப்ருதிவீ ரயிர்தேவ: ஸதஸச்சாம்ருதம் ச யத் ॥

௫. ஏஷோக்னிஸ்தபத்யேஷஸூர்யஏஷபர்ஜந்யோ மகவாநேஷவாயு: |
ஏஷப்ருதிவீரயிர்தேவஸ்ஸதஸச்சாம்ருதஞ்சயத்.

(ப்-ம்.) ஏஷ:-இந்த முக்யப்ராணனானது. அக்நி: - அக்நியாய்க்கொண்டு, தபதி-கொளுத்துகிறது. ஸூர்ய:-ஸூர்யனாய்க்கொண்டு ப்ரகாசிக்கிறது. பர்ஜந்ய:-மேகமாய்க்கொண்டு வர்ஷிக்கிறது. மகவாந்-இந்திரனாய்க்கொண்டு லோகத்தை பரிபாலநம் செய்கிறது. வாயு:-வாயுவாய்க்கொண்டு வீசுகிறது, ப்ருதிவீ - பூமியாய்க்கொண்டு தரிக்கிறது. ரயி:-தேவ: - சந்திரனாய்க்கொண்டு ஸந்தோஷத்தை யுண்டுபண்ணுகிறது. ஸதஸத்-ப்ரத்யக்ஷமாயுமப்ரத்யக்ஷமாயுமிருக்கிற ஸகலவஸ்துரூபமாகி ஸகலவ்யாபாரங்களையும் செய்கிறது. யத் அம்ருதம்-தேவதைகள் புஜிக்கிறவம்ருதமாய்க்கொண்டு, அவர்களை மரணமற்றவர்களாகச் செய்கிறது.

ஶம்-ஹா.—வாயுவானது-ஆவஹ ப்ரவஹாதிபேதமுள்ளது. அசுரராக்ஷஸர்களையுமிந்தப்ராணனே இந்திரனாய்க்கொண்டு ஸம்ஹரிக்கிறது. தேவர்களுக்கு ஸ்திதிகாரணமான வம்ருத வஸ்வரூபத்தையடைவதும் ப்ராணனே; மூர்தா மூர்தமாயுள்ள ஸகலமும் ப்ராணஸ்வரூபமுடையது.

ஶாஸா.—"யததீநாயஸ்யஸத்தாதத்ததித்யேவகண்யதே" என்கிற ந்யாயத்தால் எல்லாம் ப்ராணனேஎன்று சொல்லுகிறது. எல்லாம் ப்ராணனாலாகியதென்று கருத்து ஸதஸத்தென்பது பலபொருளையுடையது, அதிலிங்குசிதமானவையெல்லாம் சொல்லலாகும். அம்ருதசப்தம் மோக்ஷத்தைச் சொல்லுகிறது மோக்ஷமுமதினாலாயதன்றோ.

பதாந்வயார்த்தபேதங்கள்.

"யததீநா" என்கிற ச்லோகத்தின் பொருள்மேலே சொல்லப்படும்.

௬. அரா இவ ரதநாபௌ ப்ராணே ஸர்வம் ப்ரதிஷ்டிதம் । ருசோ யஜூம்ஷி ஸாமாநி யஜ்ஞ: க்ஷத்ரம் ப்ரஹ்ம ச ॥

௬. அராஇவரதநா பௌப்ராணேஸர்வம்ப்ரதிஷ்டிதம் |
ருசோயஜூம்ஷிஸாமாநியஜ்ஞக்ஷத்ரம்ப்ரஹ்மச.

(ப்-ம்.) ரயநாஹ - தேர்ச்சக்ரத்தில்,—அராஃ - இவ - அரங்கள் போல், ஐவஃ-யஜூஂஷி-ஸாஜாநி - ருக்யஜுஸ்ஸாமங்களென்கிற வேதங்களும், யஜ்ஞஃ-யஜ்ஞங்களும், க்ஷத்ரம்-ப்ரஹ்ம - வ - ப்ராம்மணர், க்ஷத்ரியர்கள்முதலான,ஸர்வம்-ஸகலமும், ப்ராணே-ப்ராணத்தில், ப்ரதிஷ்டிதம் - நிலைபெற்று நிற்கிறது.

பதார்வயார்த்தபேதங்கள்.

கீழ்ச்சொல்லிய ஸாமாந்நி காண்யத்திற்குக் காரணமாக எல்லாவற்றுக்கும் ப்ராணனை ஆதாரமாகச் சொல்லுகிறது.

எ. ப்ரஜாவதிஸ்ரஸி மஹெகெஉவவ்ரதிஜாயவெஸ தூஜூஂப்ராணப்ரஜாஸ்ரிஂஹாரநியஃப்ராணெவைஃப்ரதிதிஷுஸி ||

எ. ப்ரஜாபதிஸ்சரஸிகர்பேத்வ மேவப்ரதிஜாயஸே | துப்யம்ப்ராண ப்ரஜாஸ்த்விமாபலிம் ஹரந்தியஃ ப்ராணைஃ ப்ரதிதிஷ்டஸி.

(ப்-ம்.) ப்ராண - ப்ராணனே, த்வம்-நீ - ப்ரஜாபதிஃ - விராட்புருஷனாகிறாய். த்வம் - ஏவ - நீயே, கர்பே-கர்ப்பத்தில், சரஸி-ஸஞ்சரிக்கிறாய். த்வம்-ஏவ-நீயே, ப்ரதிஜாயஸே-பிறக்கிறாய். துப்யம் - உனக்கு சேஷமாயிருக்கிற, இமாஃ-ப்ரஜாஃ-இந்த ஜனங்கள், பலிம் - பூஜையை, ஹரந்தி-செய்கிறார்கள். ப்ராணைஃ- ப்ராணாதிவ்யாபாரங்களாலே, யஃ ப்ரஸித்தனாய்க்கொண்டு, ப்ரதிதிஷ்டஸி- இருக்கிறாய்.

ரங்-பா.—எல்லாப்பொருளும் விராட்புருஷஸ்வரூபியாயிருக்கிற ப்ராணனை கிறஸத்தான வாத்மாவினால், ஸத்தென்று சொல்லப்பட்டு வருகிறதென்று சொல்லுறது. தந்தை தாய், இவர்கள் வயிற்றில், ரேதோரூபியாயும், கர்பசிசுவாயும் தங்கியிருக்கிறவன் நீயே, தாய், தந்தைரூபியும் நீயே, அப்படிப்பட்ட நீயே கார்யரூபத்தையடைந்து மகனாகிறாய், இவ்வுலகமெல்லாமுன்னுடைய மாயையினாலாகி யுனக்கே யுபஹாரம் முதலிய பூஜைகள் செய்கின்றன. நீயே எல்லாவுலகங்களையுமழிய வொட்டாமல், செய்துகொண்டு நிற்கிறாய். நீயே எல்லாவற்றிற்கும் போக்தா.

ரா-பா.—கீழ், கண்முதலிய விந்திரியங்கள். முக்யப்ராண ஸ்வரூபத்தையு அதின் வைபவத்தையுமறிந்து ஒன்றொன்று ஸ்துதிசெய்து சொல்லிக்கொண் இனிநேராய், முக்யப்ராணனை ஸ்துதி செய்கின்றன. நீ, எல்லா ஜநங்களையும் இரக்ஷித்துக்கொண்டு, ப்ராணன். அபாநன் முதலான வாயுரூபங்களையடைந்து, கர்ப்பத்தி ஸஞ்சரிக்கிறாய். அப்படியே, சிசுக்களை யுண்டுபண்ணியவைகளை போஷித்துக்கொ டு, தாய் தந்தை ரூபியாயிருக்கிற நீயே, காரணத்வத்துக்கு மாறான கார்யத்வத்தை டைகிறாய், ஸ்தாவரம், ஜங்கமம், என்று சொல்லப்படுகிற எல்லாவற்றுக்கும் சேஷயான நீயே யவைகளால் பூஜிக்கப்படுகிறாய். நீயே எல்லாவற்றிலுமிருக்கிறாய்.

அ. தெவாநாஜஸிவஹிதஜஃ பிதூணாஂப்ரயஜாஸயா | ஐஷீணாஂவரிதஂஸத்யஜெவ-ாஂஜிரஸாஜஸி ||

அ. தேவாநாமஸிவஹ்நிதமஃபித்ரூணாம்ப்ரதமாஸ்வதா ருஷீணாம்சரிதம்ஸத்யமதர்வாங்கிரஸாமஸி.

(ப-ம்.) தேவாநாம்-தேவர்களுக்கு, வஹ்நிதம: - ஹவிஸ்ஸைவஹித்து க்கொண்டு கொடுக்கிறவன் நீயே. அஸி - ஆகிறாய், பித்ருணாம் - பித்ரு தேவதைகளுக்கு, ப்ரதமா-முதலான, ஸ்வதா-ஸ்வதையாகவாகிறாய், ருஷீணாம்-அதர்வாங்கிரஸாம்- அந்த நாமமுடைய மகர்ஷிகளுக்கு, ஸத்யம் - சரிதம்-ஸத்யமான செயலாய், அஸி- ஆகிறாய்.

பாஷ்ய.—இந்திரன் முதலிய தேவர்களுக்கு யாகத்தில் கொடுக்கிற ஹவிஸ்ஸுகளை வகித்துக்கொண்டு கொடுக்கிற அக்நிதேவதையும் நீயே. நாந்திமுகச்ராத்தத்தில், பித்ருதேவதைகளை யுத்தேசித்து தேவதைகளுக்கு முன்கொடுக்கிற ஸ்வதையென்கிற ஹவிரந்நத்தையும் பித்ருக்களுக்குச் சேர்க்கிறவனும், அக்நிஸ்வரூபியான நீயே, சரீரத்தின் இரஸங்களாகிய ப்ராணங்களென்கிற இந்த்ரியங்களின் ஸத்யமான வ்யாபாரத்திற்குக் காரணமும் நீயே. சரீரதாரணம் முதலிய ஸகலவ்யாபாரங்களுக்கும் நீயே முக்ய காரணமென்கை.

ரா-ஸா.—தேவர்கள் பித்ருக்கள் அதர்வாங்கிரஸ நாமமுடைய மகர்ஷிகள் முதலான எல்லோருக்கும், ப்ரீதிகாரணமான வ்யாபார முன்னாலே யுண்டாகிறதானதால் நீ எல்லாவற்றிலும் சிறந்தவன்.

பதார்ந்வயார்த்தபேதங்கள்.

வஹ்நிசப்தம், யோகத்தாலே, வஹிக்கிறவனென்று சொல்லுகிறது. ருஷிசப்தம், யோகவ்ருத்தியாலே சங்கரபாஷ்யத்தில் இந்திரியங்களைச் சொல்லுகிறதென்று சொல்லப்பட்டது. ப்ராணனில்லாதபோது சரீரம் சோஷத்தை யடைவதினால் ப்ராணங்களை சரீரரஸமென்று சொல்லலாகும்.

க. இந்த்ரஸ்த்வம்ப்ராண தேஜஸா ருத்ரோஸி பரிரக்ஷிதா |
த்வமந்தரிக்ஷே சரஸி ஸூர்யஸ்த்வம் ஜ்யோதிஷாம்பதி: ||

க. இந்த்ரஸ்த்வப்ராணதேஜஸா ருத்ரோஸிபரிரக்ஷிதா |
த்வமந்தரிக்ஷசரஸிஸூர்யஸ்த்வஞ்ஜ்யோதிஷாம்பதி:.

(ப்-ம்.) ப்ராண-ஓப்ராணனே, த்வம் - நீ, இந்த்ர:-பரமைச்வர்யத்தையுடையவனாகிறாய், தேஜஸா-தேஜஸ்ஸால், ருத்ர:-ருத்திரனாய், அஸி - ஆகிறாய், பரிரக்ஷிதா - இரக்ஷிக்கிறவனாகிறாய், த்வம் - நீ, அந்தரிக்ஷே - ஆகாயத்தில், சரஸி-ஸஞ்சரிக்கிறாய், த்வம்- நீயே-ஜ்யோதிஷாம்- தேஜஸ்ஸுக்களுக்கு, பதி:-ப்ரபுவாகிய, ஸூர்ய:-ஸூர்யனாகிறாய்.

பதார்ந்வயார்த்தபேதங்கள்.

கிழ்மகவாவென்று இந்திரனைச் சொல்லியிருக்கிறது, ஆதலாலிங்கு, இந்திரசப்தத்திற்கு பரமைச்வர்ய முடையவனென்று பொருள் சொல்லப்பட்டது. "ருத்ரோஸிபரிரக்ஷிதா" என்று ருத்ரன், விஷ்ணு, இவர்களைச்சொன்னதால், இந்த்ர:, என்பதற்கு, சதுர்முகப்ரம்மா, பொருளாகலாமென்று தோற்றுகிறது.

கO. யதாத்வமபிவர்ஷஸ்யதேமா: ப்ராணதே ப்ரஜா: |
ஆநந்தரூபாஸ்திஷ்டந்தி காமாயாந்நம் பவிஷ்யதீதி

கO. யதாத்வமபிவர்ஷஸ்யதேமா:ப்ராணதேப்ரஜா: |
ஆநந்தரூபாஸ்திஷ்டந்திகாமாயாந்நம்பவிஷ்யதிதி.

(ப-ம்.) 𑌪𑍍𑌰𑌾𑌣-ஓப்ராணனே, 𑌤𑍍𑌵𑌂-நீ, 𑌯𑌦𑌾-எப்போது, 𑌅𑌭𑌿𑌵𑌰𑍍𑌷𑌸𑌿-வர்ஷிக்கிறாயோ; 𑌅𑌥-அப்போது-𑌇𑌮𑌾𑌃 - இந்த, 𑌤𑍇 - உன்னுடைய, 𑌪𑍍𑌰𑌜𑌾𑌃-ப்ரஜைகள், 𑌕𑌾𑌮𑌾𑌯-இஷ்டப்படி, 𑌅𑌨𑍍𑌨𑌂-போக பதார்த்தமானது, 𑌭𑌵𑌿𑌷𑍍𑌯𑌤𑍀𑌤𑌿-உண்டாகப்போகிறதென்று, 𑌆𑌨𑌨𑍍𑌦𑌰𑍂𑌪𑌾𑌃-ஸந்தோஷத்தையடைந்தவர்களாய், 𑌤𑌿𑌷𑍍𑌠𑌨𑍍𑌤𑌿-ஆகிறார்கள்.

ஸம்-ஹா.—ரா-ஹா.—ஓப்ராணனே, மேக ரூபியாய்க்கொண்டு நீ வர்ஷிக்கும் போது உன்னுடைய இந்தப்ரஜைகள், நமக்கினி நல்ல போகபதார்த்தங்களிஷ்டப்படி யகப்படுமென்று மகா ஸந்தோஷத்தோடு கூடினவர்களாகிறார்கள். அப்படி யகில ப்ரஜைகளுக்கும் மகா ஸந்தோஷ காரணமான பர்ஜந்யதேவதையும் நீயேயாகிறாய்.

பதாநவயார்த்தபேதங்கள.

சங்கரபாஷ்யத்தில், 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌤𑍇 என்று விபஜித்துக்கொண்டு நீவர்ஷிக்கும்போது, எல்லாரும் ப்ராணனை யடைகிறார்கள். அதாவது ஜநங்கள் மழையினால் ஜீவிக்கிறார்களென்கை. என்றுமொரு யோசனை சொல்லப்பட்டிருக்கிறது.

௧௧. 𑌵𑍍𑌰𑌾𑌤𑍍𑌯𑌸𑍍𑌤𑍍𑌵𑌂 𑌪𑍍𑌰𑌾𑌣𑍈𑌕𑌋𑌷𑌿𑌰𑌤𑍍𑌤𑌾 𑌵𑌿𑌶𑍍𑌵𑌸𑍍𑌯 𑌸𑌤𑍍𑌪𑌤𑌿𑌃 ।
𑌵𑌯𑌮𑌾𑌦𑍍𑌯𑌸𑍍𑌯 𑌦𑌾𑌤𑌾𑌰𑌃 𑌪𑌿𑌤𑌾 𑌤𑍍𑌵𑌂 𑌮𑌾𑌤𑌰𑌿𑌶𑍍𑌵 𑌨𑌃 ॥

௧௧. வ்ராத்யஸ்த்வம் ப்ராணைகருஷிரத்தாவிச்வஸ்ய ஸத்பதி: |
வயமாத்யஸ்ய தாதார: பிதா த்வம் மாதரிச்வந:

(ப-ம்.) 𑌪𑍍𑌰𑌾𑌣-ஓப்ராணனே, 𑌤𑍍𑌵𑌂-நீ, 𑌵𑍍𑌰𑌾𑌤𑍍𑌯𑌃, ஸம்ஸ்கார ஹீநனாகிறாய், 𑌏𑌕𑌋𑌷𑌿𑌃 - ஸமஸ்காரங்களோடுகூடின முக்யனான மந்த்ரத்ரஷ்டாவாகிறாய், 𑌵𑌿𑌶𑍍𑌵𑌸𑍍𑌯-ஸமஸ்தத்தையும், 𑌅𑌤𑍍𑌤𑌾 - ஸம்ஹரிக்கிறவனாகிறாய், 𑌸𑌤𑍍𑌪𑌤𑌿𑌃 - ஸத்புருஷர்களை இரக்ஷிக்கிறவனாகிறாய், 𑌵𑌯𑌮𑍍 - நாங்கள் 𑌆𑌦𑍍𑌯𑌸𑍍𑌯-𑌦𑌾𑌤𑌾𑌰𑌃-ஹவிஸ்ஸு முதலியவற்றைக் கொடுக்கிறோம். 𑌤𑍍𑌵𑌂 நீ, 𑌮𑌾𑌤𑌰𑌿𑌶𑍍𑌵𑌨𑌃-வாயுபகவானுக்கு, 𑌪𑌿𑌤𑌾-பிதாவாகிறாய்.

ஸம்-ஹா.—நீ முன்பிறந்தவனாயிருக்கிறாயாகையாலே யுனக்கு முன்னொருவ
மில்லை. அதாவது நீ யநாதியானவனென்கை. ஆதலால் உனக்கு ஸமஸ்காரங்களை செய்த பெரியோனொருவனுமில்லை. ஆகையால் நீ ஸமஸ்கார ஹீநனாயிருக்கிறாய். தாவது, சுத்தியை யுண்டுபண்ணுகிற ஸமஸ்காரங்களில்லாமலே ஸ்வயம் சுத்தனானவனென்கை. ஆதர்வணர்களுக்கு ப்ரஸித்தமான ஏகர்ஷியென்கிற வஹ்நியாய்க்கொண் ஸகல ஹவிஸ்ஸுக்களையும் நீயே புசிக்கிறாய். நீயே உலகத்திலுள்ள எல்லாவற்று கும்பதியாயிருக்கிறாய். அன்றியிலே, ஸத்ஜனபதியாயிருக்கிறாய். நாமுனக்கு வேடிய ஹவிஸ்ஸு முதலியவற்றைக் கொடுக்கிறோம். எங்களுக்கெல்லாம் நீயே, பி வாகிறாய். அல்லது, மாதரிச்வாவுக்கு நீ பிதாவாகவே, எங்களுக்கும் பிதாவாகிறு மாதரிச்வா ஸகலத்திற்கும் காரணமன்றோ, ஆகாயத்தில் சஞ்சரிக்கையால், வ வுக்கு மாதரிச்வாவென்று பெயராயிற்று.

ரா-ஹா.—ஸம்ஸ்கார ஹீநனான ப்ராம்மணனும் நீயே; மந்திரத்தையறிந்த ருஷியும் நீயே; ஸகல லோகங்களையும் ஸம்ஹரிப்பதும் நீயே; ஸாதுஜனங்களுக்கு ர னும் நீயே; நாமுனக்கு கிங்கரர்கள். நீ, எங்களுக்குப்பிதாவாய் போஷிக்கின்றாய்.

பதாந்வயார்த்தபேதங்கள்.

இராமாநுஜபாஷ்யத்தில் ஸர்வமும் நீயே யென்றுசொல்லி, எல்லாவற்றையுமுண்டுபண்ணுகையே இப்படி ஸாமாநாதிகரண்யத்தாலே சொல்லுகைக்குக் காரணமென்று கருத்துடன் வ்யாக்யாநம்செய்யப்பட்டிருக்கிறது. வர்த்யன், என்று ஸம்ஸ்காரங்கொளொன்றுமில்லாத ஸுப்ராம்மணனைச்சொல்லுகிறது இப்படிசொல்லி எல்லாவற்றோடும் ஸாமாநாதிகரண்யமுண்டென்று காட்டுகிறதென்று, இராமாநுஜ பாஷ்யத்தில் தாத்பர்யபேதம் கண்டறிந்துகொள்க.

கஉ. 𑌯𑌾 𑌤𑍇 𑌤𑌨𑍂𑌰𑍍𑌵𑌾𑌚𑌿 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌾 𑌯𑌾 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑍇 𑌯𑌾 𑌚 𑌚𑌕𑍍𑌷𑍁𑌷𑌿 ॥
𑌯𑌾 𑌚 𑌮𑌨𑌸𑌿 𑌸𑌨𑍍𑌤𑌤𑌾 𑌶𑌿𑌵𑌾𑌂 𑌤𑌾𑌂 𑌕𑍁𑌰𑍁 𑌮𑍋𑌤𑍍𑌕𑍍𑌰𑌮𑍀𑌃 ॥

கஉ. யாதேதநூர்வாசி ப்ரதிஷ்டிதாயாச்ரோத்ரேயாசசக்ஷுஷி |
யாசமநஸிஸந்ததாசிவாம் தாக்குருமோத்க்ரமீ:

(ப-ம்.) 𑌤𑍇 - உன்னுடைய, யாதொரு சரீரமானது, 𑌵𑌾𑌚𑌿 - வாகிந்த்ரியத்தில், 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌾 - ப்ரதிஷ்டை செய்யப்பட்டிருக்கிறதோ, 𑌯𑌾 - 𑌤𑌨𑍂𑌃 - யாதொரு சரீரமானது - 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑍇 - ச்ரோத்ரேந்த்ரியத்தில், 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌾 - ப்ரதிஷ்டை செய்யப்பட்டிருக்கிறதோ; 𑌯𑌾-𑌚-𑌚𑌕𑍍𑌷𑍁𑌷𑌿 - நேத்ரேந்த்ரியத்தில் ப்ரதிஷ்டை செய்யப்பட்டிருக்கிறது எந்தசரீரமோ; 𑌯𑌾 - 𑌚 - 𑌮𑌨𑌸𑌿 - அந்தரிந்த்ரியமான மநஸ்ஸில், யாதொரு சரீரமானது, 𑌸𑌨𑍍𑌤𑌤𑌾 - ப்ரதிஷ்டை செய்யப்பட்டிருக்கிறதோ; 𑌤𑌾𑌂 - அந்த சக்திரூபமான சரீரத்தை, 𑌶𑌿𑌵𑌾𑌂 - சுபரூபமாக, 𑌕𑍁𑌰𑍁 - செய்யவேணும். 𑌮𑍋𑌤𑍍𑌕𑍍𑌰𑌮𑍀𑌃 - வெளியாகவேண்டாம்.

𑌰𑌂-𑌰𑌾.—உன்னுடைய சக்தியானது, வாகிந்திரியத்தில் வார்த்தைசொல்வதற்கு, ஹேதுவாய் விளங்குகிறது. இப்படியே கண் காது முதலியவற்றிலும் அந்தந்த விந்த்ரியங்களின் வ்யாபாரங்களுக்கு ஹேதுவாய்க்கொண்டு ப்ரகாசிக்கிறது. மநஸ்ஸிலும் ஸங்கல்பவிகல்பங்களுக்குக் காரணமாய்க்கொண்டிருக்கிறது. ஆகையால், அந்தசக்தியை ப்ரதிஷ்டைசெய்யவேணும். அந்த சக்தியைநீக்குதலால் இச்சரீரத்தைப் பயன்படாத பொருளாகச் செய்யவேண்டாம்.

𑌭𑌾-𑌸𑌾.—ஸகலலோகங்களும் ப்ராணனால்தரிக்கப்பட்டு, ப்ராணனால் தன்னிஷ்டப்படி நடத்தப்படுகிறது. ஆகையால் நீயே எங்களுக்குஎல்லா நன்மைகளையும் செய்யவேணும்.

கங. 𑌪𑍍𑌰𑌾𑌣𑌸𑍍𑌯𑍇𑌦𑌂 𑌵𑌶𑍇 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌤𑍍𑌰𑌿𑌦𑌿𑌵𑍇 𑌯𑌤𑍍𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌮𑍍 ।
𑌮𑌾𑌤𑍇𑌵 𑌪𑍁𑌤𑍍𑌰𑌾𑌨𑍍𑌰𑌕𑍍𑌷𑌸𑍍𑌵 𑌶𑍍𑌰𑍀𑌶𑍍𑌚 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌂 𑌚 𑌵𑌿𑌧𑍇𑌹𑌿 𑌨 𑌇𑌤𑌿 ॥

ஸ்வயத்ப்ரதிஷ்டிதம |
மாதேவபுத்ராந்ரக்ஷஸ்வ ஸ்ரீஸ்சப்ரஜ்ஞாஞ்சவிதேஹிநஇதி.

(ப-ம்.) 𑌇𑌦𑌂-𑌸𑌰𑍍𑌵𑌂 - இவ்வுலகமெல்லாம், 𑌪𑍍𑌰𑌾𑌣𑌸𑍍𑌯 - 𑌵𑌶𑍇 - ப்ராணஸ்வரூபியான வனுடைய இஷ்டத்தின்படி நடக்கிறது. 𑌤𑍍𑌰𑌿𑌦𑌿𑌵𑍇 -

ஸ்வர்க்காதி லோகங்களில், யத்ப்ரதிஷ்டிதம் - இருக்கிறபொருள்யாவுமப்படி யே. இப்படி ஸகலவ்யாபகனுகையாலே, மாதா-இவ - தாய்போல, புத்ராந்-பிள்ளைகளாகிய எங்களை, ரக்ஷஸ்வ-இரக்ஷிக்கவேணும். ஸ்ரீஸ்ச - ஸம்பத்துக்களையும், ப்ரஜ்ஞாம்ச-நல்லறிவையும், ந: - எங்களுக்கு, விதேஹி - உண்டுபண்ணவேணும்.

பதாந்வயார்த்தபேதங்கள்.

ஸ்ரீ என்பது, வைதிகஸ்ரீயை என்று சிலர் சொல்லுகிறார்கள்.

இரண்டாம்ப்ரச்நம் - முற்றிற்று.

---

ப்ரச்நோபநிஷத் த்ருதீயப்ரச்நாரம்ப:.

ஹரி: ஓம்.

க. அத ஹைநம் கௌஸல்யச்சாச்வலாயந: பப்ரச்ச। பகவந் குத ஏஷ ப்ராணோ ஜாயதே கதமாயாத்யஸ்மிந் சரீர ஆத்மாநம் வா ப்ரவிபஜ்ய கதம் ப்ராதிஷ்டதே கேநோத்க்ரமதே கதம் பாஹ்யமபிதத்தே கதமத்யாத்மமிதி॥

க. அதஹைநம்கௌஸல்யச்சாச்வலாயந:பப்ரச்ச |
பகவந்குதஏஷப்ராணோஜாயதேகதமாயாத்யஸ்மிந்
ஸரீரஆத்மாநம்வாப்ரவிபஜ்யகதம்ப்ராதிஷ்டதே
கேநோத்க்ரமதேகதம்பாஹ்யமபிதத்தேகதமத்யாத்மமிதி |

(ப-ம்.) அத-பின்பு, ஏநம்-இந்தப்பிப்பலாதனை, கௌஸல்ய: - ஆச்வலாயந: - அச்வலாயனர் குமாரராகிய கௌஸல்யர், பப்ரச்ச - வினவினார், பகவந்-பூஜ்யரே, ஏஷ:-இந்த, ப்ராண:-ப்ராணன், குத: - எங்கிருந்து, ஜாயதே - பிறக்கிறது, அஸ்மிந்-ஸரீரே-இந்தசரீரத்தில், கதம் ஆயாதி-எப்படிசேருகிறது. ஆத்மாநம்வா-தன்னை, ப்ரவிபஜ்ய-பிரித்துக்கொண்டு, கதம்-எப்படி, ப்ராதிஷ்டதே-ப்ரதிஷ்டையடைகிறது. கேந - எந்தகாரணத்தால், உத்க்ரமதே - புறப்படுகிறது. பாஹ்யம் - வெளிப்பட்டவஸ்துக்களையும், அத்யாத்மம்-ஆத்மஸம்பந்தத்தையடைந்த வஸ்துக்களையும், கதம் - எப்படி, அபிதத்தே - தரிக்கிறது.

ஸா.—ஹ. இந்தப்படி வைதர்பிப்ரச்னத்திற்கு விடைதந்தபின், அச்வலாயனரின்குமாரராகிய கௌசல்யமுனிவரும், கீழ்ச்சொல்லிய மகிமைபொருந்திய ப்ராணன் எங்கிருந்து பிறக்கிறது. இது ஸாவயவமாகையாலிதற்கோரிடத்தில் பிறப்பிருக்கவேண்டுமே. பிறந்தபின் சரீரத்தை யடையுமாறென். அடைந்தபின் தன்னைப் பிரித்துக்கொண்டு நிற்பது எவ்வாறுபட்டது. எக்காரணத்தால் இச்சரீரத்தை விட்டுப்புறப்படுகிறது. பாஹ்யாந்தரங்களை எப்படிதரிக்கிறது. அத்யாத்மம், அதிபூதம், என்கிறவைகளைதான் நிலைபெறச்செய்கிற வழியாது. இவைகளை யானறியும்படி சொல்லவேண்டுமென்று, பிப்பலாதமகாமுனியை ப்ரச்நம் செய்தார்.

பதாங்கயார்த்தபேதங்கள்.

உபாஸநங்களின் ப்ரகாரங்களை யறிந்துகொள்வதற்கு இப்படி போதப் படுகிறது. இராமாநுஜபாஷ்யத்தில், "பாஹ்யமபிதத்தே" என்கிறவிடத் திற்கு, பாஹ்யரூபத்தாலே ஸந்நிதிசெய்கிறுனென்று, பொருளுரைக்கப் பட்டது.

௨. தஸ்மைஸஹோவாசாதிப்ரஶ்நாந்ப்ருச்சஸி ப்ரஹ்மிஷ்டோஸீதி தஸ்மாத்தேஹம் ப்ரவீமி॥

௨. தஸ்மைஸஹோவாசாதிப்ரப்ரஸ்நாந்ப்ருப்சஸிப்ரம் ஹிஷ்டோஸீதிதஸ்மாத்தேஹம்ப்ரவீமி॥

(ப-ம்) தஸ்மை - அந்தகௌஸல்யருக்கு, ஸ: - அந்தபிப்பலாதர், உவாச - சொன்னார். அதிப்ரஶ்நாந் - உயர்ந்த ப்ரஶ்நங்களை, ப்ருச்சஸி கேழ்க்கிறாய். ஆகையாலே, (த்வம் - நீ) ப்ரஹ்மிஷ்ட: ப்ரம்மத்தை யறிந்தவர் களில் சிறந்தவனாய், அஸி - இருக்கிறாய், தஸ்மாத் - என்கிறகாரணத் தால், அஹம் - நான், தே - உனக்கு, ப்ரவீமி - சொல்லுகிறேன்.

ஸா.—ஸா, இப்படிகேட்ட சிஷ்யனை நோக்கி ஆசாரியர் சொல்லுகிறார். நீ சொல்லிய ப்ராண ஸ்வரூபமானது அறியக்கூடாத ஸாக்ஷ்மஸ்வபாவமுடையபடியா தாகையால் கேட்டறியத்தக்கது. இந்த ப்ரச்நம்பண்ணுவதற்கே, நன்னெறியுடைய வனும் இப்படி கேட்டாயாகையால், உன்னை ப்ரமத்தையறியவர்களில் சிறந்தவனாக நினைக்கிறேன். ஆகையால், ஸந்தோஷமடைந்த நானுனக்கு நன்றாயிந்த விஷயத்தைச் சொல்லுகிறேன்.

ரா.—ஸா. இரஹஸ்யங்களான விஷயங்களை எல்லாமறிந்து கேழ்க்கிறாய். ஆகையால் நீ சிறந்தவன். பிரம்மத்தையறிந்தவனாயாகிறாய். நீ, ஸாதாரணபுருஷ னன்று, ஆகையால் இந்தரஹஸ்யார்த்தத்தை யுனக்குச் சொல்லத்தகும். ஆசாரியாவி துவரையில் வெளியிடாத ரஹஸ்யப்பொருளை, யோக்யனான உனக்குச் சொல்லுகிறேன். ஆகையால் ச்ரத்தையுடன் கேட்டறிந்துகொள்ளென்று, அச்வலாயனரின் குமாரரா கிய கௌஸல்யரின் ப்ரச்நத்திற்கு மகிழ்ந்து, அவரை நோக்கி பிப்பலாதமஹாமுனிவர் சொன்னார்.

௩. ஆத்மந ஏஷ ப்ராணோ ஜாயதே। யதைஷா புருஷே சாயைதஸ்மிந்நேததாததம் மநோக்ருதேநாயாத்யஸ்மிஞ்சரீரே॥

௩. ஆத்மநஏஷப்ராணோஜாயதே | யதைஷாபுருஷேச்சாயைஸ்மிந்நே ததாததம்மநோக்ருதேநாயாத்யஸ்மிஞ்சரீரே||

(ப-ம்) ஆத்மந: - பரமாத்மாவினிடத்தில், ஏஷ: ப்ராண: - இந்தப்ரா ணன், ஜாயதே - பிறக்கிறது. புருஷே - புருஷனிடத்தில், ஏஷா - இந்த சாயா-யதா - நிழல் போல, ஏதஸ்மிந் - இந்தபுருஷனிடத்தில், ஏதத்-மந: - இந்தமனஸ்ஸானது, மநோக்ருதேந - யத்தமில்லாமலே, ஆததம் - சேர்ந்திருக்கிறது. அஸ்மிந் சரீரே - இந்த சரீரத்திலே, மநோக்ருதேந யத்நமில்லாமலே, ஆயாதி - சேருகிறது.

ஸா.—ஸா. அக்ஷரஸ்வரூபமாய், ஸத்யமாய் பரவஸ்துவாயிருக்கிற ஆத்மாவி லிருந்து இந்தப்ராணன் பிறக்கிறது. தலை, கை, கால், முதலியவற்றைலக்ஷணமாகவு

டைய புருஷனுகிய நிமித்தமிருந்தபோது, நைமித்திகமாகிய சாயையென்கிற நிழலுண்டாவதுபோல் இந்த மெய்யான ப்ரம்மத்தினிடத்தில் ப்ராணனென்கிற இந்த பொய்யாகிய நிழலென்கிற தத்வம், பிரியாமல் சேர்ந்திருக்கிறது. இங்கு, நிழல் சரீரத்தில் சேர்ந்திருக்கிறப்போல வென்கிற இந்த த்ருஷ்டாந்தத்தால் ப்ராணனைப்பொய்யென்றறியவேணும். மநஸ்ஸினுலாகிய ஸங்கல்பவிகல்பரூபங்களாகிய இச்சைமுதலிய நிமித்தத்தால், அதாவது-அதினுலாகிய கர்மத்தால் இந்த சரீரத்தில் சேருகிறது.

ரா.—ஸா. முதல் ப்ரச்நத்திற்கு உத்தரஞ்சொல்லுகிருர். "ஏதஸ்மாஜ்ஜாயதே ப்ராணோமநஸ் ஸர்வேந்த்ரியாணிச" (இந்த பரமாத்மாவினிடத்தி லிருந்து ப்ராணனும், மநஸ்ஸும், எல்லா இந்த்ரியங்களும் பிறக்கும்) என்கிற ச்ருதியின்படி பரமாத்மாவினிடத்தில் இந்த ப்ராணனுண்டாகிறது. இச்சரீரத்தில், எப்படி சேருகிறது, என்கிற ப்ரச்நத்திற்கு உத்தரம்சொல்லுகிருர். புருஷன் நடக்கும்போது நிழலானது யத்நமின்றியிலே கூடச்செல்லுகிறப்போலே, இந்த ஜீவனிடத்தில் மனதானது, யத்நமில்லாமலே விட்டுப்பிரியாமல் சேர்ந்திருக்கிறது. இப்படியே ப்ராணனும் யத்நமில்லாமலே சரீரத்தில் சேர்ந்திருக்கிறது. மனஸ்ஸு, ப்ராணன். இவ்விரண்டுக்கும் புருஷன் வழியாலே சரீரத்தில் ப்ரவேசம் ஸித்திக்கிறது, புருஷனை விட்டு பிரியாததாகையாலே புருஷனேடேயே ப்ராணனுக்கு ஸம்பந்தம். ஆகையாலே, ப்ராணனுடைய வ்யாபாரத்திலும் மநஸ்ஸினுடைய வ்யாபாரத்திற்போல வேறுகாரணம் வேண்டப்படாது.

௪. 𑌯𑌥𑌾 𑌸𑌮𑍍𑌰𑌾𑌡𑍇𑌵𑌾𑌧𑌿𑌕𑍃𑌤𑌾𑌨𑍍𑌵𑌿𑌨𑌿𑌯𑍁𑌙𑍍𑌕𑍍𑌤𑍇 | 𑌏𑌤𑌾𑌨𑍍𑌗𑍍𑌰𑌾𑌮𑌾𑌨𑍇𑌤𑌾𑌨𑍍𑌗𑍍𑌰𑌾𑌮𑌾𑌨𑌧𑌿𑌤𑌿𑌷𑍍𑌠𑌸𑍍𑌵𑍇𑌤𑍍𑌯𑍇𑌵𑌮𑍇𑌵𑍈𑌷 𑌪𑍍𑌰𑌾𑌣 𑌇𑌤𑌰𑌾𑌨𑍍𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌨𑍍𑌪𑍃𑌥𑌕𑍍𑌪𑍃𑌥𑌗𑍇𑌵 𑌸𑌨𑍍𑌨𑌿𑌧𑌤𑍍𑌤𑍇 ||

௪. யதாஸம்ராடேவாதிக்ருதாந்விநியுங்க்தே |
ஏதாந்க்ராமாநேதாந்க்ராமாநதிதிஷ்டஸ்வேத்யேவமேவைஷப்ராண:
இதராந்ப்ராணாந்ப்ருதக்ப்ருதகேவஸந்நிதத்தே ||

(ப-ம்) 𑌸𑌮𑍍𑌰𑌾𑌟𑍍 𑌏𑌵-அரசனே, 𑌅𑌧𑌿𑌕𑍃𑌤𑌾𑌨𑍍-வேலைக்காரர்கள், 𑌯𑌥𑌾-எப்படி, 𑌏𑌤𑌾𑌨𑍍-𑌗𑍍𑌰𑌾𑌮𑌾𑌨𑍍-𑌏𑌤𑌾𑌨𑍍𑌗𑍍𑌰𑌾𑌮𑌾𑌨𑍍 - இந்தகிராமங்களிலே, 𑌅𑌧𑌿𑌤𑌿𑌷𑍍𑌠𑌸𑍍𑌵-வேலைபார். 𑌇𑌤𑌿-என்று, 𑌵𑌿𑌨𑌿𑌯𑍁𑌙𑍍𑌕𑍍𑌤𑍇-நியமிக்கிறானோ, 𑌏𑌵𑌮𑍇𑌵-இப்படியே, 𑌏𑌷𑌃𑌪𑍍𑌰𑌾𑌣𑌃-இந்தப்ராணன், 𑌇𑌤𑌰𑌾𑌨𑍍𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌨𑍍-மற்றப்ராணங்களை, 𑌪𑍃𑌥𑌕𑍍𑌪𑍃𑌥𑌗𑍇𑌵 - வெவ்வேறாகவே, 𑌸𑌨𑍍𑌨𑌿𑌧𑌤𑍍𑌤𑍇-நியமிக்கிறது.

பொ.—ஸா. அரசன் தன் வேலைக்காரர்களை நியமிக்கிறப்போல் முக்யப்ராணன், மற்றப்ராணங்களை அதாவது இந்த்ரியங்கள் முதலியவற்றை தங்கள் தங்கள் ஸ்தாநங்களில் நியமிக்கிறது.

ரா.—ஸா. தன்னைப்பிரித்துக்கொண்டு எப்படி ப்ரதிஷ்டை யடைந்திருக்கிறதென்கிற மூன்றும் ப்ரசநத்திற்கு உத்தரம் சொல்லுகிருர்—அரசன் தன் ஸேவகர்களை கார்யங்களில் நியமிக்கும்போது இந்த க்ராமத்து வேலையை நீ பார்; இந்த க்ராமத்து வேலையை நீ பார் என்று பிரித்துப்பிரித்து நியமித்து, அவர்கள் வழியாலே அங்கங்கு கார்யங்களை நடத்துகிறப்போலே இதர ப்ராணங்களை வ்ருத்தி மார்க்கங்களாலே ஸந்நிதிசெய்து முக்யப்ராணன் நியமிக்கிறது.

௬. ஹ்ருதி ஹ்யேஷ ஆத்மா। அத்ரைததேகசதம் நாடீநாம் தாஸாம் சதம் சதமேகைகஸ்யாம் த்வாஸப்ததிர்த்வாஸப்ததி: ப்ரதிசாகாநாடீஸஹஸ்ராணி பவந்த்யாஸு வ்யாநச்சரதி॥

ஸ. ஹ்ருதிஹ்யேஷ ஆத்மா அத்ரைததேகசதந்நாடீநாம் தாஸாம்சதம் சதமேகைகஸ்யாம் த்வாஸப்ததிர் த்வாஸப்ததி: ப்ரதிசாகாநாடீஸஹஸ்ராணி பவந்த்யாஸு வ்யாநச்சரதி||

(ப-ம்) ஏஷ:-ஆத்மா-இந்த ஜீவாத்மாவானவன், ஹ்ருதி ஹி-ஹ்ருதயத்திலிருக்கிறானன்றோ, அத்ர - இந்தஹ்ருதயத்தில், நாடீநாம் - ஏகசதம்- நூற்றொருநாடிகள், ஏதத்-ப்ரஸித்தங்கள், தாஸாம் - ஏகைகஸ்யாம்-அவைகளுக்குள் ஒவ்வொன்றிலும், சதம்சதம்-நூறு நூறுநாடிகளிருக்கின்றன. ப்ரதிசாகாநாடீஸஹஸ்ராணி - அவற்றினுள்பிரிந்த நாடிகளினுயிரங்கள், த்வாஸப்ததி:-த்வாஸப்ததி: - எழுபத்திரண்டு, பவந்தி-இருக்கின்றன, ஆஸு-இந்தநாடிகளில், வ்யாந:-வ்யாநவாயுவானது,சரதி-ஸஞ்சரிக்கிறது.

ஸம்.—ஸா. புண்டரீகமென்று சொல்லப்படுகிற தாமரைப்பூபோன்ற மாம்ஸ கண்டத்தினுல் வளைந்து கொள்ளப்பட்ட ஆசாயத்தில், ஆத்மாவோடு சேர்ந்த லிங்காத்மா அதாவது ஜீவாத்மாவென்கை. இருக்கிறானன்றோ. அந்த ஹ்ருதயபுண்டரீகத்தில், நூற்றொரு ப்ரதாநநாடிகளிருக்கின்றன. இந்த நூற்றொருநாடிகளிலெலாவ்வொன்றும், நூறநூருகப்பிரிந்திருக்கின்றது. நூறநூருகப்பிரிந்த நாடிகளிலெலாவ்வொன்றும், எழுபத்திரண்டாயிரம் எழுபத்திரண்டாயிரமாகப் பிரிந்திருக்கிறது இந்த நாடிகளெல்லாவற்றிலும் வ்யாநவாயுஸஞ்சரிக்கிறது.

ரா.—ஸா. சகோபசாகைகளாகப் பிரிந்திருக்கிற பலவகைப்பட்ட நாடிகளுக்கு முதல் நிலமானஹ்ருதய புண்டரீகத்தில் ஸமாநவாயு ஸ்தாநத்தில், ஜீவாத்மா இருக்கிறான். இந்த எல்லாநாடிகளிலும் வ்யாநவாயுவுக்கு ஸஞ்சாரமுண்டு.

௭. அதைகயோர்த்வ உதாந: புண்யேந புண்யம்।
லோகம் நயதி பாபேந பாபமுபாப்யாமேவ மநுஷ்யலோகம்॥

எ. அதைகயோர்த்வ உதாந: புண்யேநபுண்யம் |
லோகந்நயதிபாபேநபாபமுபாப்யாமேவமநுஷ்யலோகம் ||

(ப-ம்) அத-இனிஉதாநவாயுவின் ஸ்திதிகார்யங்கள் சொல்லப்படுகின்றன. ஊர்த்வ:-மேல்முகமாயிருக்கிற, உதாந:-உதாநவாயுவானது. ஏகயா- நாட்யா-ஒருநாடியின்வழியாலே, புண்யேந-புண்யஞ் செய்திருந்தால், புண்யம்,லோகம்-புண்யலோகமாகியஸ்வர்க்காதிலோகங்களை. பாபேந-பாபம்செய்திருந்தால், பாபம்-பாபலோகமாகிய நரகம்முதலியவற்றையும், உபாப்யாம்-இரண்டும் செய்திருந்தால், மநுஷ்யலோகம்-மனுஷ்யலோகத்தையும், நயதி-சேர்ப்பிக்கிறது.

ஸம்—ஸா. இனி உதாநவாயுவின் ஸ்தாநம் சொல்லத்தொடங்கி எதினால் வெளிவருகிறதென்கிற ப்ரச்நத்திற்குத்தரம் சொல்லுகிறது. நூற்றொருநாடிகளுக்குள் மேலே செல்லுகிற ஸுஷும்நை, என்கிற நாடியின் வழியாலே, கால்முதல்

தலைவாயிலும் ஸஞ்சரிக்கிற உதாநவாயுவானது, சாஸ்த்ரங்களில் சொல்லியபுண்ய கர்மங்களைச் செய்தவர்களை புண்யமான தேவர்களிருப்பிடமாகிய லோகங்களையடைவிக்கிறது. சாஸ்த்ரங்களால் தள்ளப்பட்ட பாபங்களைச் செய்தவர்களை பாபத்தாலாகிய திர்யக்யோநிகளிலே தள்ளுகிறது. புண்யபாபங்களிரண்டையும் ஸமமாகச் செய்தவர்களை மநுஷ்யர்களாய் பிறக்கும்படி செய்கிறது.

ரா.—பா. ஊர்த்வகதியுடைய வ்யாநவாயுவானது ஒரு நாடியாலே புண்யபாபங்களுக்குத்தக்கபடி ஸ்வர்க்க நரகபூலோகங்களை யடைவிக்கிறது. கீழ்த்தொடங்கு ப்ரச்நப்ரதிவசநத்தின் மத்யத்தில், எதினால் வெளியாகிவருகிறது, என்கிற ப்ரச்நத்திற்கு முத்தரம் சொல்லப்பட்டதாகிறது.

அ. 𑌆𑌦𑌿𑌤𑍍𑌯𑍋𑌹𑌵𑍈𑌬𑌾𑌹𑍍𑌯𑌃 𑌪𑍍𑌰𑌾𑌣𑌉𑌦𑌯𑌤𑍍𑌯𑍇𑌷𑌹𑍍𑌯𑍇𑌨𑌂 𑌚𑌾𑌕𑍍𑌷𑍁𑌷𑌂𑌪𑍍𑌰𑌾𑌣𑌮𑌨𑍁𑌗𑍃𑌹𑍍𑌣𑌾𑌨𑌃𑌪𑍃𑌥𑌿𑌵𑍍𑌯𑌾𑌂𑌯𑌾𑌦𑍇𑌵𑌤𑌾𑌸𑍈𑌷𑌾𑌪𑍁𑌰𑍁𑌷𑌸𑍍𑌯𑌾𑌪𑌾𑌨𑌮𑌵𑌷𑍍𑌟𑌭𑍍𑌯𑌾𑌨𑍍𑌤𑌰𑌾𑌯𑌦𑌾𑌕𑌾𑌶𑌃𑌸𑌸𑌮𑌾𑌨𑍋𑌵𑌾𑌯𑍁𑌰𑍍𑌵𑍍𑌯𑌾𑌨𑌃

அ. ஆதித்யோஹவை பாஹ்ய: ப்ராண உதயத்யேஷஹ்யேநம் சாக்ஷுஷம்ப்ராணமநுக்ருஹ்ணாந: ப்ருதிவ்யாம்யாதேவதாஸைஷாபுருஷஸ்யாபாநமவஷ்டப்யாந்தராயதாகாஶஸ்ஸஸமாநோவாயுர்வ்யாந:||

(ப-ம்) 𑌬𑌾𑌹𑍍𑌯𑌃-வெயிலிருக்கிற, 𑌪𑍍𑌰𑌾𑌣𑌃-ப்ராணன், 𑌆𑌦𑌿𑌤𑍍𑌯𑍋𑌹𑌵𑍈-ஸூர்யனே, 𑌏𑌷𑌃-இந்தஸூர்யன், 𑌉𑌦𑌯𑌤𑌿𑌹𑌿-உதிக்கிறானென்றே, 𑌏𑌨𑌂, 𑌚𑌾𑌕𑍍𑌷𑍁𑌷𑌂, 𑌪𑍍𑌰𑌾𑌣𑌂-இந்த சக்ஷுரிந்த்ரியத்தை, 𑌅𑌨𑍁𑌗𑍃𑌹𑍍𑌣𑌾𑌨𑌃-அநுக்ரஹிக்கிறான். 𑌪𑍃𑌥𑌿𑌵𑍍𑌯𑌾𑌂-பூமியில், 𑌯𑌾𑌦𑍇𑌵𑌤𑌾𑌸𑍈𑌷𑌾-ப்ராணகலாரூபியாயிருக்கிற தேவதையானது, 𑌪𑍁𑌰𑍁𑌷𑌸𑍍𑌯-புருஷனுடைய, 𑌅𑌪𑌾𑌨𑌂-அபாநமென்கிற வாயுவை, 𑌅𑌵𑌷𑍍𑌟𑌭𑍍𑌯-கீழேயிறும்படி, 𑌅𑌨𑍁𑌗𑍃𑌹𑍍𑌣𑌾𑌨𑌃-அநுக்ரஹிக்கிறது. 𑌅𑌨𑍍𑌤𑌰𑌾-நடுவிலுள்ள, 𑌯𑌦𑌾𑌕𑌾𑌶𑌃-ஆகாயமானது, 𑌸𑌮𑌾𑌨𑌃-ஸமாநவாயுவாகிறது, 𑌵𑌾𑌯𑍁𑌃-காற்றானது, 𑌵𑍍𑌯𑌾𑌨𑌃-ஸாமாந்யமாய் வ்யாநரூபியானது.

ஶம்.—பா. அதிதைவதமாகிய பாஹ்யப்ராணன்ஸூர்யனே; அவனுதிக்கிறான். இவனே, ஆத்யாத்மிகமாகிய சக்ஷுரிந்த்ரியத்திற்கு ப்ரகாசத்தை யுண்டுபண்ணி ரூபத்தை யறியும்போது துணையாகிறான். பூமியில் ப்ரஸித்தமாயுள்ள தேவதையானது, (அதாவது பூம்யபிமாநிதேவதை) புருஷனுடைய அபாநவ்ருத்தியைப் பிடித்துக்கீழிழுத்துக்கொண்டு விழவொட்டாமல் பாரமானசரீரத்தைக்காக்கின்றது பூலோகம் ஸ்வர்க்கலோகமிவற்றுக்கு நடுவிலிருக்கிற ஆகாயமானது அதாவது-ஆகாயத்திலிருக்கிற காற்றானது என்கை. மஞ்சத்திலிருப்பவனை மஞ்சமென்பதுபோல் ஆகாயத்திலிருக்கிற காற்றை ஆகாயமென்று இலக்ஷணை என்கிற சப்தவ்ருத்தியாலே சொல்லக்கூடுமென்றறிக. ஸமானவாயுவை அநுக்ரஹிக்கிறது. காற்றெல்லாம் ஸாமான்யமாக வ்யாநவாயுவை அநுக்ரஹித்துக்கொண்டிருக்கிறது.

ரா.—பா. அடுத்த ப்ரச்நத்திற்குத்தரம் சொல்லுகிறது. சக்ஷுரிந்த்ரியமாகிய ப்ராணனை பாஹ்யபாணனாகிய ஸூர்யன், ப்ரகாசத்தைதருவதினால் ரூபத்தை க்ரஹிக்கும்படி செய்கிறான். ஸூர்யனுக்கு ப்ராணனென்கிற பெயரிட்டுச்சொல்லுகிறது கூடாதாயினும், ப்ராணகலையின் ஸம்பந்தாலும், உபாஸனைசெய்யவேண்டிய விதியாலும் கூடும். இப்படியே ப்ராணகலா ஸம்பந்தமுடைய பூமிக்கபி

மாகியான பூதேவதையானது, புருஷனுடைய அபாநவாயுவ்ருத்தியை கூஷ்யம் முதலிய விடங்களுக்கு நடத்திக்கொண்டு ஸஹாயமாகிறது. இந்த ப்ராணகலையின் ஸம்பந்தமுடைய ஆகாயமும் ஸமாநவாயுவர்த்தனையாகி ஸமாநமென்கிற பெயரையடைகிறது. ஸாமாந்யவாயுவானது வ்யாநவ்ருத்திக்குத் துணையாகிறது.

பதாந்வயார்த்தபேதங்கள்.

பூர்வபிமாநிதேவதை புருஷனுடைய அபாநவ்ருத்தியைக் கீழிழுத்து விழவொட்டாமல் செய்கிறதென்கிறவிடத்தில் தானிருக்கும்வரையில்கொண்டு கீழிழுக்கக்கட்டி விழவொட்டாமல் செய்வதையும் பாநமாயுணர்க.

௯. தேஜோ ஹ வா உதா³நஸ்தஸ்மாது³பஶாந்ததேஜா:।
புநர்ப⁴வமிந்த்³ரியைர்மநஸி ஸம்பத்³யமாநை:॥

௯. தேஜோஹவாஉதாநஸ்தஸ்மாதுபசாந்ததேஜா: |
புநர்பவமிந்த்ரியைர்மநஸிஸம்பத்யமாநை:||

(ப்-ம்) தேஜோஹவை-தேஜஸ்ஸானது, உதாந:-உதாநசப்தத்தாலே சொல்லப்படுகிறது. தஸ்மாத்-ஆகையாலே, மநஸி-மநஸ்ஸிலே, ஸம்பத்யமாநை:-சேருகிற, இந்த்ரியை:-இந்த்ரியங்களோடே, உபசாந்ததேஜா:-சாந்திவடைந்த தேஜஸ்ஸையுடையபுருஷன், அதாவது மரணத்தையடைகிறவன், புநர்பவம்-மறுபிறவியடைவதற்கு, "ப்ராணஆயாதி - ப்ராணனில்சேருகிறான்" என்கிற அடுத்தச்லோகத்திலுள்ள பதங்களோடே அந்வயம் கண்டுகொள்க.

ஸா-ஹா. முன் ஸூர்யரூபமான தேஜோவிசேஷம் சொல்லப்பட்டது. இங்கு ஸாமாந்யமானதேஜஸ்ஸு சொல்லப்படுகிறதாகையால் புநருக்திதோஷமில்லை. இப்படி ஸாமாந்யதேஜஸ்ஸானது உதாநவாயுவ்ருத்தித் துணையாயிருக்கிறது, ஆதலாலுஷ்ணத்தைத் தருகிறதேஜஸ்ஸினுடைய ஸஹாயமில்லாதபோது உதாநவாயுவுக்கு பலமில்லாமல் போகிறபடியால் சரீரத்திலுஷ்ணங்குறைந்த புருஷனை யப்போதேமரிக்கப்போகிறானென்று நிச்சயிக்கலாகிறது. அப்படிதேஜஸ்ஸுகுறைந்த புருஷன் மநஸ்ஸில் சேருகிறவிந்த்ரியங்களோடு சரீராந்தரத்தையடைகிறான். அதாவது மரிக்கிறானென்கை.

பதாந்வயார்த்தபேதங்கள்.

இந்தச்லோகத்துக்கு மேல்ச்லோகத்திலுள்ள பதங்களோடேஸம்பந்தமிருப்பதைப் பதஉரையிலேகாட்டியிருக்கிறபடியால் இராமாநுஜபாஷ்யம் மேல்ச்லோகத்திலேயே இந்த ச்லோகத்தின் கருத்தையும் சேர்த்துக் காட்டப்படும்.

௧௦. யச்சித்தஸ்தேநைஷ ப்ராணமாயாதி ப்ராணஸ்தேஜஸா யுக்த:।
ஸஹாத்மநா யதா²ஸங்கல்பிதம் லோகம் நயதி॥

௧௦. யச்சித்தஸ்தேநைஷப்ராணமாயாதிப்ராணஸ்தேஜஸாயுக்த: |
ஸஹாத்மநாயதாஸங்கல்பிதம்லோகந்நயதி||

(ப்-ம்) யச்சித்த:-எந்தநினைவுடனிருக்கிறானோ, தேந-அந்தஸங்கல்பத்தோடே, ஏஷ:-இவன், ப்ராணமாயாதி-ப்ராணவ்ருத்தியோடு சேரு

றான். ப்ராண:-ப்ராணன், தேஜஸா-தேஜஸ்ஸோடு, யுக்த:-கூடினதாய், ஸஹாத்மநா-ஆத்மாவோடு, யதாஸங்கல்பிதம் - நினைத்தபடி, லோகம் - லோகத்தை, நயதி - அடைவிக்கிறது.

௰.—ஸா மரணகாலத்தில் எந்த ஸங்கல்பத்தோடு கூடியிருக்கிறானோ, அந்த ஸங்கல்பத்தோடு, இந்த ஜீவாத்மா, இந்த்ரியங்களோடு முக்யப்ராணவ்ருத்தியை யடைகிறான் இந்த்ரியவ்யாபாரங்களெல்லாமடங்கி மரணகாலத்தில் முக்ய ப்ராணவ்யாபாரத்தோடிருக்கிறானென்கை. ச்வாஸமிருப்பதுகொண்டு பிழைத்திருப்பதாக பந்துக்கள் சொல்லுகிறார்களன்றோ; அந்த ப்ராணனும் உதாநவ்ருத்தியாகிய தேஜஸ்ஸோடு கூடி போக்தாவாகிய தலைவனுடனே, ப்ராணவ்யாபாரமடங்கினபின், புண்யம், பாபம், இவைகளிருலாகிய ஸங்கல்பத்தின்படி, உத்தேசித்தபோகத்தை யடைவிப்பிக்கிறது.

௱.—ஸா. பாஹ்யமான தேஜஸ்ஸு, உத்கமநத்துக்கு ஹேதுவாகையாலே உதாநமென்னப்படுகிறது. ஆகையாலே உஷ்ணம் சாந்தியடைந்த ஜீவன். எதை விரும்புகிறானோ; அதற்குத்தக்கபடி, இஷ்டமான தேவாதி சரீரங்களை யடைகையாற புநர்பவமென்கிற புநருத்பத்தியை யடைவதற்கு "வாங்மநஸி ஸம்பத்யதே" (வாகிந்திரியம் மநதில் சேருகிறது) என்கிறச்ருதிவிஷயத்தில் "வாங்மநஸி தர்சநாச்சப்தாச்ச" (வாகிந்திரியம்மநதில்சேருகிறது; அப்படி காண்கையாலும், ச்ருதியாலும்) என்கிற ஸூத்ரம், அதின்பாஷ்யம், இவைகளில் சொன்னபடி, மனதோடு ஸம்ச்லேஷ விசேஷத்தை யடைந்த வாகிந்திரியம் முதலியவற்றோடு கூடின ப்ராணனை, மரிக்கிற ஜீவனடைகிறான். "ஏவமேவேமமாத்மாநமந்தகாலே ஸர்வே ப்ராணா அபிஸமாயந்தி" (மரணத்தை யடைகிற காலத்திலிந்த ஜீவாத்மாவை முக்ய ப்ராணன், முதலிய எல்லாப்ராணங்களும் ஜீவனையடைகின்றன) என்று சொல்லப்பட்டது; ஜீவன் ப்ராணங்களையடைவதாகச் சொல்லப்படவில்லை, ஸூத்ரகாரரும், "ஸோத்யக்ஷே ததுபகமாதிப்ய:" அந்த ப்ராணன் ஜீவனிடத்தில் சேருகிறது; அப்படி, சேருதல் முதலியவை யோதப்படுகையால்) என்கிறஸூத்திரத்தில் அப்படியே சொன்னார். இந்தஸூத்திரத்திற்குப் பொருளாயிப்படி ப்ராணன் ஜீவனிடத்தில் சேருகிறதாக ச்ருதியிருக்கையால் ப்ராணன் ஜீவனிடத்தில் சேருகிறது; என்று பாஷ்யகாரரால் சொல்லப்பட்டது. ஆயினுமிங்கிப்படி சொன்னது ப்ராணத்தைக்கொண்டாடுவதற்காகவென்று கொள்க. பின்பு, "ப்ராணஸ்தேஜஸி" (ப்ராணன்தேஜஸ்ஸில் சேருகிறது) "தேஜ: பரஸ்யாம் தேவதாயாம்" (தேஜஸ்ஸுபரமாத்மாவினிடத்தில் சேருகிறது) என்கிற ச்ருதியின்படி, தேஜஸ்ஸோடும் பரமாத்வோடும் சேர்ந்து' அந்தந்த ஜீவர்களின் ஸங்கல்பாநுஸாரத்தாலே, அந்தந்த லோகங்களை யடைகிறான். ஆக, தேஜஸ்ஸோடு கூடிய ப்ராணனுக்கே உத்நயநசக்தியிருக்கையால், தேஜஸ்ஸினுடைய்நயசக்தியிருப்பது பற்றி உதாநமென்கை தகுமென்கை. "ப்ராணஸ்தேஜஸி" (ப்ராணன் தேஜஸ்ஸில் சேருகிறது) என்கிறவிடத்தில், தேஜச்சப்தத்திற்கு, பூதஸூக்ஷ்மம்பொருளென்று ஸூத்ரபாஷ்யங்களில் சொல்லப்பட்டது. ஆயினும் தேஜஸ்ஸு ப்ரதாநமானதால் இப்படி சொல்லலாகுமென்றறிக.

கக. ய ஏவம் வித்வாந் ப்ராணம் வேத ந ஹாஸ்ய ப்ரஜா ஹீயதே(அ)ம்ருதோ பவதி தததேஷ ச்லோக:॥

கக. யஏவம்வித்வாந்ப்ராணம்வேத | நஹாஸ்யப்ரஜாஹீயதேம்ருதோ பவதிததேஷச்லோக꞉||

(ப-ம்.) ய꞉-எவன், ஏவம்-இப்படி, வித்வாந்-அறிந்தவனாய், ப்ராணம்-ப்ராணனை, வேத-உபாஸிக்கிறானோ, தஸ்ய - இப்படியுபாஸிக்கிறவனுக்கு, ப்ரஜா - ஸந்தாநம், நஹீயதே-இல்லாமல்போகாது. அம்ருதோபவதி முக்தியடைகிறான். ததேஷச்லோக꞉ - இங்குச்லோகமிருக்கிறது.

ஸா.—ஹா. யவனொருவன், இப்படி யறிந்தவனாய் கீழ்ச்சொல்லியபடி, ஆத்மாவினிடத்தில் ப்ராணன் பிறக்கிறதென்றும், ஸங்கல்பத்தால் செய்யப்பட்ட புண்ய பாபங்களால் சரீரத்தையடைகிறதென்றும், தன்னை யைவகையாகப்பிரித்து பாயூபஸ்த்தங்களில் வ்யாநவ்ருத்தியையும், ஸ்வரூபத்தை கண், செவி, இவைகளிலும், நாபியிலே ஸமாநவ்ருத்தியையும், நாடீஸமூஹத்தில் வ்யாநவ்ருத்தியையும் ஸர்வாங்கத்திலுதாநவ்ருத்தியையும், நிறுத்துகிறதென்றும், உதாநவ்ருத்தியாலே உத்க்ரமிக்கிறதென்றும், ப்ராணன், அபாநன், வ்யாநன், உதானன், ஸமாநன் என்கிற வினைகளுக்கு ஸஹகாரிகளான வெளியிலுள்ள ஸூர்யன், பூமிக்கபிமாநியானதேவதை, ஆகாயம், வாயு, தேஜஸ்ஸு, இவைகளாலே, அதிதைவமென்கிற ஆதித்யன்முதலானவற்றையும் அவைகளால் ஸஹகரிக்கப்பட்டு அத்யாத்மமென்கிற கண் வாய் காது மநம் ஸ்பர்சேந்திரியமாயவைந்தையும் தரிக்கிறதென்றும், உதாநவ்ருத்தியோடும், போக்தாவோடும் கூடிப்போக்தாவை லோகாந்தரத்தை யடைவிப்பிக்கிறதென்றும், ச்ரேஷ்டமான ப்ரஜாபதி அத்தாரயி என்னப்படுகிறது மிதுதானென்றும், உபாஸிக்கிறானோ; அவனுக்கு இவ்வுலகத்திலும் பிறவுலகத்திலு முண்டாகிற பயன் கூறப்படுகிறது. பிள்ளைபேரன் முதலிய ஸந்தாநமழியாமலிவ்வுலகத்தில் விளங்கும். சரீரம் விழுந்தபின் ப்ராணஸாயுஜ்யத்தையடைந்து முக்தனாகும். இவ்விஷயத்தைச் சுருங்க ஓதுகிற சுலோகமொன்றிருக்கிறது.

ரா.—ஹா. இப்படி ப்ராணனையுபாஸிப்பவனுக்கு இவ்வுலகத்தில் ஸந்தாநவ்ருத்தியுடன் நெஞ்சம்தெளிந்து ப்ரம்மோபாஸநத்தில் ப்ரீதியுண்டாகி அதில் ப்ரவர்த்திக்கச்செய்து அவ்வழியாலே மோக்ஷத்தையும்தருகிறது.

பதாந்வயார்த்தபேதங்கள்.

உபாஸநாப்ரகாரங்கள் இரண்டுபாஷ்யங்களிலு மொற்றிருக்கிறபடியால்சங்கரபாஷ்யமொன்றிலேயே அதுவிவரிக்கப்பட்டது. இஃதேஇராமாநுஜபாஷ்யத்திற்குமொக்கும்.

கஉ. உத்பத்திமாயதிம்ஸ்தாநம்விபுத்வஞ்சைவபஞ்சதா | அத்யாத்மஞ்சைவப்ராணஸ்யவிஜ்ஞாயாம்ருதமச்நுதே விஜ்ஞாயாம்ருதமச்நுதஇதி ||

கஉ. உத்பத்திமாயதிம்ஸ்தாநம்விபுத்வம்சைவபம்சதா | அத்யாத்மம்சைவப்ராணஸ்யவிஜ்ஞாயாம்ருதமஶ்நுதேவிஜ்ஞாயாம்ருதமஶ்நுதஇதி||

(ப-ம்.) உத்பத்திம் - பிறப்பையும், ஆயதிம் - சரீராப்தியையும், ஸ்தாநம் - இருப்பிடத்தையும், பஞ்சதா-ஐவகையாக, விபுத்வம் - பிரிந்திருப்பதையும், ப்ராணஸ்ய - ப்ராணனுடைய, அத்யாத்மம் - அத்யாமத்தை

யும், விஜ்ஞாய - அறிந்துகொண்டு, மோக்ஷம் - மோக்ஷத்தை, அச்நுதே - அடைகிறான்.

பா.—ஸா. உத்பத்தி முதலியவற்றையறிந்தவன், க்ரமத்தில் மோக்ஷத்தைப் பெறுகிறான். "விஜ்ஞாயாம்ருதமச்நுதே" என்றிரட்டித்து இந்த ப்ரசநம் முற்று மென்று பெறுதற்காம்.

பதார்ந்வயார்த்தபேதங்கள்.

சங்கரபாஷ்யத்திலு மிக்கருத்தே கையமைக்கப்பட்டதாயினும், ப்ராண ஸாயுஜ்யமாகிய மோக்ஷம் அம்ருதபதத்திற்குப் பொருளென்று அமுக் யார்த்தங்கொள்ளப்பட்டது. வேறுபேதமில்லாமையின் சங்கரபாஷ்யம் தனித்துக்காட்டப்படாதாயிற்று.

மூன்றாம்ப்ரச்நம் முற்றும்.

[illegible]

[illegible] ||

க. அதனைநம்பி ஸௌர்யாயணி கார்க்யன் ப்ரச்நம் | ... [illegible] ... ||

(ப-ம்.) அத - பிறகு, ஏநம் - ஸ. இந்த பிப்பலாதபகா முநியை, ஸௌர்யாயணீ - கர்க்ககோத்திரத்திலுதித்த ஸௌர்யா யணி என்கிற முநிவர், இதி - இந்தப்படி, பப்ரச்ச - வினவினார். பகவந் - மூன்றுகாலங்களிலுள்ள எல்லாவற்றையு மறிந்த முநிச்ரேஷ்டரே, ஏதஸ்மிந் புருஷே - இந்த ஜீவன், (உறங்கும்போது) காநி - எவைகள். ஸ்வபந்தி-உறங்குகின்றன. ஏதஸ்மிந் - இந்தஜீவன், ஸ்வபதி - உறங்கும்போது, காநி - எவைகள், ஜாக்ரதி - விழித்திருக்கின்றன. ஏஷ: - தேவ: விளங்காநின்ற இந்த ஜீவன், கதர: - எப்படிப்பட்டவனுய்க் கொண்டு, ஸ்வப்நாந் - ஸ்வப்நங்களை, பச்யதி - காண்கிறான். கஸ்ய - எந்த காரணத்தால, ஏதத் - ஸுகம் - இந்தவிஷயஸுகமானது. பவதி - உண்டாகிறது. கஸ்மிந்-எவ்விடத்தில், ஸர்வே - எல்லா இந்திரியங்களும், ஸம்ப்ரதிஷ்டிதா: பவந்தி - நிலைபெற்றுநிற்கின்றன.

ஸா.—ஸா. யாதானுமொரு பயனைப்பற்றிச் செய்யப்படுமுபாஸநத்திற்கு, வேதாந்தங்களில் 'வித்யை' என்று பெயரிடப்பட்டிருக்கிறது, அவ்வித்யைதானும், பர

வித்யை, 'அபரவித்யை' என இருவகைத்து. இவற்றுள், பரப்ரம்மத்தைப் பெறுதற்குரிய, வித்யை, பரவித்யை, என்றும், வேறுபயன்களைத் தரும்வித்யை, அபரவித்யை என்றும் கூறப்படும். சொற்முன்று ப்ரச்னங்களாலும் அபரவித்யையை யுணர்த்தி மேல்மூன்று ப்ரச்நங்களாலும் பரவித்யை கூறப்படுகிறது. இந்த பரவித்யையில், கார்யகாரணங்களின் தன்மைபொருந்தியதும் உற்பத்தியுடையதும் அதனாலேயே அழிவுடையதுமான ஸம்ஸாரத்தைநீக்கி, கார்யகாரணவிலக்கணம் நீங்கியதும், ப்ராணசம்பந்தமில்லதும், உள்ளிந்த்ரியமாயமனதுக்கு மெட்டாததும், தண்டாபூபிகாந்யாயத்தாலே, இந்த்ரியங்களுக்குப்புலப்படாததும், இதற்குக் காரணமாய்ப்புலப்படும் தன்மை நீங்கியதும், சிவமானதும், சாந்தமானதும், விகாரங்களற்றதும் அழிவற்றதும், ஸத்யஸ்வரூபமானதும் புருஷனென்கிற பெயர்பெற்றதும், உள்புறம் முதலிய எல்லாமாயதும், பிறப்பிலாததும், ஆகிய பரப்ரம்மமோதப்படுகிறது. முண்டகோபநிஷத்தில் "யதா ஸுதீப்தாத் பாவகாத் விஸ்புலிங்கா: ஸஹஸ்ரச: ப்ரபவந்தே ஸரூபா: ததாக்ஷராத் விவிதா: ஸோம்ய பாவா: ப்ரஜாயந்தே தத்ர சைவாபியந்தி" (என்கிற நெருப்பிலிருந்து பொறிகளுண்டாவதுபோல் யாதொரு அக்ஷரபரப்ரமத்தினின்றும் எல்லாப்பொருளுமுண்டாகின்றனவோ; எந்த அக்ஷரபரப்ரம்மத்தின் கணடங்குகின்றனவோ) என்றோதப்பட்டது. அவ்வாறு அக்ஷர பரப்ரம்மத்திலிருந்து பிரிந்துதோற்றுகிற பொருள்களெவை அப்படி பிரிந்தவை யதன்கண்ணே யடங்குவதெங்ஙனம் அவ்வக்ஷர பரப்ரம்மம் எவ்விலக்கணம் பொருந்தியதாகும். என்றிவைகளையுணர்த்துவதற்கு ப்ரசநங்களை இங்கெடுக்கிறது. நிலை கைகால்முதலிய விலக்கணமுடையபுருஷனென்கிற ஜீவனிடத்தில், எந்தகரணங்களுறங்குகின்றன. தங்களுக்குரிய தொழில்களிலொழிவு பெறுகின்றன. எந்தகரணங்கள் உணர்ந்துகொண்டு தந்தம் வேலையைச் செய்கின்றன காரியகாரணவிலக்கணத்தரில், காரியவிலக்கணமுடைய தேவனோ அல்லது காரணவிலக்கணமுடைய தேவனோ, உறங்கும்போதும், உணர்ந்திருக்கும்போது வெளியிலிருக்கிறவற்றைக்காணுவதுபோல், உள்ளிருப்பவற்றைக் காண்கையாகிற ஸ்வப்நத்தைக்காண்கிறான். உணர்ந்தகாலத்தில் செய்யப்படும் வியாபாரங்களும், உறங்கும்போது செய்யப்படும் வ்யாபாரங்களும் நீங்கி பேருறக்கமுறங்கும்போது, ஆயாஸம் நீங்கி துன்பமற்றுத் தெளிந்து பிறக்கிறஸுகம் யாருக்குண்டாகிறது. எவனிந்தஸுகத்தை யநுபவிக்கிறான். இங்ஙன முணர்ச்சியுறக்கங்களிலுள்ள ப்ரத்யக்ஷ ஸ்வப்ந வ்யாபாரங்களற்றிருக்கும்போது, இக்கரணங்கள் எவ்விடத்திலொடுங்கியடங்கி தேனில்சுவைபோலவும், கடலிலகலந்த ஆறுகள்போலவும் பிரித்தறியத்தகாத தன்மையனவாயிருக்கின்றன. என்று பிப்பலாத மகாமுனியை ஸௌர்யாணி வினவினர். தம் தொழில் நீங்கினபின் தனித்தனியே அங்கங்கு, தொழில்முடிந்தபின் கீழ்வைக்கப்பட்ட கருவிகள் போல் ஜீவாத்மாவினுடைய கரணங்களும், அவ்வவ்விடங்களிலேயே நிற்கின்றனவென்று கொள்ளாது, புருஷனாகிய ஜீவனுறங்கும்போது. அனைத்து கரணங்களெவ்விடத்திலொன்று சேர்ந்தடங்குகின்றன ஒன்றையடைந்தடங்குவதற்குக் காரணம்யாது? எனில்; இங்கையப்படுவது கூடும். இக்கரணங்களொன்று சேர்ந்து தங்களுக்கு ஸ்வாமியாகிய ஜீவனுணர்ந்திருக்கும்போது அவனுக்குப் பரதந்த்ரங்களாயிருக்கின்றனவாகையால், உறங்கும்போது மொன்றுசேர்ந்து பரதந்த்ரங்களாயோரிடத்தி லடங்கியிருப்பது வேண்டுமானதாலெனக. ஆகையாலிவ்வினா பொருத்தமுடையதேயாகும். காரியகாரணங்களின் ஸம்ஹாரப்தி என்கிற பேருறக்கத்திலும், ப்ரளயத்திலுமெங்குலயம்பெறுமோ; அதனையறிய விரும்பி, அவனையுமறுமென்றறிதற்கு, இவையெல்லாமெங்கு நிலையுறுமென்றது.

யால், ஏஷ:-புருஷ: - இந்தஜீவன், ந ச்ருணோதி - சப்தத்தையறிவதில்லை. ந பச்யதி - ரூபத்தையறிவதில்லை. ந ஜிக்ரதி - கந்தத்தையறிவதில்லை. ந ரஸயதே - சுவையறிவதில்லை. ந ஸ்ப்ருசதே - ஸ்பர்சத்தையறிவதில்லை, நாபிவததே - பேசுவதில்லை, நாதத்தே - க்ரஹிப்பதில்லை. நாநந்தயதே - ஆநந்திப்பதில்லை. ந விஸ்ருஜதே - விடுகிறதில்லை. நேயாயதே - நடக்கிறதில்லை, ஸ்வபிதி - உறங்குகிறானென்று, ஆசக்ஷதே - ஜநங்கள் சொல்லுகின்றார்கள்.

ரா.—ஹா. எப்படி ஸாயங்காலத்தில், ஸூர்யனிடத்திலிருந்து வெளிவந்த கிரணங்கள் நாநாதிக்குகளிலும் ப்ரஸரிப்பதைவிட்டு ஸூரியமண்டலத்திலொன்றாய் விடுகின்றனவோ; மறுபடியும் ஸூரியனுதிக்கும்போது, கிரணங்களெல்லாமெல்லாத்திசைகளிலும் ப்ரஸரித்து ப்ரகாசமாய்ச் செய்கின்றனவோ; விஷயங்களை க்ரகிக்ற சக்திநீங்கி இப்படியே இந்த விந்திரயங்களெல்லா மிந்திரயங்களில் சிறந்ததாய் விளங்குகிற மனதில் சேர்ந்தொன்றாய் விடுகின்றன. ஆகையாலப்பொழுது, ஜ்ஞாநகர்மேந்திரியங்களெல்லாவற்றினுடைய வ்யாபாரமும் நீங்கிப்போகிறது. ஒன்றுமறியானாகிறான். ஒன்றும் செய்யானாகிறான். ஜநங்களப்போதிந்த ஜீவனையுறங்குகிறானென்கின்றார்கள். இப்படி நீகேட்டவிஷயத்தை யறிந்து கொள்ளென்று பிப்பலாத மஹாமுனி கார்க்யராகிய ஸெளர்யாணிமுநிக்குச் சொன்னார். இத்தால், இந்த ஜீவனுறங்கும்போது எவையுறங்குகின்றவென்கிற ப்ரசநத்திற்கு புருஷனாகிய ஜீவனுறங்கும்போது, ஜ்ஞாநேந்திரிய கர்மேந்திரியங்களுறங்குகின்றனவென்று விடையளிக்கப்பட்டதாயிற்று.

பதாந்வயார்த்தபேதங்கள்.

கண்முதலிய விந்திரியவ்யாபாரங்களெல்லாம் மனது துணைப்படாதபோது கூடாமையின் இந்திரியங்களிற்சிறந்ததனைச் சிறந்ததென்றது. புருஷனாகிய ஜீவனுறங்கும்போது இந்திரியங்களுறங்குகின்றனவென்றதால் புருஷனுணர்ந்திருக்கும்போது, அவைகளுமுணர்ந்து தந்தம் காரியங்களைச் செய்கின்றனவென்று பெறப்படுகிறது. இந்த்ரியங்கள் மனதிலொன்று சேருகையாவது - தந்தம் விஷயங்களை க்ரகிக்கிற சக்தி நீங்கி மனதோடொருவாறாகக் கலந்திருக்கை. லயம்பெறுதலன்று; காரியத்திற்குக் காரணத்திலே லயமானதால், காரணமாகாத மனதில் இந்த்ரியங்கள் லயிப்பது கூடாதாகலின், உறங்கும்போதும் ஸ்வப்நத்தில் ரூபம் முதலியவற்றையறிகையால், விஷயங்களை க்ரகிக்கிற சக்திநீங்கி யொன்றுசேருமென்பதெங்ஙனமெனின்; வெளிப்பட்ட ரூபம் முதலியவற்றை யறியாமையாமென்க. ஸம்ஸ்காரசக்தியாலன்றோ ஸ்வப்நத்தில் ரூபம் முதலியவை தோற்றுகின்றன. ரூபம், ரஸம், கந்தம், ஸபர்சம், சப்தம், என்கிறவிவைகளையறிவதில்லை என்றதனால் ஜ்ஞாநேந்திரியங்களின்வ்யாபாரமொழிந்தமை சொல்லப்பட்டது பேசுவதில்லை, என்றதால், வாகிந்திரியவ்யாபாரமொழிந்தமையும், க்ரஹிப்பதில்லை, என்றதினால்பாணீந்திரியவ்யாபாரமொழிந்தமையும், ஆநந்திப்பதில்லை, என்றதனால், உபஸ்தேந்திரியவ்யாபாரமொழிந்தமையும், விடுகிறதில்லை, என்றது - மலத்தை விடுகிறதில்லை

என்றதாய், பாயு இந்திரியவ்யாபாரமொழிந்தமையும், நடக்கிறதில்லை, என்றதால் பாதேந்திரிய வ்யாபாரமொழிந்தமையும், ஆக பஞ்சகர்மேந்திரிய வ்யாபாரங்களும் நீங்கியபடி சொல்லப்பட்டது. பாயு என்பது மலத்வாரத்திலிருக்கின்ற விந்திரியத்தை; உபஸ்தம் என்பது யோநிலிங்கங்களாகிய மூத்ரத்வாரத்திலிருக்கிற விந்திரியத்தை; பாதம் என்பது - காலை; பாணி - என்பது கையை; வாக்கென்பது வாயை இவையைந்தும் கர்மேந்திரியங்களென்று கூறப்படும். "𑌏𑌤𑌰𑍍𑌹𑌿" என்கிற பதத்திற்குப் பின் "𑌤𑌦𑌾" என்று, கூட்டிக்கொண்டு, அப்பொழுது என்று பொருள் கொள்க. "𑌤𑌰𑍍𑌹𑌿" என்பதற்காயினும் பொருளை யுரைக்கலாகும். "𑌸𑍍𑌵𑌪𑌿𑌤𑌿" என்கிறபதத்திற்குமுன் "𑌤𑌤𑌃" என்றொருபதம் வருவித்துக்கொண்டு, ஆகையாலென்று பொருளறிக. இப்படிப் பதவுரையை யமைத்துக் கொள்க. சங்கரபாஷ்யத்திலுமிந்தச்லோகத்திற்கு இக்கருத்தே கொள்ளப் பட்டதாகலின், விரித்துரைக்க விராமாநுஜபாஷ்யமே காட்டப்பட்டது.

௩. 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌗𑍍𑌨𑌯 𑌏𑌵𑍈𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌪𑍁𑌰𑍇 𑌜𑌾𑌗𑍍𑌰𑌤𑌿 𑌗𑌾𑌰𑍍𑌹𑌪𑌤𑍍𑌯𑍋 𑌹 𑌵𑌾 𑌏𑌷𑍋𑌽𑌪𑌾𑌨𑍋 𑌵𑍍𑌯𑌾𑌨𑍋𑌽𑌨𑍍𑌵𑌾𑌹𑌾𑌰𑍍𑌯𑌪𑌚𑌨𑍋 𑌯𑌦𑍍𑌗𑌾𑌰𑍍𑌹𑌪𑌤𑍍𑌯𑌾𑌤𑍍 𑌪𑍍𑌰𑌣𑍀𑌯𑌤𑍇 𑌪𑍍𑌰𑌣𑌯𑌨𑌾𑌦𑌾𑌹𑌵𑌨𑍀𑌯𑌃 𑌪𑍍𑌰𑌾𑌣𑌃॥

௪. 𑌯𑌦𑍁𑌚𑍍𑌛𑍍𑌵𑌾𑌸𑌨𑌿𑌃𑌶𑍍𑌵𑌾𑌸𑌾𑌵𑍇𑌤𑌾𑌵𑌾𑌹𑍁𑌤𑍀 𑌸𑌮𑌂 𑌨𑌯𑌤𑍀𑌤𑌿 𑌸 𑌸𑌮𑌾𑌨𑌃 𑌮𑌨𑍋 𑌹 𑌵𑌾𑌵 𑌯𑌜𑌮𑌾𑌨𑌃 𑌇𑌷𑍍𑌟𑌫𑌲𑌮𑍇𑌵𑍋𑌦𑌾𑌨𑌃 𑌸 𑌏𑌨𑌂 𑌯𑌜𑌮𑌾𑌨𑌮𑌹𑌰𑌹𑌰𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌗𑌮𑌯𑌤𑌿॥

௩. ப்ராணாக்நயவைதஸ்மிந்புரேஜாக்ரதிகார்ஹபத்யோஹவா ஏஷோபாநோவ்யாநோந்வாஹார்ய பசநோயத்கார்ஹபத்யாத்ப்ரணீயதேப்ரணயநாதாஹவநீய:ப்ராண:||

௪. யதுச்ச்வாஸநிஶ்வாசாவேதாவாஹுதீஸமந்நயதீதி ஸஸமாந: மநோஹவாயஜமாநஇஷ்டபலமேவோதாந: ஸஏநம்யஜமாநமஹரஹர்ப்ரஹ்மகமயதி||

(ப-ம்.) 𑌏𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 - 𑌪𑍁𑌰𑍇 - இந்த சரீரத்தில், 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌗𑍍𑌨𑌯𑌃 - 𑌏𑌵 - ப்ராணங்களாய வஹ்நிகளே, 𑌜𑌾𑌗𑍍𑌰𑌤𑌿-உணர்ந்திருக்கின்றன. 𑌯𑌤𑌃 - எக்காரணத்தால், 𑌗𑌾𑌰𑍍𑌹𑌪𑌤𑍍𑌯𑌾𑌤𑍍 - 𑌪𑍍𑌰𑌣𑌯𑌨𑌾𑌤𑍍 ப்ரணயனமென்கிற கார்ஹபத்யாக்நியாகச் சொல்லப்பட்ட அபாநவாயுவிலிருந்து, 𑌆𑌹𑌵𑌨𑍀𑌯𑌃 - ஆஹவநீயமென்கிற அக்நிரூபியாகச் சொல்லப்பட்ட, 𑌪𑍍𑌰𑌾𑌣𑌃-ப்ராணன், 𑌪𑍍𑌰𑌣𑍀𑌯𑌤𑍇-கொண்டுவரப்படுகிறதோ; அந்தகாரணத்தால், 𑌏𑌷𑌃 𑌅𑌪𑌾𑌨𑌃 - இந்த அபாநவாயு, 𑌗𑌾𑌰𑍍𑌹𑌪𑌤𑍍𑌯𑌃-கார்கபத்யாக்நியாகின்றது. 𑌵𑍍𑌯𑌾𑌨𑌃 - வ்யாநவாயு, 𑌅𑌨𑍍𑌵𑌾𑌹𑌾𑌰𑍍𑌯𑌪𑌚𑌨𑌃 - தக்ஷிணாக்நியாகிறது, 𑌉𑌚𑍍𑌛𑍍𑌵𑌾𑌸𑌨𑌿𑌃𑌶𑍍𑌵𑌾𑌸𑌃-மூக்கின்வழியால் உள்புகுகிற காற்று வெளிவருகிற காற்று இவைகள், 𑌆𑌹𑍁𑌤𑍀 - ஆகுதிகள். 𑌯𑌤𑌃 - எதினால், 𑌉𑌚𑍍𑌛𑍍𑌵𑌾𑌸𑌨𑌿𑌃𑌶𑍍𑌵𑌾𑌸𑍌 - முன்சொன்ன காற்றுக்கள், 𑌆𑌹𑍁𑌤𑍀-ஆகுதியாகின்றனவோ ; 𑌯𑌤𑌃 - எந்

தகாரணத்தால், உச்ச்வாஸநிச்வாஸௌ - அப்படி ஆஹுதிகளாயச்வாஸங்களை ஸமம் - நயதி யத் - ஸமமாகச் செய்கிறதோ அந்தகாரணத்தால் எந்தவாயு இப்படிச் செய்கிறதோ; அந்த வாயு, ஹோதா - ஹோதாவாகி, ஸ: - அந்த ஹோதாவானவாயு, ஸமாந: - ஸமாநவாயுவாகும், மந: - மனஸ்ஸானது, யஜமாந: - யாகபலத்தை யநுபவிக்கிறவனாகிறது. உதாந: - உதாநவாயுவானது, இஷ்டபலம் - எவ - யாகபலமாகின்றது. ஸ: - அந்த உதாநவாயு, யஜமாநம் - இந்த யாகபலத்தை யநுபவிக்கிற புருஷனை, அஹரஹ: - தினந்தோறும், ப்ரஹ்ம - பரப்ரம்மத்தை, கமயதி - அடைவிப்பிக்கிறது.

பா—ஷ்ய. செவிமுதலிய இந்திரியங்களெல்லா முறங்கும்போது, ஒன்பது வாசலான இந்த சரீரமாகிய கோட்டையில், ப்ராணன், அபாநன், வ்யாநன், உதாநன், ஸமாநன், என்றிப்படி ஐவகையாயிருக்கிற அக்நிகள் போன்றவையாகையாலே அக்நிகளென்னப்படுகிற ப்ராணாக்நிகள், உணர்ந்திருக்கின்றன. இந்த ஐவகை ப்ராணங்களுக்கு மக்நிஸாம்யம் சொல்லுகின்றார். அக்நிஹோத்ரம் செய்யும்போது,கார்ஹபத்தியமென்கிற அக்நியிலிருந்து அதில் வேறான ஆஹவநீயமென்கிற அக்நியானது ப்ரணயநம் பண்ணப்படுகையாலே (எடுத்துக்கொள்ளப்படுகையாலே) கார்ஹபத்யாக்நிக்கு ப்ரணயநாக்நியென்றுபெயர்; இங்கு புருஷனுறங்கும்போது வாய்மூக்குகளினால் ஸஞ்சரிக்கிற ஆஹவநீயாக்நிக்கொப்பான ப்ராணனபான வ்ருத்தியிலிருந்து ப்ரணயம் பண்ணப்படுகையாலே அபாநம் ப்ரணநாக்நியாகிறது. ஆகவே, கார்ஹபத்தியாக்நியாயிற்று. அடுத்த வ்யாநயு, ஹ்ருதயத்திலிருந்து தென்புறத்திலிருக்கிறவிரந்திரத்தால் வெளிவருகிறபடியால் தென்திக்கின் ஸம்பந்தத்தாலேதக்ஷிணாக்நி என்கிற அந்வாஹார்யபசநமென்று சொல்லப்படுகிற தக்ஷிணாக்நியாகிறது. ப்ராணவாயு, ஆகவ தக்ஷிக்நி என்கிற மூன்றக்நிகளும் ப்ராணன் அபாநன், வ்யாநன், என்கிற விம்மூன்றுமெனப்பெறப்பட்டது. இனி ஹோதா முதலியவைகள் சொல்லப்படுகின்றன. உச்சவாசம், நிச்வாஸம், இவ்விரண்டு மிரண்டாயிருக்கையாலே இரண்டாகுதிகள் ஆகுதிகளாய்இவ்விரண்டையும் ஸமம்பண்ணுகையாலே, ஸமாநவாயுவென்கிறஸமாநவாயு ஆகுதிகளை ஸமமாகச்செய்கிற ஹோதாவாகிறது. இப்படி ப்ராணக்நிகள் உணர்ந்திருக்கும்போது கண்முதலிய பாஹ்யேந்திரியங்களையும் அவைகளால் கிரஹிக்கப்படுகிற விஷயங்களையும் நீக்கி அக்நிஹோத்ரபலமாகிய ஸ்வர்க்கம்போலே ஸுகரூபமான ப்ரமத்தையடைவதற்கு விதிக்கப்பட்டிருக்கையாலும், எல்லாக்கார்யங்களிலும் ப்ராதாந்யமிருப்பதாலும், மநஸ்ஸு, யஜமாநனாகிறது. உதாநவாயுவினால், ஸ்வப்நவ்ருத்தியை நீக்கி, தினந்தோறும், ஸுஷுப்தியில் யாகபலமான ஸ்வர்கம்போலே ஸுகரூபமாகிய ப்ரமத்தை யஜமாநனாகிய மநஸ்ஸு அடைவிக்கப்படுகையால், கார்யகாரணங்களுக்குண்டான உபசாரத்தாலேற்பட்ட அபேதத்தாலே உதாநவாயுவே யாகபலமாகிறது. ஆகையால், உறங்கும்போதும் ப்ரம்மஜ்ஞாநிக்கு அக்நிஹோத்ரம் விதிக்கிறபடியால் ப்ரம்மஜ்ஞாநியை கர்மாநுஷ்டாநமில்லாதவனென்று நினைக்கப்போகாது. என்றிப்படி ஸ்துதிசெய்கிறது.

ரா—ஷ்ய. இந்த சரீரத்தில் ஜீவனுறங்கும்போது மெவையுணர்ந்து கொண்டிருக்கின்றன? என்று கேட்ட ப்ரசநத்திற்கு விடையளிக்கப்படுகிறது. ப்ராணன் அபாநன்முதலிய வாயுக்களே இந்த சரீரத்தில் உணர்ச்சியோடு ஜீவனுறங்கும்போ

து விளங்குகின்றன. இப்படியுணர்ந்திருக்கிற ப்ராணாஹுதிகளில், அக்நிஹோத்ர க்ரமத்தை உபாஸனைசெய்யும்பொருட்டு, சாட்டவேணுமென்று அங்கு ப்ரதாநமான மநஸ்ஸையஜமானனென்றும், மூலாதாரத்திலிருக்கிற அபாநவாயுகார்ஹபத்யாக்நியென்றும், அதின்ஸமீபத்திலிருக்கிற வ்யாநவாயு அந்வாஹார்ய பசநமென்கிற தக்ஷிணாக்நியென்றும், கீழ்ச்சொல்லியபடி, கார்ஹபத்யாக்நியாகிய அபாநவாயுவிலிருந்து ப்ரணயநம்பண்ணப்படுமாகையால், ப்ராணவாயுவானது, கார்ஹபத்யாக்நியிலிருந்து ப்ரணயநம் பண்ணப்படுகிற ஆஹவநீயாக்நியென்றும், அதத்தையாதாரமாகவுடைய உற்ச்வாஸநிச்வாஸங்களாகிய மூச்சுக்காற்றுகள் இரண்டாகுதிகளென்றும், இப்படியாகுதிகளாய உற்ச்வாஸநிச்வாஸங்களை ஸமமாக்குகிற ஸமாநவாயு ஆகுதிகளை ஸமம்பண்ணுகிற அத்வர்யுவென்றும், உதாநவாயுயாகம் செய்து பலத்தையநுபவிக்கிறயஜமாநனை யாகபலமாகிய லோகாந்தரத்தை யடைவிப்பிக்கையால், யாகபலமென்றும் இப்படி அக்நி ஹோத்ரத்திற்கு வேண்டிய யஜமாநன், மூன்றக்நிகள், இரண்டாகுதிகள், அத்வர்யு, யாகபலம், ஆகிய வெட்டுப்பொருள்களையும், பஞ்சப்ராணங்கள், உற்ச்வாஸ நிச்வாஸங்கள் மநஸ்ஸு, இவையாகிய உட்டுவஸ்துக்களிலும்,ரூபித்துகாட்டியவாறு திநந்தோறும் ப்ரம்மத்தையடைவது ஜீவாத்மாவாகிலும், மநஸ்ஸுபுரீதத்தை யடைகையால், புரீதத்திலிருக்கிற ப்ரம்மத்தை யடைகிறதென்று சொல்லப்பட்டது.

பதார்த்வயார்த்தபேதங்கள்.

ப்ராணன் முதலிய மூன்றுவாயுக்களுக்கே அக்நித்ரயம் சொல்லப்பட்டாலும் சத்திரிநியாயத்தாலே அவைகளையு மக்நி என்று சொன்னது. மற்றயிரண்டு வாயுக்களும் அத்வர்யுவாகவும், யாகபலமாகவும் சொலலப்பட்டன. இது உபாஸிக்கிறப்ரகாரமென்று இராமாநுஜபாஷ்யத்தில்சொல்லப்படுகிறது. கேவலஸ்தோத்ரமேயன்றி உபஸநத்திற்காக வன்றென்று சங்கரபாஷ்யத்தின் கருத்தென்று பேதமறிக.

ரு. अत्रैष देवः स्वप्ने महिमानमनुभवति। यद्दृष्टं दृष्टमनुपश्यति श्रुतं श्रुतमेवार्थमनुशृणोति देशदिगन्तरैश्च प्रत्यनुभूतं पुनः पुनः प्रत्यनुभवति दृष्टं चादृष्टं च श्रुतं चाश्रुतं चानुभूतं चाननुभूतं च सच्चासच्च सर्वं पश्यति सर्वः पश्यति॥

ரு. அத்ரைஷதேவஸ்ஸ்வப்நேமஹிமாநமநுபவதி | யத்த்ருஷ்டந்த்ருஷ்டமநுபஶ்யதிஶ்ருதம்ஶ்ருதமேவார்தமநுஶ்ருணோதி தேஶதிகந்தரைஶ்சப்ரத்யநுபூதம்புந:புந: ப்ரத்யநுபவதித்ருஷ்டம்சாத்ருஷ்டம்சஶ்ருதம்சாஶ்ருதம்சாநுபூதம்சாநநுபூதம்சஸச்சாஸச்சஸர்வம்பஶ்யதிஸர்வ:பஶ்யதி ||

(ப-ம்.) अत्र - இந்தநித்ராகாலத்தில், एषः देवः - இந்தஜீவன், स्वप्ने - ஸ்வப்நத்தில், महिमानं - அதிசயத்தை, अनुभवति - அநுபவிக்கிறான், यत् - दृष्टं दृष्टं - அடிக்கடிபார்க்கப்பட்டவஸ்துவை, अनुपश्यति - பார்க்கிறான், श्रुतं श्रुतं एव अर्थं - அடிக்கடிகேட்கப்பட்டவிஷயங்களையே, अनुशृणोति - கேட்கிறான், देशदिगन्तरैः च - தேசாந்தரத்திலும் அதிதூரத்திலும், प्रत्यनुभूतं - அநுபவித்தவ

ற்றை, புந:புந:- அடிக்கடி, ப்ரத்யநுபவதி- அநுபவிக்கிறான், த்ருஷ்டஞ்சாத்ருஷ்டஞ்ச- பார்த்ததையும், பார்க்காததையும், ச்ருதஞ்சாச்ருதஞ்ச- கேட்டதையும் கேளாததையும், அநுபூதஞ்சாநநுபூதஞ்ச- அநுபவித்ததையும் அநுபவியாததையும் ஸர்வம் - இப்படி எல்லாவற்றையும், ஸர்வ: - எல்லாரூபியுமாய்க்கொண்டு, பச்யதி பச்யதி - அடிக்கடி பார்க்கிறான்.

ஸா.—ஸா. இப்படி கீழ்ச்சொல்லியவற்றை யறிந்தவித்வானானவன், செவி முதலிய விந்திரியங்களடங்கும் காலத்தடங்கி உறங்கி எழுந்திருக்கிற வளவில் அந்தேசயாகபலங்களை யநுபவிக்கிறானகையாலே அறியாதாருறக்கம்போலன்று வித்வானுடைய உறக்கமென்று வித்யைக்கொண்டாடப்படுகிறான். அறியாதவற்கு அநர்த்தத்தைத்தருகிற உறக்கமே, வித்வானுக்கு யாகபலத்தைத் தருகிறதென்று, வித்யையின் கொண்டாட்டமேயின்றி விதியன்று வித்வான்களல்லாதபேர்களுக்கும் செவிமுதலிய வெளியிந்திரியங்களுறங்குவது ப்ராணாக்நிகளுணர்ந்திருப்பது, உறங்கும்போது முணர்ந்திருக்கும்போதும், நெஞ்சுஸ்வதந்திரமாய் ஸுஷுப்தியையடைவது முதலியவை யொத்திருக்கையால், வித்வானுக்கிவையுண்டாகுமென்று விதிக்கிறதென்று சொல்லப்போகாது. இவ்விஷயத்தையறிந்தவன் யாகபலத்தை யடைந்தவனாகிறானென்று ஸ்துதிசெய்கிறது என்பதே யமைந்திருக்கிறது. ஸ்வப்நங்களைக்காண்பவன் யார் என்று கேட்ட ப்ரச்நத்திற்கு விடையளிக்கப்படுகிறது. ஸுஷுப்தி யடைவதற்கு முன் செவிமுதலிய விந்திரியங்களுறங்கும்போது சரீரத்தை இரக்ஷிப்பதற்கு ப்ராணங்கள் உணர்ந்திருக்கும்போது, எல்லா இந்திரியங்களுமொடுங்கி யொன்று சேருமிடமாகிய மநமென்கிற தேவன் ஸ்வப்நத்தில் விசித்திரமான ப்ரபஞ்சத்தின் பெருமையைப் பார்க்கிறான். இங்கு நெஞ்சம் ஸ்வதந்திரமாய் ஸ்வப்நத்தையடையுமென்பது கூடாது. ஜீவாத்மாவன்றோ எல்லாவற்றுக்கும் கர்த்தாவெனில்; அன்று. இந்த ஜீவாத்மாவுக்குண்டாகிய ஸகலங்களுக்கும் நெஞ்சே முக்யகாரணமாகலின் இந்த ஜீவாத்மாஸ்வதந்திரமாய் ஒன்றையும் செய்யானன்றோ; உறக்கமுணர்ச்சி என்கிறவெல்லாமிந்த ஜீவனுக்கு மனதினாலயென்று வாஜஸநேயத்தில் சொல்லப்பட்டது. ஆதலால்மனது ஸ்வதந்திரமாய் ஸ்வப்நம் காண்கிறதென்று சொன்னதுபொருந்தமுடையதேயாம். நெஞ்சமாகிய உபாதிஸ்வப்நகாலத்திலிருக்குமாயின், ஸ்வப்நத்தில்ஸ்வயஞ்ஜ்யோதியாய் விளங்குவது கூடாதே; எனில், ஸ்வப்நத்தில் ஸ்வயஞ்ஜ்யோதியாய் விளங்குகிறானென்கிற ச்ருதியின் பொருளறியாமையாலே அவ்வாறு சொல்லுகிறாய், ஸ்வயஞ்ஜ்யோதி யென்பதும் மோக்ஷம் வருகிறவரையில் கல்பிக்கப்பட்டதா யிருப்பதன்றோ; அவித்தை நீங்குகிறவரையில் இந்த பிரமவ்யவகாரம் விடாதன்றோ; அநேகச்ருதிகளினாலு மிவ்விஷயம் புலப்படுகிறது. ஆனதால் ஸ்வப்நத்தில் ஸ்வயஞ்ஜ்யோதியென்கிற ச்ருதிவிரோதம் வருகையால் ஸ்வப்நத்தில் நெஞ்சில்லை என்று மந்தர் சொல்லுவர் ஓராத்மாவே யுள்ளதென்றறிந்தவர் சொல்லார் ஆனால் ஸ்வயஞ்ஜ்யோதியாயிருக்கை, நெஞ்சு முதலியவை யிருந்தாலும் கூடுமாயின் ஸ்வப்நத்தில் ஸ்வயஞ்ஜ்யோதியாகிறானென்று ஸ்வப்நகாலத்தைக் குறிப்பிட வேண்டியதில்லையே என்றால், நெஞ்சுமுதலியவை யில்லாவிட்டாலும் "உள்ளிருக்கிற வாகாசத்தில் படுத்துக்கொண்டிருக்கிறான்" என்கிற ச்ருதியால், அந்தராகாசம் முதலியவை யப்போது முண்டாகையால் ஸ்வயம் ஜ்யோதியாகைக்கு வேறுவஸ்துக்களிருக்கக்கூடாதென்று சொல்வது பல மற்றவார்த்தை. ஆமாயினும் மனதுமுதலிய சிலபொருள்கள் நீங்குகைபற்றி ஸ்வப்நத்தி லிரண்டுபாகம் சுமைநீங்குகையா

அடுத்த ஸுஷுப்த்யவஸ்தையில் எல்லாச்சுமையும் நீங்குதலால் ஸ்வப்நத்திலேயே ஸ்வயஞ்ஜ்யோதியென்று சொல்லப்பட்டதென்று கொள்ளலாமெனில் ஸுஷுப்தியிலும் புரீதத்தில் நாடிகளில் படுத்திருக்கிறானென்று சொல்லுகிறபடியால் புரீதநாடி முதலியவையப்போது முண்டாகையால் எல்லாச்சுமையும் ஸுஷுப்தியிலும் நீங்காமையாலே, ஸ்வப்நத்திலிரண்டுபோகம் சுமைநீங்கி; ஸுஷுப்தியிலெல்லாச்சுமையும் நீங்குகிறதென்றிப்படி சொல்லக்கூடாதன்றோ; ஸ்வப்நத்தில் ஸ்வயஞ்ஜ்யோதியாகிறானென்று சொல்லுகிற ச்ருதி வேறுசாகையாகலி னிங்கு அந்த ச்ருதி விரோதத்திற்கு ஸமாதாநம சொல்லவேண்டாமெனில், ஸர்வவேதாந்த ப்ரத்யய நியாயத்தாலே எல்லாச்சுருதிகளும் ஒரு தாத்பர்யத்தை யடைந்திருக்குமாகையா லப்படி சொல்லத்தகாது. ஒரு ஆத்ம ஸ்வரூபத்தையேயன்றோ எல்லாச்சுருதிகளும் போதிக்கின்றன, ஆனதால் ஸ்வப்நத்தில் ஸ்வயஞ்ஜ்யோதியாகிறானென்று ஸ்வப்நகாலத்தைக் குறிப்பிட்டுச் சொன்னதற்கு கருத்துணாக்கவேணும், ப்ருதி எல்லா முண்மையை யுடைத்துமானவைகளாலுண்மையானவதின்கருத்து இன்னதென்று சொல்லத்தக்கது. என்றிப்படி அபிமாநத்தை யிட்டு வேதாந்தப்பொருளையறிய விருப்பிருயாகில் ஜாகருகளுக்கு கேழ்க்கக்கடவாய். தன்னைத்தானே பண்டிதனாக நினைத்தபிமானித்திருக்கிற பேர்களனேகமாயிரம வருடங்களாலும் வேதாந்தப்பொருளையறியார் ஸுஷுப்தியில்போல ஸ்வப்நத்திலும் கைமுதலிய பொருளிருக்கை வாஸ்தவமாயாத்மாவுக்குண்டான ஸ்வயஞ்ஜ்யோதியானதன்மைக்கு விரோதப்பட்டதல்ல. ஆனால் ஜாக்ரத்தசையில் ஸூர்யாதிபதார்த்தங்களின் தேஜஸ்ஸு இந்த்ரியதேஜஸ்ஸு முதலியவையிருக்கையா லாத்மாவினுடைய ஸ்வயஞ்ஜ்யோதிரூபமறியப்படாது. ஸ்வப்நத்தில் ஸ்புடமாகவறியப்படுமென்று, ஸ்வப்நத்தில் ஸ்வயஞ்ஜ்யோதியாகிறானென்று சொல்லப்பட்டது. ஆனாலுமாத்மாவுக்குண்டான ஸ்வயஞ்ஜ்யோதி ரூபமானது எக்காலத்திலுமெந்த நியாயத்தாலுமெந்தசாஸ்த்ரத்தாலுமில்லையென்று சொல்லமுடியாது ஆனதால், இந்திரியங்கள் விஷயங்களைத் தொடாமலடங்கியபோது மனஸ்ஸு பலவகையாக ஸ்வப்நங்காண்கிற மனஸ்ஸு இந்த ஜந்மத்திலநுபவிக்கப்பட்ட புத்ரமித்ராதிகளையும், ஜந்மாந்தரத்திலநுபவித்த வஸ்துக்களையும் ஸம்ஸ்காரத்தாலேதோற்றுவிக்கப்பட்டபடி காண்கிறது.

ரா.—வ்யா. ஸ்வப்நம் காண்பது யாரென்றுகேட்டப்ரச்நத்திற்கு விடையளிக்கின்றார். மநதில் வேறுயநாவென்று தோற்றுகிற ஜீவாத்மா கண்டவற்றையுங்காணுதவற்றையும் பரமபுருஷனாகிய பரமாத்மா ஸ்ருஷ்டித்துக் காட்டக்காண்கிறான். அப்போது காண்பதற்கு வேண்டிய சரீரம், இந்திரியம் முதலியவற்றையும் பரமாத்மாஸ்ருஷ்டிக்கின்றார்.

பதார்த்தவயார்த்த தீபதங்கள்.

இராமாநுஜபாஷ்யத்தில் ஸ்வப்நத்தி லந்தகாலத்தி லந்தபுருஷனுக்கு மாத்திரமே யநுபவமுண்டாம்படி ஈச்வரன் ஸ்ருஷ்டிக்கையாலே, ஸ்வப்நம் ஸத்யமென்றும்,இதனாலேயே எப்போதும் காணுதபொருளையும் பரமபுருஷன் காட்டக்காணலாமாகையாலே,காணுதவற்றையும் காண்கிறானென்றும், கரணமாகிய மனது கர்த்தாவாகாமையுன் ஜீவாத்மாவே இப்படி ஸ்வப்நம்காண்பவனென்றும், கருத்துகொள்ளப்பட்டது. உலகமெல்லாம் பொய்யென்பதற்குமுக்பத்ருஷ்டாந்தம் ஸ்வப்நமாகையால் ஸ்வப்நம்பொய்யென்றும், பொய்யான உலக க்ரயம் அறிவாளனையா ளாவதுபோல்

இந்த ஸ்வப்நாநுபவமும் வாஸனையாலேயே பிறக்குமாகையால், காணாதவற்றில் ஸம்ஸ்காரமுண்டாவதாகலின் காணாதவற்றை யென்பதற்கு, இந்த ஜந்மத்தில்காணாதவற்றை என்றுபொருள் சொல்லி ஜந்மாந்தரத்தில்காணப்பட்டவஸ்துவே இப்போது தோற்றுகிறதென்றும் கருத்து சங்கரபாஷ்யத்தில் சொல்லப்பட்டது.

௬. 𑌸 𑌯𑌦𑌾 𑌤𑌜𑌸𑌾𑌭𑌿𑌭𑍂𑌤𑍋 𑌭𑌵𑌤𑌿। 𑌅𑌤𑍍𑌰𑍈𑌷 𑌦𑍇𑌵𑌃 𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑌾𑌨𑍍𑌨 𑌪𑌶𑍍𑌯𑌤𑍍𑌯𑌥 𑌤𑌦𑍈𑌤𑌸𑍍𑌮𑌿𑌞𑍍𑌛𑌰𑍀𑌰 𑌏𑌤𑌤𑍍𑌸𑍁𑌖𑌂 𑌭𑌵𑌤𑌿॥

௬. ஸயதாதேஜஸாபிபூதோபவதி | அத்ரைஷதேவஸ்ஸ்வப்நாந்ந பஶ்யத்யததைதஸ்மிந்ஶரீரஏதத்ஸுகம்பவதி ||

(ப-ம்.) 𑌸𑌃-அந்தஜீவன், 𑌯𑌦𑌾-எப்போது, 𑌤𑌜𑌸𑌾-தேஜோரூபியான பரமாத்மாவினால், 𑌅𑌭𑌿𑌭𑍂𑌤𑍋 𑌭𑌵𑌤𑌿-அடங்கப்போகிறானோ; 𑌅𑌤𑍍𑌰-இந்தகாலத்தில், 𑌏𑌷𑌃 𑌦𑍇𑌵𑌃-இந்தஜீவன், 𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑌾𑌨𑍍-ஸ்வப்நங்களை, 𑌨 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿-காண்பதில்லை, 𑌅𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌛𑌰𑍀𑌰𑍇-இந்தசரீரத்தில், 𑌤𑌦𑍍 𑌏𑌤𑌤𑍍, 𑌸𑍁𑌖𑌂-அப்படிப்பட்ட இந்தவிஷயாநுபவஸுகம், 𑌭𑌵𑌤𑌿-உண்டாகிறது, 𑌅𑌥-என்பது, "அஸ்மிந்சரீரே" என்பதுடன் சேர்ந்து வேறுப்ரசந்கதிற்குத் தரமென்பதைவிளக்குகிறது.

ஶம்.—பா. இந்த மனதாகிய ப்ரகாசவஸ்துவானது சிந்தை என்கிற தேஜஸ்ஸினாலும் சித்ரூபமான பிரம்மத்தாலு மடங்கி நாடீமத்யத்தில் வாஸனைகளெல்லா மொழிந்து அவைகளின்வழி மூடப்பட்டு கரணங்களோடு மற்றுள்ளவையும் ஹ்ருதயத்தில் சேரும்போது இந்த மநஸ்ஸானது காட்டுத்தீபோல விஜ்ஞாந ஸ்வரூபமாய் சரீரம்முழுதும் வ்யாபித்து, விசேஷமில்லாததாயிருக்கின்றது. இந்த ஸுஷுப்தி என்கிறவஸ்தையில், இந்த மநஸ்ஸாகிய தேவன் விஷயங்களையறியும் வழி தேஜஸ்ஸினால் மூடப்பட்டமையால் ஸ்வப்நங்களைக்காண்பதில்லை. இப்படி எல்லாமடங்கிய இந்த ஸமயத்தில் நித்யமாய் ப்ரகாசமாய் வியாபித்தசித்ஸ்வரூபாநந்தகநஸுகம் தடங்கலின்றி விளங்குகிறது. ஆக, எவனுக்கு ஸுகமுண்டாகிறதென்கிற ப்ரசநத்திற்கு விடையளிக்கப்பட்டதாயிற்று.

ரா.—பா. "ஸத்தான ப்ரம்மத்தோடுசேருகிறான்" "தேஜஸ்ஸோடு சேருகிறான்" என்று ஸுஷுப்தியைப்பற்றிச் சொல்லுகிற ச்ருதிகளின்படி எல்லாவற்றையும் ப்ரகாசிக்கச்செய்கையாலே தேஜஸ்ஸென்று சொல்லப்பட்ட ப்ரம்மத்தின் ஸம்பந்தத்தையடைந்து கலந்து ப்ரம்மத்தினாலணைத்துக்கொள்ளப்பட்டு, தன்னுடைய ப்ரகாசமதனித்தில்லாமல், இந்த ஜீவாத்மா அடங்கியிருக்கும்போது; ஸ்வப்நங்களை காண்பதில்லை. இப்படிசொல்லியதால், ஸ்வப்நங்காண்பது எந்த காரணத்தாலென்கிற ப்ரசனத்திற்கு இவ்வாறு ப்ரம்மத்தோடு கலவாமலிருக்கும்போது மநஸ்ஸு கூடியிருக்கையால் ஸ்வப்நத்தில் வஸ்துக்களைக்காண்கிறானென றுத்தரம் சொல்லப்பட்டதாயிற்று. இனி ஸுகாநுபவம் பண்ணுகிறவன் யாரென்ற வினாவுக்கு விடையளிக்கப்படுகிறது. சரீரஸம்பந்தமுண்டானபோதே இந்த ஜீவனுக்கு விஷயஸுகாநுபவமுண்டாகிறது.—"சரீரமில்லாதானை ஸுகதுக்கங்கள் சேரா" வென்று ச்ருதியிருக்கையாலே, சரீரஸம்பந்தமில்லாதபோது விஷயஸுகமுண்டாகாது.

எ. [illegible Grantha text]

எ. ஸயதாஸோம்யவயாம்ஸிவாஸோவ்ருக்ஷம்ஸம்ப்ரதிஷ்டந்தே | ஏவம்ஹவைதத்ஸர்வம்பரஆத்மநிஸம்ப்ரதிஷ்டதே ||

(ப்-ம்.) ஸ:-இந்தஜீவன், யதா-எப்படி, வயாம்ஸி-பக்ஷிகள், வாஸோவ்ருக்ஷம் - இருப்பிடமாகியவிருக்ஷத்தை, ஸம்ப்ரதிஷ்டந்தே-அடைந்து ப்ரதிஷ்டைபெறுகின்றனவோ, ஏவம்-இப்படியே, தத்ஸர்வம்-அதெல்லாம், பரஆத்மநி-பரமாத்மாவில், ஸம்ப்ரதிஷ்டதே - ப்ரதிஷ்டையடை

பஉ0 —ஸா. இக்காலத்தில் அவித்யை, காமம், கர்மம், இவைகளை ஹேதுவாகவுடைய கார்யகாரணரூபமான உபாதிகளெல்லாமொழிந்து போகின்றன. இப்படி உபாதியொழிந்து போகும்போது உபாதியினாலே [illegible] தோற்றுகிற ஆத்மாக்களும், உபாதியில்லாமையால், ஜ்ஞாநரூபமான ப்ரம்மஸ்வரூபத்தோடொன்றுபட்டு நிற்கின்றனர். என்று மேலே சொல்லப்போகிறவிது நிலைபெறும்படி திருஷ்டாந்தம் காட்டப்படுகிறது. பக்ஷிகளெல்லாம் தங்களுக்கிருப்பிடமாகிய விருக்ஷத்தில் நிலைபெற்றிருப்பதுபோல் எல்லாப்பொருளுமந்த ப்ரம்மத்தினிடத்தில் நிலைபெறுகின்றன.

ரா.—ஸா. எங்கு இப்பொருளெல்லாம் சேர்ந்திருக்கின்றனவென்று கேட்ட ப்ரசநத்திற்குத்தரம் சொல்லப்படுகிறது.—ஒரு விருக்ஷத்தில் பலபக்ஷிகளும் தங்கியிருப்பதுபோல இவ்வுலகெல்லாம் ப்ரம்மத்தினிடத்தில் சேர்ந்திருக்கின்றன.

அ. [illegible Grantha text]

அ. ப்ருதிவீசப்ருதிவீமாத்ராசாபஶ்சாபோமாத்ராசதேஜஶ்சதேஜோமாத்ராசவாயுஶ்சவாயுமாத்ராசாகாஶஶ்சாகாஶமாத்ராசசக்ஷுஶ்சத்ரஷ்டவ்யம்சஶ்ரோத்ரம்சஶ்ரோதவ்யம்சக்ராணம்சக்ராதவ்யம்சரஸஶ்சரஸயிதவ்யம்சத்வக்சஸ்பர்ஶயிதவ்யம்சவாக்சவக்தவ்யம்சஹஸ்தௌசாதாதவ்யம்சோபஸ்தஶ்சாநந்தயிதவ்யம்சபாயுஶ்சவிஸர்ஜயிதவ்யம்சபாதௌசகந்தவ்யம்சமநஶ்சமந்தவ்யம்சபுத்திஶ்சபோத்தவ்யம்சாஹங்காரஶ்சாஹங்கர்தவ்யம்சசித்தம்சசேதயிதவ்யம்சதேஜஶ்சவித்யோதயிதவ்யம்சப்ராணஶ்சவிதாரயிதவ்யம்ச ||

(ப்-ம்.) [illegible]-ப்ருதிவியும், [illegible]-கந்ததந்மாத்திரையும், [illegible]-ஜலதத்வமும், [illegible] - இரஸதந்மாத்திரையும், [illegible] - தேஜஸ்தத்வமும். [illegible] - ரூபதந்மாத்திரையும்,

வாயுஸ்ச-வாயுவும், வாயுமாத்ராச-ஸ்பர்சதந்மாத்திரையும், ஆகாசஸ்ச ஆகாசமும், ஆகாசமாத்ராச-சப்ததந்மாத்திரையும், சக்ஷுஸ்ச-சக்ஷுரிந்திரியமும், த்ரஷ்டவ்யஞ்ச-காணப்படுமேரூபம்முதலியவைகளும், ஸ்ரோத்ரஞ்ச-ச்ரோத்ரேந்திரியமும், ஸ்ரோதவ்யஞ்ச - கேட்கப்படுகிற சப்தமுதலியவைகளும், க்ராணஞ்ச-க்ராணேந்திரியமும், க்ராதவ்யஞ்ச - கந்தம்முதலியவைகளும், ரஸஸ்ச - இரஸநேந்திரியமும், ரஸயிதவ்யஞ்ச - உப்புமுதலிய அறுசுவைகளும், மற்றுமுள்ளவும், த்வக்ச - த்வகிந்திரியமும், ஸ்பர்சயிதவ்யஞ்ச ஸ்பர்சம்முதலியவைகளும், வாக்ச-வாகிந்திரியமும், வக்தவ்யஞ்ச-பதவாக்யமுதலியவைகளும், ஹஸ்தௌச-பாணீந்திரியமும், ஆதாதவ்யஞ்ச - கலசமுதலியவைகளும், உபஸ்தஸ்ச-உபஸ்தேந்திரியமும், ஆநந்தயிதவ்யஞ்ச - ஸம்போகஸௌக்யமும், பாயுஸ்ச-பாயுவென்கிற இந்திரியமும், விஸர்ஜயிதவ்யஞ்ச-புரீஷம்முதலியவைகளும், பாதௌச-பாதேந்திரியமும், கந்தவ்யஞ்ச - கமநம் செய்கிற க்ராமநகர முதலியவைகளும், மநஸ்ச - அந்தரிந்திரியமான மநஸ்ஸும், மந்தவ்யஞ்ச - ஸ்மருதியில் புலப்படும் ஸ்வயபாபம் முதலியவைகளும், புத்திஸ்ச - அத்யவஸாயம் முதலியவைகளும், போத்தவ்யஞ்ச - மோக்ஷஸாதநம் முதலிய அத்யவஸிக்கப்படும் பொருளும், அஹங்காரஸ்ச - அஹங்காரமும், அஹங்கர்தவ்யஞ்ச - அபிமாநம் முதலிய வஸ்துக்களும், சித்தஞ்ச - சித்தமும், சேதயிதவ்யஞ்ச - சேதனையென்கிற ஜ்ஞாநத்திற்கு விஷயமாகியபொருளும், தேஜஸ்ச - சரீரத்திலிருக்கிறசர்மமென்கிற ப்ரகாசவஸ்துவும், வித்யோதயிதவ்யஞ்ச-அதினால் ப்ரகாசிக்கும் பொருளும், ப்ராணஸ்ச - ப்ராணனும், விதாரயிதவ்யஞ்ச - அதினால் தரிக்கப்படும்பொருளும், பரே ஆத்மநி ஸம்ப்ரதிஷ்டதே - பரமாத்மாவினிடத்தில்ப்ரதிஷ்டையடைகின்றது, என்று முந்தியச்லோகத்திலிருக்கிற இந்தபதங்களோடே அந்வயம்.

பதாந்வயார்த்தபேதங்கள்.

இங்கு சங்கர ராமாநுஜபாஷ்யங்களுக்கு பேதமில்லை. இப்படி எல்லாப்பொருளும் பரமாத்மாவினிடத்தில் சேர்ந்திருக்கிறது என்று அந்தபரமாத்மாவின்வைபவம் சொல்லப்பட்டதென்றும் கருத்து பதவுரையாலே விளங்கும். ஆனதாலும் விசேஷார்த்தமொன்றுமில்லாமையாலும்பாஷ்யங்கள் காட்டப்படவில்லை. பஞ்சதந்மாத்திரைகள், பஞ்சபூதங்கள், பஞ்சேந்திரியங்கள், பஞ்சவிஷயங்கள், பஞ்சகர்மேந்திரியங்கள், அவைகளின்தொழில்கள், மநம், புத்தி, அஹங்காரம், சித்தம்,என்றுநாலுவகைப்பட்ட அந்தக்கரணம், அவைகளின் விஷயங்கள், தேஜஸ்ஸென்கிற சர்மம், அதின்விஷயம் ப்ராணன், அதின்வியாபாரங்கள் இவைகளிங்கு சொல்லப்பட்டன. இப்படி பிரித்துச்சொன்ன விதற்குக்கருத்து எவ்வகைப்பட்ட பொருளாயினும் பரமாத்மாவை பற்றி யிருக்குமென்பதாம். இப்படி பிரித்துச்சொன்ன வ

வைகளுக்குள் சிலவற்றிற்கு ஸ்தூலபேதமில்லையானாலும் ஸூக்ஷ்மபேத முண்டென்றறிக.

௯. ஏஷ ஹி த்ரஷ்டா ஸ்ப்ரஷ்டா ஶ்ரோதா க்ராதா ரஸயிதா மந்தா போத்தா கர்தா விஜ்ஞாநாத்மா புருஷ: | ஸ பரே(அ)க்ஷர ஆத்மநி ஸம்ப்ரதிஷ்டதே ||

௯. ஏஷஹித்ரஷ்டாஸ்ப்ரஷ்டாஶ்ரோதாக்ராதாரஸயிதாமந்தாபோத்தா கர்தாவிஜ்ஞாநாத்மாபுருஷ: | ஸபரேஅக்ஷரே ஆத்மநிஸம்ப்ரதிஷ்டதே ||

(ப்-ம.) த்ரஷ்டா-ரூபத்தையறிபவனும், ஶ்ரோதா-சப்தத்தை யறிப வனும், க்ராதா - கந்தத்தையறிபவனும், ரஸயிதா - ரஸத்தையறிபவனு ம், மந்தா-ஸ்மரிக்கிறவனும், போத்தா-அநுபவிப்பவனும், கர்தா - செய் பவனும், விஜ்ஞாநாத்மா - ஜ்ஞாநஸ்வரூபியானவனுமாகிய ஸ:-ஏஷ:ஹி- புருஷ:-அப்படிப்பட்ட இந்தஜீவாத்மா, அக்ஷரே-பரே-ஆத்மநி - அ க்ஷரபரப்ரம்மமாகிய பரமாத்மாவில், ஸம்ப்ரதிஷ்டதே - ப்ரதிஷ்டையை யடைகிறான். ஹி - இது வேதாந்தங்களிலே ப்ரஸித்தம்.

ஸ௦ - ஸா - இப்படி ப்ரபஞ்சமெல்லாம் பரமாத்மாவினிடத்தில் லயிப்பதுபோல் இந்த உபாதிகளாலே ஜீவாத்மாவாகத்தோற்றி யிருந்தபுருஷனும், பரமாத்மாவினிடத் திலைக்யத்தை யடைகிறதென்கிறது.—ரூபம்முதலியவற்றை கிரஹியாநிற்கிற இந்த ஜீவாத்மாவும், உபாதிநசிக்கும்போது ஜலம்முதலியன நசித்தபோது ப்ரதிபிம்பம் நசிப்பதுபோல் உபாதிநீங்கி விளங்குகிறது. அப்போது ஜீவாத்மாபரமாத்மா இவர் களுக்கு ஐக்யமுண்டாகிறது. இங்கு ஆத்மாவுக்குச்சொன்ன கர்த்ருத்வாதிகள் உபாதி தசையிலாரோபிக்கப்பட்டன.

ரா - ஸா - சேதநாசேதநரூபமாயும் கர்த்ருகர்மகரணரூபமாயுமுள்ள எல்லாம் பரமாத்மாவை யாச்ரயித்து நிற்கின்றனவென்றுகருத்து. இங்கு ஆத்மாவையறிபவ னென்றும், அறிவைவடிவாகவுடையவனென்றும் சொன்னதால், கேவலம் அறிவே யாத்மா அறிபவனல்லவென்கிற அத்வைதிகள் மதமும், அறிபவனேயன்றி அறிவை வடிவாகவுள்ளவனன்று என்கிற தார்க்கிகர்மதமும் நிரஸிக்கப்பட்டது.

௰. பரமேவாக்ஷரம் ப்ரதிபத்யதே ஸ யோ ஹ வை தத் அச்சாயம் அஶரீரம் அலோஹிதம் ஶுப்ரம் அக்ஷரம் வேதயதே யஸ்து ஸோம்ய ஸ ஸர்வஜ்ஞ: ஸர்வோ பவதி ததேஷ ஶ்லோக: ||

௰. ஸயோஹவைததச்சாயமஶரீரமலோஹிதம்ஶுப்ரமக்ஷரம் வேதயதேயஸ்துஸோம்யஸஸர்வஜ்ஞஸ்ஸர்வோபவதிததேஷஶ்லோக: ||

(ப்-ம்.) ய:-எவன், தத்-இந்த, அச்சாயம் - கர்மஸம்பந்தமில்லாததும், அஶரீரம்-சரீரமில்லாததும், அலோஹிதம்-வர்ணமில்லாததும், ஶுப்ரம்-சுத்தமானதும், அக்ஷரம்-அழிவில்லாததுமான ப்ரம்மத்தை, வேதயதே-அறிகிறானோ; அவன் துர்லபன் அப்படி, ய:,ஹவை-எந்தபுருஷன், வேதயதே- அறிகிறானோ, ஸ:-அவன், ஸோம்ய-ஸோம்யனே, ஸர்வஜ்ஞ: - எல் லாவற்றையுமறிந்தவனும், ஸர்வ:-எல்லாவற்றையுமுடையவனும், பவதி-ஆகிறான், தத் ஏஷ ஶ்லோக: - இந்தவிஷயத்தில் சுலோகமொன்றுண்டு.

கக. 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌤𑍍𑌮𑌾 𑌸𑌹 𑌦𑍇𑌵𑍈𑌶𑍍𑌚 𑌸𑌰𑍍𑌵𑍈𑌃 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌸𑌂𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌨𑍍𑌤𑌿 𑌯𑌤𑍍𑌰 । 𑌤𑌦𑌕𑍍𑌷𑌰𑌂 𑌵𑍇𑌦𑌯𑌤𑍇 𑌯𑌸𑍍𑌤𑍁 𑌸𑍋𑌮𑍍𑌯 𑌸 𑌸𑌰𑍍𑌵𑌜𑍍𑌞𑌃 𑌸𑌰𑍍𑌵𑌮𑍇𑌵𑌾𑌵𑌿𑌵𑍇𑌶𑍇𑌤𑌿 ॥

கக. விஜ்ஞாநாத்மாஸஹதேவைச்சஸர்வை:ப்ராணாபூதாநிஸம்ப்ரதிஷ்டந்தியத்ர | ததக்ஷரம்வேதயதேயஸ்து ஸோம்யஸஸர்வஜ்ஞஸ்ஸர்வமேவாவிவேசேதி ||

(ப்-ம்.) 𑌯𑌤𑍍𑌰-எந்தவக்ஷரபரப்ரம்மத்தில், 𑌦𑍇𑌵𑍈𑌃𑌸𑌹-இந்திரியங்களோடுகூட, 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌃-ப்ராணங்களும், 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿-பஞ்சபூதங்களும், 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌤𑍍𑌮𑌾 - ஜ்ஞாநஸ்வரூபியான ஜீவாத்மாவும், 𑌸𑌂𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌨𑍍𑌤𑌿-ப்ரதிஷ்டையடைகின்றனவோ, 𑌤𑌤𑍍 - அப்படிப்பட்ட, 𑌅𑌕𑍍𑌷𑌰𑌂- அக்ஷரபரப்ரம்மத்தை, 𑌸𑍋𑌮𑍍𑌯-ஓ ஸௌம்யனே, 𑌯𑌃 - எவன், 𑌵𑍇𑌦𑌯𑌤𑍇-நன்றாகவறிகிறானோ, 𑌸𑌃-அப்படிப்பட்டவன், 𑌸𑌰𑍍𑌵𑌜𑍍𑌞𑌃-எல்லாவற்றையுமறிந்தவனாய், 𑌸𑌰𑍍𑌵𑌂- எல்லாவற்றையும், 𑌆𑌵𑌿𑌵𑍇𑌶 - பிரவேசிக்கிறான், 𑌇𑌤𑌿 - என்பதாம்.

பதாந்வயார்த்ததீபகங்கள்.

ஸர்வாதாரமான ப்ரம்மத்தையறிந்தவன் ஸர்வகாமங்களையுமடைகிறானென்கிற தாத்பர்யமிரண்டுவாக்யத்திற்கு மொக்கும்.

நாலாம்ப்ரச்னம் முற்றும்.

---

𑌪𑌞𑍍𑌚𑌮𑌃 𑌪𑍍𑌰𑌶𑍍𑌨𑌃.

க. 𑌅𑌥 𑌹𑍈𑌨𑌂 𑌶𑍈𑌬𑍍𑌯𑌃 𑌸𑌤𑍍𑌯𑌕𑌾𑌮𑌃 𑌪𑌪𑍍𑌰𑌚𑍍𑌛 । 𑌸 𑌯𑍋 𑌹 𑌵𑍈 𑌤𑌦𑍍𑌭𑌗𑌵𑌨𑍍𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑍇𑌷𑍁 𑌪𑍍𑌰𑌾𑌯𑌣𑌾𑌨𑍍𑌤𑌮𑍋𑌙𑍍𑌕𑌾𑌰𑌮𑌭𑌿𑌧𑍍𑌯𑌾𑌯𑍀𑌤 𑌕𑌤𑌮𑌂 𑌵𑌾𑌵 𑌸 𑌤𑍇𑌨 𑌲𑍋𑌕𑌂 𑌜𑌯𑌤𑍀𑌤𑌿 ॥

க. அதஹைநம்சைப்யஸ்ஸத்யகாம: | பப்ரச்சஸயோஹவைதத்பகவந்மநுஷ்யேஷு ப்ராயணாந்தமோங்காரமபித்யாயீதகதமம்வாவஸதேந லோகம்ஜய

(ப்-ம்.) 𑌅𑌥-கார்க்யமுனி ப்ரச்நத்திற்குத்தரம் சொல்லி முடிந்தபின், 𑌏𑌨𑌂-இந்த பிப்பலாதனை, 𑌶𑍈𑌬𑍍𑌯𑌃-சிபியின் குமாரராகிய, 𑌸𑌤𑍍𑌯𑌕𑌾𑌮𑌃-ஸத்யகாமனென்பவர், 𑌪𑌪𑍍𑌰𑌚𑍍𑌛 - கேட்டார். 𑌹𑍇 𑌭𑌗𑌵𑌨𑍍 - பூஜ்யரே, 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑍇𑌷𑍁-மநுஷ்யர்களுக்குள், 𑌯𑌃 𑌹 𑌵𑍈 - யவனொருவன், 𑌪𑍍𑌰𑌾𑌯𑌣𑌾𑌨𑍍𑌤𑌂-மரணபர்யந்தம், 𑌤𑌤𑍍-அப்படி, 𑌓𑌙𑍍𑌕𑌾𑌰𑌂-ப்ரணவத்தை, 𑌸𑌃-அப்படிப்பட்டவனாய், 𑌅𑌭𑌿𑌧𑍍𑌯𑌾𑌯𑍀𑌤 - உபாஸிக்கிறானோ; 𑌸𑌃-அவன், 𑌤𑍇𑌨 - அந்தஉபாஸநத்தால், 𑌕𑌤𑌮𑌂-𑌲𑍋𑌕𑌂𑌵𑌾𑌵-எந்தலோகத்தை, 𑌜𑌯𑌤𑌿-ஜயிக்கிறான்.

ஸ-ஸா—இப்படி கீழ்ச்சொல்லிய அக்ஷரபரப்ரம்ம விவேகஜ்ஞாநம் பிறவா மந்தாதிகாரிக்கு, ப்ரணவோபாஸநத்தால் க்ரமத்திலக்ஷரபரப்ரம்ம ப்ராப்தியுண்டாம்படி ப்ரணவோபாஸநத்தை விதிக்கிறது இந்தப்ரசநம்.

ரா-ஹா—இப்படி கார்க்யப்ரசநத்திற்கு விடைதந்தபின், இந்த பிப்பலாதரை ஸத்யகாமர், பூஜ்யரே, மநுஷ்யர்களில் எவன் ப்ரணவத்தாலே மஹாபக்தியுடனே ப்ரம்மத்தை தியாநித்து அஸத்யம்சொல்லாமை, ஸ்திரீஸங்கமில்லாமை, கொல்லாமை, தாநம்வாங்காமை, தாநம்செய்கை, ஸந்யாஸம் யமம்; நியமம், ஆஸநம், ப்ராணாயாமம், ப்ரத்யாஹாரம், த்யாநம், தாரணம், என்கிற வகைகளிலே இதரவிஷயங்களில் மநஞ்செல்லாமல் ஸமாதிபெற்ற மநதையுடையவனாய், ப்ராணனுள்ளவரையில் வேறுவிஷயங்களின் ஸ்ம்ருதிகலவாமலும், இடைவிடாமலும் ஸ்மரிக்கையாகிற தியாநத்தைச் செய்கிறானோ, காற்றில்லாதவிடத்தில் வைத்த விளக்கைப்போல சலியாமலிருக்கிறானோ, அப்படிப்பட்டவன், ஜ்ஞாநகர்மங்களுக்குப் பலமாயுள்ளலோகங்களுள் எந்த லோகத்தை யிந்த உபாஸநத்தாலே யடைகிறான், என்று ப்ரச்நம்பண்ணினார்.

௨. 𑌤𑌸𑍍𑌮𑍈 𑌸 𑌹𑍋𑌵𑌾𑌚 𑌏𑌤𑌦𑍍𑌵𑍈 𑌸𑌤𑍍𑌯𑌕𑌾𑌮 𑌪𑌰𑌂 𑌚𑌾𑌪𑌰𑌂 𑌚 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌯𑌦𑍋𑌙𑍍𑌕𑌾𑌰𑌸𑍍𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑍇𑌤𑍇𑌨𑍈𑌵𑌾𑌯𑌤𑌨𑍇𑌨𑍈𑌕𑌤𑌰𑌮𑌨𑍍𑌵𑍇𑌤𑌿||

௨. தஸ்மைஸஹோவாசஏதத்வைஸத்யகாமபரம்சாபரம்சப்ரஹ்மயதோங்காரஸ்தஸ்மாத்வித்வாநேதேநைவாயதநேநைகதரமந்வேதி ||

(ப்-ம்.) 𑌤𑌸𑍍𑌮𑍈- அந்த ஸத்யகாமருக்கு, 𑌸𑌃 𑌹 𑌉𑌵𑌾𑌚- அந்த பிப்பலாதர்சொன்னார். 𑌹𑍇 𑌸𑌤𑍍𑌯𑌕𑌾𑌮- ஓய்ஸத்யகாமரே, 𑌯𑌦𑍋𑌙𑍍𑌕𑌾𑌰𑌃 - ப்ரணவமாகிய, 𑌏𑌤𑌤𑍍- இதானது, 𑌪𑌰𑌂 𑌚-𑌅𑌪𑌰𑌂 𑌚-𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 - பரப்ரம்மமாயும் அபரப்ரம்மமாயுமாகிறது. 𑌵𑍈- ப்ரஸித்தம், 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍- ஆகையால், 𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑍍 உபாஸகன், 𑌏𑌤𑍇𑌨𑍈𑌵𑌾𑌯𑌤𑌨𑍇𑌨 - இந்த ஆலம்பநத்தாலே, 𑌏𑌕𑌤𑌰𑌮𑍍- பரப்ரம்மத்தையாகிலு மபரப்ரம்மத்தையாகிலும், 𑌅𑌨𑍍𑌵𑍇𑌤𑌿 - அடைகிறான்.

ஶ௦-ஹா—இப்படிகேட்ட ஸத்யகாமனைநோக்கி பிப்பலாதர்சொல்லுகின்றார். ஸத்யகாமரே அபரப்ரம்மமாகிய ப்ராணனும் அழிவற்றஸத்யமான பரப்ரம்மமாகிய பரமபுருஷனும், இந்தப்ரணவமேயாகும். இவ்விரண்டுக்கும் ப்ரதீகமாகுமென்கை. ஸாக்ஷாத் பரப்ரம்மத்திற்கு விசேஷங்களொன்று மில்லாமையால் சப்தம் இந்திரியம் முதலியவற்றிற்குத் தோற்றாதாகையால், நெஞ்சால் நினைக்கப்படாது. ஆகையால் ப்ரம்மத்திற்கு ப்ரதீகமாகிய ப்ரணவத்தில் ப்ரதிமையிலேபோல பக்தியோடு ப்ரம்மதிருஷ்டியோடுபாஸநம்செய்யவனுக்கு அந்தபரப்ரம்மம் ஸ்வயமாகவே விளங்குமென்று இந்த சாஸ்திரத்தின் ப்ரமாணத்தாலே யறியப்படுகிறது. இப்படியே அபரப்ரம்மமும் விளங்கும் ஆகையால் பராபரப்ரம்மமே ப்ரணவமென்றுபசரித்துச் சொல்லப்பட்டது ஆகையால் இந்த ப்ரணவோபாஸநத்தாலே இஷ்டப்படி பரப்ரமத்தையாகிலும் அபரப்ரம்மத்தையாகிலு மடைவான். ஆலம்பநங்களுக்குள் ப்ரணவம் சிரேஷ்டமான ஆலம்பநமன்றோ.

ரா-ஹா.—இந்த ப்ரணவமானது பரப்ரம்மம், அபரப்ரம்மம் ஆகிய விரண்டையும்சொல்லும் இந்த வாச்யவாசகஸம்பந்தத்தாலே, ப்ரணவமே ப்ரம்மமென்று சொல்லப்பட்டது. இக்கருத்து ஸ்ரீவியாஸாசாரியராலும் ஈக்ஷதிகர்மாதிகரணத்தில் காட்டப்பட்டது. ஆகையாலே ப்ரணவமாகிய வாசகத்தைக்கொண்டு வாச்யமானப்ரம்மத்தையுபாஸிக்கிறான். என்றுகருத்து இப்படி பிப்பலாதர்சொல்லுகிறார்.

பதாந்வயார்த்தபேதங்கள்.

சங்கரபாஷ்யத்தில் இந்தஉபாஸநம் ப்ரதீகோபாஸநமென்றுகொள்ளப்பட்டது. ப்ரதீகோபாஸநமாவது ஒன்றையொன்றாக உபாஸிக்கை. இங்கு பரப்ரம்மமாகாத ப்ரணவத்தை பரப்ரம்மமென்றுபாஸிப்பது ப்ரதீகோபாஸநமேயாம். ஆக, இந்தப்ரணவத்தைப் பரப்ரம்மமாக உபாஸிப்பவன் அபரப்ரம்மத்தையும், அபரப்ரம்மமாக உபாஸிப்பவன் பரப்ரம்மத்தையுமடைகிறானென்றுகருத்து விளங்கும், இராமாநுஜபாஷ்யத்தில் ப்ரணவார்த்தமாகிய பராபரப்ரம்மங்களை ப்ரணவத்திற் சொல்லியபடி குணங்களுடன் உபாஸநமுபாஸிப்பானென்று ஸாக்ஷாதுபாஸநமாகவே கொள்ளப்பட்டதென்று பேதம் ஸ்புடமாகவேதோற்றும்.

௩. ஸ யத்யேகமாத்ரமபித்யாயீத ஸ தேநைவ ஸம்வேதிதஸ்தூர்ண-மேவ ஜகத்யாமபிஸம்பத்யதே। தம்ருசோ மநுஷ்யலோகமுபநயந்தே ஸ தத்ர தபஸா ப்ரஹ்மசர்யேண ஶ்ரத்தயா ஸம்பந்நோ மஹிமாநமநுபவதி||

௩. ஸயத்யேகமாத்ரமபித்யாயீதஸதேநைவஸம்வேதிதஸ்தூர்ண மேவஜகத்யா மபிஸம்பத்யதேதம்ருசோமநுஷ்யலோகமுபநயந்தேஸதத்ரதபஸாப்ரஹ்மசர்யேணஶ்ரத்தயாஸம்பந்நோமஹிமாநமநுபவதி ||

(ப-ம்.) ஸ:-அந்தப்ரணவோபாஸகன், ஏகமாத்ரம்-ஒருமாத்திரையுடையப்ரணவத்தை, அபித்யாயீத-யதி-தியாநம்செய்வானேயாகில், ஸ: - அப்படிப்பட்டவன், தேநைவ-அவ்வுபாஸநத்தாலேயே, ஸம்வேதித: - ஸத்தைபெற்றவனாய், தூர்ணம்-ஏவ-அப்போதே,ஜகத்யாம் - பூமியில, அபிஸம்பத்யதே - ச்ரேஷ்டனாகிறான். தம்-அந்தபுருஷனை, ருச: - இருக்குகள், மநுஷ்யலோகம்-மநுஷ்யலோகத்தை,உபநயந்தே - அடைவிப்பிக்கின்றன, ஸ:-அப்படி மநுஷ்யலோகத்தையடைந்த புருஷன், தபஸா-தபஸ்ஸாலும, ப்ரஹ்மசர்யேண - ஸ்த்ரீஸங்கமற்றிருக்கையாலும், ஶ்ரத்தயா - சிரத்தையாலும, ஸம்பந்ந:-விளங்கினவனாய், மஹிமாநம்-மகிமையை அநுபவதி - அநுபவிக்கிறான்.

ஸம-ஸா—இந்த ப்ரணவமானது அகரம்முதலிய மூன்றுமாத்திரையுள்ளது. இம்மூன்றுமாத்திரையும்சேர்ந்த பூர்ணப்ரணவத்தையுபாஸியாமல் அதின் கண்டமாகிய அகரத்தையே உபாஸித்தாலும், இந்தப்ரணவத்தின் மகிமையினாலே உத்தமகதியையடைகிறான். அதாவது-இந்தப்ரணவத்தினுடைய ஸ்வரூபங்களை எல்லாமுணராது கண்டப்ரணவத்தையுபாஸித்தாலும் அவ்வுபாஸநத்தாலே அவ்வளவிலே விசேஷஞானம்பெற்றவனாய், மிகச்சீக்கிரத்தில் பூமியில் மநுஷ்யஜந்மத்தையடைகிறான். பூமியில்பலவகைப்பட்ட ஜந்மங்களிருக்கவும் இந்தப்ரணவத்தின் முதல்மாத்திரையாகிய அகரம் இருக்குவேதவடிவுடையதாதலால் அந்த இருக்குக்கள் இப்படியுபாஸித்த புருஷனுக்குப் பூலோகத்தில் மநுஷ்யஜந்மத்தையே தருகின்றன. இப்படி யந்தப்ரணவமாத்திரையின் மகிமையாலே மநுஷ்யஜந்மத்தையடைந்து அதிலும்ப்ராம்மண ஜந்மத்தைப்பெற்று அதிலும் சிறந்தவனாகி தவம்புரிந்து விரக்தனு

பக்திசிரத்தைகளுடன், மகிமையநுபவிக்கிறான். நியமத்தில் விருப்பமுடையனாகானதால் துர்க்கதியையடையான். பாபகர்மங்களைச்செய்யான். நிந்தயோகத்தில் குறைநேரிட்டாலும் இவனுக்கு துன்பம்வாராது நல்லவிருப்பமுண்டாகி நல்நடக்கையிலிருப்பான்.

ரா-ஹா—இந்த ப்ரணவத்தையுபாஸிப்பவன், ஒருமாத்திரையுடைய ஹ்ரஸ்வமாகிய அபரப்ரம்மவாசகமான ப்ரணவத்தை உபாஸிப்பானாகில் அதாவது-அபரப்ரம்மத்தை போதிக்கிற ஹ்ரஸ்வமான ப்ரணவத்தாலே அபரப்ரம்மத்தையுபாஸித்தானாகிலென்கை. இப்படி ஒருமாத்திரையுடைய ப்ரணவத்தைக்கொண்டு அபரப்ரம்மத்தையுபாஸிப்பதினால், ஸத்தைபெற்றவனாகி இப்புவியில் மிகச்சிறந்தவனாகிறான் அந்தபுருஷனை இருக்குமாத்திரைகள் மநுஷ்யலோகத்தை யடைவிப்பிக்கின்றன இப்படி மநுஷ்யலோகத்தை யடைவிப்பிக்கப்பட்ட அந்தபுருஷன் தவத்தாலும் அதாவது உணவுநீக்குதலாலும், ஸ்த்ரீஸங்கத்தை விடுவதினாலும். ஆஸ்திக்கிய புத்தியாலும் நடப்பானாயின், மோக்ஷஸாதநமாகிய ப்ரம்மோபாஸநத்தைச்செய்து மோக்ஷத்தைப் பெறுவான், ஒ, ஐ, ஔ, இவைகளுக்கு ஹ்ரஸ்வம்வியாகரண நூலில் சொல்லப்படாமையால் ஹ்ரஸ்வமாகிய ப்ரணவமில்லையேயெனில் உலகத்தில் ஹ்ரஸ்வப்ரணவமும் வழங்கிவருவதால் ப்ரணவத்துக்கு ஹ்ரஸ்வமுண்டென்று கருத்து.

ச. அத யதி த்விமாத்ரேண மநஸி ஸம்பத்யதே ஸோந்தரிக்ஷம் யஜுர்பிருந்நீயதே | ஸ ஸோமலோகம் ஸ ஸோமலோகே விபூதிமநுபூய புநராவர்த்ததே ||

ச. அதயதித்விமாத்ரேண மநஸிஸம்பத்யதேஸோந்தரிக்ஷம் யஜுர்பிருந்நீயதே | ஸஸோமலோகம்ஸஸோமலோகே விபூதிமநுபூயபுநராவர்த்ததே ||

(ப-ம்) அத-யதி த்விமாத்ரேண மநஸி ஸம்பத்யதே-ஸ: இனி இரண்டு மாத்திரையுடைய ப்ரணவத்தினுபாஸநம நெஞ்சில்ஒருவனுக்கு நிலைபெறுமாயினவனும், அந்தரிக்ஷம் ஸோமலோகம் - அந்தரிக்ஷலோகத்திலிருக்கிற சந்திரலோகம் முதலியலோகங்களை, யஜுர்பி: - உந்நீயதே-யஜுர்மந்திரங்களாலே யடைவிப்பிக்கப்படுகிறான் ஸ: - அப்படிப்பட்டவனாகிய, ஸ:-அந்தபுருஷன், ஸோமலோகே விபூதிம் அநுபூய புநராவர்த்ததே - சந்திரலோகாதிகளில் போகத்தையநுபவித்து மறுபிறவியை யடைகிறான். பூலோகத்தைச் சேருகிறானென்கை.

ஸூ-ஹா—இப்படியே ப்ரணவகண்டமாகிய உகாரத்தையுபாஸித்தவனும் யஜுர்வேதமந்திரங்களால் சந்திரலோகத்தையடைவிக்கப்பட்டு அங்குள்ள ஸுகங்களையநுபவித்து மீண்டும் பூலோகத்தில் ஜந்மத்தையடைகிறான்.

ரா-ஹா—இரண்டுமாத்திரையுள்ள அபரப்ரம்மவாசகமான ப்ரணவத்தாலே எவனுக்கு அபரப்ரம்மத்தியாநம் நெஞ்சில் நிலைபெறுகிறதோ அவனும் பரலோகஸுகங்களை எல்லாமநுபவித்து பூலோகத்தில் புநர்ஜந்மத்தையடைகிறான் ஸோமலோகமென்றது மேலுள்ள எல்லாலோகங்களுக்கு முபலக்ஷணமென்று ஸூத்ரார்த்தநிரூபணத்தில் பகவத்பாஷ்யகாரரால் ஸமர்த்திக்கப்பட்டது. இப்படி இவனையஜுர்மந்திரங்கள் சந்திராதிலோகங்களை யடைவிக்கின்றன.

பதாந்வயார்த்தபேதங்கள்.

ப்ரணவவாசக சப்தங்கள் சங்கரபாஷ்யத்தில் மூன்றாம் வேற்றுமைய னவென்றும், இராமாநுஜபாஷ்யத்தில் நாலாம்வேற்றுமையன வென்றுங் கொள்ளப்பட்டன.

௫. ய꞉ புநரேதம் த்ரிமாத்ரேணோமித்யேதேநைவாக்ஷரேண பரம் புருஷமபித்யாயீத ஸ தேஜஸி ஸூர்யே ஸம்பந்ந꞉ । யதா பாதோதரஸ்த்வசா விநிர்முச்யத ஏவம் ஹ வை ஸ பாப்மநா விநிர்முக்த꞉ ஸ ஸாமபிருந்நீயதே ப்ரஹ்மலோகம் ஸ ஏதஸ்மாஜ்ஜீவகநாத்பராத்பரம் புரிஶயம் புருஷமீக்ஷதே ததேதௌ ஶ்லோகௌ பவத꞉ ॥

௫. யஃபுநரேதம்த்ரிமாத்ரேணோமித்யேநைவாக்ஷரேணபரம் புருஷமபித்யாயீதஸதேஜஸிஸூர்யேஸம்பந்நஃ | யதாபாதோதரஸ்த்வசா விநிர்முச்யதே ஏவம்ஹவைஸபாப்மநா விநிர்முக்தஃஸஸாமபிருந்நீயதேப் ரஹ்மலோகம்ச ஏதஸ்மாஜ்ஜீவகநாத்பராத்பரம்புரிஶயம்புருஷமீக்ஷதேத தேதௌஶ்லோகௌபவதஃ||

(ப-ம்) ய꞉-எவனொருவன், ஓமித்யேதேநைவ த்ரிமாத்ரேண அக்ஷரேண - மூன்றுமாத்திரையுடைய ஓமென்கிற இந்தப்ரணவாக்ஷரத்தாலே, பரம் புருஷம் அபித்யாயீத - பரமபுருஷனை யுபாஸிக்கிறானோ, ஸ꞉ தேஜஸி ஸூர்யே ஸம்பந்ந꞉ - அவன் ஸூர்யதேஜோமண்டலத்தில் சேர்ந்தவனாய், யதா பாதோதர꞉ த்வசா விநிர்முச்யதே ஏவம் ஹ வை - பாம்புபழையதோலால் விடப்படுவதுபோல், ஸ பாப்மநா விநிர்முக்த꞉ - பாபங்களாலே விடப்பட்டவனாய், ப்ரஹ்மலோகம் ஸாமபி꞉ உந்நீயதே - ஸாமமந்திரங்களால் பரம்மலோகத்தையடைவிக்கப்படுகிறான். ஸ꞉- அப்படி ப்ரம்மலோகத்தையடைந்தவன், ஏதஸ்மாத் ஜீவகநாத் பராத் பரம் - ஸம்ஸாரிஜீவர்களில் சிறந்த சுத்தாத்மஸ்வரூபத்திலும் பரிசுத்தனான, புரிஶயம் புருஷம்-புரமென்று சொல்லப்படுகிறஅந்ததேகத்திலந்தராத்மாவாயிருக்கிற பரமபுருஷனை, ஈக்ஷதே - காண்கிறான் ததேதௌ ஶ்லோகௌ பவத꞉ - இந்தப்ரணவத்யாநத்தைப் பற்றி இரண்டு ச்லோகங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன.

ஸ்ரீ-ஹா—எவனொருவன் மூன்றுமாத்திரையோடு கூடிய பூர்ணப்ரணவத்தை, பரப்ரம்மமென்று பாவிக்கிறானோ, [அசாவது-ஸூர்யாந்தரத்திலிருக்கின்ற புருஷனை மூன்றுமாத்திரையுடையதாக அறியப்பட்ட ப்ரணவத்தை யுபாஸிக்கை. ப்ரணவ தாலே பரமபுருஷனையுபாஸிக்கையன்று. ப்ரணவத்தை பராபரப்ரம்மங்களாகஉ ஸிக்கும் ப்ரகாரமேதொடங்கப்பட்டது. இவைகளுக்கு அபேதமும் சொல்லியிரு கிறது. இங்ஙனமன்றாயின் இரண்டாம்வேற்றுமைபகைக்கும். இவ்வாறு ப்ரதீகமெ னிலும் மூன்றும்வேற்றுமைப்பகையுண்டு. ஆயினும் தொடக்கத்திற்குப் பொருட் மூன்றும்வேற்றுமையையு மிரண்டாம்வேற்றுமையாகக்கொள்க. அன்றியிலே ஒ கூட்டம்வாழ ஒருவனையழிப்பதுபோல் இந்தப்ரணவம்ப்ரதீகமென்பதற்குயுக்திகள் வாதையாலிவைகளுக்குச்சேர மூன்றும்வேற்றுமை தன்றெண்டாலும் குற்றமில்லை

அவன் மூன்றும்மாத்திரை ஸ்வரூபியாய் ஸூரியதேஜஸ்ஸில் சேருகிறான் மறுபிறவியடைவதில்லை. இரண்டுமாத்திரைப்ரணவத்தை யுபாஸித்து சந்திரலோகத்தையடைந்தவனுக்கேயதன்று. இப்படிஸூரியனைச் சேர்ந்தவன் அப்போதே ஸர்பமானது தோல்புறைநீங்கி விளங்குவதுபோல் எல்லாப்பாவங்களாலும் விடப்பட்டவனாய் விளங்கி த்ருதீயமாத்ராஸ்வரூபங்களான ஸாமமந்திரங்களாலே ஊர்த்வலோகமாகிய ஹிரண்யகர்பனுடைய ஸத்யலோகத்தை யடைவிக்கப்படுகிறான். பரமமான பரமாத்மாவாகிய பரமபுருஷனை அங்குள்ள ஜீவகநனாகிய ஹிரண்யகர்பனுக்கும் எல்லாதேஹங்களுக்கு முன்னிருப்பவனாகக் காண்கிறான். இவ்விஷயத்திலிரண்டுமந்திரங்களிருக்கின்றன.

ரா-ஹா—மூன்றுமாத்திரையுள்ள ப்ரணவத்துக்கு வாச்யபூதனான பரமாத்மாவை நிரந்தரத்யாநம்பண்ணுகிற உபாஸகன் பரப்ரம்மலோகமாகிய பரமபதத்தை யடைந்து பரமாத்மாவைக்காண்கிறான். இங்குப்ரம்மலோகமென்பது ஸத்யலோகத்தையன்று. அங்குள்ளவன் பரவாஸுதேவமூர்த்தியாகிய பரமாத்மாவையநுபவிப்பதுசேராதன்றோ இங்குச்லோகங்களிருக்கின்றன.

பதார்ந்வயார்த்தப்ரதீபதங்கள்.

இராமாநுஜபாஷ்யம் சுருங்க உரைக்கப்பட்டது. மற்றவிஷயங்களில் சங்கரபாஷ்யத்தை நோக்கும். இங்கு ப்ரணவப்ரதீகமென்றும், ப்ரம்மலோகம் ஸத்யலோகமென்றும் சங்கரபாஷ்யத்தில் சொல்லப்பட்ட கருத்து மறுக்கப்பட்டது. "ஸஸாமபி:" என்கிறவிதை ஒருபதமாகக்கொண்டு ஸாமகாநங்களோடு, அல்லது ப்ரியவசநங்களோடு என்றும் பெரியோருரைப்பர். "ஸ:" "ஸாமபி:" என்றுபிரித்துப் பொருள்கூறில், "ஸவாஉநா" என்றவிடத்தில் "ஸ:" என்றும்பதமிருக்கையால் ஒருபதம்வீணாகும் என்று அவர் கருத்து. இரண்டுவாக்கியமாக்குகையும் தகாது. ஆயினும், முந்தியச்லோகங்களில், "ருக்பி:" "யஜுர்பி:" என்கிறபதங்களிருக்கையால், தோற்றுகிறக்ரமத்திற்கு விரோதம்வருகிறது. ஆகையாலவ்விடங்களுக்குப்பொருந்த அவர் கருத்தை யூகித்துக்கொள்க.

௬. திஸ்ரோ மாத்ரா ம்ருத்யுமத்ய: ப்ரயுக்தா அந்யோந்யஸக்தா அநவிப்ரயுக்தா: | க்ரியாஸு பாஹ்யாப்யந்தரமத்யமாஸு ஸம்யக்ப்ரயுக்தாஸு ந கம்பதே ஜ்ஞ: ||

௬. திஸ்ரோமாத்ராம்ருத்யுமத்ய: ப்ரயுக்தா அந்யோந்யஸக்தா அநவிப்ரயுக்தா: | க்ரியாஸுபாஹ்யாந்தரமத்யமாஸுஸம்யக்ப்ரயுக்தாஸுநகம்பதேஜ்ஞ: ||

(ப-ம்.) அந்யோந்யஸக்தா:-ஒன்றோடொன்று சேர்ந்தவையாகவும், அநவிப்ரயுக்தா:-மிகவும் பிரிந்தவையாகவும், ப்ரயுக்தா: - ப்ரயோகிக்கப்பட்ட, திஸ்ர:-மாத்ரா:-இந்தப்ரணவாக்ஷரத்தின் மூன்றுமாத்திரைகளும், ம்ருத்யுமத்ய: -அநர்த்தத்தைத்தருமவையாம், பாஹ்யாப்யந்தரமத்யமாஸு க்ரியாஸு - யஜ்ஞாதிகர்மங்களிலும், த்யாநங்களிலும், ஜபங்களிலும், ஸம்யக்ப்ரயுக்தாஸு - நன்றாகப்ரயோகிக்கப்படுமேயானால், ஜ்ஞ:-இப்படியு

பாஸிப்பவன், நகமைத - சலியான உபாஸநத்தை நிறைவேற்றி யநிஷ்டங்களையடையாமல் பலத்தைப்பெறுகிறானென்கை.

ஸா-ரா—மூன்றுமாத்திரைகளும் சேர்ச்சப்ரணவத்தை ப்ரம்மதிருஷ்டியோடு உபாஸநம்செய்யாமல் [illegible] ஆ[illegible]மூன்றுமாத்திரைகளையுபாஸிப்பவர்களுக்கு ஸம்ஸாரமுடைந்தும் நீங்காது. ப்ரம்மதிருஷ்டியோடு மூன்றுமாத்திரைகளையும்சேர்த்து, உபாஸநத்தில் ப்ரயோகிப்பவர் சோஷங்களை யடையார். ஜாகரதசை, ஸ்வப்நதசை, ஸுஷுப்தி இவைகளைப்பற்றிய ஆச் ரவிஹுபாஸநமாகிய யோகங்களில் முறையோடு ப்ரயோகித்து இவைகளைநன்குணர்ந்து. த்யாநிப்பவன் சலநத்தையடையான்.

ரா-ஹா—மநோவாக்காயங்களென்கிற கரணத்ரயத்தாலாகிய கர்மங்களிலும் மூன்றுமாத்திரைகளையும் மிகப்பிரித்தும் மிகச்சேர்த்துமன்றியே நன்கு ப்ரயோகிப்பவர்கள் அநிஷ்டங்கள் நீங்கி பயமற்றவர்களாகிறார்கள். இசலைத்தப்பாக ப்ரயோகிப்பார் துன்பத்தையடைவார்கள்.

௭. 𑌋𑌗𑍍𑌭𑌿𑌰𑍇𑌤𑌂 𑌯𑌜𑍁𑌰𑍍𑌭𑌿𑌰𑌨𑍍𑌤𑌰𑌿𑌕𑍍𑌷𑌂 𑌸𑌾𑌮𑌭𑌿𑌰𑍍𑌯𑌤𑍍𑌤𑌤𑍍𑌕𑌵𑌯𑍋 𑌵𑍇𑌦-
𑌯𑌨𑍍𑌤𑍇 । 𑌤𑌮𑍋𑌙𑍍𑌕𑌾𑌰𑍇𑌣𑍈𑌵𑌾𑌯𑌤𑌨𑍇𑌨𑌾𑌨𑍍𑌵𑍇𑌤𑌿 𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑍍𑌯𑌤𑍍𑌤𑌚𑍍𑌛𑌾𑌨𑍍𑌤𑌮𑌜𑌰-
𑌮𑌮𑍃𑌤𑌮𑌭𑌯𑌂 𑌪𑌰𑌂 𑌚𑍇𑌤𑌿 ॥

௭. ருக்பிரேதம்யஜுர்பிரந்தரிக்ஷம் ஸாமபிர்யத்தத்கவயோவேதயந்தே | தமோங்காரேணைவாயதநேநாந்வேதி வித்வாந்யத்தச்சாந்தமஜரமம்ருதமபயம்பரம்சேதி ||

(ப்-ம்.) வித்வாந் - அந்தஉபாஸகன், ருக்பி:-இருக்குக்களாலே, ஏதத்-இந்தமநுஷ்யலோகத்தையும், யஜுர்பி:-யஜுர்வேதங்களாலே, அந்தரிக்ஷம்-அந்தரிக்ஷலோகத்தையும், யத்-எந்த-மோக்ஷமார்க்கமாகிய, ஓங்காரேணைவ - ப்ரணவமாகிறதக்ஷேத்ரம் யத்-யாதொன்றை, கவய:-ஞானிகள், வேதயந்தே-காண்கின்றார்களோ, தத் - அப்படிப்பட்டப்ரம்மலோகத்தை, ஸாமபி:-ஸாமவேதமந்திரங்களாலேயும், அந்வேதி-அடைகிறான். இப்படியடைந்து, சாந்தம்-சாந்தமானதும், அஜரம்-ஜராமரணங்களில்லாததும், அபயம்-பயமில்லாததுமான, யத்-அந்தபிரம்மத்தையும், ஏதி - அடைகிறான்.

ஸா-ரா—கீழ்ச்சொல்லிய எல்லாவற்றையும் சுருக்கவிந்த மந்திரமோதுகின்றது. இருக்குக்களாலே பூலோகத்தையும், யஜுஸ்ஸுக்களாலே, சந்திரலோகத்தையும் ஸாமங்களாலே, யோகிகள்காண்கிற ப்ரம்மலோகத்தையுமடைந்து நிர்விசேஷமாய், தோஷங்களற்றுச் சுத்தமாயிருக்கிற ப்ரம்மத்தையுமோங்காரமாகிய ஆயதநத்தாலே யடைகிறான்.

ரா-ஹா—நித்யஸூரிகளால் காணப்படுகிற பரமபதத்தையடைந்து பரப்ரம்மத்தையநுபவிப்பதும் ஐஹிகாமுஷ்மிகஸுகங்களையும் ப்ரணவத்தாலே பெறுகிறான் அந்தந்தலோகங்களை இருக்குமுதலிய மந்திரங்களடைவிப்பிக்கின்றன.

## அஞ்சாவதுப்ரச்நம் - முற்றிற்று.

## அத ஷஷ்ட: ப்ரஶ்ந:

௧. அத ஹைநம் ஸுகேஶா பாரத்வாஜ: பப்ரச்ச | பகவந் ஹிரண்யநாப: கௌஸல்யோ ராஜபுத்ரோ மாமுபேத்யைதம் ப்ரஶ்நமப்ருச்சத | ஷோடஶகலம் பாரத்வாஜ புருஷம் வேத்த | தமஹம் குமாரமப்ருவம் நாஹமிமம் வேத | யத்யஹமிமமவேதிஷம் கதம் தே நாவக்ஷ்யமிதி | ஸமூலோ வா ஏஷ பரிஶுஷ்யதி யோऽந்ருதமபிவததி தஸ்மாந்நார்ஹாம்யந்ருதம் வக்தும் | ஸ தூஷ்ணீம் ரதமாருஹ்ய ப்ரவவ்ராஜ | தம் த்வா ப்ருச்சாமி க்வாஸௌ புருஷ இதி ||

௧. அதஹைநம்ஸுகேசாபாரத்வாஜ:பப்ரச்சபகவந்ஹிரண்யநாப: கௌஸல்யோராஜபுத்ரோமாமுபேத்யைதம்ப்ரஶ்நமப்ருச்சத | ஷோடஶகலம்பாரத்வாஜபுருஷம்வேத்த தமஹம்குமாரமப்ருவம்நாஹமிமம்வேத யத்யஹமிமமவேதிஷம்கதம்தேநாவக்ஷ்யமிதி ஸமூலோவாஏஷபரிஶுஷ்யதியோந்ருதமபிவததிதஸ்மாந்நார்ஹாம்யந்ருதம்வக்தும்ஸதூஷ்ணீம்ரதமாருஹ்யப்ரவவ்ராஜதம்த்வாப்ருச்சாமிக்வாஸௌபுருஷஇதி ||

(ப-ம்.) ஹே பகவந்-ஓ பூஜ்யரே, ஹிரண்யநாப: - ஹிரண்யநாபனென்கிற, கௌஸல்ய: - கோஸலதேசாதிபதியாகிய, ராஜபுத்ர:-இராஜகுமாரன், மாம்-என்னை, உபேத்ய-கிட்டி, பாரத்வாஜ - பாரத்வாஜரே, ஷோடஶகலம்-புருஷம் பதினாறுகலைகளையுடைய புருஷனை, வேத்த - அறிவீர் ஆகையாலந்தபுருஷனை எனக்குச் சொல்லவேணுமென்று, ஏதம் ப்ரஶ்நம் - இந்தப்ப்ரச்நத்தை, அப்ருச்சத - கேட்டான். நாஹம் இமம் வேத- இந்தபுருஷஸ்வரூபத்தை நானறியேன், - யதி அஹம் இமம் அவேதிஷம்-நானிந்தபுருஷனையறிவேனேயானால், கதம், தே நாவக்ஷ்யம் - உனக்கெப்படிசொல்லாமல்போவேன். யோऽந்ருதம் அபிவததி- எவன்பொய்சொல்லுகிறானோ, ஏஷ:-இவன், ஸமூலோ வா பரிஶுஷ்யதி-அடியோடு நாசத்தையடைகிறான். தஸ்மாத் நார்ஹாமி அந்ருதம் வக்தும் - ஆகையால் பொய்சொல்லமாட்டேன், இதி தம் குமாரம் அப்ருவம்-என்றுநானப்போதுராஜகுமாரனை நோக்கிச் சொன்னேன். ஸ: தூஷ்ணீம் ரதம் ஆருஹ்ய ப்ரவவ்ராஜ - பின்பு அந்தராஜகுமாரன் ஒன்றும் சொல்லாமல் தேரிலேரிக்கொண்டு புறப்படுப்போனான். தம் த்வா ப்ருச்சாமி க்வ அஸௌ புருஷ: இதி - அந்தபுருஷனெங்கிருக்கின்றானென்று அந்தப்ப்ரஶ்நத்தை, உம்மைக்கேட்கிறேன் என்று, அத ஹ ஏநம் ஸுகேஶா பாரத்வாஜ:- பாரத்வாஜரின்குமாரராகிய ஸுகேசனென்பவர் இந்த பிப்பலாதனைநோக்கிபின்பு ப்ரச்நம்பண்ணினார்.

ஸம-ஹா—கார்ய காரணரூபமாகிய வுலகெல்லாம் விஞ்ஞாநஸ்வரூபியான ஆத்மாவோடு அக்ஷரபரப்ரம்மத்தில் ஸுஷுப்தி காலத்தில் ப்ரதிஷ்டையையடைகிறதென்று சொல்லப்பட்டது. இந்த அர்த்தஸாமர்த்யத்தாலே ப்ரளயத்திலுமந்த

க்ஷரபரப்ரம்மத்திலேயேலயம். பிறப்பு மிவ்வுலகுக்கு அந்த அக்ஷரபரப்ரம்மத்தினின்றே மென்று வித்திக்கிறது. காரணமாகாத பொருளில் லயம்கூடாதன்றோ ஆத்மாவினிடத்தில் ப்ராணன் பிறக்கிறதென்று சொல்லப்பட்டது. இவ்வுலகத்துக்குக் காரணமாகிய பொருளை யறிவதால் மோக்ஷமுண்டாகுமென்று எல்லாஉபநிடதங்களுக்கும் கருத்து இதையறிந்தவன் எல்லாவற்றையு மறிந்தவனாகிறான் எல்லாமாகிறு னென்று சொல்லப்பட்டது. மேலும் சொல்லும். அந்த அக்ஷரபரப்ரமத்தையறிந்துகொள்வது முக்கியம் ஆகையால் புருஷனென்கிறதை எங்கறியவேணுமென்றறிந்து கொள்வதற்கு இந்தப்ரச்நம் துடங்கப்படுகிறது. இங்குராஜகுமாரன்கதை சொல்வது.இந்தப்ரமஞ்ஞாநம் லபிப்பது மிகவருத்தமென்றுகாட்டி முமுக்ஷுக்களுக்கு இதில்விருப்பமுண்டாம்படி செய்வதற்கும் யத்நப்படும்படி செய்வதற்கும், க்ஷத்திரியனான ஹிரண்யநாபனென்பவன் என்னையடைந்து பாரத்வாஜரேபதினாறு கலைகளையுடைய புருஷனைநீரறிவீராகையால் எனக்குச்சொல்லவேணுமென்று கேட்டான். அப்படிகேட்ட அந்த ராஜகுமாரனைநோக்கி நான் சொன்னேன் அப்பா எனக்கு இந்தபுருஷஸ்வரூபம் தெரியாது. நீகேட்டவிஷயத்தை நானறியாமலுனக்கு எப்படிச் சொல்லுவேன் என்றுசொன்னேன். இப்படிசொல்லியும் எனக்குத் தெரியாதென்கிற விஷயத்தில் ஸந்தேகித்தானப்போது எனக்குத்தெரிந்தாலுனக்குச் சொல்லமாட்டேனா இவ்வளவுசிஷ்யலக்ஷணம் நிறைந்த உனக்குச்சொல்லமாட்டேனா என்று சொன்னேன். அப்போதும் அவன் நம்பவில்லை பின்பு நான், பொய்சொல்லுவோனடியோடே யழிந்துபோவானாகையால் உனக்குநீகேட்ட புருஷனை நானறியாதிருக்க பொய்யாகச் சொல்லமாட்டேன் நானறிந்திருக்க அறியேனென்று பொய்சொல்லமாட்டேன். என்று சொன்னேன். இப்படி அவனுக்கு விச்வாஸத்தையுண்டாக்கினேன். பின்பவன் தேறிலேறிக்கொண்டு பேசாமல் புறப்பட்டுப்போனான். ஆகையாலந்தபுருஷனை நானறியும்படி சொல்லவேணும் எனக்கு நெஞ்சத்தில் சல்யம் போலிருக்கிற இந்தசந்தேகத்தை நீக்கவேணுமென்று பிப்பலாதனை ஸுகேசா என்பவர்ப்ரச்னம் பண்ணினார். இந்த ச்லோகத்தால் யோக்யனான சிஷ்யனுக்கு அர்த்தங்களை யுபதேசிக்கவேணுமென்றும் பொய்சொல்ல லாகாதென்றும் கூறப்பட்டது.

ரா-ஹா—இந்தபுருஷன் ஜீவனுபரமாத்வாஎன்று ஸந்தேகத்தை நீக்குவதற்கு இந்தப்ரச்நம் கொடுக்கப்பட்டது. இரதத்திலே போனானென்று சொல்லுகையாலந்தராஜாப்ரபுவென்று ஸூசிப்பிக்கப்படுகிறது.

பதாந்வயார்த்தபேதங்கள்.

இங்குகாட்டிய விஷயங்களையொழிந்த விஷயங்களில் சங்கரராமாநுஜபாஷ்யங்களொக்கும். இராமாநுஜபாஷ்யத்தில் இரதத்திலேபோனானென்கையால் அவ்விராஜகுமாரன் ப்ரபுவென்று ஸூசிப்பிக்கப்படுகிறது என்றதற்கு விவேகிகள் ஆத்மஜ்ஞாநத்தையே வேண்டுவார்கள் ஐச்வரியத்தையல்ல தியாரென்பது தோன்ற ப்ரபுவாகிய அரசனும்ஆத்மஜ்ஞாநத்தை விரும்பியபடியைக்காட்டி அதின் சிறப்பு கூறப்பட்டது என்று கருத்து.

உ. தஸ்மை ஸ ஹோவாச இஹைவாந்தஃஶரீரே ஸோம்ய ஸ புருஷோ யஸ்மிந்நேதாஃ ஷோடஶகலாஃ ப்ரபவந்தீதி ॥

உ. தஸ்மைஸஹோவாச இஹைவாந்தஶ்ஶரீரேஸோம்யஸபுருஷோயஸ்மிந்நேதாஃ ஷோடஶகலாஃப்ரபவந்தீதி ||

(ப்-ம்.) யஸ்மிந்வஸ்தா: ஷோடசகலா: ப்ரபவந்தி - எவனிடத்தில் மேலே சொல்லப்படும் பதினாறு கலைகளும் உண்டாகின்றனவோ; ஸ:ஏவ:புருஷ:-அந்தபுருஷன், இஹைவ அந்த:சரீரே - இந்த சரீரத்தினுள்ளேயே வஸிக்கிறான். இதி தம் ஹோவாச - என்று பிப்பலாதர் அந்தபாரத்வாஜருக்குச் சொன்னார்.

பா-ஷ்யம்—ஹ்ருதயபுண்டரீகத்தின் ஆகாயமத்யத்தில் அவித்யையினாலே பதினாறு கலைகளாகிற உபாதியோடு கூடியவன்போல் தோன்றுகிற கலைகளில்லாத ஆத்மா அறியத்தக்கவன் மற்றவிடத்திலல்ல.

டீ-கை—சரீரத்தில் ஏகதேசத்திலிருப்பவனென்கையால் ஜீவாத்மாவென்று பெறப்படுகிறது. பரமாத்மாவே மேலேசொல்லப்போகிற பதினாறுகலைகளுக்கு மிருப்பிடமாகியவைகளை ஸ்ருஷ்டிப்பவனானாலும் இந்தபதினாறுகலைகளாயுமநுபவிக்கிறவன்ஜீவனேயாகையால் ஜீவாத்மா ஷோடசகலனென்று சொல்லப்படுகிறான்.

௩. ஸ ஈக்ஷாஞ்சக்ரே கஸ்மிந்நஹமுத்க்ராந்த உத்க்ராந்தோ பவிஷ்யாமி கஸ்மிந்வா ப்ரதிஷ்டிதே ப்ரதிஷ்டாஸ்யாமீதி ||

௪. ஸ ப்ராணமஸ்ருஜத ப்ராணாச்ச்ரத்தாம் கம் வாயுர்ஜ்யோதிராப: ப்ருதிவீந்த்ரியம் மநோந்நம் அந்நாத்வீர்யம் தபோ மந்த்ரா: கர்ம லோகா லோகேஷு ச நாம ச ||

(ப்-ம்.) ஸ:-அந்த, புருஷ:, அஹம்-நான், கஸ்மிந் உத்க்ராந்தே உத்க்ராந்த: பவிஷ்யாமி - எதுவெளியேறும்போது வெளியேறுவேன். கஸ்மிந் வா ப்ரதிஷ்டிதே ப்ரதிஷ்டாஸ்யாமி - எதுநிலைபெறும்போது நிலைபெறுவேன். இதி ஈக்ஷாஞ்சக்ரே - என்றுபார்த்தான்.

பா-ஷ்யம்—இங்கு உபாதியினால் ஆரோபிக்கப்பட்ட கலைகளைநீக்கி வித்யையினால் கேவலனானபுருஷனைக்காட்ட நினைத்து, பிராணாதிகலைகள் இந்தபுருஷனிடத்தில்பிறந்தனவென்று சொல்லுகிறது ஒரு விசேஷமுமில்லாத சுத்தாத்விதீயப்ரம்மத்தைப்பேசுவது கூடாதாகையால் அவித்யையினாலே கற்பிக்கப்பட்ட கலைகளினுடையபிறப்பிருப்பிறப்புமுதலியவை ஏற்றப்படுகின்றன. இப்படி ஏற்றினாலன்றி ஒருபிரதிபாத்யப்பிரதிபாதகமும் நடவாதன்றே. இவ்வாறு ஞானரூபமான ப்ரம்மத்தில் கலைகளெல்லாம் கற்பிக்கப்பட்டதென்பது அறிவுடையார்க்கு நன்றாய்விளக்கும் ஒவ்வொருபொருளுமறிவின்றி யறியப்படுவதில்லையன்றோ ஒவ்வொன்றினுடையவும் பிறப்பிருப்பிறப்பு முதலியவை யெல்லாமறிவாலேயே தோற்றுகிறனவன்றோ;இதுகொண்டே சிலர் நெருப்போடுசேருகையால் நெய்யுருகுவதுபோல் வாஸனைஎன்கிற தோஷத்தின் ஸம்பத்தாலே நானென்றுதோற்றுகிற ஆலயவிஞ்ஞானமே விஷயரூபமாகபரிணமிக்கிறதென்றும் க்ஷணந்தோறும் உண்டாகியழிகிறதென்றும் சொல்லுகிறார்கள். இவ்வும் ஞானத்துக்கும் விஷயத்துக்குமுண்டான ஸம்பத்தாலேபிறந்த பிரமம் இதுகொண்டே சிலர்ஸுஷுப்தியில் ஸர்வசூன்யவாதம்பண்ணினார்கள். இதுவும், ஞானமில்லாதபோது விஷயம்தோற்றாமையாலும் விஷயம்தோற்றாதபோது ஞானம்தோற்றாமையாலும், விஷயம்தோற்றாதகாலமாகிய ஸுஷுப்தியில் ஞானமுமில்லை என்கிற யுக்திமூலமாகப்பிறந்த பரமம். ஆக இவைஎல்லாவற்றாலும், ஞானத்தைவிட்டு விஷயம்தோற்றுவதில்லை என்பது விளங்கும். இனி, இக்கலைகள் முதலியவையெல்லாம் ஞானத்தில் கல்பிக்கப்பட்டதென்று சொல்லுவது கூடாது; ஆத்மாவுக்குகலை

களின் ஸம்பந்தத்தாலேபிறக்கிற ஜ்ஞாநம் கலைகளின் ப்ரமத்திற்கதிஷ்டாநமாகாதன்றோ; கடம்முதலியவிஷயங்களை கோசரிக்கிறஜ்ஞாநம் நித்யனையறிபவனாகிய ஜீவாத்மாவுக்கு கலைகளின் ஸம்பந்தத்தாலே பிறந்தழிந்து கொண்டிருக்குமென்று தார்க்கிகர்கள் சொல்லுகிறார்களன்றோ. லோகாயதிகரும்பூதங்களின் தர்மமே ஜ்ஞாநமென்று சொல்லுகிறார்களன்றோ; ஆனதாலிது கூடும்வழியாதெனில், "ஸத்யஞ்ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம" "ப்ரஜ்ஞாநம் ப்ரஹ்ம" "விஜ்ஞாநகந ஏவ" இவைமுதலிய சுருதிகளில் ஆவதழிவதில்லாத ஜ்ஞாநமே யாத்மாவென்றும், அந்தஜ்ஞாநமே நாமரூபமுதலிய உபாதிகளினால் தோற்றுகிறதென்னும் போதிக்கையாலே இந்தநையாயிகர் முதலானவருடையபக்ஷம் சுருதிக்குச் சேராமையால் அந்தபக்ஷங்களைக் கொண்டு கலைகளாலே பிறக்கிற ஜ்ஞாநம் கலைகளின் பிரமத்துக்குளெவ்வாறு அதிஷ்டாநமாமென்று சங்கிக்கைதகாதென்கை. ஜ்ஞாநமுண்டானபோது விஷயங்களில்லாமலுமிருக்கின்றமையாலும், விஷயங்கள்தோற்றும்போது ஜ்ஞாநமில்லாதிருப்பதில்லாமையாலும், விஷயத்தில் ஜ்ஞாநம் வேறென்றும் நித்யமென்றும் விளங்குகிறதன்றோ. ஒருபொருளையறியும்போது மற்றொருபொருளிராமை கூடுமாகையாலும், எவ்விஷயத்தை யறியும்போதும் ஜ்ஞாநமிருக்கையாலு மிதுவிளங்கும். ஒருபொருளையறியும்போது மற்றொருபொருளின் ஜ்ஞாநமில்லையாயினும் ஜ்ஞாநஸ்வரூபமெப்போதுமுண்டன்றோ. எப்பொருளெவ்வாறறியப்படுமோ அவ்வாறறியப்படுதலாலே அப்பொருளுள்ளகாலத்திலறிவு பொருளைப்பிரியாதென்பது விளங்கும். இதனாலறியப்படாத பொருளில்லையென்பது பெறப்பட்டது. இனி பிறந்தவுடனே யழிந்துபோன பொருளும் மேருமலைமுதலிய மனிதர்நடமாடாத மலைகளின் குகைகளிலிருக்கும்பொருளுமொருவராலு மறியப்படாதாகையா லறியப்படாதபொருளில்லை யென்பதெங்ஙனமெனில்; அறியப்படாதபொருளை யுண்டென்றுரைப்பது கூடாமையால் அறியப்படாத பொருளிஃதென்று காட்டுவாருளர். ஆனதால் பொருளென்று பெயர் பெற்றறியப்படாதிருப்பதொன்றுமில்லை. இப்படியறியப்படாத பொருளுண்டென்றுரைப்பவன் ரூபத்தைக்கண்டான் கண்ணில்லையென்றும் சொல்லுவான். ஆகையாலறிவின்றிப்பொருளில்லை. பொருளின்றியறிவுண்டு; ஒருபொருளையறியும்போது மற்றொருபொருளில்லாமை கூடுமன்றோ. ஒருபொருளில்லாவிடினும் மற்றொருபொருளிலேயறிவிருக்குமன்றோ. அறிவில்லாதபோதறியப்படும் பொருளென்பது ஒருவனுக்குண்டோ. இனிஸுஷுப்தியென்கிற பேருறக்கத்திலொரு பொருளையுமறியாமையாலே யறிவென்பதுமில்லையே யெனில்; விஷயங்களை தீபம்முதலியது தோற்றுவிப்பதுபோல அறிவும் தோற்றுவிப்பதாகலின், தோற்றுவிக்கப்படும் பொருளில்லாமையாலே தோற்றுவிக்கிறதீபமில்லை என்பதுபோல அறியப்படும்பொருளில்லாமையாலேஅறிவில்லை என்பது பொருந்தாது. இருளில்வஸ்துக்கள் புலப்படாமையால் கண்ணில்லை என்பதுசேருமோ; ஸர்வசூந்யவாதியல்லாதவன் இப்படி சொல்லானன்றோ; சூந்யவாதிக்குதோற்றுவிக்கப்படும் பொருளில்லாதபோதும் தோற்றுவிக்கிற தீபம்முதலியவையிருப்பதுபோலவென்பது, தோற்றுவிக்கப்படும் விஷயங்களில்லாதபோதும் தோற்றுவிக்கிற ஜ்ஞாநமிருக்குமென்பதில், தீபமுதலிய திருஷ்டாந்தப்பொருள் சூந்யமாகையால் திருஷ்டாந்தமாகாமையின் தோற்றுவிக்கப்படும் பொருளில்லாத போது தோற்றுவிக்கிறவனில்லை என்று சூந்யவாதி சொல்லுவானெனில்; அறியப்படும்பொருளில்லாமையாலே யறிவில்லையென்கிறவாதிஅறியப்படும் பொருளில்லாமையையறிந்தன்றோ சொல்லவேண்டும். அறிந்தானுக்கிலறிவில்லை என்பதுகூடுமோ; அறியானுலெப்படி. இவ்வார்த்தை சொல்லுகிறான். ஆகையாலப்போதும் ஜ்ஞாநமில்லையென்று சொல்லலாகாது. இனி, விஷயங்களுக்கும் ஜ்ஞாநத்திற்கும் வேறுபாடின்மைய

னவிஷயங்களில்லாதபோது ஜ்ஞாநமுமில்லையெனில்; அபாவத்தை யறியப்படும்பொ
ருளென்று சூன்யவாதிகொள்ளுதலால் அறியப்படும்பொருளாகிய இவ்வபாவத்திற்
கும் ஜ்ஞாநத்திற்கும் பேதமில்லாமையால் அபாவம் நித்யமென்று சூந்யவாதியே
சொல்லுகையால் அதனில் வேருகாதஜ்ஞாநமும் நித்யமாகியெப்போதும் தோற்றுமெ
ன்று எங்கள் மதசித்தமேபெற்றது. ஜ்ஞாநமபாவமாகையால் அபாவமாய் அஸத்தாமல்
லது ஸத்தாய் நித்யமாகாதென்பது கட்டுவார்த்தை. உண்மையில் ஜ்ஞாநம ஸத்தாய
நித்யமாகாது. அநித்யமென்று மஸத்தென்றும் பேரிட்டதா லெங்களுக்கொருகுறை
யில்லை இனி அபாவ மறியப்படும் பொருளாகுது மறிவல்லவெனில். அறியப்படும்
பொருளு மறிவு மொன்ருகையா லறியப்படும் பொருளில்லாதபோ தறிவில்லையெ
ன்பதெங்களம். இனிவிஷயங்கள் ஜ்ஞாநத்தில் வேருயமையாகின்றன ஜ்ஞாநம்விஷ
யங்களில் வேருயதன்று. ஆகையால் கீழ்ச்சொல்லியதெல்லாம் பொருந்துமெனில்
இதுவும்கட்டுவார்த்தை அக்நிநெருப்பில் வேருயதன்று நெருப்பு அக்நியில் வேறுபட்
டதென்பதுபோல நகைப்பிற்கிடம். கீழ்நாம் சொன்னபடி நம்மிஷ்டம் நிறைவேறு
கைக்கிப்போது மொருகுறையில்லை இனி இவ்விரண்டும் வேறேயெனில், அப்
போதுமுன்சொல்லியபடி விஷயங்களில்லாமையாலே ஜ்ஞாநமில்லை என்பதற்கு
வழியில்லை. இனிவிஷயங் காணப்படாதபோது ஜ்ஞாநமும் காணப்படாமையால்
ஸுஷுப்தியில் ஜ்ஞாநமில்லையெனில், ஆலயஜ்ஞாநமென்பது ஸுஷுப்தியிலுமு
ண்டென்று சூந்யவாதியும் சொல்லுகிருனன்றே; ஆனதால் ஜ்ஞாநம் ஸுஷுப்தி
யிலில்லை என்பது பொருந்தாது. எங்கள்மதத்தில், ஜ்ஞாநம் தன்னைத்தானேயறிதலா
லுண்டென்ருலும், உங்கள் மதத்தில் ஜ்ஞாநம் தன்னைத்தானறியாமையால் ஸுஷு
ப்தியிலுண்டென்பது "ஸாக்ஷியற்றவார்த்தையென்று சூந்யவாதி சொல்லுவானகில்;
அறியப்படும் பொருளறிவாகாதென்று அபாவதிருட்டாந்தத்தாலே பெறப்படுதலால்
அறிவுமறியப்படுமோயி னறிவின்றியே போமன்றே. மரித்தவனை ஜீவிக்கச்செய்வது
போல அனேகசூந்யவாதிகளாலுமிந்த நீதியையழிக்கமுடியாது. இதுவுமன்றி ஜ்ஞா
நமறியப்பட்டதாகி லிந்தஜ்ஞாநத்தையறிகிற ஜ்ஞாநத்தைத் தேடவேண்டுகையால்
அநவஸ்தைதோஷம் வரும் எங்கள்மதத்தில் ஜ்ஞாநத்தையறியப்படுவதாகச் சொல்
லாமையால், தோஷமில்லை ஜ்ஞாநமறியப்படாதாகில் ப்ரம்மம் ஸர்வஜ்ஞமென்பது
கூடுமோவெனில்; அறியப்படும் பொருளெல்லாவற்றையு மறிவதே ஸர்வஜ்ஞனமை
க்கு வேண்டுவது. அறியப்படாதபொருளை யறிவதன்று அப்படியன்ருகி லறியப்ப
டாதமுயல் கொம்புமுதலியவற்றை யறியாமையால் எல்லாமதத்திலு பிரம்மம் ஸர்வ
ஜ்ஞமாகாது. அதுவுமன்றி எங்கள் மதத்தில் ஸர்வஜ்ஞனுவது மயையினுலாகையா
லே பொருந்தாதாயினும் குற்றமன்று. ஜ்ஞாநமொன்றையே யுண்டென்கையாலே
அநவஸ்தையென்கிற தோஷத்திற்கிடமில்லை எக்காலத்திலு மெத்தேசத்திலும் எல்
லாப்பொருளாயும் தோற்றுகிற ஜ்ஞாநமொன்றே நீரில்தோற்றுகிற சூர்யபிம்பமுத
லியவை பலவாகத்தோற்றுவதுபோல பலவாக தோற்றுகின்றது. இப்படிஜ்ஞாநமெ
ன்பதொன்ருய் நித்யமாய் ஸத்யமானதாகலின் இது பிரமாதிட்டாந மாகலாமென்று
கலைகளிலுரோபங்களுக்கதிட்டாநமாக ஆத்மஸ்வரூபமறியும்படி இங்கு சொல்லப்ப
டுகிறது. இனி அளவுபட்ட பொருளநித்யமாகலின் இந்தசரீரத்திலுள் அளவுபட்ட
கப்பட்டுக்கிடக்கிற ஜ்ஞாநம் நித்யமாவதுகூடாது; அப்படியாமாயின், அளவுபட்டக
லசமுதலியவையும் நித்யமாகவேண்டுமேயெனில், இந்த ப்ராணமுதலிய கலைகளுக்
குக்காரணமாக இந்தஜ்ஞாநம் சொல்லப்படுகையால், ஜ்ஞாநம் நித்யமேயாம்.இந்தஜ்
ஞாநத்தின் காரியமாய் கலைகளிலுல் பிறந்தசரீரம், தன்னுடைய காரணந்துங்கார
ணமாகிய ஜ்ஞாநத்தை தன்னுள்ளே யாக்குவதுகூடாதன்றே; இனி சரீரத்தால்பிறந்
திருக்குந்தாலுண்டான பலமானது தனக்குக்காரணமாய் இருக்கிறதும் காரண

மான பீஜத்தை தன்னுள்ளேயாக்கிக்கொள்வதுபோல் இங்கும் ஜ்ஞாநத்தை இச்சரீர [illegible] ளே [illegible] சேர்த்துக்கொள்ளலாமெனில்: இதுவிண்வாதம். அங்கு பலத்திற்குக்காரணமாய் [illegible] விருக்ஷத்தை யுண்டாக்குகிற பீஜம்வேறு; அந்தபலத்தினுள்ளிருக்கும் பீஜம் [illegible]; [illegible] நம்மொன்றேயன்றோ. இதுவுமன்றி திருஷ்டாந்தம் ஸாவயவமாகின்றது. [illegible] நிரவயவமாகின்றது. இங்கு பலயுக்திகளுமிவ்விஷயத்தைமறுக்கும். இனி, யுக்தியில்லையாயினும் சுருதியிலப்படி சரீரத்தாலளவுபட்டதாகச்சொல்லுகையால் [illegible] மளவுபட்டதே எனில்; இந்த சுருதிவாக்கியம் பொருளின் தன்மையை [illegible] ன்றோ. [illegible] ள்ளபடியைக் காட்டுவதேயன்றோ. கீழ்ச்சொல்லிய பலயுக்திகளாலும் பொருந்தாத இவ்விஷயத்தை யொருவருடனும் சொல்லானதால் உண்மையறிவிக்கிற சுருதிசொல்லுமோ; ஆனதால் தோற்றப்படுகிறபடியிலே உபசாரமாகச்சொல்லப்பட்டது யுக்திக்குசேராதவற்றை சுருதிசொல்லாது. இங்குமறுத்து* சொல்லுவது கிரமத்தையறிவித்தற்பொருட்டு பார்வையைச்சொல்வது சிருஷ்டிசேதனமூலமென வறிவித்தற்கு. பரத்வாஜர்ப்ரச்நம் பண்ணிவந்தபுருஷன் என்னுடையஉத்க்ராந்தி ப்ரதிஷ்டைகள் எக்காலத்திலெக்காரணத்தாலென்று பார்த்தானென்று சுலோகத்திற்குப் பொருள். இங்குஸாங்கியர் சொல்லுமாறு—பிரதாநமென்கிற பிரகிருதி கருத்தாவாகின்றது புருஷனென்கிற ஜ்ஞாநரூபியாகிய ஆத்மாவன்று.ஆனதால் புருஷன் ஸ்வதந்திரனாகி கருத்தாவாகிறானென்பது பொருந்தாது; ஆனதால்புருஷனுக்குப் பிரயோஜநத்தைத்தருவதற்கு. மகாந்முதலிய தத்துவங்களாக பிரதாநம்பிரவர்த்திக்கின்றது இவ்வாறுஸத்வம், ரஜஸ்ஸு, தமஸ்ஸு, என்கிற மூன்றுகுணங்களின் ஸாம்யமாகிய மூலப்பிரகிருதி பிரமாணத்தால் சிருஷ்டிக்குக்காரணமென்றறுதிப்பட்டபோது புருஷப்பிரயோஜநத்தைத் தருவதற்குதப்பாமல் பிரவர்த்திக்கின்றமையால் சேதநம்போலிருக்கிறதென்றுபசாரத்தாலே சேதநதருமமாகிய ஈக்ஷணத்தைச் சொல்லுகின்றதெனக்கொள். அன்றேல்,ஆத்மாவுக்கு துணைக்காரணமில்லாமையாலும், இச் சிருஷ்டியால் ஆத்மாவுக்குத்துன்பமே யாதலாலும், தனக்குத்தானே துன்பத்தைச்செய்து கொள்ளாமையாலும், ஆத்மா தன்னைத்தானே சிருஷ்டித்துக்கொள்வது கூடாமையின் சிருஷ்டிக்குக்காரணமின்னதென்ற சொல்லவழியில்லையாம். பிரதாநத்தைக் காரணமென்று சொல்வில் ஈக்ஷணமும், ஓரரசனுக்கு எல்லாத்தொழிலை நிறைவேற்றுகிற தொழிலாளியை அரசனே என்றுபசரித்துச்சொல்வதுபோல் உபசாரத்தாலே [illegible] ஆனதால் பிரதாநமென்கிற மூலப்பிரகிருதியே [illegible] காரணமென்பது. இவ்வாறே தார்க்கிகரும் யுக்தியே [illegible] பரமாணுக்களே ஜகத்துக்குக் காரணமென்கின்றார்கள். இவர்கள் சொல்வது பொருத்தமற்றது. ஆத்மாநிர்விகாரமானாலும் போக்தாவாவதுபோல கருத்தாவுமாகலாமன்றோ, இதனால் நிர்விகாரமான ஆத்மாவுக்கு கர்த்ருத்வம் கூடாதென்று ஸாங்கியர் சொல்லத்தகாது. அவர்கள் [illegible] போக்த்ருத்வமுண்டென்று சொல்லுகின்றார்கள் [illegible] ஆகையாலதுபோலிதுவும் கூடுமென்று [illegible] [illegible] யாக வழியில்லை. இனி ஆத்மாசிருஷ்டிகாரணமாகில் [illegible] யாகையால் அழிவு அசுத்திமுதலிய குற்றங்களின் ஸம்பந்தவிகார முதலியவை யவ்வாத்மாவிலேயே தங்கும். போக்தாவென்றாலும் இன்பம் துன்பம்புசிக்கையாகிற போகம் ஸ்வரூபமாகையால் விகாரமானதெனில்: அவித்யையின் தோஷத்தாலே ஒருவனாய் நிர்விகாரனான ஆத்மாவும் [illegible] முதலிய உபாதிகளையடைந்து கர்த்தாவாகிறானாகலால் இவ்வாறு பொய்யான [illegible] த்வமுதலியவை குற்றமாகாது. மெய்யான [illegible] ரமே தோஷமாமன்றிபொய் [illegible] காரம் தோஷமாகாதன்றோ; ஆனதால் சிருஷ்டிக [illegible] யாகை ஆத்மாவுக்கு [illegible] தயாமென்க. [illegible] வித்யையால் [illegible] ஸகதுக்கா [illegible] ள யநுபவிக்கிற அபர

* [illegible] றுகளைகளும் பிறக்குமென்று முன் சுலோகத்தில் [illegible] ருக்க, என்று 'மறுத்து' என்கிறபதத்திற்கு முன்கூட்டுக.

பூர்ணனான ஜீவனுக்கு, சாஸ்திரவிதியாலே பந்தம் கழிந்துபோனபின் நிருபாதியானஸ்வரூபம் சுத்தமாய் அத்வைதமாய் தர்மங்களுக்கிடமன்றி நிர்விகாரமாய் சிவமாய் விளங்குமென்று வேதாந்திகளின் கொள்கை. இந்த அவஸ்தையில் கர்த்ருத்வம்போக்த்ருத்வம் முதலிய விகாரங்களொன்றுமில்லை. அக்காலத்தில் எல்லாபேதவிகாரங்களும் நீங்கி ப்ரமமம் அத்வைதமாய் விளங்குகிறதன்றோ; ஸாங்கியர்களும் அவித்யையினாலேயே கருத்தாவாகையும் போக்தாவாகையுமென்று சொல்லத்தொடங்கி இப்படி சொல்லுவதற்கு முக்கியாதாரமான வேதத்தை ப்ரத்யக்ஷாதி ப்ரமாணவிரோதம் வருமென்று பயந்து நம்பாமல் வேதபாஹ்யர்களாய் போக்த்ருத்வத்தை பரமார்த்தமென்று சொல்லுகிறார்கள். ஆத்மாவைக்காட்டில் வேறான ப்ரக்ருதிதத்வத்தை மெய்யானதென்றும் கூறுகின்றார்கள். ஆனதால் வேறு சிலதார்க்கிகராலேதங்கள் மதயுக்திமறுக்கப்பட்டபோது பேச்சற்று நிற்கிறார்கள். தார்க்கிகரும் மற்றுள்ள வாதிகளால் மறுப்புண்கிறார்கள். ஆககேவலதர்க்கங்களைத் தங்கள் மதங்களுக்குக்காவலாகவெண்ணுகிற எல்லாவாதிகளு மொருவருக்கொருவர் மாம்ஸத்திற்கு விரோதப்படுகிற ஜந்துக்களைப்போல் விரோதப்பட்டு பரமார்த்த தத்வத்தையறியாதே இழந்துபோகிறார்கள், ஆனதால் இவைவிட்டு வேதாந்தங்களின் பரமார்த்த தத்வமான ஆத்மதத்வத்தி னொருமையறிந்து இதில் சிரத்தையுடையராவதற்கு நாம் இந்த தர்க்கவாதி மதங்களில் குற்றங்களைக் கூறுகிறோம். நமக்கு தர்க்கவருமென்றும் காட்டுவதற்கன்று. முமுக்ஷுக்கள் நன்மையை எண்ணியேயாம். கருத்தாவாகான்போக்தாவாகிறானென்று சொல்வதற்கு கர்த்ருத்வம் போக்த்ருத்வம் இவைகளுக்குபேதமென்? பிரதானம் கருத்தாவே என்றும், போக்தாவாகானென்றும், பிரித்துச்சொல்வதற்கு யுக்தியாது? பிரதானம்மகான் முதலியதத்வங்களாக விகரித்துப் பரிணமிக்கின்றமையாலும் புருஷனுக்கு விகாரமில்லாமையாலு மிவ்வாறு சொல்லவேணுமென்றுமுன்னே சொன்னோமே எனில்; இது பயனில்லாதவார்த்தை போககாலத்திற்குமுன்னே இல்லாதவிகாரம் போககாலத்தில் வந்ததென்று கொள்ளப்படுதலால் புருஷனுக்கு விகாரமில்லை என்பது விடப்பட்டதன்றோ இனிபோகத்திற்குப் பின்சுத்தனேயன்றோ புருஷனெனில்; பிரதானமும் பரிணமித்து பின்பரிணாமம் நீங்கி சுத்தமாகையால் நிர்விகாரமாவதற்குத்தடை என்? போககாலத்திலும் புருஷன் முன்போலவே இருக்கிறானென்றால் போகம் பொய்யென்றதாயிற்று. அப்போது விகாரம் மெய்யாமாயின், முன்சொன்னதோஷம் தப்பாது. போககாலத்தில் ஸாக்ஷிரூபமாக பிரதானமும் விகரிக்கின்றமையால் அதற்கும போகமுண்டென்று சொல்லக்கூடும். ஆத்மாவினுடைய விகாரமே போகமென்றால், பிரதானத்தின் விகாரமேபோகமென்று பிரதிவாதிசொன்னால் மறுப்பதற்குக் காரணமொன்றுமில்லை. ஆகிலிரண்டுக்கும் போகமுண்டென்றால் புருஷனுக்குப்போகத்தைத்தருவதற்கு பிரதானம்விகரிக்கிறதென்பது கூடுமோ; இதற்குப்பலவிரோதங்களுண்டானன்றோ; இனி ஸத்வஸம்பந்தமுடைய போகத்தையநுபவிக்கிற அந்தக்கரணத்தில் புருஷன் ப்ரதிபலிக்கின்றமையால்விகாரமில்லாமலே புருஷனுக்குபோகமெனில், சாஸ்திரவிதியால் புருஷனுக்கு நீக்கப்படவேண்டிய விகாரங்களொன்றுமில்லையன்றோ. அவிச்யாஸம்பந்தம் முதலியதோஷங்கள் நீங்கற்பொருட்டு சாஸ்திரவிதி என்றால், சாஸ்திரத்திலில்லாத உங்கள்மதத்தை முமுக்ஷுக்கள் விரும்பார்கள். இனி அத்வைதிகளாகிய உங்களுக்கு சாஸ்திரத்தையறிகிற வதிகாரிகளில்லாமையால் சாஸ்திரம் வீணாகிறதென்றால், ப்ராந்திதசையில் சாஸ்த்ராதிகாரிகளுண்டானமையால் சாஸ்திரம் வீணாகாது. ப்ராந்திநீங்கினபோது சாஸ்திரமே இல்லையாதலால் சாஸ்திரத்திற்குப் பயன்தேடவேண்டியதில்லை. சாஸ்திரமும் ஆத்மா வொன்றேயென்கிற ஜ்ஞானம்பிறந்தபின் பேதப்ரபஞ்சம் அடியோடழிந்து போமாகையாலே பேதவியவகாரத்திற் கிடமில்லை என்று சொல்லுகி

ரது. பேதப்ரபஞ்ச முண்டானபோது சாஸ்திரப்ரயோஜநத்தையும் சாஸ்திரமே சொல்லுகிறது. வாஜஸநேயகத்தில் பரமார்த்தசையல்லாத அவித்யாஸமயத்திலே தமுண்டாகையாலே ஸகலபேதவ்யவகாரமு முண்டென்று சொல்லப்பட்டது. பரவித்யை அபரவித்யையென்று பிரித்து முதலிலேயே சொல்லப்படுகிறது. ஆனதால் வேதாந்தப்ரமாண மகாராஜனுடைய பாகுவினால் காக்கப்படுகிற ஆத்மாவினைக்கியத்தில் விரோதம்செய்வதற்கு தார்க்கிகர்வாதமாகிய படனுக்கு சக்தியில்லை. இதனால் அவித்யையினாலே ப்ரம்மத்திற்கு பலபேதங்களும் சக்திகளுமுண்டாகையாலே ஸ்ருஷ்டிகாரணமாவதில் விரோதமில்லையென்று விளங்கும். ஆகையால் பரவாதிகள்சொல்லும் குற்றங்களுக்குள் ஒன்றுமிங்குதங்காது. இனி அரசனுடைய எல்லாவ்யாபாரங்களையும் நிறைவேற்றுகிற ப்ருத்யனை அரசனே என்பதுபோல உபசாரத்தாலேசேதநமாக பிரதானத்தை வியவகரித்ததென்பது சுருதிக்கு அமுக்கியமானபொருளையனைக்கவேண்டுதலால் தக்கதன்று. முக்கியப்பொருள் கூடாதபோதன்றோ அமுக்கியப்பொருள்கொள்ளவேணும். காட்டியவழியால் முக்கியப்பொருள் கூடுகையாலது கொள்ளப்படாது, இங்கு பிரதானம் அசேதநமாகையால் சேதநனுக்குத் தக்கபடி நியமமாய் பிரவர்திப்பது பொருந்தாது. ஆனதால் கீழ்ச்சொல்லியபடி ஜகத்துக்குகாரணம் ப்ரம்மமேயாம்;

ரா-ஸா.—இந்தஷோடசகலைகளை ஸ்ருஷ்டிப்பது ஜீவனுக்கும் பரமாத்மாவுக்குமொத்திருக்க, இந்த ஷோடசகலைகளை புஜிப்பது ஜீவனே பரமாத்மாவல்லவென்பதில் ஹேதுகாணப்படவில்லையே என்றால் ஜீவன் தன்னுடைய போகத்தைவிரும்பி இவைகளை ஸ்ருஷ்டிக்கின்றமையால் ஜீவன் போக்தாவாகிறான். பரமாத்மா தன்னுடையபோகத்தை விரும்பாமல் ஜீவனுக்கென்றே ஸ்ருஷ்டிக்கின்றமையால் பரமாத்மாவுக்குபோகமில்லை. எனக்கு கர்மபலங்களில் விருப்பமில்லையென்று, "நமேகர்மபலேஸ்ப்ருஹா" என்கிறசுலோகத்தில் பகவானருளிச்செய்தான் ஆனதால் கர்மபலங்கள் பரமாத்மாவை யொட்டுகிறதில்லை. "நமாம்கர்மாணிலிம்பந்தி" என்று பகவானாலே சொல்லப்பட்டதன்றோ; இந்த சுலோகத்திற்கு கருத்து இவ்வாறே என்பகவத்பாஷ்யகாரரால் "போக்யபோக்த்ருத்வ" என்கிற ஸூத்திரத்தில் ஸூசிப்பிக்கப்பட்டது.

௪. 𑌸 𑌪𑍍𑌰𑌾𑌣𑌮𑌸𑍃𑌜𑌤 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌚𑍍𑌛𑍍𑌰𑌦𑍍𑌧𑌾𑌂 𑌖𑌂 𑌵𑌾𑌯𑍁𑌰𑍍𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌰𑌾𑌪𑌃 𑌪𑍃𑌥𑌿𑌵𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌮𑍍 । 𑌮𑌨𑍋𑌨𑍍𑌨𑌮𑌨𑍍𑌨𑌾𑌦𑍍𑌵𑍀𑌰𑍍𑌯𑌂 𑌤𑌪𑍋 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌾𑌃 𑌕𑌰𑍍𑌮 𑌲𑍋𑌕𑌾 𑌲𑍋𑌕𑍇𑌷𑍁 𑌚 𑌨𑌾𑌮 𑌚 ॥

௪. ஸப்ராணமஸ்ருஜதப்ராணாச்சரத்தாம்கம் வாயுர்ஜ்யோதிராப: ப்ருதிவீந்திரியம் | மநோந்நமந்நாத்வீர்யம்தபோமந்த்ரா: கர்மலோகா லோகேஷுசநாமச ||

(ப-ம்.) 𑌸𑌃-அந்தபுருஷன், 𑌪𑍍𑌰𑌾𑌣𑌮𑍍-ப்ராணனையும், 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌤𑍍-ப்ராணனை ஸ்ருஷ்டித்தபின் ச்ரத்தையையும், 𑌖𑌮𑍍-𑌵𑌾𑌯𑍁𑌃 - 𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌃-𑌆𑌪𑌃-𑌪𑍃𑌥𑌿𑌵𑍀-பின்பு ஆகாயம், காற்று, தேஜஸ்ஸு, ஜலம் பூமி இவைகளையும் 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌮𑍍-இந்திரியங்களையும், 𑌮𑌨𑌃-மநஸ்ஸையும், 𑌅𑌨𑍍𑌨𑌮𑍍 - அன்னத்தையும், 𑌅𑌨𑍍𑌨𑌾𑌤𑍍-𑌵𑍀𑌰𑍍𑌯𑌮𑍍-அன்னத்தாலே பலத்தையும், 𑌤𑌪𑌃-தபஸ்ஸையும், 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌾𑌃-மந்திரங்களையும், 𑌕𑌰𑍍𑌮-கர்மத்தையும், 𑌲𑍋𑌕𑌾𑌃 - லோகங்களையும், 𑌲𑍋𑌕𑍇𑌷𑍁 - லோகங்களிலே, 𑌨𑌾𑌮 - பெயரையும், 𑌅𑌸𑍃𑌜𑌤 - ஸ்ருஷ்டித்தான்.

ப-ஸா. ரா-ஸா—ஸர்வத்துக்கும் அதிகாரியான ப்ராணனை முன்சொன்படி ஈச்வரன் ஈக்ஷணம்செய்து ஸ்ருஷ்டித்து பின் எல்லோருக்கும் நல்ல கர்மங்களில்சிரத்தை

யையும், பின்பு கர்மபலத்தை யநுபவிப்பதற்கு அதிஷ்டாநமாகிய பூதங்களையும், ஸ்ருஷ்டித்தான். இந்த பூதங்களில் ஆகாசத்தில் சப்த குணத்தையும், வாயுவில்சப்தஸ்பர்சங்களையும், தேஜஸ்ஸில் சப்தஸ்பர்சரூபங்களையும், ஜலத்தில் சப்தஸ்பர்சரூபரஸங்களையும் பூமியில் சப்தஸ்பர்சரூபரஸ கந்தங்களையும் ஸ்ருஷ்டித்தான். பின் கர்மேந்திரியங்களைந்தையும் ஜ்ஞாநேந்திரியங்களைந்தையும் இவையெல்லாவற்றிற்கு மரசனைப்போன்ற மனஸ்ஸையும் இப்படி எல்லாவற்றையும் ஸ்ருஷ்டித்து எல்லாப்ராணிகளுக்கும் ஜீவநாதாரமான அந்நத்தையும், அந்நத்தாலே சக்தியையும், இப்படி தங்கள் பலத்தாலே தோற்றியபடி எல்லாம்செய்தபாவங்களை நீக்குவதற்குக் காரணமாகிய தபஸ்ஸையும் தபஸ்ஸாலே சுத்தமான நெஞ்சையுடையவர்களுக்கு கர்மாநுஷ்டாநத்திற்கு வேண்டிய இருக்கு யஜுஸ்ஸாமம் அதர்வணம்முதலிய மந்திரங்களையும், ஜ்யோதிஷ்டோமாதி கிரியைகளையும் அந்தகர்மங்களின் பலாகிய ஸ்வர்க்காதிலோகங்களையும் அந்தலோகங்களில் தேவாதிநாமங்களையும், ஸ்ருஷ்டித்தான்.

௫. 𑌸𑌯𑌥𑍇𑌮𑌾 𑌨𑌦𑍍𑌯𑌃 𑌸𑍍𑌯𑌨𑍍𑌦𑌮𑌾𑌨𑌾𑌃 𑌸𑌮𑍁𑌦𑍍𑌰𑌾𑌯𑌣𑌾𑌃 𑌸𑌮𑍁𑌦𑍍𑌰𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌾𑌸𑍍𑌤𑌂 𑌗𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑌿 𑌭𑌿𑌦𑍍𑌯𑍇𑌤𑍇 𑌤𑌾𑌸𑌾𑌂 𑌨𑌾𑌮𑌰𑍂𑌪𑍇 𑌸𑌮𑍁𑌦𑍍𑌰 𑌇𑌤𑍍𑌯𑍇𑌵𑌂 𑌪𑍍𑌰𑍋𑌚𑍍𑌯𑌤𑍇 𑌏𑌵𑌮𑍇𑌵𑌾𑌸𑍍𑌯 𑌪𑌰𑌿𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑍁𑌰𑌿𑌮𑌾𑌃 𑌷𑍋𑌡𑌶𑌕𑌲𑌾𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑌾𑌯𑌣𑌾𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌾𑌸𑍍𑌤𑌂 𑌗𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑌿 𑌭𑌿𑌦𑍍𑌯𑍇𑌤𑍇 𑌚𑌾𑌸𑌾𑌂 𑌨𑌾𑌮𑌰𑍂𑌪𑍇 𑌪𑍁𑌰𑍁𑌷 𑌇𑌤𑍍𑌯𑍇𑌵𑌂 𑌪𑍍𑌰𑍋𑌚𑍍𑌯𑌤𑍇 𑌸 𑌏𑌷𑍋𑌽𑌕𑌲𑍋𑌽𑌮𑍃𑌤𑍋 𑌭𑌵𑌤𑌿 𑌤𑌦𑍇𑌷 𑌶𑍍𑌲𑍋𑌕𑌃॥

௫. ஸயதேமாநத்யஸ்ஸ்யந்தமாநாஸ்ஸமுத்ராயணா ஸ்ஸமுத்ரம்ப்ராப்யாஸ்தங்கச்சந்தி பித்யேதேதா ஸாந்நாமரூபே ஸமுத்ரஇத்யேவம்ப்ரோச்யதேஏவமேவாஸ்யபரித்ரஷ்டுரிமாஷ்ஷோடஶகலா꞉ புருஷாயணா꞉ புருஷம்ப்ராப்யாஸ்தங்கச்சந்திபித்யேதேசாஸாம்நாமரூபே புருஷஇத்யேவம்ப்ரோச்யதேஸ ஏஷோகலோம்ருதோபவதிததேஷஶ்லோக꞉||

(ப-ம்.) 𑌸𑌮𑍁𑌦𑍍𑌰𑌾𑌯𑌣𑌾𑌃 - ஸமுத்திரத்தை யடையாநின்றனவாய், 𑌸𑍍𑌯𑌨𑍍𑌦𑌮𑌾𑌨𑌾𑌃 - பெருகுகின்ற, 𑌇𑌮𑌾𑌃, 𑌨𑌦𑍍𑌯𑌃 - இந்த, ஆறுகள், 𑌸𑌮𑍁𑌦𑍍𑌰𑌂 - கடலை, 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 - அடைந்து, 𑌅𑌸𑍍𑌤𑌂𑌗𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑌿 - அடங்கிப்போகின்றன. 𑌤𑌾𑌸𑌾𑌂 - அந்த ஆறுகளுடைய 𑌨𑌾𑌮𑌰𑍂𑌪𑍇 - ரூபநாமங்கள், 𑌭𑌿𑌦𑍍𑌯𑍇𑌤𑍇 - மாறுகின்றன. 𑌸𑌮𑍁𑌦𑍍𑌰 𑌇𑌤𑍍𑌯𑍇𑌵𑌂 𑌪𑍍𑌰𑍋𑌚𑍍𑌯𑌤𑍇 - ஸமுத்திரமென்றே சொல்லப்படுகின்றன, 𑌯𑌥𑌾 - அதெப்படியோ; 𑌏𑌵𑌮𑍇𑌵 - இப்படியே, 𑌅𑌸𑍍𑌯 𑌪𑌰𑌿𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑍁𑌃 - இந்தத்ரஷ்டாவானவாத்மாவினுடைய, 𑌇𑌮𑌾𑌃 𑌷𑍋𑌡𑌶𑌕𑌲𑌾𑌃 - இப்பதினாறுகலைகளும், 𑌪𑍁𑌰𑍁𑌷𑌾𑌯𑌣𑌾𑌃 - பரமபுருஷனையாதாரமாகவுடையனவாய், 𑌪𑍁𑌰𑍁𑌷𑌂 - பரமாத்மாவை, 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 - அடைந்து, 𑌅𑌸𑍍𑌤𑌂𑌗𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑌿 - லயிக்கின்றன, 𑌚𑌾𑌸𑌾𑌂 - அந்தகலைகளினுடைய, 𑌨𑌾𑌮𑌰𑍂𑌪𑍇 - ரூபநாமங்கள், 𑌭𑌿𑌦𑍍𑌯𑍇𑌤𑍇 - வேறுபடுகின்றன, 𑌪𑍁𑌰𑍁𑌷 𑌇𑌤𑍍𑌯𑍇𑌵𑌂 𑌪𑍍𑌰𑍋𑌚𑍍𑌯𑌤𑍇 - புருஷனென்றே சொல்லப்படும். 𑌸𑌃 𑌏𑌷𑌃 - அப்படிப்பட்ட இந்தபுருஷன், 𑌅𑌕𑌲𑌃 - கலாஸம்பந்தமில்லாதவன். 𑌅𑌮𑍃𑌤𑍋 𑌭𑌵𑌤𑌿 - அம்ருதனாயிருக்கிறான், 𑌤𑌦𑍇𑌷𑌃 𑌶𑍍𑌲𑍋𑌕𑌃 - அந்தபுருஷஸ்வரூபத்தைப்பற்றி பீஜசலோகம் சொல்லப்படுகிறது.

ஸம்-ஸா.—கடலில் கலந்த ஆறுகள்போல, குருபதேசத்தாலே கலைகள் நீங்கும் படியுபாஸிக்கிறவனும் புருஷனைச்சேர்ந்து தனது நாமரூபங்கள்மாறி புருஷனென்றே சொல்லப்படுவான். இவ்வாறு கலைக..ன் ஸ பந்தம் நீங்கப்பெறுவானையால் முக்த ஞகிறான்,

ரா-ஸா.—இப்படி ஜீவாத்மாவைப்பற்றுகிற கலைகள் பரமாத்மாவோடு ஸம்பந்தப் படாமையால், பரமாத்மா நிஷ்களனென்றும் ஆனதால் முமுக்ஷுக்க ளுபாஸித்து தங்கள் தங்களுக்குண்டான போக்த்ருத்வமாகிய கலாஸம்பந்தத்தை நீக்கிக்கொள்ளுகிறார்களென்றும் சொல்லுகிறது. கங்கையமுனை முதலிய நதிகள் ஸமுத்திரத்தைச் சேர்ந்து தங்கள் நாமரூபங்களை யழித்துக்கொள்ளுகின்றனவேயன்றி ஸமுத்திரத்திற்கு நாமரூப விகாரங்களையுண்டு பண்ணுவதில்லையன்றே; இவ்வாறே போக்தாவாகிய ஜீவாத்மாவுக்கும் அவனையடைந்தபோது கலாஸம்பந்தம் நீங்கிப்போகின்றது. கல்லிலடிபட்டகத்திக்குக் கூர்மையழிவதுபோல் கலைகளுக்கு போகத்தைதருகிற சக்தியழிந்துபோகின்றது என்கை. இவைகளையிவ்வாறு செய்விப்பவன் பரமபுருஷனே யாகையால் அவனிடத்தில் இவைகளுக்கு ஸ்வதந்திரசக்தியில்லை அவனோடொன்று சேர்ந்து அவனேயென வழங்கப்படுகிறது. ஆக, பரமபுருஷனுக்கு இக்கலைகளினலாகிய போகமில்லையானதால் பரமாத்மா நிஷ்கலனென்று சொல்லப்படுகிறான். ஆகையால் அம்ருதஸ்வரூபியாகிறான். இவ்விஷயத்தையோதும் சுலோகங்களிருக்கின்றன.

௬. 𑌅𑌰𑌾 𑌇𑌵 𑌰𑌥𑌨𑌾𑌭𑍌 𑌕𑌲𑌾 𑌯𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌾𑌃 ।
𑌤𑌂 𑌵𑍇𑌦𑍍𑌯𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑌂 𑌵𑍇𑌦 𑌯𑌥𑌾 𑌮𑌾 𑌵𑍋 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌃 𑌪𑌰𑌿𑌵𑍍𑌯𑌥𑌾𑌃 ॥

௬. அரா இவ ரதநாபௌ கலா யஸ்மிந் ப்ரதிஷ்டிதா: |
தம் வேத்யம் புருஷம் வேத மா வோ ம்ருத்யு: பரிவ்யதா: ||

(ப்-ம்.) 𑌯𑌸𑍍𑌮𑌿𑌨𑍍-எந்தபரமாத்மாவினிடத்தில், 𑌰𑌥𑌨𑌾𑌭𑍌-தேர்ச்சக்கிரத்தில், 𑌅𑌰𑌾𑌃 𑌇𑌵-அரங்கள்போல, 𑌕𑌲𑌾𑌃-கலைகள், 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌾𑌃-நிலைபெற்று நிற்கின்றனவோ; 𑌤𑌂-𑌵𑍇𑌦𑍍𑌯𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑌂-அந்தமுமுக்ஷுவேத்யனுனபுருஷனை, 𑌵𑍇𑌦-அறிந்தால், 𑌵𑌃-அப்படியறிந்த உங்களுக்கு, 𑌪𑌰𑌿𑌵𑍍𑌯𑌥𑌾𑌃-துன்பங்களை, 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌃-ஸம்ஸாரமானது, 𑌮𑌾-செய்யாது.

ஸம்-ஸா.—பிறப்பு இருப்பு இறப்புமுதலிய எல்லாக்காலங்களிலும், இப்பிரபஞ்சத்திற்கு நிலையிடமாய புருஷனை யறியாதபோது துன்பப்படவேணுமானதாய் சிஷர்களேயப்புருஷனையறிந்து கொள்ளுங்கோள்.

ரா-ஸா.—இவ்வாறு எல்லாவற்றிற்கும் காரணமாய பரமாத்மஸ்வரூபத்தையறிந்த துன்பமடையார்.

௭. 𑌤𑌾𑌨𑍍𑌹𑍋𑌵𑌾𑌚𑍈𑌤𑌾𑌵𑌦𑍇𑌵𑌾𑌹𑌮𑍇𑌤𑌤𑍍𑌪𑌰𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌵𑍇𑌦 𑌨𑌾𑌤𑌃 𑌪𑌰𑌮𑌸𑍍𑌤𑍀𑌤𑌿 ॥

௭. தாந்ஹோவாசைதாவதேவாஹமேதத்பரம்ப்ரஹ்ம வேதநாத பரமஸ்தீதி ||

(ப்-ம்.) 𑌤𑌾𑌨𑍍-அந்தசிஷர்களை, 𑌉𑌵𑌾𑌚-பிப்பலாதர் சொன்னார் 𑌏𑌤𑌤𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌏𑌤𑌾𑌵𑌦𑍇𑌵𑌾𑌹𑌂 𑌵𑍇𑌦-இந்தபிரம்மத்தை இவ்வளவே நானறிவன், 𑌨 𑌅𑌤𑌃 𑌪𑌰𑌮𑌸𑍍𑌤𑌿-இதற்குமேலறிய வேண்டுவதொன்றுமில்லை. 𑌇𑌤𑌿-இப்படி பிப்பலாதர் சொன்னார்.

பாஷ்யம்.— இவ்வாறு சிஷ்யர்களுக்கு உபதேசித்து, இவர்கள் ஸர்வ ஸந்தேகமுநீங்க இவ்வளவே ப்ரம்மஸ்வரூபத்திலறியவேண்டியது. இவ்வளவில் நானுமறிவேன் என்று அவர்கள் மகிழும்படி பிப்பலாதர்சொன்னார்.

அ. [illegible]

அ. தேதமர்சயந்தஸ்த்வம்ஹிந:பிதாயோஸ்மாகமவித்யாயா:பரம் பாரம்தாரயஸீதிநம:பரமருஷிப்யோநம:பரமருஷிப்ய: ||

(ப-ம்.) தே - அந்த சிஷ்யர்கள், தம் - அந்த பிப்பலாதமகாருஷியை, [illegible] - பூசித்தவர்களாய், த்வம் - நீரே, ந: - நமக்கு, பிதா - தந்தையாகிறீர், ய: - எந்த நீரே, அஸ்மாகம் - நம்மை, அவித்யாயா: பரம் பாரம் - அவித்தையினக்கரையை, தாரயஸி - தாண்டவைக்கின்றீர், [illegible] - பரமர்ஷிகளை நமஸ்கரிக்கிறோம், இதி - என்று சொன்னார்கள்.

பாஷ்யம்.—இவ்வாறு பிப்பலாதரால் உபதேசித்த பிரம்மஸ்வரூபத்தை யறிந்து க்ருதார்த்தர்களாய் இப்படி மகார்த்தமான பிரம்மஸ்வரூபத்தையுபதேசித்த ஆசாரியனுக்கு ப்ரதிஸம்மாநமாய் செய்யவேண்டியதொன்றும் தோற்றாமல் அவருடைய மலரடிகளில் வீழ்ந்து தலையால்வணங்கி புஷ்பாஞ்சலியிட்டுப் பூசித்து ப்ரம்மவித்தையாகியஜராமரணம்முதலிய தோஷமொன்றுமில்லாத சரீரத்தையுண்டுபண்ணித் தந்த தந்தையே நீர்நமக்குபயமற்ற ப்ரம்மஸ்தாநத்தையடையும்படி இந்த ஸம்ஸாரத்தில்மயக்கமுற்று பிறப்பிறப்பு முதலியதுன்பங்களுக்கிடமாகிய அவித்யையாகிய பெருங்கடலினின்றும் வித்யையென்கிற ஓடத்தாலே அக்கரைசேர்ந்த மகாநுபாவர் நீர் ஆனால் மீட்சியற்ற மோக்ஷமாகிய ப்ரம்மத்தைத்தந்த உம்மில் சிறந்ததந்தையுண்டோ. உலகத்தில் துன்பத்திற்கிடமாகிய சரீரத்தையுண்டு பண்ணித்தந்த தந்தையையே மிகப் பூசித்து வணங்குவதாயின் இப்படியழிவற்ற ஸாகத்தையுண்டுபண்ணின உம்மைநாங்கள் என்சொல்லிப் புகழுவோம். உமக்குநமஸ்காரம் இச்சம்பிரதாயத்தை நடத்திவந்தமுன்னோரான பரமர்ஷிகளுக்கு நமஸ்காரம் என்று சொன்னார்கள் இரட்டித்தது ஆதரம்தோற்றுவதற்கு.

ப்ர-ஸா.—இவ்வாறு சிஷ்யர்களும். உம்மால்வந்த ஜ்ஞாநஜந்மம் சிறந்தஜந்மம்ஆனதால் நீரேநமக்கு முக்கியபிதாவாகின்றீர் நம்மை இச்சம்சாரமாகிய சமுத்திரத்தினின்றும் கரையேற்றுவிக்கின்றீர்; என்றிப்படி பலவாறாகக்கொண்டாடி வணங்கினார்கள். பரமர்ஷிகளையும் வணங்கினார்கள். இரட்டித்துச்சொன்னது உபநிஷத்து முற்றுபெற்றதென்பது தோற்றுவித்தற்கு. இங்கு பிறர்சொல்லுமாறு; ஜீவனில் வேறாயப்ரம்மமில்லையென்றுணர்வதற்கு இப்பதினாறுகலைகளையுடைய ஜீவனேப்ரம்மம் இவனில்வேறுபட்ட தொன்றுமில்லையென்று, "[illegible]" "[illegible]" என்கிற வாக்கியத்தால் கூறப்பட்டதென்பதாம். இதரவ்யபதேசாதிகரணவிரோதம் வருமானதாலிது சேராது; எப்படிஎன்றால் அவ்வதிகரண ப்ரம்மத்துக்கும் ஜீவனுக்கும் பேதமில்லையாயின் ஜீவர்களுக்குவருகிற துன்பங்களெல்லாம் ப்ரம்மத்தாலே யுண்டானவையாகையால் தனக்குத்தானே துன்பத்தைச்செய்து கொண்டது ப்ரம்மமென்கிறதோஷம்வருமாகையால் ஜீவனுக்கும் ப்ரமத்திற்கும் பேதமுண்டு;

ஆனதால் தோஷமில்லையென்று நிச்சயிக்கப்பட்டது. "தத்த்வமஸி" "அயமாத்மா ப்ரஹ்ம" இவைமுதலியவாக்கியங்களாலே, ஜீவன் ப்ரம்மத்தில்வேறானவனல்லனென்று சொல்லப்பட்டதென்றால் அங்கு இவ்வாறுவிசாரம் தொடுக்கிறோம்.—இவ்வாக்கியங்களால் ஜீவனைப்ரம்மமென்று போதிக்கப்படுமாயின் எல்லாவற்றையு மறிந்த ப்ரம்மந்தனக்கு ஸுகமாகிய உலகத்தைச்ருஷ்டியாமே துன்பமான உலகத்தையுண்டுபண்ணுகிறதென்கிற தோஷம்வரும். ஆத்யாத்மிகம் ஆதிதைவிகம் ஆதிபௌதிகம்முதலியகணக்கற்ற தோஷங்களுக்கு இவ்வுலகம் நிலமாயிருக்கின்றது. இவ்வாறுதுன்பமுள்ளதாகிய தன்னுடைய ஸங்கடத்திற்கு ஒருபுத்தியுடையவன் தானேஹேதுவாக மாட்டான். ஜீவன்வேறு; ப்ரம்மம்வேறு; என்றுபோதிக்கிற சுருதிகள் ஜகத்துக்கும் ப்ரம்மத்துக்கும்பேதமில்லையென்று கொள்ளுகிற உன்னாலே கைவிடப்பட்டனவாம்பேதமுண்டென்னில்ஐக்யம்கூடாது. உபாதியினால்வந்தபேதத்தைபேதச்ருதிகள் சொல்லுகின்றன. ஸ்வாபாவிகமானவபேதத்தை யபேதச்ருதிகள் சொல்லுகின்றனவென்று சொல்லில், அப்போது இவ்வினாவுக்கு விடைதரவேண்டும். ஸ்வபாவத்தால் தன்னில் வேறாகாதவன் ஜீவனென்பதை உபாதிஸம்பந்தமில்லாத ஜகத்காரணமாகிய ப்ரம்மம்அறியுமோ; அல்லது அறியாதோ; அறியாதாயின் ஜகத்காரணமாகிய ப்ரம்மம் எல்லாவற்றையுமறியுமென்பதற்குவாயில்லை அறியுமாயின், தன்னில்வேறாகாத ஜீவன்துன்பத்தைத் தன்துன்பமென்றறிந்தப்ரம்மம் தனக்குஸுகத்தைசெய்துகொள்ளாமேதுன்பத்தையுண்டாக்கிக் கொண்டதென்றும் குற்றந்தப்பாது. அஜ்ஞானத்தாலே பேதமென்றாலும் முன்சொன்னதோஷங்கள் நீக்கவழியில்லை மற்றுமனேகதோஷங்களும் வருமென்று பூர்வபக்ஷம்செய்து; கீழ்ச்சொல்லியதுக்கங்களை யநுபவிக்கின்றஜீவாத்மாவைக்காட்டில் ப்ரம்மம் வேறுபட்டதாகையாலே கீழ்ச்சொன்னதோஷங்கள் புகுதற்கிடமில்லை. ப்ரம்மத்தில் ஜீவன்வேறென்று பலசுருதிகளும் சொல்லுகின்றன. "ய ஆத்மநி திஷ்டந்நாத்மநோऽந்தரோ யமாத்மா ந வேத யஸ்யாத்மா சரீரம் ய ஆத்மாநமந்தரோ யமயதி ஸ த ஆத்மாந்தர்யாம்யம்ருத:" (எவனொருவன் ஜீவாத்மாவிலிருந்துகொண்டு ஜீவனுக்குள்ளேயாயிருக்கிறானோ; யவனை இந்த ஜீவனறியானோ; யவனுக்கு இந்தஜீவன்சரீரமோ; யவனிந்தஜீவனையுள்ளிருந்து நியமிக்கிறானோ; அப்படிப்பட்ட நிர்தோஷமாகிய ப்ரம்மமென்கிற பரமாத்மா உனக்கு அந்தர்யாமியாயிருக்கின்றான்) "ப்ருதகாத்மாநம் ப்ரேரிதாரம் ச மத்வா ஜுஷ்டஸ்ததஸ்தேநாம்ருதத்வமேதி" (ஜீவனையும் ஜீவனுக்குநியாமகனான பரமாத்மாவையும் வேறென்றறிந்தவன் அந்தபரமாத்மாவின் ப்ரீதிபெற்று, அவனாலருளப்பட்ட மோக்ஷத்தையடைகிறான்.) "ஸ காரணம் கரணாதிபாதிப:" (ஜீவனில்வேறாய் ஜீவனை நியமிக்கிற பரமாத்மா காரணவஸ்துவாகிய பரப்ரம்மம்.) "தயோரந்ய: பிப்பலம் ஸ்வாத்வத்த்யநச்நந்நந்யோ அபிசாகசீதி" (ஜீவாத்மாபரமாத்மா என்கிற இருவரில்ஒருவன்கர்மத்தாலே துன்பப்படுமவன் ஒருவன் கர்மஸம்பந்தமில்லாதவனும் ஜீவனை நியமித்துக்கொண்டு விளங்குகிறான்) "ஜ்ஞாஜ்ஞௌ த்வாவஜாவீசநீசௌ" (எல்லாவற்றையுமறிந்த பரமாத்மா ஒருவன். அஜ்ஞனாகிய ஜீவனொருவன். இவ்விருவரில் ஒருவன் பரதந்திரன்; ஒருவன் ஸ்வதந்திரன்.) "ப்ராஜ்ஞேநாத்மநா ஸம்பரிஷ்வக்த:" (ப்ராஜ்ஞனை பரமாத்மாவினால் லணைத்துக்கொள்ளப்பட்டவன் ஜீவாத்மா) "ப்ராஜ்ஞேநாத்மநாந்வாரூட:" (பரமாத்மாவினால் நியமிக்கப்பட்டவன் ஜீவாத்மா) "க்ஷேத்ரஜ்ஞேசஸ்ய ஜ்ஞஸ்ய தத்வேத்ததஸ்ய

...ந்யோ மாயயா ஸந்நிருத்த:" (மாயையென்கிற பிரகிருதியை நியமிக்கிற பரமாத்மா பிரகிருதியைக்கொண்டு ஜகத்தைஸ்ருஷ்டிக்கின்றான் இந்த பிரகிருதியில் பரமாத்மாவில் வேறான ஜீவனகப்பட்டுக்கிடக்கிறான்) பிரகிருதி ஜீவன் இவ்விரண்டுக்கும் நியாமகனான பரமாத்மாகல்யாணகுணங்களால் நிறைந்தவன்) "நித்யோ நித்யாநாம் சேதநஶ்சேதநாநாம் ஏகோ பஹூநாம் யோ விததாதி காமாந்" (நித்யரராயனேகராயிருக்கிற சேதனர்களுக்கு நித்யனா யொருவனாயிருக்கிறபரமசேதனன் வேண்டியவற்றைத்தருகிறான்.) "யஸ்யாவ்யக்தம் ஶரீரம் யமவ்யக்தம் ந வேத யஸ்யாக்ஷரம் ஶரீரம் யமக்ஷரம் ந வேத ஏஷ ஸர்வபூதாந்தராத்மா அபஹதபாப்மா திவ்யோ தேவ ஏகோ நாராயண:" (யவனவ்யக்தத்திலுள்ளிருக்கிறானே யவனுக்கு அவ்யக்தம்சரீரமோ யவனையவ்யக்தமறியாதோ; யவனக்ஷரத்திலுள்ளிருக்கிறானே யவனுக்கு அக்ஷரம் சரீரமோ; யவனையக்ஷரமறியாதோ; இப்படிப்பட்டவன் எல்லாபூதங்களுக்கு மந்தராத்மாவானவன் அவன்றோஹேயப்ரத்யநீகனான நாராயணனே) இவைமுதலிய சுருதிகளில் ஜீவன்வேறு; ப்ரம்மம்வேறு; இவைகளுக்கு அபேதமில்லையென்று நன்குவிளங்குமன்றோ; மண்ணாங்கட்டிமுதலிய விகாரங்களுக்கெப்போது மிடமாய் மிகவும் ஹீநமாயிருக்கிற வசிக்கும் நிர்விகாரமாயநிபரிசுத்தமாய் அகிலஹேயப்ரத்யநீகமாய் ஸமஸ்தகல்யாணகுணங்களுக்கு மாஸ்பதமாய்மற்றுள்ள எல்லாவற்றிலும் விலக்ஷணமாய் ஜ்ஞாநாநந்தஸ்வரூபமான பரப்ரம்மத்துக்கும் அபேதம் ஸம்பவியாதாப்போல, ஹேயாஸ்பதனாய் மின்மினிபோன்ற ஜீவனுக்கும் அபஹதபாப்மாவாய் அநவதிகாதிசயாஸங்க்யேய கல்யாணகுணகணைஸ்பதமான ப்ரம்மத்துக்கும் அபேதம் ஸம்பவியாது. "ஆத்மக்ருதே:" முதலியவிடங்களில்சொல்லிய ஸாமாநாதிகரண்யம் சரீராத்மபாவத்தாலே யாகையால் இதற்கு அநுகூலமேயன்றி விரோதியன்று இவ்வர்த்தம் "பரிணாமாத்" என்கிற ஸூத்திரத்தில் நன்றாகஉபபாதிக்கப்பட்டது. ஸூக்ஷ்மசிதசித்விசிஷ்டம்காரணம். ஸ்தூலசிதசித்விசிஷ்டம்கார்யம் ஆகையாலே எல்லாச்ருதிகளுக்கு அவிரோதம் ஸித்திக்கிறது. இப்படிசொல்லும்போது அபேதமும் ஸ்வரூபஸ்வபாவா ஸங்கரமும்ஸித்திக்குமன்றோ. "ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீத்" ஸ்ருஷ்டிக்குமுன்புஸத்தொன்றேயுண்டு என்றஒரே பொருளுண்டென்று சொல்லும்போதும் அசித்துகூடிய ஜீவனடங்கியிருந்தானென்று ஸம்மதிக்கவேணும் "வைஷம்யநைர்க்ருண்யே ந ஸாபேக்ஷத்வாத்" "நகர்மாவிபாகாதிதி சேந்நாநாதித்வாத் உபபத்யதே சாப்யுபலப்யதே ச" (ஜீவனும் கர்மமுமனாதியாகையாலே விஷமமாக ஸ்ருஷ்டித்தானென்றும் குற்றமில்லை) என்கிற ஸூத்திரங்களில் ஸ்ருஷ்டிக்குமுன்பு ஜீவனிருந்தானென்று சொல்லப்பட்டதன்றோ; ஒன்றேயாயிருந்ததென்பது நாமரூபங்கள் நீங்கியிருந்தமையால்சேரும். ஆகையால் ப்ரம்மம்காரணமாமென்பதில் ஒருகுற்றமுமில்லை என்று அவ்வதிகரணத்தில் பகவத்பாஷ்யகாரரருளிச்செய்தார். இப்படியே, "[illegible]" "[illegible]" "[illegible]"

யுணருகையாகிற வித்யைக்கும் நான்கர்த்தாவாகிறேனென்று கர்மங்களையநுஷ்டிப்பதற்கும் சேர்க்கைகூடாதன்றோ "பைக்ஷாசர்யஞ்சரந்த:" "ஸந்யாஸயோகாத்" என்பவை முதலானவிடங்களிலே இது விளங்கச்சொல்லப்பட்டது. க்ருஹஸ்தாச்ரமத்திலிருந்தவர் இக்கப்ரம்மவித்யையை உபதேசிக்கின்றமையால் அவர்க்கும் ப்ரம்மவித்யையிலதிகாரம் கூடுமென்றுசிலர் சொல்லுவர் அதுபொருந்தாது மேற்சொல்லியபடி காமமும்வித்யையும் விரோதப்பட்டவையானதால் இந்தலிங்கம் ஸதியாது இப்படிப்பட்ட வித்யையையோதுகிற இவ்வுபநிஷத்திற்கு சுருக்கவ்யாக்யானம் பண்ணுகிறோம் இந்த உபநிஷத்தென்கிற பேராலேயே இவ்வித்யையின் பெருமைவிளங்கும் தருமம் ஞானம் வைராக்கியம் ஐசுவரியம்முதலியவற்றால் மற்றோரை மிக்காநின்றமையால் இந்திரனுள்ளிட்ட தேவக்கூட்டங்களில் சிறந்தவனாய் பிரமன்பலவகைப்பட்ட ஸ்ருஷ்டிகளில் ஒருஸ்ருஷ்டியில் முதல்வனாய அதர்வனென்பவனுக்கு எல்லாவித்யைகளுக்கும் நிலயிடமாய் ப்ரம்மவித்யையுபதேசித்தான். இங்கு பிரமனையும் வித்யையும்கொண்டாடியது வித்யையைஸ்துதிசெய்வதற்கு.

ரா-ஹ — ஸ்ருஷ்டிகர்த்தான ப்ரம்மா தன்முதல்குமாரனாகிய அதர்வனென்பவனுக்கு ப்ரம்மவித்யையையுபதேசித்தான். ப்ரம்மஸதையறிந்தபோது அறியவேண்டியதொன்றுமில்லையானதால் எல்லாவித்யைக்கும் ப்ரம்மவித்யையை ப்ரதிஷ்டையென்றது வித்யையினுடைய ப்ரவ்ருத்திப்ரப்திபதற்கு கதைசொல்லப்படுகிறது.

௨. 𑌅𑌥𑌰𑍍𑌵𑌣𑍇 𑌯𑌾𑌂 𑌪𑍍𑌰𑌵𑌦𑍇𑌤 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌽𑌥𑌰𑍍𑌵𑌾 𑌤𑌾𑌂 𑌪𑍁𑌰𑍋𑌵𑌾𑌚𑌾𑌙𑍍𑌗𑌿𑌰𑍇 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌮𑍍 । 𑌸 𑌭𑌾𑌰𑌦𑍍𑌵𑌾𑌜𑌾𑌯 𑌸𑌤𑍍𑌯𑌵𑌾𑌹𑌾𑌯 𑌪𑍍𑌰𑌾𑌹 𑌭𑌾𑌰𑌦𑍍𑌵𑌾𑌜𑍋𑌽𑌙𑍍𑌗𑌿𑌰𑌸𑍇 𑌪𑌰𑌾𑌵𑌰𑌾𑌮𑍍॥

௨. அதர்வணே யாம்ப்ரவதேத ப்ரஹ்மாதர்வா தாம் புரோவாசாங்கிரே ப்ரஹ்மவித்யாம் | ஸபாரத்வாஜாய ஸத்யவாஹாய ப்ராஹபாரத்வாஜோங்கிரஸே பராவராம் ||

(ப-ம்.) 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾 𑌅𑌥𑌰𑍍𑌵𑌣𑍇 𑌯𑌾𑌂 𑌪𑍍𑌰𑌵𑌦𑍇𑌤 - பிரமன அதர்வா என்பவனுக்கு எந்தவித்யையையுபதேசித்தானோ, 𑌤𑌾𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌂 𑌅𑌥𑌰𑍍𑌵𑌾 𑌅𑌙𑍍𑌗𑌿𑌰𑍇 𑌪𑍁𑌰𑍋𑌵𑌾𑌚 - அந்தப்ரம்மவித்யையை அதர்வா என்பவர் தன்னுடைய சிஷ்யராகிய அங்கிஎன்பவருக்குச்சொன்னார், 𑌸 𑌭𑌾𑌰𑌦𑍍𑌵𑌾𑌜𑌾𑌯 𑌸𑌤𑍍𑌯𑌵𑌾𑌹𑌾𑌯 𑌪𑍍𑌰𑌾𑌹 - அந்த அங்கிஎன்பவர் பாரத்வாஜகோத்ரியாகிய ஸத்யவாஹரென்பவருக்குச்சொன்னார், 𑌭𑌾𑌰𑌦𑍍𑌵𑌾𑌜𑌃 𑌅𑌙𑍍𑌗𑌿𑌰𑌸𑍇 𑌪𑌰𑌾𑌵𑌰𑌾𑌮𑍍 - அறியாதாரறிந்தோரிடத்தி லறியவேண்டுகையால் பராவரையென்கிற அந்தபரம்மவித்யை அங்கிராஎன்பவருக்குஅந்தபாரத்வாஜராகிய ஸத்யவாஹர் சொன்னார்.

பதாந்வயார்த்தபேதங்கள்.

பதவுரையாலே விளங்கும் கருத்து சங்கரராமாநுஜ பாஷ்யங்களிரண்டுக்குமொக்கும் சிறிதும் பேதமில்லை.

௩. 𑌶𑍌𑌨𑌕𑍋 𑌹 𑌵𑍈 𑌮𑌹𑌾𑌶𑌾𑌲𑍋𑌽𑌙𑍍𑌗𑌿𑌰𑌸𑌂 𑌵𑌿𑌧𑌿𑌵𑌦𑍁𑌪𑌸𑌨𑍍𑌨𑌃 𑌪𑌪𑍍𑌰𑌚𑍍𑌛 । 𑌕𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌨𑍁 𑌭𑌗𑌵𑍋 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌤𑍇 𑌸𑌰𑍍𑌵𑌮𑌿𑌦𑌂 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌤𑌂 𑌭𑌵𑌤𑍀𑌤𑌿॥

௩. ஶௌநகோ ஹவை மஹாஶாலோங்கிரஸம்விதிவதுபஸந்ந: பப்ரச்ச | கஸ்மிந்நுபகவோ விஜ்ஞாதே ஸர்வமிதம் விஜ்ஞாதம்பவதீதி||

(ப-ம்.) மஹாஶாலஃ ஶௌநகஃ - க்ருஹஸ்தாச்ரமிகளில் சிறந்தவராய சுநகரென்பவரின் குமாரர், ஸம்ரஹஸ்யவிஷயமுடையவஸஞ்சேவ ஹ வை அங்கிரஸம் விதிவத் - சாஸ்திரப்படி யடைந்து விணவினார், ஹ பகவ: கஸ்மிந்நுவி ஜ்ஞாதே ஸர்வமிதம் விஜ்ஞாதம் பவதி - எல்லாமறிந்த முநிவரே எப்பொருளையறிந்தாலிவ் வுலகெல்லா மறியப்பட்டதாமென்று வினவினார்.

ஸா-பா.—இங்கு ஆசாரியரிடத்தில் விதிப்படி யடைந்தது சொல்லப்பட்டாலும் மேலோர்க்கும் நமக்குமிந்த விதி முக்யமேயாம். ஆனதால் நடுவில் கூறப்பட்டது.

ரா-பா.—சுநகரின் குமாரராகிய மகாகிருகஸ்தர், ஸமித்பாணி என்கிற விடத்தில் சொல்லப்பட்ட விதிப்படியடைந்து ஆசாரியராகிய அங்கிரஸனைஎப்பொருளையறிந்தா லிவ்வுலகமெல்லாமறியப்படும். முக்காலத்தையுமறிந்தமுநிவரே மண்ணையறிந்தபோது அதின்காரியமாகிய குடமுதலியவைகளை யெல்லாமறியப்படுவதுபோலொரு காரணப்பொருளையறியவே எல்லாப்பொருளுமறியப்படுமல்லவோ; அக்காரணப்பொருள்யாது என்று வினவினாரென்று இந்த சுருதிக்குப்பொருள். இங்கு எல்லாமென்பதற்கு ஸ்தூலமானசித்து அசித்து இவைகளுடன் சேர்ந்த பரப்ரம்மமோ; அல்லது சித்து அசிதுக்களோ; பொருளென்று கொள்வது. இந்த சௌநகர்ப்ரமமஸ்வரூபத்தை யறியாமல் ப்ரச்நம்பண்ணுகிறாராகையால் இவர் சொல்லிய வாக்கியத்தில் சேர்ந்த எல்லாமென்கிற பதத்திற்கு ப்ரம்மத்தையறிந்தவர் வாயில் பிறந்த சொல்லுக்குப்போல் பரப்ரம்மம் வரையில் பொருள்கொள்ளக்கூடாமையால் முந்திய கல்பம் தள்ளுண்டது. மேலும், அப்புருஷனால் இவ்வுலகெல்லாம் நிறைந்திருக்கின்றது என்மேல் விடையளிக்கும் வாக்கியத்தில் எல்லாமென்கிற பதத்திற்கு புருஷனைத்தனித்துச்சொல்லி விடுகையால் விசேஷணமாகிய ஸ்தூலசிதசித்துக்களேபொருளானதால் அங்குபோலிங்கும் விசேஷணமாகிய ஸ்தூல சிதசித்துக்களே பொருளாகலாமன்றி இவைகளோடு சேர்ந்த ப்ரம்மம் பொருளாகக்கூடாது. ஆகில் விசேஷணமாகிய ஸ்தூல சிதசித்துக்களே பொருளென்று இரண்டாவது கல்பத்தைக்கொள்ளுவோமென்றால் அந்த கல்பத்தில் மேலே சொல்லப்படும் அக்ஷரபரப்ரம்மம்ஸ்தூல சிதசித்துக்களில் வேறுயதானதால் அவைகளுக்கு இந்த அக்ஷரபரப்ரம்மம் உபாதாநகாரணமாவது சேராது. ஆகையால் இங்குபொருளமையும் வழியாதெனில், கூறுகின்றோம். விசேஷணமாகிய ஸ்தூல சிதசித்துக்களே இங்கு, எல்லாமென்கிற பதத்திற்குப்பொருள் மேலே சொல்லப்படுகிறபடி அக்ஷரபரப்ரம்மம், தன்னில் வேறுய ஸ்தூல சிதசித்துக்களுக்கு உபாதாநகாரணமாவதும் பொருந்தும். பிந்நமானாலும் உபாதாநகாரணமாகலாம். அபின்னமே உபாதாநகாரணமென்கிற நிர்பந்தமில்லை. முன்னை ஸூக்ஷ்மாவஸ்தையோடு கூடிய பொருள் பின்னை ஸ்தூலாவஸ்தையோடு கூடிய பொருளுக்குபாதாநகாரணமாம். அவஸ்தையை யுடைத்தாயிருக்கை சித்து அசித்து ஈஸ்வரன் என்கிற விம்மூன்றுக்குமுண்டு. ஸாக்ஷாத்தாக சித்துக்கும் சரீரம் தர்மபூதஜ்ஞாநம் இவைகளின் வழியே சித்துக்கும் இவ்விரண்டின் வழியாக ஈச்வரனுக்கும் அவஸ்தையுண்டாகும். என்றிவ்வளவே பேதம். ஆக மகத்தத்வாவஸ்தை அஹங்காரதத்வாவஸ்தை முதலியவருகிற ஸ்தூலாவஸ்தையையுடைத்தாயிருக்கை அசித்து சித்து பரமாத்மா இவை எல்லாவற்றிற்கும்பொதுவாயிருக்கையால் பரமாத்மாவுக்குப்போலே சேதநம் அசேதநம் இவற்றுக்கும் வருகிற அவஸ்தையுண்டாகையால் பரமாத்மா இவற்றுக்கு பாதாநகாரணமாகையில் தடையில்லை. ஆக இவை எல்லாமென்பதற்கு ஸ்தூல சிதசித்துக்களாகிய விசேஷ

ணம் பொருளானாலும் அதற்குமேல் சொல்லப்போகிற அக்ஷரபரப்ரம்மம் உபாதானகா ரணமாமென்று, எதையறிந்தாலெல்லாமறியலாமென்று விசேஷணத்துக்கு உபாதாந காரணம்யாதென்று, வினவத்தகும். மகாஸித்தாந்தத்திலும் எல்லா உலகமும்ப்ரம்ம கார்யமானையாலும் ஒன்றானையால் அதற்குவிரோதியானபேதம் நிஷேதிக்கப்படுகி றது. என்கிறபாஷ்யவ்யாக்யாந ப்ரகரணத்தில் ச்ருதப்ரகாசிகையில் ஸ்ரீவ்யாஸாசார்ி யரால் விசிஷ்டங்களுக்கே உபாதாநகாரணகாரியபாவமுள்ளது; ஸ்வாபாவிகங்க ளாகிய விசேஷணங்களுக்கு ப்ரம்மம் உபாதாநகாரணமாவதில்லை. உயிருமுடலுமா கையாகிறசரீராத்மபாவமானது அறிவால் பிரித்த விசேஷணங்களுக்கும் விசேஷ்ய மாகிய ப்ரம்மத்திற்குமாம். சிதசித்விசிஷ்டப்ரமத்தை சிதசித விசிஷ்டப்ரம்மாந்த மியதாகையால் சுத்தப்ரபஞ்சத்திற்கு சுத்த ப்ரம்மமேயந்தர்யாமியாமன்றே; "ஸச் தைக்காரணமாகஉடையது ஸத்தையாத்மாவாக உடையது இவ்வுலகம்" என்கிற சா ந்தோக்யவாக்கியத்தில், 'காரணமாகவுடையது' என்கிறவிடத்திற்கு 'ஸத்' என்கிற பதம் விசிஷ்டப்ரம்மத்தைச் சொல்லுகிறதென்றும், 'ஆத்மாவாக உடையது' என்கிற விடத்திற்கு 'ஸத்'என்கிறபதம் சுத்தப்ரம்மத்தைச் சொல்லுகிறது. ப்ரம்மத்திற்குபரம மம அந்தர்யாமியாகாதாகையாலும், ப்ரபஞ்சமும் விசிஷ்ட ப்ரம்மத்தை உபாதா னமாகஉடைய தன்றாகையாலு மிப்படியே பொருள்கொள்ளவேண்டுமெனச் சொல்லி இந்த பக்ஷத்தில் 'ஸத்' என்கிற பதங்களுக்கு பொருள்வேறுபடுகையாலும் 'உலகம' என்கிற ஒருபதத்திற்கே ப்ரம்மம் அந்தர்யாமி என்னும்போது கேவல உலகத்தையும் ப்ரம்மம் காரணமென்னும்போது விசிஷ்ட ப்ரம்மத்தையும் பொருளாகக்கூறவே ண்டிருகின்றமையாலும், இப்பக்ஷமழகல்லவென்றெண்ணி, 'உலகம்' என்கிறபதம் கேவல உலகத்தையே சொல்லும்; 'ஸத்' என்கிறபதமும் சுத்தப்ரம்மத்தையேசொல் லுமென்கிற பக்ஷத்தைப்பற்றி இப்பக்ஷத்தில் கேவலப்ரபஞ்சத்துக்கு ப்ரம்மமுபா தாநகாரணமாவதெப்படி என்றால் இவ்வுலகத்தில்வருகிற அவஸ்தையுண்டாகையாலு மிதற்குமுன் அவஸ்தையுடைய ப்ரம்மம் விசிஷ்டத்துக்கு விசிஷ்டம்காரணமாவது போலவே கூடுமென்று தமக்குத்திருவுள்ளமான இந்தபக்ஷம் உபந்யஸிக்கப்பட்டது பகவத்பாஷ்யகாரராலும் 'ஆத்மேதி தூபகசசந்தி' என்கிறவிடத்தில் சித்து அசித்து என்கிற எல்லாவஸ்துவும் தன்னிடத்திலிருந்து பிறக்கையாலும் தன்னிடத்திலேலயி க்கின்றமையாலும், தன்னால் காக்கப்படுகின்றமையாலும் தன்னால் நியமிக்கப்படுகை யாலும், தனக்கு சரீரமாகையாலும் தானே எல்லாவற்றிற்கு மாத்மாவாகின்றதுப்ர ம்மமேயாம். என்று சரீரமாகும்பொருளே, உபாதாநகாரணமாகிய ப்ரம்மத்தின் கா ரியமாகின்றதெனப்பல க்ரந்தங்களிலும் அருளிச்செய்யப்பட்டது. இதை வேறுக்கு வது நம்மால்கூடாதன்றோ. "ப்ராஜ்ஞேநாத்மநா ஸம்பரிஷ்வக்த:" என்கிறவிடத் தில் பரமாத்மாவில் வேறான ஜீவனுக்கு லயம் சொல்லப்பட்டதன்றோ. இங்குபரிஷ் வங்கம் சொல்லப்பட்டதேயன்றி லயமன்று; பரிஷ்வங்கசப்தத்திற்கு லயம்பொரு ளல்லாமையால் என்று சொல்லவமையாது. "ஸ்வாப்யயாத்" என்கிற ஸூத்திரத் தையும் அவ்விடத்திற்கு பாஷ்யத்தையும் பார்யாலோசிக்கும்போதுபரிஷ்வங்கம்லயமே யென விளங்குமன்றோ; "ஸதா ஸோம்ய ததா ஸம்பந்நோ பவதி" என்கிற வாக் கியத்திற்கு ஜாகரதசையில் ராகத்வேஷமுதலியவற்றோடுகூடிய ஜீவனோடுசேர்ந்த பரமாத்மாஸுஷுப்தியில் ராகமுதலியவை நீங்கிய ஜீவனோடு சேர்ந்திருக்கின்றான் என்று பொருளாகையால் அவ்வாறே "ப்ராஜ்ஞேநாத்மநா" என்கிற வாக்கியத்திற் கும் பொருள்கொள்ளலாகாது; அப்படியாமாயின் இவ்வாக்கியம் ஜீவாத்மா பரமாத் மா இவர்களுக்கு பேதத்தைபேதியாமையால் "ஸுஷுப்த்யுத்க்ராந்த்யோர்பேதே ந" என்கிற ஸூத்திரத்தில் ஜீவாத்மா பரமாத்மா இவர்களுக்கு பேதத்தை

யுணர்த்துமென்று கொள்ளப்பட்டிருக்கின்றமையாலத்தோடு விரோதம்வரும். இனி
வேறொன்றும் முந்திய அவஸ்தையை யுடைத்தானவை எல்லாமுபாதாநகாரணம்
பிந்திய அவஸ்தையையுடையவை எல்லாங்காரியம் என்றால்வருகிற மகாந் அஹங்கா
ரம் முதலிய அவஸ்தையையுடைய பரமாத்மாவுக்கு முந்திய அவ்யக்தாவஸ்தையை
யுடைத்தான அசேதந முபாதாநகாரணமாக வேண்டுகின்றமையால் வருகிற அவஸ்
தையையுடைத்தானவைக்கு முந்திய அவஸ்தையையுடைய அபிந்நவஸ்துவே உபா
தாநகாரணமென்று சொல்லவேண்டும். ஆகப்ரமத்தில் வேறான சேதநாசேதநங்க
ளுக்கு ப்ரம்மமுபாதாநகாரணமாகாதெனில் இதற்கு விடையளிக்கின்றோம். வருகிற
அவஸ்தையையுடைத்தான பொருளுக்கு முந்திய அவஸ்தையையுடைய காரணப்
பொருள் உபாதாநகாரணமெனில் இவ்விஷயக்கிடமில்லை வருகிற அவஸ்தையை
யுடைய ப்ரம்மத்திற்கு அசேதநம்காரணமென்பதில் ப்ரமாணமில்லாமையால் அசே
தநம் ப்ரம்மத்திற்குபாதாநகாரணமாகாதாயினும் ப்ரம்மம் எல்லாவற்றிற்கும் காரண
மானதால் வருகிற அவஸ்தையையுடைய அசேதநத்திற்கு ப்ரம்மம் உபாதாநகாரண
மாகலாம். இனி தந்மாத்திராவஸ்தை பூதாவஸ்தை முதலிய அவஸ்தைகளையுடைத்
தான ப்ரக்ருதிக்கு அவ்யக்தாவஸ்தை மகத்வாவஸ்தை முதலிய அவஸ்தைகளையுடை
யப்ரம்மம் உபாதாநகாரணமென்று இதனால் சொல்லப்பட்டதாயிற்று; இவ்வாறு
கூடுமென்றிசைந்தாலும் அவ்யக்தாவஸ்தை முதலிய அவஸ்தைகள் ப்ரக்ருதியின்
கண்ணேயுளவானதால் ப்ரம்மம் இவ்வவஸ்தைகளையுடையதாகாது; ஆக ப்ரம்மம்
ப்ரக்ருதிக்குபாதாநகாரணமாவது கூடாதெனில், இவ்விஷயக்கு ப்ரக்ருத்யதிகரணத்
தில் சுருதப்ரகாசிகையில் ஸ்ரீவ்யாஸாசார்யர் இவ்வாறு விடைதந்திருக்கிறார். அதா
வது ப்ரம்மம் சித்து அசித்து இவைகளை சரீரமாக உடையதானதால் ப்ரக்ருதி ப்ரம்ம
ஸ்வரூபத்திலடங்கியதென்று ப்ரக்ருதியின் வஸ்தைகளெல்லாம் ப்ரம்மத்தினவஸ்தை
களேயாம். விசிஷ்டவஸ்துவினதுஸ்வரூபம் விசேஷ்யமாத்திரமானதல்ல. விசிஷ்ட
வஸ்துவுக்கு விசிஷ்டமே ஸ்வரூபம். மண்குடத்திற்கு மண்மாத்திரம் ஸ்வரூபமல்ல
வன்றோ. குடவடிவு என்கிற கடத்வஜாதியுடன் சேர்ந்தமண்ணேயன்றோ ஸ்வ
ரூபமாம். இங்கு விசேஷணமும் ஸ்வரூபத்தில் சேருமாகில் தடியுடைய ஒருமனி
தனுக்கு விசேஷணமாகியதடியும் தடியின் ஸம்பந்தமும் ஸ்வரூபமாகவேணுமெ
ன்று வருகின்றமையால் விசேஷணம் ஸ்வரூபத்தில் சேராதெனச்சிலர்மறுப்பர்;
அப்படி சொல்லப்போகாது. தடியும்தடி ஸம்பந்தமும் மனிதனைவிட்டுப் பிரியும்
தன்மையனவாகையால் அவைஸ்வரூபத்தில் சேராவாயினும் தனித்துப்பிரியாது
அப்பொருளுள்ளவரையி லப்பொருளோடு சேர்ந்திருக்குமவை ஸ்வரூபமாவதில்
குற்றமில்லையன்றோ. மேலும் குடமுதலியவற்றுக்கு தண்ணீர் கொண்டுவருதல்
முதலிய அக்காரியங்களுக்குத் தக்கதாகையாகிற யோக்யதையே ஸ்வரூபமாம்
மண்மாத்திரமல்ல. அப்படியாயின் பிண்டமாயிருக்கும்போதும் குடமென்றுபெய
வரவேண்டும். அந்த யோக்யதையாவது ஓட்டையில்லாத குடமாகையாகிற அச்சி
த்ரகடத்துவமேயாம் வந்தவஸ்துவுக்கு எந்தகாரியத்தை ஸாதிக்கும்போது எந்
ஆகாரமின்றியமையாததாம்; அவ்வஸ்துவுக்கு அக்காரியத்தை யுண்டுபண்ணும்போது
அவ்வாகாரம் யோக்யதையாகின்றது. நெருப்பு உடம்பை எரிக்கும்போது உஷ்
ணமின்றியமையாததாதலால் நெருப்புக்கு எரிப்பதில் உஷ்ணம் யோக்யதையாகின்
றது. வாளுக்குக்கூர்மையும் யோக்யதையாகும். இப்படியே மண்ணுக்கும் குடமா
போது யோக்யதையாவது மண்ணாயிருக்கை ம்ருதுவாயிருக்கை நீர் கலந்திருக்கை
முதலியவையாம். இவவஸ்துக்களுக்கு இவை யோக்யதையாவதுபோல ப்ரம்மத்தி
ற்கு ஜகத்ரூபத்தாலே பலவாகப்பரிணமிக்கும்போது, ப்ரக்ருதி ஜீவன்காலம், இவை
கள் விட்டிப்பிரியாத விசேஷணங்களாகையால் யோக்யதையாகின்றன. இக்கா

ணத்தாலே சில ப்ரமாணங்களில் ப்ரக்ருதி முதலியவை பரப்ரம்மசக்தி என்று இவை சக்திசப்தத்தாலே சொல்லப்படுகின்றன. காரியத்திற்கு வேண்டிய விட்டு பிரியாத விசேஷணங்களேயன்றோ சக்தியெனப்படும். யோக்யதை யோக்ய ஸ்வரூபத்தில் சேர்ந்ததாகையால் ப்ரம்மத்திற்கு யோக்யதையாகிய ப்ரக்ருதி ப்ரம்மஸ்வரூபத்திலடங்கியதென்று அவ்யக்தாவஸ்தைமுதலிய அவஸ்தைகள் ப்ரம்மஸ்வரூபத்திலிருப்பனவாகின்றமையால் ப்ரம்மம் ப்ரக்ருதிக்குபாதாநகாரணமாகலாம், இவ்வாறு சித்து அசித்து இவைகளுடன் சேர்ந்த விசிஷ்டமே ப்ரம்மஸ்வரூபமாகையால் ச்ருதியிலும் ‘‘தத் யதா ரதநாபௌ ச ரதநேமௌ சாரா: ஸர்வே ஸமர்பிதா ஏவமேவாஸ்மி ந்நாத்மநி ஸர்வாணி பூதாநி ஸர்வ ஏத ஆத்மாந: ஸமர்பிதா:’’ என்று சக்ராந்தமென்கிற சக்கிரத்தில் சுற்றும் கோர்க்கட்டமரம் அரங்களென்கிற கொம்புகளில் கோர்க்கப்பட்டாப்போலே பஞ்சபூதமுதலியவை எல்லாம் ஜீவாத்மாக்களிடத்தில் கோர்க்கப்பட்டிருக்கின்றன; அரங்கள் குடமென்கிறநாபியில்கோர்க்கப்பட்டிருப்பதுபோல் ஜீவாத்மாக்கள் பரமாத்மாவினிடத்தில் கோர்க்கப்பட்டிருக்கின்றனவென்று அரநாபித்ருஷ்டாந்தம் சொல்லப்பட்டது. சக்கிரமானது நாபிமாத்திரமல்ல; அரங்களும் சக்ராந்தமென்கிறநேமியும் சக்ரஸ்வரூபத்திலடங்கியவையன்றோ; இந்த த்ருஷ்டாந்தத்தால் அரநேமிகள் சக்ரஸ்வரூபத்தில் சேர்ந்தவையாறுப்போலே ஜீவாத்மப்ரக்ருதி இவைகளும் ப்ரம்மஸ்வரூபத்தில் சேர்ந்தவையென்று நன்கு விளங்கும். இலை பட்டை இவைகளோடு சேர்ந்த வாழையை சித்து அசித்து இவைகளோடுசேர்ந்த ப்ரம்மத்திற்குத்ருஷ்டாந்தமாக ச்ருதிசொல்லுகிறது. இதனாலும் சேதநாசேதநங்கள் ப்ரம்மஸ்வரூபத்தில் சேர்ந்தவையென்று விளங்கும். இலைபட்டை இவைகளைவிட்டு தண்டுமாத்திரமே வாழையல்லவன்றோ. இலைப்பட்டைகளோடு சேர்ந்ததண்டேயன்றோ வாழையாகும். இப்படி சிதசித்துக்கள்சேர்ந்து ப்ரம்மஸ்வரூபமாகின்றது. பலத்ருஷ்டாந்தங்களிப்படியே ச்ருதியில் காட்டப்படுகின்றன. த்ருஷ்டாந்த ஸ்தலங்களில் எல்லாம் அசேதநமாகையால் நியாம்ய நியாமகபாவமில்லாமையால் சரீராத்மபாவமில்லை. ஆகையால் விசேஷணவாசகசப்தங்கள் விசேஷ்யத்தைச்சொல்லா. இங்கு விசேஷ்யவிசேஷணங்கள் சேதநாசேதநரூபங்களாகையாலே நியாம்ய நியாமகபாவம் கூடுமாகையால் சரீராத்மபாவமுண்டு ஆகையாலே சேதநாசேதநவாசிசப்தங்கள் ப்ரம்மத்துக்கு வாசகங்களாகின்றன என்கிற இவ்வளவுபேதமொழிய மற்றவிஷயங்களில் பேதமில்லை. ஆகமகத்துமுதலிய அவஸ்தைகள் விசிஷ்டப்ரம்மஸ்வரூபத்தில் பிறத்தவையாகையாலே ஜகத்திற்குப்ரம்மமுபாதாநகாரணமாவது முக்யமேயாம். மேலும் ப்ரக்ருதிஜீவன் இவைகள் ஸ்வரூபத்தில்சேராதவையானாலும், ப்ரம்மம் ஜகத்துக்கு பாதாநகாரணமாவது முக்யமேயாம். சரீரத்தின் வழியாலே உபாதநாகாரணமானால் முக்யமென்பதற்குக்குறையில்லை காரணமாவதற்கு வெண்டியவற்றால் வ்யவஹிதமாகையாலே ஜ்வாலையினால் வ்யவஹிதமானாலும் சட்டைசமயனுக்குக் காரணமாகின்றதன்றோ. இனி, மண்ணால் வ்யவதாநமுண்டானாலும் குலாலன் உபாதாநகாரணமாகலாம்; காரணமாவதற்குவேண்டியதேயன்றோ மண்ணுமெனில்மண்ணில்வேறாய்ப்பிரிந்த குலாலனுபாதாநமாகான். ப்ரக்ரு

திலயப்பிரியாதப்ரம்மம் உபாதானமேயாம். இனி,இவ்வழியாலே ப்ரம்மமுபாதானகார ணமாமாயினும் கார்யாவஸ்தை உபாதானகாரணத்திலிருக்கவேணுமாகையால் கார்யாவ ஸ்தைப்ரக்ருதியிலிருக்கின்றமையால் ப்ரம்மத்திலவஸ்வதயில்லையேயெனில் ; இதற்கும் விடைதருகிறோம். குடத்திலெடுத்ததண்ணீரைப் புருஷன்சுமக்கும்போது குடம் நடுப் பட்டிருந்தாலும் தண்ணீரைப்புருஷனே தாங்குவதுபோல மகத்வமுதலிய அவஸ் தைகளைப் பரமாத்மா தாங்குகின்றமையால் அவஸ்தைகளுக்கு முக்கியாச்ரயம் பரமா த்மாவேயாகையால் பரமாத்மா ஜகத்துக்கு பாதானகாரணமென்பது முக்யமேயாம். புருஷன் தண்ணீரைத்தாங்குகிற குடத்தைத் தாங்குகிறானன்றி தண்ணீரைத்தாங்குவ தில்லை என்னப்போகாது ; அப்படியாயின் தண்ணீரில்லாதபோதிலக்குடத்தைத் தாங் கியதால் வருகிற சிரமத்தைக்காட்டில் அதிகமான ச்ரமம் தண்ணீரோடுகூடியபோ தும் பிறக்கக்கூடாதன்றோ. வஸ்திரம் தர்ப்பம் முதலியவைவையைச் கீழேசேர்த்துஅவற் றின்மேலே குந்தினாலும் புருஷனுக்கு முக்யாதாரம் பூமியேயாம்; வஸ்திரம் தர்ப்ப முதலியவையல்ல. அவைகளுக்குப் புருஷனைத்தாங்குகிற சக்தியில்லையன்றோ;அவை புருஷன்நேராக பூமியில்படாமல் மறைக்கின்றன. ஆகையால் அவ்யஹிதமே முக் யாதாரமென்கிற நியதியில்லை. ஆகதிருட்டாந்தவிடங்களிலே போலப்ரம்மமேஅவஸ் தைகளுக்கு முக்யாதாரமாகையால் ப்ரம்மமேஜகத்துக்கு முக்யோபாதானமாம். இனி ஜகத்துக்கு பாதானகாரணமாகிய அவ்யக்தத்தை சரீரமாக உடையதானதால் ப்ரம்மம் ஜகத்துக்கு பாதானகாரணமாகில் தார்க்கிகர்மதத்திற்கு மூங்கள்மதத்திற்கும்பேதமென் ன? நியமிக்கப்படுவது சரீரமென்கையாலும் சிதசித்துக்கள் ஈச்வரநியாம்யங்களென்ற வர்களும் சொல்லுகையாலும் உபாதானகாரணமீச்வரனென்று அவர்களுக்கு விடுக்கின் கின்றதேஎனில், இதுநல்ல பூர்வபக்ஷமாயிருக்கின்றது. தார்க்கிகராலேஅப்ரமாணிக மாயே சொல்லுவரென்றும், அவர்கள்சொன்னதை ஒப்பக்கூடாதென்றும் நாங்கள் ப்ரதிஜ்ஞைசெய்யவில்லை. நாம் சொன்னபடியவர்களும் சொன்னதெங்களுக்கதனால் நஷ்டமில்லை. மேலும் ஸாம்யமும் சொல்லப்போகாது, ஆகாசம் காலம் திக்குமுதலிய வற்றை ஈச்வரநியாம்யமென்றவர்களங்கீகரியாரன்றோ: என்றருளிச்செய்தார். ஆகப் ரம்மம்ஜகதுபாதானமாம்போது ஒரநுபபத்தியுமில்லை. இனித்தானிப்படியுபாதானமெ ன்று ஸாதித்தாலும் ப்ரமத்தை யறிந்தபோது ப்ரபஞ்சமுமறியப்படுமென்பது பொ ருந்தாது. ப்ரபஞ்சம் ப்ரமத்தில் வேறுயதன்றோ; ஸூக்ஷ்மசிதசித்துடன்சேர்ந்தவிசி ஷ்டப்ரம்மஸ்வரூப மறியப்பட்டால் எல்லாமதிலடங்கிய தாகையாலே யறியப்படும் வநமுழுதே மறிந்தபோதுவநத்திலடங்கிய மாமரம் பலாமரம் முதலியவையறியப்ப வதுபோல சிதசித்துக்களு மறியப்படுகின்றமையால் எல்லாமறியப்படுமென்பது பொ ருந்துமெனில், "ஸத்யம்ஜ்ஞாநமநந்தம்ப்ரம்ம" என்கிற லக்ஷணமுடைய ப்ரம்ம தில் அந்த லக்ஷணமில்லாத சேதநாசேதநங்கள் சேரவழியில்லாமையால், அது சே ராது. இனி ஸத்ய ஜ்ஞாநாநந்தலக்ஷணம் விசேஷ்யமாத்திரத்திற்கு லக்ஷணமா எதையறிந்தா லெல்லாவற்றையுமறியலாகு மப்படிப்பட்ட ப்ரம்மம் விசிஷ்ட ப்ர மமே; அதற்கு லக்ஷணம் ஜந்மாதி காரணத்வமே என்று ஸூத்ரகாரர்கருத்தென ஜந்மாதி ஸூத்திரச்ருத ப்ரகாசிகையில் வ்யாஸாசார்யரருளிச்செய்தாரே எனில்; ரணவாக்கியத்திற்கும் சோதகவாக்யத்திற்கும் பொருள் மாறுபாடு கூடாமையால வும்சேராது. மேலும் "ஆத்மாவிலிருந்து ஆகாயம்பிறந்தது" என்கிற தைத்தி

வாக்கியத்தால் ஆத்மாவே உபாதாநமென்றேதப்படுகிறதன்றோ. இனி; உங்களிஷ்டப்படி விசிஷ்டமே ப்ரம்மமானாலும் "வாசாரம்பணம்விகாரோ நாமதேயம் ம்ருத்திகேத்யேவ ஸத்யம்" என்கிற ச்ருதியில் உபாதாநகாரணத்திற்கும் காரியத்திற்கும் பேதமில்லையானதால் காரணத்தையறிந்தபோதே காரியமெல்லாமறியப்படுமென்று சொல்லுகின்றமையால் இவை எல்லாமென்று காட்டப்படுகிற விசேஷணமாகிய ப்ரபஞ்சத்திற்கும் விசிஷ்டப்ரம்மத்திற்கும் அபேதம் ஸம்பவியாமையால் விசிஷ்டப்ரம்மத்தையறிந்தபோதிவை எல்லாமறியப்படுமென்று சொல்லப்போகாது சரீரத்திலுள்ளவிகாரங்களெல்லாம் சரீரியினிடத்திலிருக்குமென்பது, எல்லா, லௌகிகசாஸ்திரதர்க்கங்களுக்கும் விருத்தமாம். "நதத்ருஷ்டாந்தபாவாத்" என்கிரஸூத்திரபாஷ்யங்களுக்கும் விருத்தம். முந்திய அவஸ்தையையுடைய பொருளை நியமிப்பது உபாதாநகாரணமென்பது கட்டுவார்த்தை மேலும் பிறக்கும் பொருளக்கன்றோ உபாதாநகாரணம் தேடவேண்டும்; உங்கள் மதத்தில் த்ரவ்யம் நிச்யாமாகையால் பிறவாததன்றோ; சப்தம் ஸ்பர்சம் முதலிய அத்ரவ்யங்களுமாகிய விகாரமே பிறக்குமாகையாலிவைகளுக்கு ப்ரம்மத்திற்கும் பேதமேயாகையால் ப்ரம்மத்தையறிந்தபோது இவை எப்படி யறியப்படும் இனி, கடமென்கிற பொருளுக்குத்பத்தியாவது கடத்வாஸ்தையேயாம். மேலே மேலே வருகிற அவஸ்தை முன்னிருந்த அவஸ்தையோடுகூடிய பொருளின் நாசமாகும். அவ்வவஸ்தையையுடைய பொருளுக்குத்பத்தியாம். அவஸ்தைநித்யமல்லாமையாலே அதற்குப் பிறப்புவேணுமென்பது உத்பத்தி நித்யமல்லாமையாலே உத்பத்திக்குத்பத்தி வேணுமென்பது போலநிவாதம். தனித்துப்பிரிந்திருக்கிறவற்றுக்கே தனிப்பிறப்பு முதலியவை வேண்டுமென்றி தனித்திராதவற்றுக்குத்தனியே பிறப்புமுதலியவை வேண்டா இக்காரணங்கொண்டேஉத்பத்திக்கு உத்பத்தி வேண்டாமென்றதும், ஆகையால் பொருளைவிட்டுப் பிரியாத அவஸ்தைகள் பொருளுக்குத்பத்திமுதலியவையாகின்றன. ஆகையால் அவஸ்தையேபொருளுக்குத்பத்தியாம். அவஸ்தைக்குத்பத்தி வேண்டுவதில்லை. என்று ஆரம்பணாதிகரணத்தில் பாஷ்யத்திலும்ச்ருதப்ரகாசிகையிலும் உபபாதிக்கப்பட்டதே என்றால்; அது நல்லதென்று கடத்துக்குத்பத்தியாவது கடத்வாவஸ்தையேயாகில் கடத்வாஸ்தையுள்ளவரையில் கடம்பிறக்கிறது என்று வ்யவஹாரம் வரவேணுமேயல்லது கடம்பிறந்தது என்று வரக்கூடாது. ம்ருத்பிண்டத்தின் அழிவானது கடத்வாவஸ்தையேயாகி லிப்படியே கடத்வாவஸ்தையுள்ளவரையில் மருத்பிண்டமழிகிறதென்று வ்யவகாரம் வரவேணும் ம்ருத்பிண்டம் அழிந்தது என்று சொல்லக்கூடாது. கடத்வாவஸ்தையிலுண்டாகிற முதல்க்ஷணத்தின் ஸம்பந்தமேகடத்திற்குத்பத்தி என்றால் எது, அநித்தியமும் முதல் க்ஷணஸம்பந்தமுடையதும் முன்னில்லாதேவந்ததுமாம்; அதற்குப்பிறப்பிறப்பில்லை இவையொன்றுமில்லாதபொருளுக்குப் பிறப்பென்பதுகட்டுவார்த்தையாம். மேலும் கடத்தில் ரூபம் ரஸம்முதலியவை ஸம்யோகம் இவை உண்டாம்போது கடம்பிறந்ததென்று வ்யவஹாரம் வரக்கண்டோமில்லையே. ரூபம் பிறந்தது இரஸம், பிறந்ததென்றும் சொல்லக்கூடாது. தனித்துப்பிரியாதவைக்குப் பிறப்பில்லையன்றோ; ஸம்யோகத்தில் வருகிற க்ரியையால் பிறந்தது ஸம்யோகத்தால் பிறந்ததென்கிற வ்யவகாரமெல்லாப் நிர்மூலமாகவேணும். "ஸதேவஸோம்யேதம்

பூதவோ பூதாநி” ஸஹஸ்ரம் விஜ்ஞேய ததோ ஹ்யாஸ:” என்கிற ச்ருதிகளி லோதப் படுகிற வேதம் முதலியவை பிறந்தனவென்பதெல்லாமப்ரமாணமாகவேணும். சப் தம் பிறந்ததென்று வ்யவஹாரம்கூடாது சப்தம்பிறந்தபோதெல்லாம் ஆகாயம் பிற ந்ததென்று வ்யவஹாரம்வரவேணும். தனித்திராதவைக்கு உத்பத்திவிநாசங்களில்லை யன்றோ சரீரம் ஆத்மாவைப் பிரிந்திராதானதால் சரீரத்திற்கு உத்பத்திநாசங்களில்லை. ஆத்மாவுக்கே உத்பத்திவிநாசங்களென்று சொல்லவேணும். பலசொல்லுவானேன்? உலகத்தில் ... விட்டுப்பிரியாதவை யாகையாலே இவைகளுக் குத்பத்திவிநாசங்களில்லை; ஈச்வரனுக்கே உத்பத்திவிநாசங்களென்று விபரீதமாய் விடும். விட்டுப்பிரியாத அத்ரவ்யங்களுக்கே உத்பத்திவிநாசங்களில்லை; விட்டுப் பிரியாதவையானாலும் த்ரவ்யங்களுக்கே உத்பத்திவிநாசங்களில்லை. அத்ரவ்யங்க ளுக்கே யவையென்றுமாற்றிச்சொன்னாலதையார்மறுப்பார்? மேலும், விகாரத்துக்கு முதலானது பாதானகாரணமென்றும் விகாரம் காரியமென்றும் எல்லோருமொப்புக் கொண்டவிஷயம்; “வாசாரம்பணம்விகாரோ நாமதேயம்” என்கிற விடத்தி ல் கடத்வாவஸ்தையே விகாரசப்தத்தால் சொல்லப்படுகின்றமையால், “யதா ஸோம் யைகேந ம்ருத்பிண்டேந ஸர்வம் ம்ருந்மயம் விஜ்ஞாதம் ஸ்யாத்” என்கிற முந்திய வாக்கியத்திலும் விகாரப்பொருளையுணர்த்தும் மயட்ப்ரத்யயத்தாலவ்விகாரமேயுணர் த்தப்படுதல் சக்கதாதலால் அவ்விகாரமே மண்ணையுபாதாநகாரணமாகவுடைய கா ரியமென்பது உலகநீதியாலே யறியப்பட்டதென்று நினைத்து த்ருஷ்டாந்தமாக்கி கார ணத்தை யறிந்தபோதே விகாரமறியப்படுமென்று சொல்லுகையால் உங்கள் மதத் தில்லவஸ்தைகளென்கிற விகாரமறியப்படாமையா லந்த ச்ருதியில் சொல்லப்பட்ட கா ரணகாரிய விஞ்ஞாநமுங்களுக்குப்பொருந்தாது. அந்த ச்ருதியில் பூர்வவாக்கியத் தில் ம்ருந்மயமென்கிற பதமானது விகாரத்தையுடைய பொருளைக்குறிக்கின்றது. “விகாரோநாமதேயம்” என்கிறவிடத்தி லவஸ்தையாகிய விகாரமேவிகார சப்தத் தால் சொல்லப்படுமென்பது பொருத்தமற்ற வார்த்தையானதா லிவ்விரண்டிடங்க ளிலு மொருபொருளையே கொள்ளவேண்டும். ஆகவிகாரரூபமான அவஸ்தை யுங் கள் மதத்திலேயறியப்படாதாகையால் மண்ணையறிவதினாலதனில் வேறாகாத விகார மெல்லாமறியப்படுமென்பது உங்கள் மதநிலைக்குச் சேராததேயாமென்பீரேலதற்கு விடைதருகிறோம்.—ப்ரக்ருதிக்கும் விக்ருதிக்கும் அதாவது உபாதாநகாரணத்திற்கும் காரியத்திற்கும் பேதமில்லாதபோது மண், குடமாவதற்காகச் செய்யும்வேலைவல்லாம் வீணாமாகையால் பேதமுண்டாகிலும் தனித்திருத்தலும் தனித்தறியப்படுதலுமில்லா மையாலே தனித்துஸத்தையில்லையென்பது ஸித்தமாம் ஆகவேறாகாத ஸத்தையுடை யகாரணமுபாதாநகாரணமாம். ப்ரக்ருதி என்று மாத்மாவென்று மிதற்குப்பெயர் இக்காரணத்தை தார்க்கிகர் நன்குபிரிந்து தோன்றாமையால் அயுதஸித்தம் ஸமவாய காரணமென்கிறார்கள். காரியத்தில் வேறாயதும் வேறாகாததுமாயகாரணமுபாதா காரணமென பேதாபேதவாதிகள் சொல்லுகின்றார்கள். வேறென்றும் வேறல்ல வென்றும் பேசத்தகாதகாரணமெனச்சிலர் காரியத்தில் வேறாயதாய் காரியஸத்தைய ல்வேறல்லாத ஸத்தையுடைய காரணமுபாதாநகாரணமெனமற்றோர். எமக்குமீதே, உபாதாநகாரணவிசாரத்தில் ஸம்மதமானவபிப்ராயம். கலசமுதலிய அவஸ்தையே விகாரம் பலரூபத்தையும் பலநாமத்தையுமடைகிற அவஸ்தைகளெல்லாம் மண் ணினவஸ்தையேயாகையாலே மண்ணேயிப்படியாகின்றதென்று வேதார்த்த ஸ

க்ரஹத்தில் அவஸ்தையே விகாரமென்றருளிச் செய்தார். அவ்விதவிகாரங்களுக்கும் மண்ணுக்கும், தடிக்கும் புருஷனுக்கும், போலே பிரிந்திருக்குந் தன்மையில்லையானதால் பிரித்தறியப்படாதே குடமுதலிய விகாரங்களோடு மண் சேர்ந்திருக்கின்றமையால் கீழ்ச்சொல்லிய உபாதானகாரணலக்ஷணம் மண்ணிலுண்டாகையால் குடமுதலியவற்றுக்கு மண்ணானது ப்ரக்ருதியி மாத்மாவுமாகின்றது. ஆகையாலிம் மண்ணையறிந்தபோது கடமுதலிய அம்மண்ணினவஸ்தையாகிய விகாரங்களெல்லாம் தனித்தநிலைக்கும் ஜ்ஞாநத்திற்கும் ஸ்வாதந்த்ரியமில்லாமையாலே மண்ணின் ஸத்தையாலே ஸத்தையுண்டாகிறபோலே மண்ணையறிந்தவிடத்து அறிதலுமுண்டாகின்றமையால் இவை எல்லாமறியப்படுமென்று சொல்லலாகும். இப்படிப்பட்ட சேதநாசேதநப்ரபஞ்சமெல்லாவற்றிற்கும் ப்ரஹ்மம் தனித்துப்பிரியாத காரணமானமையாலே எல்லாவற்றிற்கும் ப்ரக்ருதியாய் ஆத்மாவாயிருக்கையால் ப்ரஹ்மத்தைவிட்டுப் பிரியத்தறியத்தகாது எல்லாமறியப்படாதாமென்பது விவக்ஷித்திருக்கும். ஆகையால் கீழ்ச்சொல்லிய தோஷங்களிலொன்றுமிங்கு சங்காவகாசமில்லையென்று ஸூக்ஷ்மபுத்தியாலே அறிந்துகொள்க. இனி பாஷ்யத்தில் கேவலபேதவாதிமதத்தில் அத்யந்தம் பின்னங்களுக்கு ஒருவழியாலுமைக்யம் சொல்லப்போகாமையாலே ப்ரஹ்மாத்மபாவங் கூடாமையால் எல்லாவேதாந்தங்களும் விடப்பட்டனவாமென்று கேவலபேதபக்ஷம் நிந்திக்கப்படுகின்றமையால், “ஏகத்வே ஸதி நாநாத்வம் நாநாத்வே ஸதி சைகதா। அசிந்த்யம் ப்ரஹ்மணோ ரூபம் கஸ்தத்வேதிதுமர்ஹதி” என்று, ப்ரஹ்மம் ஒன்றாயிருக்கவும் பலவாய்த் தோற்றுகிறது பலவாயிருக்கவு மொன்றாய்த்தோற்றுகிறது ; இன்னதென்றறியப்படாத ப்ரஹ்மஸ்வரூபத்தை எவனறியத்தக்கவன் ; என்று ஸ்ம்ருதிசொல்லுகையாலும் பேதாபேதபக்ஷமே பகவத்பாஷ்யகாரருக்குத் திருவுள்ளமென்று தோற்றுகையால் காரியத்தில் வேறாகாதகாரணமுபாதாநகாரணமென்று கொள்ளவேணும் ; இப்படியானால் எல்லாப்ரபஞ்சமும் ப்ரஹ்மமேயாகையாலே ப்ரஹ்மத்தையறிந்தபோதெல்லாமறியப்படுமென்று சுருதியில் சொன்னது நன்றாய்ச்சேரும் “ஹரிரேவ நகிஞ்சிதஸ்தி” (ஹரியென்று ப்ரஸித்தமான ப்ரஹ்மத்தில் வேறாயதொன்றுமில்லை.) “ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம” (இவ்வுலகத்திலுள்ள ஸமஸ்தமும் அந்த ஒரு ப்ரஹ்மமே) “தஸ்மாதந்யந்ந பரஸ்ஸ்தி” (அந்த ப்ரஹ்மத்தில் வேறில்லை அந்த ப்ரஹ்ம மப்படிசொல்லப்படுகிறது.) “ஸர்வாந்தராத்மா பரமாத்மேச்வரோ ந ததோऽந்யதஸ்தி” (எக்காலத்திலும் மாறாத ஸ்வரூபத்தையுடைய ப்ரஹ்மமொன்றே பரமாத்மாவென்றும் பரமேச்வரனென்றும் சொல்லப்படுகிறது. அந்த ப்ரஹ்மத்தில் வேறுபட்ட பொருளில்லை.) என்கிற சாஸ்திரங்கள் கேவலபேதத்தை நிஷேதிக்கின்றனவாகையாலும் பேதாபேதபக்ஷத்தை யங்கீகரிப்பது யுக்தமாம். சரீராத்மபாவத்தைச் சொன்னாலும் சரீரமாகிய ஜகத்து ப்ரஹ்மத்தில் வேறானதேயாகையால் ப்ரஹ்ம பிந்நமானவஸ்துவை நிஷேதிப்பது சேராது. ஆகையால் பேதாபேத பக்ஷத்தையே கொள்ளவேணுமெனில் இது தக்கதன்று—பேதாபேத பக்ஷத்தில் ப்ரஹ்மத்திற்கே உபாதி ஸம்பந்தத்தால் உபாதியினால் வருகிற ஸகலதோஷங்களும் வருகையாலே தோஷஸம்பந்தமில்லாதே கல்யாணகுணங்களுக்கு நிலமான ப்ரஹ்மத்தையுபதேசிக்கிற வேதாந்தங்களெல்லாம் விரோதிக்கும் ; என்று பேதாபேதபக்ஷத்தை பாஷ்யத்

திலே தூஷிக்கையாலும் ப்ரம்மாஜ்ஞானபக்ஷத்திலும் பேதாபேதபக்ஷம்கெட்டதென்று வேதார்த்த ஸங்க்ரஹத்தில் மிகவும் நிந்திக்கையாலும் பேதாபேதவாதம் பகவத்பாஷ்யகாரருக்குத் திருவுள்ளமன்று. ஆனால் கீழ்காட்டிய பாஷ்யத்துக்குப் பொருளென் சரீராத்மபாவமாவது பேதமேயன்றோ. ப்ரகார ப்ரகாரிபாவம் பேதரூபமேயன்றோ. எப்போதும் ப்ரகாரப்ரகாரி பாவமாகிய சரீராத்மபாவமாவது எப்போதும் பேதரூபமாகையால் சரீராத்மபாவத்தைச் சொல்வதினால் கேவலபேதமே வலியுறுத்தப்படுகிறது. ஆனதினாலன்றோ "உஹயெவிஷிஹெ ஜெஹெ.நஜூயிய ஒதெ" என்கிற ஸூத்திரத்தில் சரீராத்மபாவமே பேதமென்றுபந்யஸிக்கப்பட்டது. எனில் சொல்லுகிறோம் கீழ்காட்டிய பாஷ்யத்திற்குக் கருத்து இவ்வாறு கொள்ளவேணும். ஒன்று என்கிற வ்யவஹாரத்தில், ஸ்வரூபைக்யம் அல்லது ப்ரகாரைக்யம் காரணமாகிறது. ஸாயங்காலத்தில் பசுக்களெல்லாமொன்றாய் வீடுகின்றன, அரசர்களொன்றானார்கள், இவை எல்லாமொரேதான்யம், என்கிற விடங்களில் தேசம் முதலிய ப்ரகாரமொன்றாகையால் ஒன்று என்கிற வ்யவஹாரமுண்டாயிருக்கிறது. இங்கு ஜகத்துக்கும் ப்ரம்மத்திற்கும் ஸ்வரூபம் பின்னமாகையாலே ஒன்று என்கிற வ்யவஹாரத்திற்குக் காரணமொன்று சொல்லவேணும் அஃது யாதென்று விசாரித்துப் பலவிடங்களிலும் விட்டுப்பிரியாத விசேஷணமாயிருக்கை என்று நிர்ணயித்தருளிச்செய்தார். ஆகையாலப்ருதக் ஸித்தியே பகவத்பாஷ்யகாரருக்குத்திருவுள்ளம். ஸித்தியாவது - ஸ்திதியும், ஜ்ஞானமும். ஸ்திதியாவது இருப்பு. ஜ்ஞானமாவது அறிவு. இவ்விரண்டும் தனியேயில்லாத விசேஷணங்களுக்கு அப்ருதக்ஸித்த விசேஷணங்களென்று பெயர், இக்கருத்து அவ்விடத்திலேயே பாஷ்யத்தில் விளங்கும். அவையாவன:—ஜாதிகுணமுதலியன. இனி, கந்தமுதலிய அப்ருதக்ஸித்த விசேஷணங்கள் தனித்து மறியப்படுகையா லிவ்விலக்கணம் பொருந்தாது. யாதொன்று தானுள்ளவளவாயிலொன்றைப்பற்றயே நிற்கின்றது; அது அப்ருதக்ஸித்தமென்ற தார்க்கிகர்சொல்லிய விலக்கணங்கூறில் இவ்விதமாகிய அப்ருதக்ஸித்திபேத வ்யவகாரத்திற்கே ஹேதுவாமல்லது அபேதவ்யவகாரத்திற் கிடங்கொடாது. ஆனசால் ப்ரம்மமொன்றே யுள்ளதென்கிற வ்யவகாரமுங்கள் மதத்திற்குப் பொருந்தாதெனில் ; பொருந்துமாறு கூறுகின்றோம் ; தனித்திருக்கிற காரியங்களுக்கே தனிப்பிறப்பு முதலியன வேணுமென்கின்ற சுருத ப்ரகாசிகையை யாலோசிக்கும்போது யாதொன்றின் பிறப்புநாசம் ஸத்தைமுதலியவை எவ்வாதாரத்தைப்பற்றி யிருக்கின்றதோ அது அவ்வாதாரத்திற்கு அப்ருதக்ஸித்தவிசெஷணமென்று கொள்ளப்பட்டதாகிறது. கந்தமுதலிய குணங்களின் ஸத்தைபொருளின் ஸத்தையைப்பற்றியிருப்பதால் குணங்கள் பொருளுக்கு அப்ருதக்ஸித்தவிசேஷணங்களாகின்றன. இப்படியே விக்ருதி என்கிற காரியத்திற்கு ப்ரக்ருதியென்கிற உபாதானகாரணத்தின் ஸத்தையில் வேறான ஸத்தையில்லையாதலால் தன்னுடைய ஸத்தையில் வேறாகாத ஸத்தையுடைய காரணமுபாதானகாரணமென்பதில் விரோதமொன்றுமில்லை. இஃதேயாத்மாவாயிருக்கை. ப்ரம்மத்தினின்றும் பிறக்கின்றமையாலும், ப்ரம்மத்திலே லயிக்கின்றமையாலும் ப்ரம்மத்தால் காக்கப்படுகின்றமையாலும், ப்ரம்மத்தால் நியமிக்கப்படுகின்றமையாலும் ப்ரம்மத்திற்கு சரீரமாகின்றமையாலும் எல்லாம் ப்ரம்மத்தை யாத்மாகவுடையனவென்றருளிச் செய்யாநின்ற பகவத்பாஷ்யகாரரால் இவ்வர்த்தம் வெளியிடப்பட்டதன்றோ. உள்ளே புகு

ஸம்-ஸா. ரா-ஸா. ப்ரணவமேதநுஸ்ஸென்பது முதலாய விசேஷங்கள் மேல் மந்திரத்தில் விளங்கும். இதரவிஷயங்களில் நெஞ்சை செல்லவொட்டாமல் தடுத்து பரப்ரம்மத்தினிடத்தில் நிலைபெறச்செய்து ப்ரம்மத்தை யறிந்துகொள்ளென்றுகருத்து.

ச. ப்ரணவோ த⁴நு꞉ ஶரோ ஹ்யாத்மா ப்³ரஹ்ம தல்லக்ஷ்யமுச்யதே।
அப்ரமத்தேந வேத்³த⁴வ்யம் ஶரவத்தந்மயோ ப⁴வேத்॥

4. ప్రణవో ధనుః శరో హ్యాత్మా బ్రహ్మ తల్లక్ష్యముచ్యతే।
అప్రమత్తేన వేద్ధవ్యం శరవత్తన్మయో భవేత్॥

(ப-ம்.) ப்ரணவ꞉ - ப்ரணவமானது, த⁴நு꞉ - தநுஸ்ஸு, ஶர꞉ ஹி - பாணமோவென்றால், ஆத்மா - ஜீவாத்மா, தத் ப்³ரஹ்ம - அந்தப்ரம்மமானது லக்ஷ்யம் - லக்ஷ்யமாக, உச்யதே - சொல்லப்படுகிறது. அப்ரமத்தேந - அநவதாநமில்லாதவனாலே, வேத்³த⁴வ்யம் - வேதிக்கத்தக்கது, ஶரவத் - பாணம்போல, தந்மய꞉ - அந்தலக்ஷ்யஸ்வரூபமாக, ப⁴வேத் - ஆகக்கடவன்.

ஸம்-ஸா. ரா-ஸா. ஆத்மாவை ப்ரணவத்தினால் ப்ரம்மத்தில் சேர்க்கக்கடவன். ப்ரணவார்த்தத்தை யறியக்கடவன்.

பதார்த்தபேதங்கள்.

ஜீவப்ரம்மங்களுக்கு பேதமில்லையென்பது சங்கரமதத்தில் ப்ரணவார்த்தம். ப்ரம்மத்திற்கு ஜீவன் சேஷபூதனென்பது ராமாநுஜமதத்தில் ப்ரணவார்த்தம்.

ரு. யஸ்மிந் த்³யௌ꞉ ப்ருதி²வீ சாந்தரிக்ஷமோதம் மந꞉ ஸஹ ப்ராணைஶ்ச ஸர்வை꞉। தமேவைகம் ஜாநத² ஆத்மாநமந்யா வாசோ விமுஞ்சதா²ம்ருதஸ்யைஷ ஸேது꞉॥

5. యస్మిన్ ద్యౌః పృథివీ చాంతరిక్షమోతం మనస్సహ ప్రాణైశ్చ సర్వైః।
తమేవైకం జానథ ఆత్మానమన్యా వాచో విముంచథామృతస్యైష సేతుః॥

(ப-ம்.) யஸ்மிந் - எந்த அக்ஷரபுருஷனிடத்தில், த்³யௌ꞉ - ஸ்வர்க்கலோகமும், ப்ருதி²வீ - பூலோகமும், அந்தரிக்ஷம் - அந்தரிக்ஷலோகமும், ஸர்வை꞉ - ஸமஸ்தமான, ப்ராணை꞉ ஸஹ - ப்ராணங்களோடு, மந꞉ - மநஸ்ஸும், ஓதம் - கோர்க்கப்பட்டிருக்கிறதோ, தமேவைகம் - அந்தபரமபுருஷனையே, ஆத்மாநம் - அந்தராத்மாவாக, ஜாநத² - அறியுங்கோள், அந்யா꞉ - இதரங்களான, வாச꞉ - வார்த்தைகளை, விமுஞ்சத² - விடுங்கோள், அம்ருதஸ்ய - மோக்ஷத்திற்கு, ஏஷ꞉ - இந்த பரமபுருஷன், ஸேது꞉ - அணையாகிறான்,

ஸம்-ஸா. இந்த அக்ஷரபரப்ரம்ம ஸ்வரூபத்தை விசதமாக்குவதற்கு அடிக்கடி சொல்லுகிறது.

ரா-ஸா. மோக்ஷமானது ஸம்ஸாரஸாகரத்திற்கு அக்கரையாகையால் அதற்குக் காரணமாகிய பகவானை ஸேதுவென்கிறது. ஸேதுவானது இக்கரையோரை அக்கரை

சேர்ப்பதன்றோ; ஆகையால் மோக்ஷப்ரதனான அவனையே உபாஸியுங்கோள் இதரவிஷயங்களை விடுங்கோள். அவனே ஸர்வாதாரபூதன்.

௬. 𑌅𑌰𑌾 𑌇𑌵 𑌰𑌥𑌨𑌾𑌭𑍌 𑌸𑌂𑌹𑌤𑌾 𑌯𑌤𑍍𑌰 𑌨𑌾𑌡𑍍𑌯𑌃 𑌸 𑌏𑌷𑍋𑌽𑌨𑍍𑌤𑌶𑍍𑌚𑌰𑌤𑍇 𑌬𑌹𑍁𑌧𑌾 𑌜𑌾𑌯𑌮𑌾𑌨𑌃। 𑌓𑌮𑌿𑌤𑍍𑌯𑍇𑌵𑌂 𑌧𑍍𑌯𑌾𑌯𑌥 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌸𑍍𑌵𑌸𑍍𑌤𑌿 𑌵𑌃 𑌪𑌾𑌰𑌾𑌯 𑌤𑌮𑌸𑌃 𑌪𑌰𑌸𑍍𑌤𑌾𑌤𑍍॥

౬. అరాఇవరథనాభౌసంహతాయత్రనాడ్యస్సఏషో న్తశ్చరతేబహుధాజాయమానః।
ఓమిత్యేవంధ్యాయథాత్మానంస్వస్తివఃపారాయతమసఃపరస్తాత్॥

(ப-ம்.) 𑌯𑌤𑍍𑌰 - எந்தஹ்ருதயத்தில், 𑌰𑌥𑌨𑌾𑌭𑍌 - ரதநாபியில், 𑌅𑌰𑌾𑌃 𑌇𑌵 - அரங்கள்போல, 𑌨𑌾𑌡𑍍𑌯𑌃 - நாடிகள், 𑌸𑌂𑌹𑌤𑌾𑌃 - சேர்ந்திருக்கின்றனவோ; 𑌤𑌤𑍍𑌰 - அந்தஹ்ருதயத்தில், 𑌸𑌃 𑌏𑌷𑌃 - அந்த அக்ஷர புருஷன், 𑌬𑌹𑍁𑌧𑌾 - அநேகப்ரகாரமாக, 𑌜𑌾𑌯𑌮𑌾𑌨𑌃 - உண்டாகிறவனாய், 𑌚𑌰𑌤𑍇 - ஸஞ்சரிக்கிறான். 𑌤𑌮𑌸𑌃 - மூலப்ரக்ருதிக்கு, 𑌪𑌰𑌸𑍍𑌤𑌾𑌤𑍍 - அப்புறத்தானாகிய 𑌵𑌃 - உங்களுக்கு, 𑌪𑌾𑌰𑌾𑌯 - ப்ராப்யனாயிருக்கிற அவனை யடைவதற்கு, 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 - ஆத்மாவாகிய அவனை, 𑌓𑌮𑌿𑌤𑍍𑌯𑍇𑌵𑌂 - ப்ரணவார்த்தங்கொண்டு, 𑌧𑍍𑌯𑌾𑌯𑌥 - த்யானம்பண்ணுங்கோள். 𑌸𑍍𑌵𑌸𑍍𑌤𑌿 - அப்படி த்யானம் செய்கிற உங்களுக்கு மங்களமுண்டாகக்கடவது.

ஸ்ரீ-பா. நாடீஸ்தாநமாகிய ஹ்ருதயத்தில் ஸாக்ஷிபூதனாய்க்கொண்டு ஸுகம் துக்கம் முதலிய வற்றோடுகூடி ஜ்ஞாதாவாய் அநேகப்ரகாரமாய் உண்டாகிறான். அந்த ஆத்மாவை ப்ரணவத்தைக்கொண்டு சொல்லியபடி த்யானியுங்கோள். இப்படிச்சத்ஜ்ஞாநியான ஆசாரியன் சிஷ்யனுக்கு உபதேசிக்கவேண்டிய விஷயத்தை யுபதேசிக்க, சிஷ்யனும் விரக்தனாய் ப்ரம்மவித்யையில் விருப்பமுடையவனாய் மோக்ஷமார்க்கத்திலிழிய அப்படி இழிந்த சிஷ்யனுக்கு விக்நமின்றி ப்ரம்மப்ராப்தி யுண்டாம்படி அநுக்கிரகம்செய்கிறார். அவித்யையைக்கடந்து ப்ரம்மஸ்வரூபத்தைப் பெறுவதற்கு விக்நங்கள் சமிக்கவேணுமென்று ஆசாரியர் ஆசீர்வாதம் செய்கிறார்.

பதாந்வயார்த்தபேதங்கள்.

பதவுரையின்படி கருத்து இராமாநுஜபாஷ்யத்தில் கூறப்பட்டது.

௭. 𑌯𑌃 𑌸𑌰𑍍𑌵𑌜𑍍𑌞𑌃 𑌸𑌰𑍍𑌵𑌵𑌿𑌦𑍍𑌯𑌸𑍍𑌯𑍈𑌷 𑌮𑌹𑌿𑌮𑌾 𑌭𑍁𑌵𑌿।
𑌦𑌿𑌵𑍍𑌯𑍇 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌪𑍁𑌰𑍇 𑌹𑍍𑌯𑍇𑌷 𑌵𑍍𑌯𑍋𑌮𑍍𑌨𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌾 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌃॥

౭. యస్సర్వజ్ఞస్సర్వవిద్యస్యైషమహిమాభువి।
దివ్యేబ్రహ్మపురేహ్యేషవ్యోమన్యాత్మాప్రతిష్ఠితః॥

(ப-ம்.) 𑌯𑌃 - எந்த அக்ஷரபுருஷன், 𑌸𑌰𑍍𑌵𑌜𑍍𑌞𑌃 - எல்லாமறிந்தவனோ; 𑌸𑌰𑍍𑌵𑌵𑌿𑌤𑍍 - எல்லாமடைந்தவனோ; 𑌭𑍁𑌵𑌿 - இவ்வுலகத்தில், 𑌏𑌷 𑌮𑌹𑌿𑌮𑌾 - இந்தமாஹாத்ம்யமானது, 𑌯𑌸𑍍𑌯 - யவனுடையதோ, 𑌏𑌷𑌃 - இந்த ஆத்மாவான பரமபுருஷன், 𑌦𑌿𑌵𑍍𑌯𑍇 𑌵𑍍𑌯𑍋𑌮𑍍𑌨𑌿 - பரமாகாசத்தில், 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌪𑍁𑌰𑍇 - வைகுண்டநகரத்தில், 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌃 - 𑌹𑌿 - இருப்பவனன்றோ;

ஸ0-ஹா. அவித்யைக்குப் பரனாயிருக்கும் பரவித்யாவேத்யனான பரமபுருஷனிருக்குமிடங் கூறுகின்றது. இந்தபரமபுருஷன் ஸர்வஜ்ஞனென்றும் எல்லாமடைந்தவனென்றும் சொல்லப்பட்டது. இன்னமும் அவனுக்கு மஹிமைசொல்லுகிறது. ஸமஸ்தலோகங்களும் இவனுடைய ஆஜ்ஞையிலிருக்கின்றன. சூர்யசந்திரர்கள் இவனுக்கு பயந்து சுழலுகிறார்கள். இவனுடைய ஸங்கல்பத்தால் நதிகளும் ஸமுத்திரங்களும் தங்கள் நிலைமாறாமலிருக்கின்றன. ஸகலஸ்தாவரஜங்கமங்களு மவனிட்டவழக்காயிருக்கின்றன ருதுக்களு மயனங்களும் வருஷங்களும் அவன்கட்டளையைத் தாண்டுகிறதில்லை. அவனிட்ட கட்டளையா லவரவர் ஒவ்வொருவ்யாபாரத்தாலு மவ்வோவ்யாபாரங்களின் பலனைப்பெறுகிறார்கள். இப்படிப்பட்ட மாஹாத்ம்யமுடைய பரமபுருஷன், விளங்காநின்ற ஹ்ருதயமத்யத்திலிருக்கிறவனைப்போல் காணப்படுகிறான்.

ரா-ஹா. மஹாமஹிமையுடைய பரமபுருஷன் பரமபதத்தில் வஸிக்கிறான். அவன் ஸர்வஜ்ஞன் அவாப்தஸமஸ்தகாமன்.

௮. 𑌮𑌨𑍋𑌮𑌯𑌃 𑌪𑍍𑌰𑌾𑌣𑌶𑌰𑍀𑌰𑌨𑍇𑌤𑌾 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑍋𑌽𑌨𑍍𑌨𑍇 𑌹𑍃𑌦𑌯𑌂 𑌸𑌂𑌨𑌿𑌧𑌾𑌯 । 𑌤𑌦𑍍𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨 𑌪𑌰𑌿𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌧𑍀𑌰𑌾 𑌆𑌨𑌨𑍍𑌦𑌰𑍂𑌪𑌮𑌮𑍃𑌤𑌂 𑌯𑌦𑍍𑌵𑌿𑌭𑌾𑌤𑌿 ॥

౮. మనోమయః ప్రాణశరీరనేతా ప్రతిష్ఠితో౽న్నే హృదయం సన్నిధాయ ।
తద్విజ్ఞానేన పరిపశ్యన్తి ధీరా ఆనన్దరూపమమృతం యద్విభాతి॥

(ப·ம்.) 𑌮𑌨𑍋𑌮𑌯𑌃 - நெஞ்சினால் காணத்தக்கவனும், 𑌪𑍍𑌰𑌾𑌣𑌶𑌰𑍀𑌰𑌨𑍇𑌤𑌾 - ப்ராணனையும் சரீரத்தையும் அவைகளின் வ்யாபாரத்தில் நடத்துகிறவனுமான பரமாத்மா, 𑌅𑌨𑍍𑌨𑍇 - சரீரத்தில் 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌃 - இருக்கிறார். 𑌹𑍃𑌦𑌯𑌂 - நெஞ்சை, 𑌸𑌂𑌨𑌿𑌧𑌾𑌯 - அவரிடத்தில் சேர்த்து, 𑌯𑌤𑍍 - யந்தப்ரம்மஸ்வரூபமானது, 𑌆𑌨𑌨𑍍𑌦𑌰𑍂𑌪𑌂 - ஆநந்தரூபமாயும், 𑌅𑌮𑍃𑌤𑌂 - அம்ருதஸ்வரூபமாயும், 𑌵𑌿𑌭𑌾𑌤𑌿 - விளங்குகிறதோ, 𑌤𑌤𑍍 - அந்த ப்ரம்மஸ்வரூபத்தை, 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨 - உபாஸநத்தினால், 𑌧𑍀𑌰𑌾𑌃 - பண்டிதர்கள், 𑌪𑌰𑌿𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 - காண்கிறார்கள்.

ஸ0-ஹா.—மநஸ்ஸின் வ்ருத்திகளினா லறியத்தக்கவனாய் ப்ராண சரீரங்களுக்கு நேதாவா யிருக்கிறவன் உண்ணும் சோற்றின் பரிணாமமாகிய ஸ்தூல சரீரத்திலும் ஸூக்ஷ்மமாயிருக்கிற சரீரத்தில் வர்த்திக்கிறான். ஹ்ருதய புண்டரீகத்தில் புத்தியை செலுத்தி உபதேசஜ்ஞானத்தா லாத்மதத்வத்தை யறிந்து ஆநந்தாம்ருத ஸ்வரூபமான அந்த ப்ரம்மத்தை யுபாஸிக்கிறார்கள்.

ரா-ஹா.—பரிசுத்தமான நெஞ்சினால் பரமாத்மா காணத்தக்கவன். ஜீவனுக்கு ப்ராண சரீரங்களைக் கொடுப்பவன். ப்ராணனை சரீரமாக உடைய ப்ரபு. சரீரத்தில் எவனிருக்கிறானோ அவனிடத்தில் நெஞ்சை செலுத்தி ஆநந்தாம்ருத ஸ்வரூபமான ப்ரம்மத்தை யறிந்து உபாஸநம் செய்கிறார்கள்.

௯. 𑌭𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 𑌹𑍃𑌦𑌯𑌗𑍍𑌰𑌨𑍍𑌥𑌿𑌶𑍍𑌛𑌿𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌸𑌰𑍍𑌵𑌸𑌂𑌶𑌯𑌾𑌃 ।
𑌕𑍍𑌷𑍀𑌯𑌨𑍍𑌤𑍇 𑌚𑌾𑌸𑍍𑌯 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌦𑍃𑌷𑍍𑌟𑍇 𑌪𑌰𑌾𑌵𑌰𑍇 ॥

౯. భిద్యతే హృదయగ్రన్థిశ్ఛిద్యన్తే సర్వసంశయాః।
క్షీయన్తే చాస్య కర్మాణి తస్మిన్ దృష్టే పరావరే॥

(ப்-ம்.) வராவரெ - உலகத்திற்கு பெரியோராகிய இந்திரன் முதலா ஞரைத் தன்னில் தாழ்ந்தாராக வுடையனுயிருக்கிற, தஸ்மிநு - அந்த பரம புருஷன், ஆஷெ - உபஸநத்தால் காணப்படுவானுயின், ஹுகுயமூ௦யிஃ - நெஞ்சிலிருக்கிற அவித்யாதிதோஷங்கள், லிஷ௱ெத - நசிக்கின்றன, ஸவஃ ஸ௦ஶயாஃ - ஸகலஸந்தேஹங்களும், ஊிஷ௱ெஜெ - கழிந்துபோகின்றன. சஸ௱ - இவனுடைய, கூாணி - கருமங்கள், க்ஷீயஜெ - க்ஷயிக்கின்றன.

ரு0-ஹா.—இதில் பரமாத்மஜ்ஞாநத்திற்கு பலம் சொல்லுகிறது. புத்தியி லழிந் திக் கிடக்கிற வாஸநாமயமான அவித்யை கழியுண்கிறது. அவித்யை ஸ்வபாவத்தா லாத்மாவை யடைந்ததன்று. கங்கையைப்போலே இடைவிடாமல் வந்துகொண்டிருந்த ஸகல ஸந்தேஹங்களும் நீங்குகின்றன. இவ்வாறு ஸம்சயங்கள் நீங்கி யவித்யை கழிந்த வனுக்கு, ஜ்ஞாநம் பிறப்பதற்குமுன் செய்தவையாய் பலங்கொடாத கருமங்களும் அக் காலத்தில் செய்த கருமங்களும் க்ஷயிக்கின்றன. இந்த ஜந்மத்திற்குக் காரணமாகிய கருமமோவெனில் அது பயனைத் தருவதற்குத் தொடங்கியதால் அநுபவித்தே யழிய வேணும். இவையெல்லாம் அந்த ப்ரம்மமே நானென்றறிந்தவனுக் குண்டாகிறபலம்.

ரா-ஹா.—அந்த ஜ்ஞாநத்திற்கு பலம் சொல்லுகிறது. ஸர்வோத்க்ருஷ்டர்களான ப்ரம்மாதிகள் யவனுக்குத் தண்ணியரோ; யவன் சேதநாசேதநங்களை சரீரமாக உடைய வனே; அந்த பரமபுருஷன் தர்சநஸமாநாகாரமான உபாஸநத்தில் விளங்கினுனுயின் அந்த உபாஸகனுக்கு அந்தக்கரணத்தில் ராகத்வேஷாதிகளாகிய முடிகள் அவிழ்ந்து போகின்றன. ஹ்ருதய பதத்திற்கு, அந்தக்கரணத்தையாயினும், ஜீவனையேயாயினும் பொருளாகச் சொல்லலாம். ஆகையால் ஜீவனுக்கு ஸமஸ்தராகத்துவேஷங்களும் நீங்கு மென்றுமொருபொருள்சொல்லவமையும். பிரம்மத்தையறிந்தபோது ஸர்வஜ்ஞத்வமுண் டாகிற தானதால் ஸகல ஸம்சயங்களும் நீங்கிப்போகின்றன. ப்ராரப்தகர்மம் தவி மற்றுள்ள அநேக ஜந்மார்ஜிதங்களான பூர்வகருமங்கள் நசிக்கின்றன. கர்மத்திற் நாசமாவது பலங்கொடுக்கிற சக்தி நாசமென்றறிக. பகவான் பாஷ்யகாரர் இவ்வாறு யாக்யானம் செய்திருக்கிறார். இனி இப்படி உபாஸித்தவனுக்கு மரணகாலத்தில் ஸக கருமங்களும் நசிக்குமென்று சில ச்ருதிகள் சொல்லுகின்றன. பகவான் பாஷ்யகாரரு அவ்வாறே யருளிச்செய்திருக்கின்றனர். அப்படியிருக்க, இங்கு உபாஸநம் தொடங்கு போதே ஸகல கருமங்களும் அழியுமென்பது கூடுமோவெனில்; கூடும்; இங்குச் செ ன்ன அழிவு இவ்வுபாபாஸகனுடைய பாபத்திற்கு பலம்கொடுக்கக் கடவேனல்லேன் என்கிற பகவத்ஸங்கல்ப ரூபமாகின்றது. மரணகாலத்தில் இவன் பாபங்களைப் பொ த்துவிட்டேன், என்கிற பகவத்ஸங்கல்பம். ஆகையால் விரோதமில்லை.

௧௦. ஹிரண்மயெவரெகொஶெவிரஜம்ப்ரஹ்ம நிஷ்கலம் ।
தச்சுப்ரம்ஜ்யோதிஷாம்ஜ்யோதிஃ தத்யதாத்மவிதோவிதுஃ ॥

౧౦. హిరణ్మయేపరేకోశే విరజంబ్రహ్మనిష్కలమ్ ।
తచ్ఛుభ్రంజ్యోతిషాంజ్యోతిః తద్యదాత్మవిదోవిదుః ॥

(ப்-ம்.) ஹிரண்மயெ - ஸ்வயம்ப்ரகாசமாகையாலே ஹிரண்மயமென் ப்படுவதாய், கொஶெ - பரமாத்மவாஸஸ்தானமாயிருக்கிற, வரெ - ப பதத்தில், விரஜம் - ஸத்வ ரஜஸ் தமோரூபகுணங்களில்லாததாய், நிஷ்கல அவயவமில்லாததாய், ஶுப்ரம் - சுத்தனுய், ஜ்யோதிஷாம் - ஜ்யோதி

ஸூர்யாதிகளுக்கும், ஜ்யோதி:-ஜ்யோதிஸ்ஸைக்கொடுக்கத்தக்கதாய், ஆத்மவித: யத்விது:-ஆத்மஸ்வரூபத்தை யறிந்தவராலே யறியப்பட்டதாய், தத்-ச்ருதிப்ரஸித்தமாயிருக்கிற, ஶுப்ரம் - பரப்ரம்மமானது விளங்குகின்றது.

ஶ-பா.—கீழ்ச்சொல்லிய மந்திரத்தின் பொருளையே விரித்துரைக்கின்ற இம் மந்திரமும் மேலிரண்டு மந்திரங்களும். ஆத்மவித்துக்களே ப்ரம்ம ஸ்வரூபத்தை இப் படிப்பட்டதென் றறிவார்கள். மற்றோரறியார்.

ரா-பா.—நிர்தோஷமாய் திவ்யமங்கள விக்கிரத்தோடு பரமபதத்தில் பரப்ரம்மம்

கக. ந தத்ர ஸூர்யோ பாதி ந சந்த்ரதாரகம் நேமா வித்யுதோ பாந்தி குதோऽயமக்நி: । தமேவ பாந்தமநுபாதி ஸர்வம் தஸ்ய பாஸா ஸர்வமிதம் விபாதி ॥

౧౧. నతత్రసూర్యోభాతినచంద్రతారకంనేమావిద్యుతోభాంతికుతోయమగ్నిః।
తమేవభాంతమనుభాతిసర్వంతస్యభాసాసర్వమిదంవిభాతి॥

(ப-ம்.) தத்ர - அந்தப்ப்ரம்மஸ்வரூபத்தில், ஸூர்ய: - ஸூரியனும், நபாதி - ப்ரகாசிப்பதில்லை, சந்த்ரதாரகம் - சந்திரனும் நக்ஷத்திரங்களும் ந - ப்ரகாசிப்பதில்லை, இமா: வித்யுத: - இந்த மின்னல்களும், நபாந்தி- மின்னுகின்றனவில்லை, அயமக்நி: - இந்த அக்நி, குத: - எப்படிப்ரகாசிக்கப்போகிறது, ஸர்வம் - எல்லாம், பாந்தம் - ப்ரகாசிக்கிற, தமேவ அநு - அந்தப்ரம்மத்தையநுஸரித்தே, பாந்தி - ப்ரகாசிக்கின்றன. தஸ்ய - அந்த ப்ரம்மத்தினுடைய, பாஸா - காந்தியினால், இதம் ஸர்வம்-இவையெல்லாம், விபாதி - ப்ரகாசிக்கின்றது.

ஶ-பா.—ஸமஸ்த ஜ்யோதிஸ்ஸுக்களினு மிதுவேஜ்யோதிஸ்ஸென்று முன் சொன்ன விஷயத்தை விரிக்கின்றது இம்மந்திரம். ஆத்மாவாகிய ப்ரம்மஸ்வரூப விஷயத்தில், எல்லாவற்றையும் ப்ரகாசிக்கச்செய்கிற சூரியனும் ப்காசிப்பதில்லை. அந்த ப்ரம்மத்தை ப்ரகாசிக்கச்செய்கிறதில்லை. அந்த சூரியனே, அந்தப்ரம்மத்தின் தேஜஸ்ஸினால் ஆத்மாவல்லாத ஸமஸ்தத்தையும் ப்ரகாசிக்கச்செய்கிறான். அவனுக்கு சுயமாய் ஒன்றை ப்ரகாசிக்கச்செய்ய சக்தியில்லை. அவ்வாறே சந்திரனும் நக்ஷத்திரங்களும் இந்த மின்னல்களும் ப்ரகாசிக்கச்செய்வதில்லை. ஸூரிய தேஜஸ்ஸுக்கு முன்னடங்கிப்போகின்ற தேஜஸ்ஸை யுடையவனாய் நம்மால் ப்ரத்யக்ஷத்தில் காணப்படுகிற இந்த அக்நிக்கு அந்த ப்ரம்மத்தை ப்ரகாசப்படுத்தும் சக்தியேது. பலவாறுசொல்லி யென்பயன். இந்த ஜகத்து விளங்குவது தனக்குத்தானே விளங்காநின்ற ப்ரம்மஸ்வரூபத்தை யநுஸரித்தேயன்றி வேறில்லை. தண்ணீர்முதலியவை யொன்றைச் சுடுவது நெருப்பின் ஸம்பத்தாலேயன்றி சுயமாகவன்றே. அவ்வாறேயென்க. இந்த ஸூரியசந்திரர் நக்ஷத்திரம் முதலியவற்றோடு கூடிய இந்த ஜகத்து அந்த ப்ரம்மத்தின் தேஜஸ்ஸாலே ப்ரகாசிக்கின்றது. ஏனென்றால் அந்த ப்ரம்மமேயன்றோ காரியமாய் அவைகளின் காந்தியால் விளங்குகின்றது. ஆகையா லந்த ப்ரம்மம் ஸ்வயம் ஜ்யோதிரூபமென்பது விளங்குகின்றது. தனக்கில்லாதே பிறருக்குத்தான்கொடுப்பது கூடாதன்றோ; மண்குட முதலியவை மற்றொன்றை விளங்கச்செய்யக் கண்டதில்லை. காந்தியுடைய ஸூரியன் முதலாகிய

வற்ருல் மற்றவை விளங்கக்கண்டோம். ஆனதால், தான் ஸ்வயம் ஜ்யோதியாயிருந்தே மற்றவைகளை ஜ்யோதிரூப மாக்கவேணும்.

ரா-ஸா.—அந்த ப்ரம்ஸ்வரூபத்தை ஜ்யோதிஸ்ஸுக்களுக்கும் ஜ்யோதிஸ்ஸென்றது என்கொண்டென்பதை விரிக்கின்றது. இந்த ஸூரியன் முதலியவை எல்லாவற்றுக்கும் அந்த ப்ரம்மம் ப்ரகாசிக்கும்போது காந்தியில்லை என்று கருத்து. மிகவும் ப்ரகாசரூபமாய் ஸூரியாதிகளும் அவைகளால் ஜகத்து ப்ரகாசிக்கவும் ப்ரத்யக்ஷமாய்க் காணப்படுகையில் அந்த ப்ரம்மஸ்வரூபத்தில் ஸூரியன் ப்ரகாசிப்பதில்லை என்றெங்ஙனம் சொல்லலாமெனில் கூறுகின்ருேம். இந்த ஜகத்தை விளங்கச்செய்கிற ஸூரியாதி தேஜஸ்ஸெல்லாம் சுயமாய் வந்ததன்றே. பரமாத்மாவினுல் கொடுக்கப்பட்ட அவனுடைய தேஜஸ்ஸே யன்ருே. இவ்விஷயம் கீதையிலும் பகவானுலே சொல்லப்பட்டது. "யதாதித்யகதம் தேஜோஜகத் பாஸயதேகிலம்! யச்சந்த்ரமஸியச்சாக்நௌ தத் தேஜோவித்திமாமகம்" என்கிற சுலோகத்தைக் காண்க. ஸூரிய சந்திராக்கி முதலியவற்றிலுள்ள தேஜஸ்ஸு என்னுல் கொடுக்கப்பட்ட என்னுடைய தேஜஸ்ஸு, என்று இதின் பொருள். பகவான் பாஷ்யகாரரும் இவ்வாறே வ்யாக்யாநம் செய்தருளினுர். ஸூரியாதிகள் என்னை யாராதித்து என்னிடத்திலிருந்து என்னுடைய தேஜஸ்ஸின் லேசத்தைப்பெற்று விளங்குகிருர்கள். என்று அர்ஜுநனுக்கு பகவானுபதேசிக்கிருரென்று அவ்விடத்தில் பாஷ்யத்திற்குக் கருத்து. ஆகையா லிவர்களுக்கு சுயமான தேஜஸ் ஸில்லாமையினுல் தேஜஸ்ஸில்லாதவர்களென்று சொல்லக் கூடும். ஆகையால் அந்த பரமபுருஷனுடைய காந்தியினுலே எல்லாம் விளங்குகிறது. ப்ரத்யக்ஷத்தில் ஸூரியாதி தேஜஸ்ஸால் ஜகத்து விளங்கினுலு மந்த தேஜஸ்ஸு அவர்களுடைய தன் ருகையால் பரமபுருஷனுடையதே யாதலால் அந்த பரமபுருஷனுடைய தேஜஸ்ஸாலே எல்லாம் விளங்குகிறது என்று சொல்லக் குறையில்லை. இங்கு சொல்லவேண்டிய விசேஷங்கள் கடவல்லியிலும் சொல்லியிருக்கிருேம். அங்கே கண்டுகொள்க.

௧௨. 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍈𑌵𑍇𑌦𑌮𑌮𑍃𑌤𑌂 𑌪𑍁𑌰𑌸𑍍𑌤𑌾𑌦𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌪𑌶𑍍𑌚𑌾𑌦𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌦𑌕𑍍𑌷𑌿𑌣𑌤𑌶𑍍𑌚𑍋𑌤𑍍𑌤𑌰𑍇𑌣। 𑌅𑌧𑌶𑍍𑌚𑍋𑌰𑍍𑌧𑍍𑌵𑌂 𑌚 𑌪𑍍𑌰𑌸𑍃𑌤𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍈𑌵𑍇𑌦𑌂 𑌵𑌿𑌶𑍍𑌵𑌮𑌿𑌦𑌂 𑌵𑌰𑌿𑌷𑍍𑌠𑌮𑍍॥

౧౨. బ్రహ్మైవేదమమృతంపురస్తాద్బ్రహ్మపశ్చాద్బ్రహ్మదక్షిణతశ్చోత్తరేణ।
అధశ్చోర్ధ్వంచప్రసృతంబ్రహ్మైవేదంవిశ్వమిదంవరిష్ఠమ్॥

(ப-ம்) 𑌇𑌦𑌂-இப்படிப்பட்ட, 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍈𑌵 - பரப்ரம்மமே, 𑌅𑌮𑍃𑌤𑌂- மோக்ஷம், 𑌪𑍁𑌰𑌸𑍍𑌤𑌾𑌤𑍍 - முன்னும்விளங்குகின்றது, 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 - பிரம்மமே, 𑌪𑌶𑍍𑌚𑌾𑌤𑍍 - பின்னும்விளங்குகின்றது, 𑌦𑌕𑍍𑌷𑌿𑌣𑌤𑌃- வலபுறத்திலும், 𑌉𑌤𑍍𑌤𑌰𑍇𑌣𑌚 - இடபுறத்திலும், 𑌅𑌧𑌃𑌚 - கீழும், 𑌊𑌰𑍍𑌧𑍍𑌵𑌂𑌚 - மேலும், 𑌪𑍍𑌰𑌸𑍃𑌤𑌂 - வ்யாபித்திருக்கின்றது, 𑌇𑌦𑌂 𑌵𑌿𑌶𑍍𑌵𑌂 - இந்தஸமஸ்தமும், 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 - ப்ரம்மமே, 𑌇𑌦𑌂 - இந்தப்ரம்மமே, 𑌵𑌰𑌿𑌷𑍍𑌠𑌂 - வரிக்கத்தக்கது.

ஸர-ஸா.—ப்ரம்மமே ஸத்யம், மற்றவை மித்யை, என்று முன்சொன்ன உபதேசத்தை திருடமாக்கி முடிக்கின்ற திம்மந்திரத்தில். உலகத்தின் தோற்றம் கயிற்றில் தோற்றுகிற பாம்புத் தோற்றம்போலது. ப்ரம்மமேஸத்யமென்று வேதாநுசாஸநமாம் ரா-ஸா.எல்லாவிடங்களிலும் வ்யாபித்திருக்கிறவஸ்து வரிக்கத்தக்கின ப்ரம்மமேயாம்

𑌇𑌤𑌿 𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑌮𑍁𑌣𑍍𑌡𑌕𑍇 𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑌃 𑌖𑌣𑍍𑌡𑌃.

ஸ்ரீ:.

𑌅𑌥 𑌤𑍃𑌤𑍀𑌯𑌮𑍁𑌣𑍍𑌡𑌕𑍇 𑌪𑍍𑌰𑌥𑌮𑌖𑌣𑍍𑌡𑌃.

௧. 𑌦𑍍𑌵𑌾 𑌸𑍁𑌪𑌰𑍍𑌣𑌾 𑌸𑌯𑍁𑌜𑌾 𑌸𑌖𑌾𑌯𑌾 𑌸𑌮𑌾𑌨𑌂 𑌵𑍃𑌕𑍍𑌷𑌂 𑌪𑌰𑌿𑌷𑌸𑍍𑌵𑌜𑌾𑌤𑍇।
𑌤𑌯𑍋𑌰𑌨𑍍𑌯𑌃 𑌪𑌿𑌪𑍍𑌪𑌲𑌂 𑌸𑍍𑌵𑌾𑌦𑍍𑌵𑌤𑍍𑌤𑍍𑌯𑌨𑌶𑍍𑌨𑌨𑍍𑌨𑌨𑍍𑌯𑍋 𑌅𑌭𑌿𑌚𑌾𑌕𑌶𑍀𑌤𑌿॥

౧. ద్వా సుపర్ణా సయుజా సఖాయా సమానం వృక్షం పరిషస్వజాతే।
తయోరన్యః పిప్పలం స్వాద్వత్త్యనశ్నన్నన్యో అభిచాకశీతి॥

(ப-ம்) 𑌸𑌯𑍁𑌜𑌾 - ஸமானமானகுணமுடையவர்களாய், 𑌸𑌖𑌾𑌯𑌾 - கூடியிருப்பவர்களாய், 𑌸𑍁𑌪𑌰𑍍𑌣𑌾 - பக்ஷிகள்போல்வராகிய ஜீவாத்ம பரமாத்மாக்கள், 𑌦𑍍𑌵𑌾 - இருவரும், 𑌸𑌮𑌾𑌨𑌂 𑌵𑍃𑌕𑍍𑌷𑌂 - வ்ருக்ஷம்போலிருக்கிற ஒருசரீரத்தை, 𑌪𑌰𑌿𑌷𑌸𑍍𑌵𑌜𑌾𑌤𑍇 - அடைந்திருக்கிறார்கள், 𑌤𑌯𑍋𑌃 - அவ்விருவருக்குள், 𑌅𑌨𑍍𑌯𑌃 - பரமாத்மாவைக்காட்டில் வேறுபட்டவனான ஜீவாத்மா, 𑌸𑍍𑌵𑌾𑌦𑍁 - விபாகதசையையடைந்திருக்கிற, 𑌪𑌿𑌪𑍍𑌪𑌲𑌂 - புண்யபாபரூபமாகிய கருமபலத்தை, 𑌅𑌤𑍍𑌤𑌿 - புஜிக்கிறான். 𑌅𑌨𑍍𑌯𑌃 - ஜீவாத்மாவைக் காட்டில் வேறுபட்ட பரமாத்மா, 𑌅𑌨𑌶𑍍𑌨𑌨𑍍 - கர்ம பல ஸம்பந்தமில்லாதவனாய், 𑌅𑌭𑌿𑌚𑌾𑌕𑌶𑍀𑌤𑌿 - ப்ரகாசிக்கிறான்.

𑌭𑌾॰-𑌷𑌾.—இதுவரையில் பரவித்யை சொல்லப்பட்டது. யாதொன்று புருஷபதத்தால் சொல்லப்படுகிற ஸத்யஸ்வரூபமான அக்ஷர பரப்ரம்மத்தை யறிவதற்கு ஸாதநமாகின்றதோ; யதை யறிந்து அவித்யைமுதலிய ஸம்ஸார காரணங்கள் நீங்கி ராகத்வேஷமுதலிமுடிகள் கழியுமோ; அந்த ப்ரம்மத்தை யடைவதற்கு ப்ரணவத்தை வில்லாக்கி என்று துடங்கி யோகமுமுபாயமாகச் சொல்லப்பட்டது. இனி யதற்கு துணைக் காரணங்களாகிய ஸத்யமுதலியவை கூறுவதற்கு இந்த கண்டம் துடங்கப்பட்டது. அதுவுமன்றி தத்வ நிச்சயமும் முக்யமாய் சொல்லப்படுகிறது. கீழில் தத்வநிச்சயம் பண்ணப்பட்டதாயினு மது புலப்படுவது மிகவும் வருத்தமானதினால் இங்குமதைச் சொல்வது புநருக்தி தோஷத்திற் கிடமாகாது. பரமார்த்த வஸ்துவை யறிவித்தற்கு ஸூத்திரமாகிய மந்திரம் முதலில் "த்வாஸுபர்ணா" என்பது. இதற்குப் பொருள் சொல்லுகிறோம். பக்ஷிகளின் ஸாத்ருச்யமிருப்பதால் பக்ஷிகளென்றது. எப்போதும் கூடியிருப்பதால் ஸயுஜா என்றது. ஒன்றாய் தோற்றுகிற காரணத்தை யுடையவராகையால் ஸகாயா என்றது. இப்படியுள்ள ஜீவாத்ம பரமாத்மாக்கள் வருக்ஷம்போ லழிந்து போகிறபடியால் வ்ருக்ஷமெனப்படுகிற சரீரத்தை தங்களுக்கு ப்ரத்யக்ஷ ஸ்தாநமாக அடைந்திருக்கின்றார்கள். இரண்டு பக்ஷிகள் ஒரு வ்ருக்ஷத்தில் சேருவதுபோலவென்று கருத்து. இந்த வ்ருக்ஷமானது மேல்வேராய் கீழ் கிளைகளாய் க்ஷேத்திரமென்று பெயர் பெற்றதாயிருக்கிறது; ஸமஸ்த ப்ராணிகள் செய்த கருமபலத்திற்கு மிருப்பிடமாயிருக்கிறது இந்த சரீரமே. அந்த சரீரத்தை அவித்யை காமம் கருமம் வாஸனை இவைகளுக்கிடமாகிய லிங்கத்தை உபாதியாக உடைய ஜீவனும் ஈச்வரனும் பக்ஷிகளைப்போ லடைந்திருக்கின்றனர். அவ்வாறு சேர்ந்திருக்கிற இருவருள் ஒருவனாகிய ஜீவன், ஸுகதுக்கங்களை கருமத்திற்குத் தக்கபடி யநுபவிக்கிறான். அது, அவிவேகத்தினாலே வந்த விசித்திரவேதனை, ஸர்வஜ்ஞனாய் ஸத்வத்தை யுபாதியாக உடைய நித்யசுத்தபத்த முக்தஸ்வ

பாவனுகிய ஈச்வரன் கருமபலத்தை புசிப்பதில்லை. இந்த ஈச்வரன் ஸத்தாமாத்திரத்தால் ப்ரக்ருதி ஜீவர்களை நித்தியஸாக்ஷியாய்க்கொண்டு ப்ரேரணம் செய்கிறவனுகையால் தான் ஸாக்ஷியாகிருனேயன்றி கருமபலத்தை புசிப்பதில்லை. தான் பார்த்தமாத்திரத்தால் ப்ரேரித்துக்கொண்டு அரசனைப்போல் விளங்குகிருன்.

ரூ-ஸா.—கீழ்ச்சொல்லியதில் ப்ரம்மத்திற்கு சரீர ஸம்பந்தத்தால் ஸுகதுக்காநுபவம் வரும்போல் தோற்றுகையா லந்த ஸந்தேஹம் நீங்குவதற்கு இந்த மந்திரம் சொல்லப்படுகிறது. சுபாவத்தில் அபஹதபாப்மத்வம் முதலிய குணங்களால் சமாநராய், கூடியிருப்பவராய் பக்ஷிபோலிருக்கிற ஜீவாத்ம பரமாத்மாக்கள் ஒருசரீரத்தி லிருந்தாலும் பரவசனுன ஜீவாத்மா துக்காநுபவம் பண்ணுகிருனேயன்றி பரமாத்மாவுக் கில்லை. ஜீவன் வேறு பரமாத்மா வேருகையால் ஜீவனுடைய துக்கம் பரமாத்மாவுக்கில்லை. இத்தால் ஜீவனே பரமாத்மா என்று அத்வைதிகள் சொல்லுகிறபடி ஸரியல்லவென்று இந்தச் சுருதி காட்டுகிறது. அப்படியாகில் பரமாத்மாவுக்கு துக்காநுபவம் வருகையாலென்க.

உ. ஸமாநே வ்ருக்ஷே புருஷோ நிமக்நோ(அ)நீஶயா ஶோசதி முஹ்யமாநः।
ஜுஷ்டம் யதா பஶ்யத்யந்யமீஶமஸ்ய மஹிமாநமிதி வீதஶோகः॥

౨. సమానే వృక్షే పురుషో నిమగ్నో నీశయా శోచతి ముహ్యమానః।
జుష్టం యదా పశ్యత్యన్యమీశమస్య మహిమానమితి వీతశోకః॥

(ப்-ம்.) அநீஶயா-போக்யபூதையாயிருக்கிற ப்ரக்ருதியினுலே, முஹ்யமாநः - மோஹத்தையடைந்தவனுய், ஸமாநே - ஒன்றுயிருக்கிற, வ்ருக்ஷே - சரீரத்தில், நிமக்நः - முழுகினவனுய், ஶோசதி - சோகிக்கிறுன். இதி - இந்தப்படி, அந்யம் - வேறுனவனுய், ஜுஷ்டம் - தன்னிடத்தில் ப்ரீதியுடையவனுயிருக்கிற. ஈஶம் - பரமாத்மாவையும், அஸ்ய - இந்த பரமாத்மாவினுடைய, மஹிமாநம் - மாஹாத்ம்யத்தையும், யதா - எப்போது, பஶ்யதி - பார்க்கிறுனே, (ததா-அப்போது) வீதஶோகः-சோகமில்லாதவனுகிறுன்.

ஸம-ஹா —இவ்வாறு ஜீவனுக்கு கர்மபலாநுபவ மாகையால் முன்சொன்னபடி வ்ருக்ஷம்போன்ற ஒருசரீரத்தில் போக்தாவாய்க்கொண்டு அவித்யை, காமம் கருமபலம் ராகம், த்வேஷம்முதலிய பெருஞ்சுமையால் அமுக்கப்பட்டு ஸமுத்திரஜலத்தில் சுரைக்காய்போல முழுகினவனுய் தேஹத்தையே ஆத்மாவாக ப்ரமித்துக்கொண்டு இவனுக்கு நான் பிள்ளை இவனுக்கு நான் பேரன் நானிளைத்தவன் நான் பெருத்தவன் நான் குணமுடையவன் நான் குணமில்லாதவன் நான் ஸுகத்தை யநுபவிக்கிறேன், நான் துக்கத்தை யநுபவிக்கிறேன், என்றிப்படிப்பட்ட ஜ்ஞாநமுடையவனுய் பிறப்பதும் சாவதும் பந்துக்களோடு கூடுவதும் பிரிவதுமாய், எனக்கு சக்தியில்லையே என்பிள்ளை மரித்தானே என் பார்யை மரணமடைந்தாளே இனி நானேன் பிழைத்திருக்கவேணும், என்று தீநனுய் அனேகவித ஸங்கடங்களால் விவேகமின்றி சிந்தையடைகிறவனுய் தபிக்கிறுன். இப்படி திர்யக்காபு மனுஷ்யனுயும் பிறந்துபிறந்து ப்ரேதனுகிற அந்த ஜீவன் இவ்வாறு கழிந்துபோன அநேக ஜந்மங்களில் செய்த ஸுக்ருதலேசத்தால் ஒருகருணையுடைய புருஷனுல் உபதேசிக்கப்பெற்ற யோகமார்க்கத்தை யுடையனுய் கொல்லாமை, மெய்யுரை, ஸ்த்ரீ ஸம்பந்தமில்லாமை, நிவ்ருத்தி, சமம்தமம் முதலியவற்ருேடு கூடி தெளிந்த நெஞ்சையுடையவனுய் யோகிகளில் பலராலும்கண்டு ஸேவிக்கப்படுகிற

உபாதிவிலக்ஷணனான ஈச்வரனை யெப்போது காண்கிறானோ பசிதாஹம் சோகம்மோஹம் ஜநநமரணம் இவைகளில்லாத அந்த ஈச்வரனுடைய மகிமையையும் எல்லா ஜகத்திற்கு இவனேயாத்மா அவனே நான் ; ஸர்வ ஸமனாய் ஸர்வபூதங்களிலு மிருக்கிற ஈச்வரன் என்னைக்காட்டில் அவித்தையினாலுண்டாகிய உபாதியினால் பரிச்சேதிக்கப் பட்டவனாகையால் வேறுபட்டவனன்று. இந்த ஜகத்தின் மகிமையெல்லாம் பரமேச்வரனாகிய என்னுடைய மகிமை என்பதையும் எப்போது தெரிந்துக்கொள்ளுகிறானோ ; அப்போது ஸமஸ்தசோக ஸாகரங்களில்னின்றும் விடுபட்டு க்ருதக்ருத்யனாகிறான்.

ரா-ஹா. ப்ரக்ருதி ஸம்பந்தத்தினால் பரமாத்மாவுக்குப் போல் தனக்குமுண்டான ஜ்ஞானம் ஆநந்தம்முதலியவை மறைந்தவனாய் சரீரத்தில் நான் பெருத்தவன் நானிளைத்தவன் என்று ஆத்மப்ரமத்தைப் பண்ணிக்கொண்டு அந்த சரீரஸம்பந்தத்தால் வருகிற சுகதுக்கங்களை யநுபவிக்கிறான். எக்காலத்திலிந்தஜீவன் இவ்வாறு முழுகிக்கிடக்கிற தன்னைக்காட்டிலும் தனக்கு தாரகனாகையாலும் நியந்தாவாகையாலும் சேஷியாகையாலும் விலக்ஷணனாய் தான்செய்த ஸுக்ருதலவத்தால் தன்னிடத்தில் ப்ரீதிசெய்திருக்கிற பரமாத்மாவையும், ஸமஸ்தஜகத்தையும் நியமிக்கிற அவனுடைய மாகாத்ம்யத்தையும் காண்கிறானோ ; அக்காலத்தில் சோகம்விட்டவனாகிறான். என்றுபொருள். சிலர், அநீசயா - என்பதற்கு ஸாமர்த்யமில்லாமையினாலே, என்று வ்யாக்யாநஞ்செய்து, சேற்றிலழுந்தி யொன்றும்தோற்றாமல் துக்கித்துக்கொண்டிருந்த ஒருபுருஷன் தானேவெளிக்கிளம்ப சக்தியில்லாமையால் தன்னைப்போல் சேற்றில்விழாதவனாய் தன்னிடத்தில் ப்ரீதியோடுகூடிய புருஷனையு மவனுக்குத் தன்னை யெடுக்கத்தக்க சக்தியையும் பார்த்து, இனி நமக்குபயமில்லையென்று சோகத்தைவிடுகிறபடி இத்தால் அநுஸந்திக்கப்படுகிறது; என்றுரைத்தனர். இந்தபக்ஷத்திற்கும் பாஷ்யவிரோதமில்லை.

௩. யதா பஶ்ய: பஶ்யதே ருக்மவர்ணம் கர்தாரமீஶம் புருஷம் ப்ரஹ்மயோநிம் । ததா வித்வாந் புண்யபாபே விதூய நிரஞ்ஜந: பரமம் ஸாம்யமுபைதி ॥

3. యదా పశ్యః పశ్యతే రుక్మవర్ణం కర్తారమీశం పురుషం బ్రహ్మయోనిమ్।
తదా విద్వాన్ పుణ్యపాపే విధూయ నిరంజనః పరమం సామ్యముపైతి॥

(ப்-ம்.) பஶ்ய: - ஜீவாத்மாவானவன், யதா - எந்தகாலத்தில், ருக்மவர்ணம் - ஸுவர்ணஸ்வரூபமாய் ப்ரகாசிக்கிற அப்ராக்ருத திவ்யமங்கள விக்ரஹத்தையுடையவனாய், ஈஶம் - ஜகத்துக்கு நியாமகனாய், கர்தாரம் - ஜகத்கர்தாவாய், ப்ரஹ்மயோநிம்- ப்ரக்ருதிக்குபாதாநமாயிருக்கிற, புருஷம் - பரமபுருஷனை, பஶ்யதே - ஸாக்ஷாத்கரிக்கிறானோ, ததா - அந்த காலத்தில், வித்வாந் - அந்தப்ரம்மதர்சி, நிரஞ்ஜந: - ப்ரக்ருதிஸம்பந்த மில்லாதவனாய், புண்யபாபே - புண்யத்தையும் பாபத்தையும், விதூய - நிரஸித்து, பரமம்ஸாம்யம் - அத்யந்தஸாம்யத்தை யடைகிறான்.

ஶம-ஹா. இந்த மந்திரமும் முன்சொன்ன விஷயத்தையே விஸ்தரித்துச் சொல்லுகிறது. உபாஸகனானவன் எப்போது ஸ்வயம்ஜ்யோதிரூபனாய் ஜகதீசனாய் ஜகத்கர்தாவாயிருக்கிற காரணப்ரம்மமான புருஷனை யபேதமாகப் பார்க்கிறானோ; அவனப்போது ஸகல கருமங்களும் நீங்கி ப்ரம்மத்தோடு பேதமின்றி ஸாம்யத்தை யடைகிறான். அபேதத்தை யடைகிறானென்பதே அத்யந்தஸாம்யத்தை யடைகிறான், என்று சொல்லப்ப

டுகிறது. பேதமுண்டாகி லத்யந்த ஸாம்யம் கூடாதன்றே. ஆகையா லபேதத்தை யடைகிறானென்றே பொருள்.

ரா-ஹா. தன்னைக்காட்டில் விலக்ஷணனாக பரமாத்மாவை எப்போதறிகிறானோ அப்போது அபஹதபாப்மத்வம் முதலிய குணங்களால் பூர்ணஸாம்யத்தையடைகிறான் ஸாம்யத்தை யடைகிறானென்பதினால் லபேதமில்லையென்று ஸ்பஷ்டமாகின்றது.

௪. ப்ராணோ ஹ்யேஷ ய꞉ ஸர்வபூதைர்விபாதி விஜாநந் வித்வாந் பவதே நாதிவாதீ | ஆத்மக்ரீட³ ஆத்மரதி꞉ க்ரியாவாநேஷ ப்³ரஹ்மவிதா³ம் வரிஷ்ட²꞉ ||

౪. ప్రాణో హ్యేష యస్సర్వభూతైర్విభాతి విజానన్విద్వాన్భవతే నాతివాదీ।
ఆత్మక్రీడ ఆత్మరతిః క్రియావానేష బ్రహ్మవిదాం వరిష్ఠః॥

(ப்-ம்.) ய꞉ - யந்தபரமபுருஷன், ஸர்வபூதை꞉ - ஸமஸ்த பூதங்களாலு மாச்ரயிக்கப்பட்டவனாய், விபாதி - விளங்குகிறானே; ஏஷ꞉ஹி - இந்தபரமபுருஷனேயென்றால், ப்ராண꞉ - பரமாத்மா; விஜாநந் - அவனை யறிந்தவனாய், வித்வாந் - உபாஸகனாய்க்கொண்டு, தேந - அந்தபுருஷனாலே, அதிவாதீ - அதிவாதம்பண்ணுகிறவனாக, பவ - ஆகக்கடவாய்.

ஶம்-ஹா. ப்ராணனுக்கும் ப்ராணனாய் பரமாத்மாவாய் பரமேச்வரனாய் ஸமஸ்தபூதங்களிலுமிருப்பவனாய் அனேக ப்ரகாரமாய் விளங்குகிற பரமபுருஷனை நானேயவனென்று எவனறிகிறானோ, எவனிந்த புருஷஸ்வரூபத்தை யடைகிற ப்ரம்மத்தைவிட மற்றொன்றை யறியாமையாலே அதிவாதம் பண்ணானோ; அதாவது இரண்டுவஸ்துவையறிந்தாலன்றோ, அதைவிட இதுசிறந்தது என்று அதிவாதம் செய்யக்கூடும். இவனுக்கு ப்ரம்மம்தவிர மற்றொன்று தோற்றாமையாலே இந்த பொருளைவிட ப்ரம்மம் சிறந்ததென்று அதிவாதம் பண்ணவழியில்லை; அதிவாதமாவது சிறந்தது என்று ஒருபொருளை ச்லாகிப்பது. புத்திரன் பார்யை முதலியவர்களிடத்தில் க்ரீடையைவிட்டு ப்ரம்மத்தினிடத்திலே எவன் க்ரீடிக்கிறானோ அப்படியே ப்ரம்மவிஷயத்திலேயே ப்ரீதியுடையவனாகிறானோ; கிரீடையாவது ஆநந்தத்திற்குக் காரணமான காயிகவ்யாபாரம், ரதியாவது - மநஸ்ஸில்பிறக்கிறப்ரீதி. அப்படியே ஜ்ஞாநம் முதலிய மாநஸக்ரியைகளை யுடையவனாகிறானோ; இங்குசிலர் க்ரியை என்பது அக்நிஹோத்திரம் முதலிய கர்மாநுஷ்டாநத்தை என்று வ்யாக்யாநம் செய்யவிரும்புகிறார்கள். அது விருத்தம். கருமாநுஷ்டாநம் செய்பவன் ப்ரம்மத்திலேயே நெஞ்சைச் சேர்ப்பவனாகான். இவ்விரண்டு மொருவனுக்குச்சேருமோ. இருளும் வெளிச்சமும் சேர்ந்தபோதன்றோ ஜ்ஞாநகருமங்களொன்று சேருவது. ஆகையாலவர்சொல்லுவது வீண்ப்ரலாபமேயாம். சுருதிகளினாலுமிதுவிளங்கும். ஆகையால் க்ரியை என்பது ஜ்ஞாநத்தையேயன்றி கருமத்தையல்ல. அப்படிப்பட்டவன் ப்ரம்மத்தை யறிந்தவரில் சிறந்தவனாகிறான்.

ரா-ஹா. மற்றச்சுருதிகளில்போல இங்கும் ப்ராணசப்தம் பரமாத்மாவையே கூறுகின்றது. இந்தபரமாத்மா எல்லாபூதங்களாலு மாச்ரயிக்கப்படுகிறான், இப்படிப்பட்ட பரமபுருஷனை ச்ரவணம் மநநம் இவைகளால் நன்குணர்ந்து அவனை யுபாஸநம் செய்து அந்தபரமபுருஷனைப்பற்றி யதிவாதியாகக்கடவாய், என்று சிஷ்யனுக்கு உபதேசிக்கிறது. தன்னாலுபாஸிக்கப்படுகிற தேவதைக்கு எல்லாதேவதைகளிலும் சிறப்புச்சொல்லுகிறவனை யதிவாதியென்கிறது. எல்லாதேவதைகளிலு முத்தமனான பரமபுருஷனையறிந்துபாஸித்து அந்தபரமபுருஷனுக்குண்டான ஸர்வோத்தமத்வத்தை வாய்படைத்த ப்ரயோஜனம்பெறுவதற்குக் கூறுஎன்று கருத்து இப்படிப்படடவன் உத்யாநம்

முதலியவிடங்களில் விளையாடுகிறபடிகளைவிட்டு பரப்ரம்மத்தில் க்ரீடிப்பவனும், கந்தம் புஷ்பம் முதலியவற்றி லாசையைவிட்டு பரமாத்மாவினிடத்தில் ப்ரேமத்தையுடையவனும், பலோத்தேசமின்றி சகலகருமங்களையும் செய்யக்கடவன். பலோத்தேசமின்றிச் செய்கிற கருமங்களினால் நெஞ்சு சுத்தமாய் ப்ரம்மவித்யையென்கிற ப்ரம்மோபாஸநம் ஸித்திக்கின்றதாகையால் அவச்யம் கர்மாநுஷ்டாநம் செய்யக்கடவன். இவன் ப்ரம்மத்தை யறிந்தவரில் பெரியோனாகிறான்.

பதாந்வயார்த்தபேதங்கள்.

சங்கரபாஷ்யத்தில் பவதே, ந, அதிவாதீ, என்று பதம்பிரித்து ந, என்பதை, பவதே, என்கிற பதத்தோடுகூட்டி யுரையுரைக்கப்பட்டது. இராமாநுஜபாஷ்யத்தில், பவ, தேந, அதிவாதீ, என்று பதம்பிரித்து தேந, அதிவாதீ பவ, என்றந்வயித்துக் கருத்தாகூறப்பட்டது. கர்மாநுஷ்டாநம் ப்ரம்மஜ்ஞாநிக்குக்கூடாதென்று 'க்ரியா' என்கிறபதத்திற்கு அக்நிஹோத்ராதிகருமம் முக்யப்பொருளாயினும், ஜ்ஞாநமேபொருளென்று சங்கரபாஷ்யத்தில் விவரணம் செய்யப்பட்டது. இந்த கருமாநுஷ்டாநம் ப்ரம்மோபாஸநமாகிற ஜ்ஞாநத்திற்கு அங்கமென்று கருதி 'க்ரியா' என்கிற அந்தபதத்திற்கு கருமாநுஷ்டாநமே பொருளென்று இராமாநுஜபாஷ்யத்தில் கொள்ளப்பட்டது.

ரு. ஸத்யேந லப்யஸ்தபஸா ஹ்யேஷ ஆத்மா ஸம்யக்ஜ்ஞாநேந ப்ரஹ்மசர்யேண நித்யம் | அந்தஶ்ஶரீரே ஜ்யோதிர்மயோ ஹி ஶுப்ரோ யம் பஶ்யந்தி யதய: க்ஷீணதோஷா: ||

౫. సత్యేన లభ్యస్తపసా హ్యేష ఆత్మా సమ్యగ్జ్ఞానేన బ్రహ్మచర్యేణ నిత్యమ్।
అంతశ్శరీరే జ్యోతిర్మయో హి శుభ్రో యం పశ్యంతి యతయః క్షీణదోషాః॥

(ப-ம்.) க்ஷீணதோஷா: - ராகத்வேஷமுதலிய தோஷங்கள்கழிந்தவராகிய, யதய: - இந்திரியஜயமுடையயதிகள், அந்தஶ்ஶரீரே - சரீரத்திற்குள், யம் - எந்தபுருஷனை, பஶ்யந்தி - காண்கிறார்களோ; ஜ்யோதிர்மய: ஹி - ஜ்யோதிஸ்வரூபனாய், ஶுப்ர: - சுத்தனாய், ஆத்மா - அந்தர்யாமியாயிருக்கிற, ஏஷ: - இந்தபரமபுருஷன், ஸத்யேந - பூதங்களுக்குஹிதமான வார்த்தைகளினாலும், தபஸா - உள்ளும்புறமுமொத்திருக்கையாகிற தவத்தினாலும், ஸம்யக்ஜ்ஞாநேந - சாஸ்திரத்தினால்பிறந்த நல்லறிவாலும், நித்யம் - எப்போதும், ப்ரஹ்மசர்யேண - ஸ்திரீஸம்பந்தத்தை நீக்குகையினாலும், லப்ய: - அடையத்தக்கவன் அல்லது ஸாக்ஷாத்கரிக்கத்தக்கவன். அல்லது உபாஸிக்கத்தக்கவன்.

ஸம-ஸா. ரா-ஸா. இம்மந்திரத்தில் ஸந்யாஸிக்கு நல்லறிவுக்குத் துணைக்காரணங்களாய ஸத்யம்முதலிய ஸாதநங்கள் விதிக்கப்படுகின்றன. பொய்சொல்லாமையினாலும் ஆர்ஜவத்தாலும், ஆர்ஜவமாவது கபடத்தைவிடுகை. இதையே தபஸென்றும் ப்ரமாணம்சொல்லுகிறது. இதுவே ஆத்மசாக்ஷாத்காரத்திற்கு மிகவு முபயோகப்படுகிறது. சாந்திராயணம் முதலியவை யப்படிப்பட்டவையல்லவன்றோ; உள்ளபடி யாத்ம

ஸ்வரூபத்தை யறிவதினாலும், மைதுநத்தைவிடுகையாலும் இவ்வாத்மா அடையப்படுவன். எந்தஆத்மா சுத்தனோ எவன் சரீரமத்யத்தில் ஹ்ருதய புண்டரீகத்தில் ஜ்யோதிர்மயனாய் விளங்குகிறானோ; யவன், காமக்ரோதம் முதலிய தோஷங்களில்லாதே பரப்ரம்மத்தை யடையவேணுமென்று யத்நம்செய்கிற ஸந்யாஸிகளால் காணப்படுகிறானோ அந்த பரமாத்மா எப்போதும் கீழ்ச்சொல்லிய நியமத்தின்படி யிருக்கிறபுருஷனால் லடையப்படுவான். ஒருக்கால் மெய்சொல்வது மெய்யாகமாட்டாது. இப்படியேமற்றவையும்.

௬. 𑌸𑌤𑍍𑌯𑌮𑍇𑌵 𑌜𑌯𑌤𑍇 𑌨𑌾𑌨𑍃𑌤𑌂 𑌸𑌤𑍍𑌯𑍇𑌨 𑌪𑌨𑍍𑌥𑌾 𑌵𑌿𑌤𑌤𑍋 𑌦𑍇𑌵𑌯𑌾𑌨𑌃।
𑌯𑍇𑌨𑌾𑌕𑍍𑌰𑌮𑌨𑍍𑌤𑍍𑌯𑍃𑌷𑌯𑍋 𑌹𑍍𑌯𑌾𑌪𑍍𑌤𑌕𑌾𑌮𑌾 𑌯𑌤𑍍𑌰 𑌤𑌤𑍍𑌸𑌤𑍍𑌯𑌸𑍍𑌯 𑌪𑌰𑌮𑌂 𑌨𑌿𑌧𑌾𑌨𑌮𑍍॥

౬. సత్యమేవజయతే నానృతం సత్యేన పన్థా వితతో దేవయానః।
యేనాక్రమన్త్యృషయో హ్యాప్తకామా యత్ర తత్సత్యస్య పరమం నిధానమ్॥

(ப்-ம்.) 𑌸𑌤𑍍𑌯𑌮𑍇𑌵 - ஸத்யமே, 𑌜𑌯𑌤𑍇 - ஜயிக்கிறது, 𑌅𑌨𑍃𑌤𑌂 - பொய்யானது, 𑌨 - ஜயிக்கிறதில்லை, 𑌦𑍇𑌵𑌯𑌾𑌨𑌃-𑌪𑌨𑍍𑌥𑌾𑌃 - அர்ச்சிராதிமார்கமானது, 𑌸𑌤𑍍𑌯𑍇𑌨 - ஸத்யம்சொல்வதினால், 𑌵𑌿𑌤𑌤𑌃 - உண்டாகிறது. 𑌯𑍇𑌨 - எந்தஅர்ச்சிராதிமார்க்கத்தினால், 𑌆𑌪𑍍𑌤𑌕𑌾𑌮𑌾𑌃 - ஆசாபாசம் விட்டவராகிய; 𑌋𑌷𑌯𑌃 - தத்வஜ்ஞாநிகள், 𑌯𑌤𑍍𑌰 - எவ்விடத்தில், 𑌸𑌤𑍍𑌯𑌸𑍍𑌯 -ஸத்யவசனத்திற்கு, 𑌪𑌰𑌮𑌂 - 𑌨𑌿𑌧𑌾𑌨𑌂 - முக்யபலமாகிய, 𑌤𑌤𑍍 - அந்தபரமாத்மதத்வம் ப்ரகாசிக்கிறதோ அந்தஸ்தானத்தை, 𑌆𑌕𑍍𑌰𑌮𑌨𑍍𑌤𑌿-அடைகிறார்களோ;

ஸ௦-ஹா. ஸத்யத்தை ஸ்துதிக்கிற அர்த்தவாத மிந்தசுலோகம்;மெய்சொல்பவனே ஜயிப்பான். பொய்சொல்லுமவன் ஜயியான். ஒருபுருஷனைப்பிடித்து மெய்யும்பொய்யும் வெற்றியையும் தோல்வியையுமடையுமேயன்றி தனித்தல்ல.உலகத்தில் பொய்யன்தோற்பதும் மெய்யன்ஜயிப்பதும் ப்ரத்யக்ஷமாயிருக்கின்றது. ஸத்யம் பலமுடையது. சாஸ்த்ரத்திலும் ஸத்யமேபலமுடையதென்று தெரிகிறது. ஸத்யத்தினலன்றோ தேவயாநமார்க்கம் கிடைக்கின்றது. எந்த மார்க்கமே புருஷார்த்தமாகிய ப்ரம்மத்தை ஸந்யாஸிகளடைவதற்கு ஹேதுவாயிருக்கின்றதோ;

ரா-ஹா. அர்ச்சிராதிமார்க்கத்தினால் பரமபதத்தையடைவதற்கு ஸத்யமே முக்ய காரணமாயிருக்கிறதென்று ஸத்யத்தைக் கொண்டாடுகிறது. மற்றவை பதஉரையின் படியேகொள்க.

௭. 𑌬𑍃𑌹𑌚𑍍𑌚 𑌤𑌦𑍍𑌦𑌿𑌵𑍍𑌯𑌮𑌚𑌿𑌨𑍍𑌤𑍍𑌯𑌰𑍂𑌪𑌂 𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌾𑌚𑍍𑌚 𑌤𑌤𑍍𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌤𑌰𑌂 𑌵𑌿𑌭𑌾𑌤𑌿।
𑌦𑍂𑌰𑌾𑌤𑍍𑌸𑍁𑌦𑍂𑌰𑍇 𑌤𑌦𑌿𑌹𑌾𑌨𑍍𑌤𑌿𑌕𑍇 𑌚 𑌪𑌶𑍍𑌯𑌤𑍍𑌸𑍍𑌵𑌿𑌹𑍈𑌵 𑌨𑌿𑌹𑌿𑌤𑌂 𑌗𑍁𑌹𑌾𑌯𑌾𑌮𑍍॥

౭. బృహచ్చతద్దివ్యమచిన్త్యరూపం సూక్ష్మాచ్చతత్సూక్ష్మతరం విభాతి।
దూరాత్సుదూరే తదిహాన్తికే చ పశ్యత్స్విహైవ నిహితం గుహాయామ్॥

(ப்-ம்.) 𑌤𑌤𑍍 - அந்தப்ராம்மமானது, 𑌬𑍃𑌹𑌤𑍍 - பெரியது, 𑌦𑌿𑌵𑍍𑌯𑌂- ப்ரகாசிப்பது, 𑌅𑌚𑌿𑌨𑍍𑌤𑍍𑌯𑌰𑍂𑌪𑌂 - சிந்திக்கமுடியாதரூபத்தையுடையது, 𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌾𑌤𑍍 - ஸூக்ஷ்மவஸ்துவைக் காட்டிலும், 𑌤𑌤𑍍 - அந்தப்ராம்மமானது, 𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌤𑌰𑌂 - மிகவும் ஸூக்ஷ்மமாய், 𑌵𑌿𑌭𑌾𑌤𑌿-விளங்குகின்றது. 𑌤𑌤𑍍 அந்தப்ராம்மமானது, 𑌦𑍂𑌰𑌾𑌤𑍍 - தூரத்திலும், 𑌸𑍁𑌦𑍂𑌰𑍇 - மிகவும்தூரத்தி

லிருக்கின்றது. தத் - அந்தப்ப்ரம்மமானது, இஹைவ - இங்குஸமீபத்திலுமிருக்கின்றது. பஶ்யத்ஸு - ஜ்ஞானிகளுக்காயின், இஹ குஹாயாம் - இந்தஹ்ருதயகுஹையிலேயே, நிஹிதம் - வைக்கப்பட்டிருக்கிறது.

ஸம்-ஸா. எங்கும் வ்யாபித்திருப்பதால் பெரிதாய், ஸ்வயம் ப்ரகாசமாய் அது பற்றியே இந்திரியங்களுக்குப் புலப்படாததாய் ஆகையாலே இவ்வாறென்று சிந்திக்க முடியாததாய் ஸூக்ஷ்மமாகிய ஆகாயத்திலும் ஸர்வகாரணமாகையாலே நிரதிசய ஸூக்ஷ்மமாய், நாநாரூபமாய் ஸூரியசந்திரரூபமாய் விளங்குகின்றதாய், அஜ்ஞரால் அடையப் படாமையா லவர்களுக்கு மிகவும் தூரத்திலிருப்பதாய், ஜ்ஞானிகளுக்கு அடையக் கூடியதாகையா லவர்களுக்கு ஸமீபத்திலிருப்பதாய், இங்குஹ்ருதயத்தில் காண்கிறவர்களுக்கு அவ்விடத்திலே யிருப்பதாய் அவித்யையினு லீனரானும் காணப்படாததா யிருக்கிறது பரப்ரம்மம்.

ரா-ஸா. அர்ச்சிராதிமார்க்கத்தா லடையக்கூடிய ப்ரம்மத்தின் விசேஷங்களைச் சொல்லுகிறது. அது ஸ்வரூபத்தாலும் குணத்தாலும் பெரியது. பரமாகாசத்திலிருப்பது. வாக்குக்கும் மநஸ்ஸுக்கு மெட்டாததாய் ப்ரகாசமாய் விளங்குகிற திருமேனியை யுடையது. எல்லா அசேதநங்களுக்குள்ளும் புகுகிற ஸூக்ஷ்மமுடைய ஜீவாத்மாவிலும் அந்த ஜீவாத்மாவுக்குள்ளும் புகுகிறபடியால் மிகச் சூக்ஷ்மமானது. அது ப்ரக்ருதி மண்டலத்திற் கப்புறத்திலிருக்கிற பரமபதத்திருப்பதால் மிகவும் தூரத்திலிருப்பது. இந்த ப்ரக்ருதிக்குள் ஸூர்யமண்டலத்திற் குள்ளிருப்பதால் ஸமீபத்திலிருப்பது. அந்தக்கரணத்திலும் ப்ரகாசிப்பது யோகிகளுக்கு.

அ. ந சக்ஷுஷா க்ருஹ்யதே நாபி வாசா நான்யைர்தேவைஸ்தபஸா கர்மணா வா । ஜ்ஞானப்ரஸாதேன விஶுத்தஸத்த்வஸ்ததஸ்து தம் பஶ்யதே நிஷ்கலம் த்யாயமான: ॥

౮. న చక్షుషా గృహ్యతే నాపి వాచా నాన్యైర్దేవైస్తపసా కర్మణా వా।
జ్ఞానప్రసాదేన విశుద్ధసత్త్వస్తతస్తు తం పశ్యతే నిష్కలం ధ్యాయమానః॥

(ப-ம்.) (இந்தபரமபுருஷன்,) சக்ஷுஷா - கண்களினால், ந க்ருஹ்யதே - காணப்படுகிறதில்லை. வாசா - வாக்கினால், நாபி -சொல்லப்படுவதுமில்லை. அன்யைர்தேவை: - மற்ற இந்திரியங்களினாலும், ந - கிரக்கப்படுவதில்லை. தபஸா - தபஸ்ஸினாலாவது, கர்மணா வா - கருமத்தினாலாவது (அடையப்படுமவனல்லன்) ஜ்ஞானப்ரஸாதேன-பரமாத்மாநுக்கிரகத்தினால், விஶுத்தஸத்த்வ: - அந்தக்கரணசுத்தி யுண்டாகிறது. தத: - பின்பு, த்யாயமான: - த்யாநம்செய்யானின்றுகொண்டு, நிஷ்கலம் - அவயவங்க ளில்லாதவனாயிருக்கிற, தம் - அந்த பரமபுருஷனை, பஶ்யதே - காண்கிறான்.

ஸம்-ஸா. இன்னமுமந்த பரமாத்மாவை ஸாக்ஷாத்கரிக்குமிடம் சொல்லப்படுகிறது. ரூபமில்லாமையால் கண்ணால் பார்க்கப்படாது. சொல்லப்படாமையால் வாக்குக்கு விஷயமல்ல. மற்றவைகளுக்கும் ஸாக்ஷாத்கார சக்தியில்லை. தபஸ்ஸும் கருமாநுஷ்டாநமும் மற்ற பலங்களுக்கு ஸாதநமாகையால் சிறந்ததாய் மற்ற பலங்களைக் கொடுக்குமாயினும் ஆத்ம ஸாக்ஷாத்காரத்திற்குக் காரணங்களல்ல. ஜ்ஞாநமே யதற்கு

ஸாதநமானது. எல்லா ப்ராணிகளுக்கு மிந்த ஜ்ஞாநமுண்டாயினும் ராகம் த்வேஷம் முதலியவற்ருல் பாஹ்யவிஷயங்களை க்ரஹித்துக்கொண்டு கலங்கி யசுத்தமாயிருப்பதால் ஆத்மஸ்வரூபம் அதிஸமீபத்தில் நித்யமாயிருந்தாலு மதைக்காட்ட சக்தியில்லாததாயிருக்கின்றது. கண்ணுடியானது அழுக்கடைந்திருக்குமாயின் அது ஸூக்ஷ்மவஸ்துக்களைக் காட்டாதன்ருே; கலங்கிய தண்ணீரும் கலக்கம்தெளிந்த பின்னன்ருே பொருளைக் காட்டுவது. அப்படிபோலவே இந்த ஜ்ஞாநமும் இந்திரயத்திற்கும். பொருள்விஷயத்திலுண்டான ராகம் த்வேஷமுதலிய அழுக்கிஞல் விடுபட்டு எப்போது, ஸ்வச்சமாய் விளங்குமோ; அப்போது தெளிந்திருப்பதால் ஆத்மஸாக்ஷாத்காரத்திற்குக் காரணமாகின்றது. ஆகையால் அவ்வாறு தெளிந்த ஜஞாநமுடையவர் த்யாநம்செய்து நிரவயவஞன பரமாத்மாவைப் பார்க்கிருர்கள் அப்படி தெளியாதவர் காண்பதில்லை.

பதாந்வயார்த்தபேதங்கள்.

ஜ்ஞாநசப்தம் பரமாத்மபரமாக இராமாநுஜபாஷ்யத்தில் வ்யாக்யாநம் செய்யப்பட்டது. ஆகவே பரமாத்மாநுக்கிரகத்திஞல் தெளிந்த சிந்தையர் அவனைக் காண்கிருர்கள் என்று பொருளுரைக்கப்பட்டது.

கூ. வஷொணுரா_த்ாவெ_தஸாவெஜி_தவ்ாூயஸ்மிநுவ்ராணஃவ௦ வயாஸ௦விவெஶ | வ்ராணெஶ்ரி_த்௦ஸவ-ுஜொ_த௦வ்ரஜா_நா௦யஸ்மிநிஶுஜெவிஹவ_த்யஷஆ்_தா ||.

౯. ఏషోఽణురాత్మా చేతసా వేదితవ్యఃయస్మిన్ప్రాణఃపంచధాసంవివేశ ।
ప్రాణైశ్చిత్తంసర్వమోతమ్ప్రజానాంయస్మిన్విశుద్ధేవిభవత్యేషఆత్మా॥

(ப-ம்.) யஸ்மிநு - யாதொரு பரமாத்மாவினிடத்தில், வ௦வயா-அஞ்சுப் ரகாரமாயிருக்கிற, வ்ராணஃ - ப்ராணவாயுவானது, ஸ௦விவெஶ - நிலைபெற்றிருக்கின்றதோ; வ்ராணெஃ - இந்திரியங்களோடு, விூதூ - மநஸ்ஸும், வ்ராஜாநாூ - ப்ரஜைகளினுடைய, ஸவ-ூ - ஸமஸ்தமும், ஓ_தூ - வைக்கப்பட்டிருக்கிறதோ; யஸ்மிநு - யாதொரு பரமாத்மாவானவன், விஶுஜெ - அநுக்ரஹமுடையவஞுல், வஷஃ ஆ்தா - இந்த ஜீவாத்மா, விஹவதி - முக்திபெறுகிருனே; அப்படிப்பட்டவஞய், கணுஃ - அறியக்கூடாதவஞயிருக்கிற, வஷஃ - இந்த பரமபுருஷன், வெ_தஸா-பரிசுத்தமநஸ்ஸிஞலே, வெஜி_தவ்ாஃ - அறியத்தக்கவன்.

ஶ௦-ஹா. பஞ்சப்ராணங்களுடைய சரீரத்தில் ஸகலேந்திரியங்களிலும் ப்ரஜைகளுக்கு முக்யமான சித்தம்முதலிய பேதங்களுடைய மநஸ்ஸிஞலே பரமாத்மா அறியப்படுவன். எந்தமநஸ்ஸு சுத்தமாஞல் இந்த பரமாத்மாதானே விளங்குகிருனே.

ரா-ஹா. எந்த பரமாத்மாநுக்ரஹத்திஞ லிந்த ஜீவாத்மா முக்தஞகிருனே; அந்த பரமாத்மாநுக்ரஹத்திஞல் அறியக்கூடாதவஞ யிருந்தாலும் சுத்தமான மநஸ்ஸையுடையவஞ யிருக்கிற இந்த ஜீவாத்மாவிஞலே யறியப்படுகிருன்.

க௦. ய௦ய௦லொக௦மநஸாஸ௦விஹாதிவிஶுஜஸத்வஃகாமயதெயா௦ஶ்வ காமாநு | த௦த௦லொக௦ஜயதெதா௦ஶ்வகாமாநுதஸாதாத்மஜ்ஞ௦ஹ்யவ-யெ ஹூதிகாமஃ||

౧౦. యంయంలోకంమనసాసంవిభాతివిశుద్ధసత్త్వః కామయతే యాంశ్చకామాన్।
తంతంలోకంజయతే తాంశ్చకామాంస్తస్మాదాత్మజ్ఞంహ్యర్చయేద్భూతికామః॥

(ப்-ம்.) விஶுத்₃த₄ஸத்த்வ: - ஆத்ம ஸ்வரூபத்தையறிந்தவன், யம்யம்லோகம் - எந்தஎந்த லோகத்தை, மநஸா - மநஸ்ஸினால், ஸம்விபா₄தி - ஸங்கல்பிக்கிறானோ, யாம்ஶ்ச காமாந் - எந்த இஷ்டங்களை, காமயதே - விரும்புகிறானோ; தம் தம்லோகம் - அந்தந்த லோகங்களையும், தாம்ஶ்ச காமாந் - அந்த இஷ்டங்களையும், ஜயதே - ஜயிக்கிறான், தஸ்மாத்-ஆகையால், பூ₄திகாம: - ஸம்பத்தை விரும்பினவன், ஆத்மஜ்ஞம் ஹி - ஆத்மஸ்வரூபத்தை யறிந்தவனை, அர்சயேத் - பூஜிக்கக்கடவன்.

ஸம-ஸா. கீழ்ச்சொல்லியபடி ஸர்வாந்தராத்மாவாகிய பரமாத்மாவைதானேயென்றறிந்தவன், மநஸ்ஸினால் எந்தலோகங்களை ஸங்கல்பித்தாலும் எந்தலோகங்களை விரும்பினாலும் அதைஎல்லாம் பெறுகிறான். ஸர்வத்திற்கு மாத்மாவாகையால் ஸர்வத்தையு மடைந்தவனாகிறானன்றோ; ஆகையால் தனக்காயினும் பிறர்க்காயினும் எந்த இஷ்டத்தை விரும்பினாலு மந்த இஷ்டத்தைத் தானும்பெற்று பிறரும் பெறும்படி செய்யவல்லவன். ஆகையால் மங்களத்தை யாசைப்பட்டவன் அந்த ஜ்ஞாநியை சுச்ரூஷைகளினால் பூஜிக்கக்கடவன்.

ரா-ஸா. தனக்கும் தன் பக்தருக்கும் நினைத்த இஷ்டங்களை யநுபவிக்கவும் தரவும் வல்லவனாகிறானாகையால் ஜ்ஞாநி, ஸம்பத்தை விரும்பிய புருஷனால் இவன் நம்முடைய சுச்ரூஷை முதலியவற்றால் அநுக்ரகித்து நமக்குவேண்டிய வரங்களைத் தருவனென்று பக்தியுடன் பூஜிக்கத்தக்கவன்.

இதி த்ருதீயமுண்ட₃கே ப்ரத₂மக₂ண்ட₃:.

அத₂ த்ருதீயமுண்ட₃கே த்₃விதீயக₂ண்ட₃:.

௧. ஸவேதை₃தத்பரமம் ப்₃ரஹ்மதா₄ம யத்ர விஶ்வம் நிஹிதம் பா₄தி ஶுப்₄ரம் । உபாஸதே புருஷம் யே ஹ்யகாமாஸ்தே ஶுக்ரமேதத₃திவர்தந்தி தீ₄ரா: ॥

౧. సవేదైతత్పరమంబ్రహ్మధామయత్రవిశ్వంనిహితంభాతిశుభ్రమ్।
ఉపాసతేపురుషంయేహ్యకామాస్తేశుక్రమేతదతివర్తంతిధీరాః॥

(ப்-ம்.) யத்ர - எந்த ப்ரம்மத்தினிடத்தில், நிஹிதம் - வைக்கப்பட்டிருக்கிற, விஶ்வம் - ஸமஸ்தமும், ஶுப்₄ரம் - ப்ரகாசமாய், பா₄தி - விளங்குகின்றதோ; ஏதத்பரமம் ப்₃ரஹ்ம - இப்படிப்பட்ட பரப்ரம்மஸ்வரூபமாயிருக்கிற, தா₄ம - உத்தம ப்ராப்யத்தை, ஸ: - அந்த பக்தன், வேத₃ - அறிந்தவன், ஆகையால், புருஷம் - அந்தபக்தனானபுருஷனை, அகாமா: - வேறு பலத்தில் விருப்பமில்லாதவர்களாய், யே - எந்த முமுக்ஷுக்கள், உபாஸதே ஹி - உபாஸிக்கிறார்களோ, தே தீ₄ரா: - அந்தமுமுக்ஷுக்கள், ஏதத் ஶுக்ரம் - இந்த சரமதாதுவை, அதிவர்தந்தி - அதிக்ரமிக்கிறார்கள்.

ஸ0-ஸா. ரா-ஸா. பக்தன் ப்ரம்மத்தை யறிந்தவனுகையால் அவனைப் பூசிப்பவர் அவனடைகிற பரமபதத்தை யடைகிருர்கள். ஆகையால் ப்ரம்மவித்தைப் பூசிப்பது மோக்ஷத்தை யடைவதற்குக் காரணம்.

௨. 𑌕𑌾𑌮𑌾𑌨𑍍𑌯𑌃 𑌕𑌾𑌮𑌯𑌤𑍇 𑌮𑌨𑍍𑌯𑌮𑌾𑌨𑌃 𑌸 𑌕𑌾𑌮𑌭𑌿𑌰𑍍𑌜𑌾𑌯𑌤𑍇 𑌤𑌤𑍍𑌰 𑌤𑌤𑍍𑌰। 𑌪𑌰𑍍𑌯𑌾𑌪𑍍𑌤𑌕𑌾𑌮𑌸𑍍𑌯 𑌕𑍃𑌤𑌾𑌤𑍍𑌮𑌨𑌸𑍍𑌤𑍁 𑌇𑌹𑍈𑌵 𑌸𑌰𑍍𑌵𑍇 𑌪𑍍𑌰𑌵𑌿𑌲𑍀𑌯𑌨𑍍𑌤𑌿 𑌕𑌾𑌮𑌾𑌃॥

౨. కామాన్ యః కామయతే మన్యమానః స కామభిర్జాయతే తత్ర తత్ర।
పర్యాప్తకామస్య కృతాత్మనస్తు ఇహైవ సర్వే ప్రవిలీయంతి కామాః॥

(ப-ம.) 𑌯𑌃 - எவன், 𑌕𑌾𑌮𑌾𑌨𑍍 - காமங்களை, 𑌮𑌨𑍍𑌯𑌮𑌾𑌨𑌃 - போக்யமாயெண்ணிக்கொண்டு, 𑌕𑌾𑌮𑌯𑌤𑍇 - விரும்புகிருனோ; 𑌸𑌃 - அவன், 𑌤𑌤𑍍𑌰 𑌤𑌤𑍍𑌰 - அந்தந்த விடங்களில், 𑌕𑌾𑌮𑌭𑌿𑌃 - காமங்களினுல், 𑌜𑌾𑌯𑌤𑍇 - பிறக்கிருன் 𑌪𑌰𑍍𑌯𑌾𑌪𑍍𑌤𑌕𑌾𑌮𑌸𑍍𑌯 - ப்ரம்மத்தினிடத்தில்காமத்தையுடைய, 𑌕𑍃𑌤𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 𑌤𑍁 - ஆத்மவித்துக்கு, 𑌇𑌹𑍈𑌵 - இவ்விடத்திலேயே, 𑌸𑌰𑍍𑌵𑍇 𑌕𑌾𑌮𑌾𑌃 - எல்லாக்காமங்களும், 𑌪𑍍𑌰𑌵𑌿𑌲𑍀𑌯𑌨𑍍𑌤𑌿 - ஒழிந்துபோகின்றன.

ஸ0-ஸா. முமுக்ஷுவுக்கு காமம் நீங்குவது முக்யமென்று சொல்லுகிறது. எவன் இவ்வுலகத்திலும சுவர்க்காதி லோகாந்தரங்களிலும் இஷ்டங்களை விரும்புகிருனோ; அவைகளில் குணத்தைக் கிரகித்துக்கொண்டு அவைகளிலே சிந்தை வைக்கிருனோ; அவன், அந்தந்த தேசங்களை யடைவிக்கிற கருமங்களில் புருஷனுக்கு ப்ரவ்ருத்தியை யுண்டாக்குகிற காமங்களோடு அந்தந்த தேசங்களிலுண்டாகிருன். யவன் பரமார்த்த தத்வத்தை யறிந்ததினுல் ஆத்மஸ்வரூபத்தைவேண்டி யடையப்பட்டவைகளில் போல ஆசைநீங்கி அவித்யை கழிந்த பரஸ்வரூபத்தைப்பெறுகிருனே; அவனுக்கு இந்த சரீர மிருக்கும்போதே ஸகல காமங்களிலு மாசைகழிந்து போகையால் ஜந்மாந்தரமில்லை. அப்படிப்பட்ட ஆத்ம ஸ்வரூப ஜ்ஞாநத்தால் ஜந்மாந்தரகாரணங் கழிந்துபோகையால் ஜந்மாந்தர காரணங்களான ஆசைகளு முண்டாகிறதில்லை என்று கருத்து.

ரா-ஸா. தேவமநுஷ்யாதி சரீரங்களை போக்யமாக எண்ணி யாசைப்படுகிறவன் அந்த காரணத்தா லவ்வாறே தேவஜாதியாகவும் மநுஷ்யஜாதியாகவும் பிறக்கிருன். ஆத்ம ஸ்வரூபத்தையறிந்து ப்ரம்மத்தை விரும்புகிறவனுக்கு ஸகல காமங்களு மழிந்து போகையால் ஜந்மாந்தரமில்லை.

௩. 𑌨𑌾𑌯𑌮𑌾𑌤𑍍𑌮𑌾 𑌪𑍍𑌰𑌵𑌚𑌨𑍇𑌨 𑌲𑌭𑍍𑌯𑍋 𑌨 𑌮𑍇𑌧𑌯𑌾 𑌨 𑌬𑌹𑍁𑌨𑌾 𑌶𑍍𑌰𑍁𑌤𑍇𑌨। 𑌯𑌮𑍇𑌵𑍈𑌷 𑌵𑍃𑌣𑍁𑌤𑍇 𑌤𑍇𑌨 𑌲𑌭𑍍𑌯𑌸𑍍𑌤𑌸𑍍𑌯𑍈𑌷 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌵𑌿𑌵𑍃𑌣𑍁𑌤𑍇 𑌤𑌨𑍂𑌂 𑌸𑍍𑌵𑌾𑌮𑍍॥

3. నాయమాత్మా ప్రవచనేన లభ్యో న మేధయా న బహునా శ్రుతేన ।
యమేవైష వృణుతే తేన లభ్యస్తస్యైష ఆత్మా వివృణుతే తనూం స్వామ్॥

(ப-ம.) 𑌅𑌯𑌮𑍍 - இந்த, 𑌆𑌤𑍍𑌮𑌾 - பரமாத்மாவானவன், 𑌪𑍍𑌰𑌵𑌚𑌨𑍇𑌨 - மநநத்தினுலும், 𑌮𑍇𑌧𑌯𑌾 - நிதித்யாஸநத்தாலும், 𑌬𑌹𑍁𑌨𑌾 - அதிகமான, 𑌶𑍍𑌰𑍁𑌤𑍇𑌨 - ச்ரவணத்தினுலும், 𑌨 𑌲𑌭𑍍𑌯𑌃 - அடையக்கூடியவனன்று 𑌏𑌷𑌃 - இந்தபரமாத்மா, 𑌯𑌮𑍇𑌵 - எவனை, 𑌵𑍃𑌣𑍁𑌤𑍇 -

தேந - அந்தபுருஷனால், லப்ய: - அடையத்தக்கவன். தஸ்ய - அந்த புருஷனுக்கு, ஏஷ: ஆத்மா - இந்த பரமாத்மா, ஸ்வாம் தநூம் - ஸ்வஸ்வரூபத்தை, விவ்ருணுதே - காட்டுகிறான்.

ஸம்-ஹா. ஸகல லாபங்களிலு மாத்மலாபம் சிறந்ததாயினும் கீழ்சொல்லப்பட்ட அந்த ஆத்ம ஸ்வரூபலாபம் புருஷார்த்தமாயினு மந்த ஆத்ம ஸ்வரூபத்தை யடைவதற்கு ப்ரவசநம்முதலிய பல ஸாதநங்கள் வேண்டுமோ; என்கிற ஸந்தேஹம் நீங்கச் சொல்லுகிறது. இவ்வாத்மா வேதசாஸத்ரங்களை விசேஷமாயோதி ப்ரவசநம் செய்கையாலும், கிரந்தங்களி னர்த்தங்களை தரித்துக்கொண்டிருக்கிற மேதையினாலும், அதிகமான சிரவணத்தாலும் அடையக் கூடியவனன்று. எப்போது மடையப்பட்ட ஸ்வபாவத்தை யுடையவனாகையால், அவனை யாசைப்பட்டுப் பெற விரும்பினமாத்திரத்தாலேயே யடையப்படுவான். அவனுக்கு அவித்யை நீங்கியபடியால் வெளிச்சத்தில் வஸ்துக்கள் தர்தம் ஸ்வரூபத்தைக் காட்டுவதுபோல ஜ்ஞாந ஸ்வரூபத்தில் ப்ரம்மாபேத ஸ்வரூபத்தை இந்த ஆத்மா காட்டுகிறது.

ரா-ஹா. கேவலம் ச்ரவணம், மநநம், நிதித்யாஸநம், இவைகளா லந்த பரமாத்மா அடையப்படமாட்டான், இந்த பரமாத்மா எந்த புருஷனை விரும்புகிறானோ அவனாலே யடையப்படுவான், அப்படி தன்னால் வரிக்கப்படுகிற, புருஷனுக்கு தன்னுடைய கல்யாணகுணங்களோடுகூடிய ஸ்வரூபத்தை பரமாத்மாகாட்டுகிறான். பரமாத்மாவினிடத்தில் மிகவும் விருப்பமுடையவனாய் ச்ரவணம் முதலியவை செய்தால் பரமாத்மாநுக்ரக முண்டாமேயன்றி வெறும் ச்ரவணாதிகள் பயனற்றவையாமென்று கருத்து. பரமாத்மா இந்த புருஷனை விரும்பும்போது தன்னிடத்தி லிந்த புருஷனுக்குள்ள அன்பே காரணம். தன்னிடத்தி லன்புடையோனைத் தான் விரும்புவது ப்ரஸித்தமேயன்றோ. ஆனதினால் பரமாத்மா, தன்னிடத்தி லன்பிலாதானைத் தான் விரும்பான். ஆக, ப்ரீதியோடுகூடி பரமாத்மாவை யுபாஸிக்கிறவன் அந்த பரமாத்மாவின் ப்ரீதிக்கிலக்காய் பரமபதத்தை யடைந்து பரிபூர்ணபர ப்ரம்மாநுபவத்தைப் பெறுவனென்றவாறு.

பதார்ந்வயார்த்தபேதங்கள்.

சங்கரபாஷ்யத்தில், தேந, என்பதற்கு, பரமாத்மாவை வரிப்பதினாலென்று பொருளுரைக்கப்பட்டது. அப்போது 'யம், என்றதற்கு பரமாத்மாவை, என்று பொருள் கொண்டமையால், யச்சப்தத்திற்கும், தச்சப்தத்திற்கும் பொருள் பேதப்படுகிறது. அது 'யத்ததோர் நித்யஸம்பந்த:, என்கிற ந்யாயத்திற்கு விரோதமானதாகிலும், ஜீவாத்ம பரமாத்மாக்களுக்கு அபேதம் சொல்லும்போது அவ்வாறே பொருள் கொள்ளவேண்டி வருகையாலப்படி வ்யாக்யாநம் செய்யப்பட்டது. ச்ரவணம் மநநம் நிதித்யாஸநம் இவைகளின் ஸ்வரூபம், முன் சொல்லப்பட் டிருக்கிறது. மற்றவை பத உரைக் கிணங்க இராமாநுஜபாஷ்யத்தில் காண்க.

௪. நாயமாத்மா பலஹீநேந லப்யோ ந ச ப்ரமாதாத் தபஸோ வாப்யலிங்காத் | ஏதைருபாயைர்யததே யஸ்து வித்வாம்ஸ் தஸ்யைஷ ஆத்மா விசதே ப்ரஹ்மதாம ||

౪. నాయమాత్మాబలహీనేనలభ్యోనచప్రమాదాత్తపసోవాప్యలింగాత్ ।

ఏతైరుపాయైర్యతతేయస్తువిద్వాంస్తస్యైషఆత్మావిశతేబ్రహ్మధామ॥

(ப-ம்.) 𑌅𑌯𑌮𑌾𑌤𑍍𑌮𑌾 - இந்த பரமாத்மாவானவன், 𑌬𑌲𑌹𑍀𑌨𑍇𑌨 - பல மில்லாதவனால், 𑌲𑌭𑍍𑌯𑌃 - அடையக்கூடியவனன்று. 𑌪𑍍𑌰𑌮𑌾𑌦𑌾𑌤𑍍 - அவதாந மில்லாமல், 𑌨 - அடையக்கூடியவனன்று. 𑌅𑌲𑌿𑌙𑍍𑌗𑌾𑌤𑍍 - லிங்கமில்லாத, 𑌤𑌪𑌸𑌃 - ஆச்ரமத்தினாலும், 𑌨 - பெறத்தக்கவனாகான். 𑌯𑌃 𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑍍 - எந்த உபாஸகன், 𑌏𑌤𑍈𑌃 𑌉𑌪𑌾𑌯𑍈𑌃 - இந்த உபாயங்களோடு, 𑌯𑌤𑌤𑍇 - யத்நம் செய்கிறானோ ; 𑌤𑌸𑍍𑌯 - அவனுக்கு, 𑌏𑌷 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌧𑌾𑌮 - அந்தர்யாமியாய் ப்ராப்யமாயிருக்கிற இந்த ப்ரம்மஸ்வரூபம், 𑌵𑌿𑌶𑌤𑍇 - லபிக்கிறது.

ஶம்-பா. ஆத்ம ஸ்வரூபத்தை விரும்புகிறதற்கு ஸஹாயங்க ளிவையென்று சொல்லுகிறது. பலமும், அவதாநமும், தபஸ்ஸும், லிங்கமும் அதற்கு ஸாதநங்கள். இவை இல்லாதவனு லாத்மஸ்வரூப மடையப்படாது. பலமாவது ஆத்மநிஷ்டையினால் வந்த ஸாமர்த்த்யம். அவதாநமாவது பசுபுத்திரன் முதலியவற்றி லாசையில்லாமை. தபஸ் ஸாவது - ஜ்ஞாநம். லிங்கமாவது ஸந்யாஸம்.

ரா-பா. பலமாவது - தைந்யமில்லாமை, தைந்யமாவது - காலதேசங்கள் அநு கூலப்படாமையால் வந்த மநக்கலக்கம். அவதாநமாவது செய்யவேண்டிய விஷயங்க ளில் ஏமாராமை. லிங்கமாவது அந்தந்த ஆச்ரமங்களுக்கு வேண்டிய அடையாளங்கள். தபஸ்ஸாவது - ஸந்யாஸாச்ரமம். ஆயினும், இவ்விடத்தில் எல்லா ஆச்ரமங்களையும் குறிக்கின்றது. எல்லா ஆச்ரமஸ்தரும் ப்ரம்மவித்யையி லதிகாரமுடையவரென்று சொல்லப்படுகையா லென்றறிக. இதில் ஸந்யாஸாச்ரமத்திற் கடையாளங்கள் சிகை, யஜ்ஞோபவீதம் கமண்டலு ஜலபவித்ரம் முதலியவை. இப்படி எல்லா ஆச்ரமங்களுக்கு மறிக. ஆக இதற்குத் திரண்டபொருளாவது பலம் அவதாநம், லிங்கத்தோடு கூடிய ஆச்ரமம் இவைகள் ப்ரம்ம ப்ராப்திக்கு ஸஹாயங்கள். இவை இன்றி ப்ரம்மத்தை யடையான். அவ்வோ ஆச்ரமங்களுக்கு விதித்த அடையாளங்களும், முக்யமானவை.

பதாந்வயார்த்தபேதங்கள்.

சங்கர ராமாநுஜ பாஷ்யங்களுக்குள்ள பதார்த்தபேதம் கருத்தில்பேதம் இவைகள் ஸ்புடமாயிருக்கின்றன.

௫. 𑌸𑌂𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑍈𑌨𑌮𑍃𑌷𑌯𑍋 𑌜𑍍𑌞𑌾𑌨𑌤𑍃𑌪𑍍𑌤𑌾𑌃 𑌕𑍃𑌤𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑍋 𑌵𑍀𑌤𑌰𑌾𑌗𑌾𑌃 𑌪𑍍𑌰𑌶𑌾𑌨𑍍𑌤𑌾𑌃। 𑌤𑍇 𑌸𑌰𑍍𑌵𑌗𑌂 𑌸𑌰𑍍𑌵𑌤𑌃 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 𑌧𑍀𑌰𑌾 𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌃 𑌸𑌰𑍍𑌵𑌮𑍇𑌵𑌾𑌵𑌿𑌶𑌨𑍍𑌤𑌿॥

౫. సంప్రాప్యైనమృషయో జ్ఞానతృప్తాః కృతాత్మానో వీతరాగాః ప్రశాన్తాః।
తే సర్వగం సర్వతః ప్రాప్య ధీరా యుక్తాత్మానస్సర్వమేవావిశంతి॥

(ப-ம்.) 𑌋𑌷𑌯𑌃 - தத்வத்தை யறிந்தவர்கள், 𑌏𑌨𑌂 - இந்த பரமாத்மாவை, 𑌸𑌂𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 - அநுபவித்து, 𑌜𑍍𑌞𑌾𑌨𑌤𑍃𑌪𑍍𑌤𑌾𑌃 - அநுபவத்தாலே த்ருப்தி யடைந்தவர்களாய், 𑌕𑍃𑌤𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌃 - ஸத்தைபெற்றவர்களாய், 𑌵𑍀𑌤𑌰𑌾𑌗𑌾𑌃 விஷயங்களிலாசை நீங்கியவர்களாய், 𑌪𑍍𑌰𑌶𑌾𑌨𑍍𑌤𑌾𑌃 - சாந்தகுண முடையவர்களாய், (𑌯𑍇 - எவர்கள், 𑌸𑌨𑍍𑌤𑌿 - இருக்கிறார்களோ,) 𑌤𑍇 - அவர்கள்

ஸவ-ர்தஂ ஸவ-ர்மமு - எல்லாவஸ்துக்களிலு மெங்கும் நிறைந்திருக்கிற பர மாத்மாவை, வ்ராவ்ய - பரமபதத்தில் ஸேவிக்கப்பெற்று, யு-க்தாத்மாநஂ - ஸ்வரூபாவிர்ப்பாவம்பெற்றவர்களாய், ஸவ-ர்ம வாவ - எல்லாசுகங்களையும், ஆவிஶந்தி - அடைகிறார்கள்.

ஸம-ஸா. உபாதி நீங்கிய ப்ரம்ம ஸ்வரூபத்தை யறிந்தவர், இதர விஷயங்களில் நசையற்றவராய் குடமுடைந்தபின் குடத்தால் வரைந்து கொள்ளப்பட்டிருந்த ஆகாசம் உபாதிநீங்கி யாகாசமே யாவதுபோல தேஹோபாதி நீங்கி பரமாத்மாவே யாகின்றார் கள். இது ஜீவனுக்கும் ப்ரம்மத்துக்கும் அபேதத்தை யறிந்ததற்குப் பயனாகும். இவ் வாறே ப்ரம்மத்தை யறிந்தவர் ப்ரம்மஸ்தாநத்தை யடைகிறார்கள்.

ரா-ஸா. தத்வத்தை யறிந்தவர் ஜீவதசையிலேயே த்யாநமாஹாத்ம்யத்தால் பர மாத்மாவை யநுபவித்து அவ்வநுபவத்தால் மகிழ்ந்த நெஞ்சினையுடையராய், ஸத்தை பெற்று விஷயங்களி லாசைநீங்கி, இந்த்ரிய ஜயம்பெற்றவராகி உள்ளும் வெளியு மெல்லா வஸ்துக்களிலும் பூர்ணனான பரமாத்மாவை பரமபதத்தில் ஸேவிக்கப்பெற்று அபஹதபாப்மத்வம் முதலிய குணங்கள் வெளியாகி தருமபூதஜ்ஞாநத்தால் எல்லாவற் றையு மநுபவிக்கிறார்கள்.

௬. வெதாந்தவிஜ்ஞாநஸுநிஶ்சிதாய-ர்தாஃ ஸந்ந்யாஸயொகாத்யதயஃ ஶுத்தஸத்வாஃ | தெ ப்ரஹ்மலொகெஷு பராந்தகாலெ பராம்ருதாஃ பரிமுச்யந்தி ஸவெ-ர் ||

౬. వేదాంతవిజ్ఞానసునిశ్చితార్థాః సన్న్యాసయోగాద్యతయశ్శుద్ధసత్వాః।
తే బ్రహ్మలోకేషు పరాన్తకాలే పరామృతాః పరిముచ్యంతి సర్వే॥

(ப-ம்.) வெதாந்தவிஜ்ஞாநஸுநிஶ்சிதாய-ர்தாஃ - வேதாந்தங்களை நன்கு ணர்ந்தமையால் தத்வார்த்தங்களை நிச்சயித்தவராய், ஸந்ந்யாஸயொகாத் - காம்யகருமங்களை விட்டபடியால், ஶுத்தஸத்வாஃ - தெளிந்தநெஞ்சையுடை யராய், யதயஃ - இந்திரியங்களை ஜயித்தவராயிருக்கிற, தெ ஸவெ-ர் - அந்த எல்லாஉபாஸகர்களும், பராந்தகாலெ - கடைசியாய் சரீரம்போகுங்காலத் தில், ப்ரஹ்மலொகெஷு - ப்ரம்மலோகங்களில், பராம்ருதாஃ - ப்ரம்மத் தையடைகிறவர்களாய், பரிமுச்யந்தி - விடுபடுகிறார்கள்.

ஸம-ஸா. வேதாந்தப்பொருளை நன்குணர்ந்தவராய், (வேதாந்தப்பொருளாவது - ப்ரம்ம மறியத்தக்கது, என்பதாம்.) இந்த நிச்சயம் பிறந்தவராய், கருமங்களெல்லாவற் றையும் விடுகையாகிற யோகத்தால் நெஞ்சு தெளிந்தவராய், கேவலப்ரம்ம நிஷ்டராய், யத்நம் செய்கிறவர்களாயிருக்கிற ஜ்ஞாநிகள், (ஸம்ஸாரிகள் மரணமடையுங் காலத்திற்கு அபராந்தமென்று பெயர். முமுக்ஷுக்கள் ஸம்ஸாரஸம் பந்தமற்று மரணத்தையடை யுங் காலத்திற்கு பராந்தமென்று பெயர்.) பராந்த காலமென்கிற மரணகாலத்தில்,ப்ரம்ம மாகிற உலகங்களில், (ப்ரம்ம மொன்றேயாயினும் உபாஸகர் பலராகையால், அநேகம் போல் காணப்படுதலால் பன்மையாலுரைக்கப்பட்டது. ப்ரம்மஸ்வரூபத்தி லென்று பொருள்) அந்த ப்ரம்மத்திலே மரண தர்மமில்லாத ப்ரம்மாத்ம பாவத்தை யடைந்தவ ராய் கலந்து,ஜீவதசையிலேயே ப்ரம்மமாகியவர்களாய்,தீபம் போலவும் கடாகாசம் போல வும் நிர்வாணமடைந்து மாயா ஸம்பந்த முதலியவற்றால் விடுபடுகிறார்கள். வேறொரு

தேசத்தை யடைகிறதில்லை. சுருதி ஸ்மிருதிகளில் தேசப்ராப்தி ஸம்ஸார பலமே யென்று சொல்லுகையால் முக்தியாகியது தேசப்ராப்தி யாகாது. ஸமஸ்தஸ்வரூப மான ப்ரம்மத்தில், தேசபரிச்சேதங் கிடையாது. ப்ரம்மம் தேசபரிச்சேத முளதாயின் மற்றவையைப்போ லநித்யமும் மற்றொன்றைப்பற்றியதுமாய் நித்ய ஸுகஸ்வரூபமாகா தன்றே. ஆனதால் ப்ரம்ம ப்ராப்தியாவது தேசத்தைச் சேருவதல்லவென்பது யுக்தம்.

ரா.ஹா.—இந்திரியஜயம் பெற்றவர்களாய் காம்ய கருமங்களைவிட்டவராய் அந்தக் கரணசுத்தி யுடையவராய், ப்ரம்மநிஷ்டர்களாயிருக்கிற எல்லா உபாஸகரும், சரீராவஸாந காலத்தில் ப்ரம்மாநுக்ரஹத்தினால், ஸம்ஸாரம் நீங்கி முக்தராகிறார்கள்

பதாந்வயார்த்த பேதங்கள்.

இராமாநுஜ பாஷ்யத்தில் ப்ரம்மலோகேஷு, என்று ஒரு பாடமும், ப்ரம்மலோகேது, என்றொரு பாடமும் காட்டப்பட்டது. பகவானுக்கு அநேக லோகங்களுண்டாகையால், 'லோகேஷு' என்கிற பாடமும் ஸரியானதேயாம். 'லோகேது' என்கிறபாடத்தில் ப்ராப்யமான ப்ரம்மத்தில் என்று, பொருள் கொள்ளப்பட்டது. மற்றவை இதற்கிசைய யோஜிக்கப் பட்டது.

௭. மதா꞉ கலா꞉ வஂசுஶ ப்ரதிஷ்டா꞉ ஜெவாஶ்ச ஸவெ ப்ரதிஜெவதாஸு । கமாணி விஜ்ஞாநமயஶ்ச ஆத்மா பரெவ்யயெ ஸவ ஏகீஃவந்தி॥

౭. గతాఃకలాఃపంచదశప్రతిష్ఠామ్ దేవాశ్చసర్వేప్రతిదేవతాసు ।
కర్మాణివిజ్ఞానమయశ్చఆత్మాపరేవ్యయేసర్వఏకీభవంతి॥

(ப்·ம்.) வஂசுஶ - பதினைந்தாயிருக்கிற, கலா꞉ - ப்ராணாதிகலைகள், ப்ரதிஷ்டா꞉ - காரணஸம்பந்தத்தை, மதா꞉ - அடைகிறதுகள். ஸவெ ஜெவா꞉ச - எல்லா இந்திரியங்களும், ப்ரதிஜெவதாஸு - அதிஷ்டாநதேவதைகளான ஸூர்யாதி தேவதைக ளிடத்தில் ஸம்பந்தத்தை யடைகின்றன, கமாணி - கருமங்களும், விஜ்ஞாநமய꞉ - ஜ்ஞாநஸ்வரூபியான, ஆத்மா - ஆத்மாவும், ஸவெ - எல்லாம், அவ்யயெ - அழிவில்லாத, பரெ - பரமாத்மாவில், ஏகீஃவந்தி - ஒன்றாய்விடுகிறதுகள்.

ஶ0-ஹா. அவித்யை முதலிய ஸம்ஸாரபந்தம் நீங்குவது மோக்ஷமென்று ப்ரம்ம வாதிகள் சொல்லுகிறார்கள். காரியமா யிருப்பது மோக்ஷமாகாது. ஆகையால் இவன் மோக்ஷமடையும்போது, இவனுடைய சரீரத்தில் காரணமாய்க் கலந்திருந்த கலைகளென்கிற ப்ராணன் முதலியவை பதினைந்தும், தந்தம் காரணங்களை யடைகின்றன. இந்தகலைகளின் வகை ப்ரச்னோப நிஷத்து விளக்கிற்று. தேஹத்தில் கண்முதலிய விடங்களிலிருந்த இந்திரியங்கள் ஸூரியன் முதலிய தேவதைகளைச் சேருகின்றன. பலனைத் தருவதற்குத் தொடங்கிய கருமங்கள் அநுபவித்தே யொழிக்கத்தக்கவை யாகையாலவை நீங்க, மற்ற கருமங்களும், அவித்யையினால் செய்யப்பட்ட புத்தி முதலிய உபாதிகளை யாத்மாக வெண்ணிக் கொண்டு ஜலம் முதலியவற்றில் ஸூர்ய ப்ரதிபிம்பம் போலிந்த சரீரங்களில் ப்ரவேசித்திருக்கிற ஆத்மாவும், கருமங்களுக்கு இவ்வாத்மா முக்தி தசையில் ஸுகதுக்க ரூபமான பலனை யநுபவிக்கும்படி செய்ய வல்லமை யில்லாமையால், உபாதி நீங்கினபோது, பரமாய், அழிவில்லாததாய், விகாரமில்லாததாய், வ்யாபியாய், ஜந்ம ஜராமரண முதலாகிய துன்பமில்லாததாய், அபயமாய் அபூர்வமாய், சிறந்ததாய்

உள்வெளி பேதமில்லாததாய், சிவமாய் சாந்தமாயிருக்கிற ப்ரமமத்தில் ஒன்ருய்க் கலந்து போகின்றன. தண்ணீர் சோர்ந்தபோது ஸூரிய பிம்பம் போலவும், குடமுடைந்த போது கண்டாகாசம்போலவு மெல்லா மொன்ருய் விடுகின்றன.

ரா-ஹா. முக்தனுகிற ஜீவனுக்கு உபகாரமாக ப்ரச்நோபநிஷத்தில் சொல்லப் பட்ட ப்ராணன் முதல் நாமம் வரையிலுள்ள பதினறு கலைகளில் கருமம் தவிர்ந்த பதி னைந்தும் தந்தம் காரணங்களில் ஒட்டிப் போகின்றன. வாக்கு முதலிய இந்திரியங்கள் அதிஷ்டாந தேவதைகளாகிய ஸூரியன் முதலியவற்றில், சேருகின்றன. இவ்வளவே யொழிய லயிப்பதில்லை. இந்திரியங்கள் கல்பாந்தம்வரையி லிருப்பவையன்ருே. இது வ்யாஸ ஸூத்திரத்தினுல் செவ்வையாய் விளங்கும். இவனுக்கு பயனைக் கொடாதவை யாய், இவன் ப்ரத்யக்ஷம்போல பாவிக்கிற உபாசனையைத் தொடங்கும்போது, நான் பொறுப்பேன், என்று பகவான் சங்கல்பித்தவையான, கருமங்களும், இவ்வாத்மாவும் எல்லாவற்றிற்கும் பரமான பரப்ரம்மத்தில் ஒன்ருய் விடுகின்றன. இவற்றுள், கருமம் ப்ரம்மத்தி லொன்ருகையாவது இக்கருமம் பரமாத்மாவின் கோபமே யாகையால், இந்த கோபாவஸ்தை மாறி தருமபூதஜ்ஞாநத்தில் லயிப்பதேயாம். ஜீவன், ப்ரம்மத்தி லொ ன்ருகையாவது நாமரூபமுதலியவற்ருல் வருகிற ஆகார பேதம் கழிவது. ஆக, இவ னுக்கு கருமங்கள் நசிக்கின்றமையால், முக்தாத்மாவுக்கு கலைகளென்கிற ப்ராணுதிகள் உபகரணங்களாவதில்லை யென்று கருத்து.

அ. 𑌯𑌥𑌾 𑌨𑌦𑍍𑌯𑌃 𑌸𑍍𑌯𑌨𑍍𑌦𑌮𑌾𑌨𑌾𑌃 𑌸𑌮𑍁𑌦𑍍𑌰𑍇𑌽𑌸𑍍𑌤𑌂 𑌗𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑌿 𑌨𑌾𑌮𑌰𑍂𑌪𑍇 𑌵𑌿𑌹𑌾𑌯 । 𑌤𑌥𑌾 𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑍍 𑌨𑌾𑌮𑌰𑍂𑌪𑌾𑌦𑍍𑌵𑌿𑌮𑍁𑌕𑍍𑌤𑌃 𑌪𑌰𑌾𑌤𑍍𑌪𑌰𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑌮𑍁𑌪𑍈𑌤𑌿 𑌦𑌿𑌵𑍍𑌯𑌮𑍍 ॥

௮. యథానద్యస్స్యన్దమానాస్సముద్రేఽస్తంగచ్ఛంతినామరూపేవిహాయ ।
తథావిద్వాన్నామరూపాద్విముక్తఃపరాత్పరంపురుషముపైతిదివ్యమ్॥

(ப்-ம்.) 𑌸𑍍𑌯𑌨𑍍𑌦𑌮𑌾𑌨𑌾𑌃 - ப்ரவஹியாநின்ற, 𑌨𑌦𑍍𑌯𑌃 - நதிகள், 𑌸𑌮𑍁𑌦𑍍𑌰𑍇 - ஸமுத்திரத்தில், 𑌯𑌥𑌾 - எவ்வாறு, 𑌨𑌾𑌮𑌰𑍂𑌪𑍇 - நாமரூபங்களை, 𑌵𑌿𑌹𑌾𑌯 - விட்டு, 𑌅𑌸𑍍𑌤𑌂 𑌗𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑌿 - ஐக்யத்தை யடைகின்றனவோ; 𑌤𑌥𑌾 - அவ்வாறே, 𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑍍 - உபாஸகன், 𑌨𑌾𑌮𑌰𑍂𑌪𑌾𑌤𑍍-நாமரூபங்களால், 𑌵𑌿𑌮𑍁𑌕𑍍𑌤𑌃- விடப்பட்டவனுய், 𑌪𑌰𑌾𑌤𑍍𑌪𑌰𑌂 𑌦𑌿𑌵𑍍𑌯𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑌮𑍁𑌪𑍈𑌤𑌿 - பராத்பரனுய் விளங்குகிற பரமபுருஷனை, யடைகிருன்.

ஶ௦-ஹா. அவித்யை கழிந்து ப்ரம்மத்தோடு ஐக்யம் பெறுவதில் நதிகள் த்ருஷ்டா ந்தம்.

ரா-ஹா—முக்தஜீவன் பரப்ரம்மத்தோடு ஐக்யமடைகிருனென்றதினுல்வந்த ஸந் தேஹம் கழியுண்ணும்படி த்ருஷ்டாந்தத்துடன்; விஸ்தரிக்கிறது. எவ்வாறு கங்கை, யமுனை, ஸரஸ்வதி, முதலிய ஆறுகள், தாம் பிறக்கு மிடங்களினின்றும், ப்ரவஹி த்து, கங்கை கங்கை என்கிற பெயரையும் வெளுத்த ரூபத்தையும், யமுனை, யமுனை என்கிற பெயரையும், கறுப்பு ரூபத்தையும், ஸரஸ்வதி, ஸரஸ்வதி என்கிற பெயரையும், சிவந்த ரூபத்தையும் இவ்வாறு மற்றுள்ளவாறுகள் அவைகளுக்குள்ள பெயரையும் ரூபத் தையும்விட்டு, ஸமுத்திரத்தி லொன்ருய்க் கலந்து போகின்றனவோ; அவ்வாறே வித்வா னுகிய உபாஸகன், பேதத்தைக் காட்டித்தருகிற நாமத்தையும் ரூபத்தையும் மற்ற உபா திகளையும், விட்டு, பரமபுருஷனை யடைகிருன். இத்தால் ஆற்று நீருக்கும் கடல் நீருக் கும், வாஸ்தவத்தில் பேதமுண்டானுலும் கடலில் கலந்தபின் அவ்வேறுபாட்டைக்

காட்டுகிற ரூபம் (அதாவது நிறம்) அழிவதால் பேருமழிந்து, ஒன்றுபோல் தோற்றுவது போல, பரமாத்மாவுக்கு மிந்த ஜீவாத்மாவுக்கும் பேதத்தைக் காட்டுகிற ரூபநாமங்கள் முக்தி காலத்தி லழிகின்றமையால் ஒன்றுபோல் பேதமின்றித் தோன்றுவதொழிய பரமாத்மாவுக்கும் ஜீவாத்மாவுக்கும் வாஸ்தவத்தில் ஐக்கியமில்லை அபேதமில்லை. இப்படியே முன்னமே முக்தராயிருக்கிற ஆத்மாக்களோடும் அபேதமில்லை. பரமாத்மாவேயெனலாம் படிஸமாநமா யிருக்கையே முக்தி என்று வைளியாக்கப்பட்டது. ஆனதால் கடவல்லி உபநிஷத்திலும்; மஹா ஜலத்தில் கலந்த நீர் அதுபோலவே யாவதுபோல், என்று சாம்யஞ் சொல்லப்பட்டதே யன்றி அபேத மோதப்படவில்லை. இங்கு மதாந்தரத்தில் அநேகாவயங்களுக்கும் ஐக்யமுண்டாவதுபோல ஜீவ பரமாத் மைக்யம் சொல்லலாமே யெனில் அது தகாது. நிர்க்குணவித்யையாக சங்கரமதத்தி லொப்புக்கொள்ளப்பட்ட ப்ரஜாபதிவித்யையில், ஜீவப்ரம்மங்களுக்கு பேதத்தையும் ஸத்யகாமத்வம், ஸத்யசங்கல்பத்வம், முதலிய குணங்களையும் சொல்லுகின்றமையாலும், “உத்தராச்சேதா விர்பூதஸ்ரூபஸ்து” என்கிற சூத்திரத்தில் முக்திய லந்த குணங்களை யடைவது அந்த வித்யைக்குபலமென்னு சங்கர பாஷ்யத்தி லொப்புக்கொள்ளுகின்றமையாலும், முக்தியில் பேத சூந்யமான ப்ரம்மத்தோடு ஐக்யமென்று சொல்லுவது பொருத்தமற்றதேயாம். இதுகள் ஸ்வரூப மாத்திரம் என்று சொல்லுவது கூடாதென்பது பல யுக்திகளாலும், தகாதென்று ஸ்பஷ்டமாய் விளங்குகின்றது. ஆனதால் ஜீவனுக்கும் பரமாத்மாவுக்கு மபேதமுரைப்பது அசங்கதமாம்.

௯. 𑌸 𑌯𑍋 𑌹 𑌵𑍈 𑌤𑌤𑍍𑌪𑌰𑌮𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌵𑍇𑌦 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍈𑌵 𑌭𑌵𑌤𑌿 𑌨𑌾𑌸𑍍𑌯𑌾𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌤𑍍𑌕𑍁𑌲𑍇 𑌭𑌵𑌤𑌿 । 𑌤𑌰𑌤𑌿 𑌶𑍋𑌕𑌂 𑌤𑌰𑌤𑌿 𑌪𑌾𑌪𑍍𑌮𑌾𑌨𑌂 𑌗𑍁𑌹𑌾𑌗𑍍𑌰𑌨𑍍𑌥𑌿𑌭𑍍𑌯𑍋 𑌵𑌿𑌮𑍁𑌕𑍍𑌤𑍋𑌽𑌮𑍃𑌤𑍋 𑌭𑌵𑌤𑌿 ॥

౯. సయోహవైతత్పరమంబ్రహ్మవేదబ్రహ్మైవభవతినాస్యాబ్రహ్మవిత్కులేభవతి।
తరతిశోకంతరతిపాప్మానంగుహాగ్రంథిభ్యోవిముక్తోమృతోభవతి॥

(ப-ம்.) 𑌯𑌃 𑌹 𑌵𑍈 - யவனொருவன், 𑌤𑌤𑍍𑌪𑌰𑌮𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌵𑍇𑌦 - அந்த பரப்ரம்மத்தை யறிகிறானோ; 𑌸𑌃 - அவன், 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍈𑌵 𑌭𑌵𑌤𑌿 - ப்ரம்மமே யாகிறான், 𑌅𑌸𑍍𑌯 𑌕𑍁𑌲𑍇 - இவன்வம்சத்தில், 𑌅𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌤𑍍 𑌨 𑌭𑌵𑌤𑌿 - ப்ரம்ம தத்வத்தை யறியாதவன் பிறப்பதில்லை. 𑌶𑍋𑌕𑌂 𑌤𑌰𑌤𑌿 - சோகமற்றவனாகிறான், 𑌪𑌾𑌪𑍍𑌮𑌾𑌨𑌂 𑌤𑌰𑌤𑌿 - பாபமற்றவனாகிறான், 𑌗𑍁𑌹𑌾𑌗𑍍𑌰𑌨𑍍𑌥𑌿𑌭𑍍𑌯𑌃 𑌵𑌿𑌮𑍁𑌕𑍍𑌤𑌃, ராகத்வேஷங்கள் நீங்கியவனாய், 𑌅𑌮𑍃𑌤𑌃 - போக்யனாய், 𑌭𑌵𑌤𑌿 - ஆகிறான்.

ஸம்-ஹா. நல்ல காரியத்திற்கு அநேக விக்நங்கள் வருவது இயல்பாதலால் இந்த வித்வானு மொருக்கால் சில கெடுதிகளா லந்யகதியை யடைவானோ என்கிற சம்சயம் தீர்த்து இவனுக்கு அவித்யை யொழியவேறு விக்நமில்லாமையால் அது தத்வஜ்ஞானத்தால் கழிந்தபடியால் ஆத்மா, தானே யாகையால் இதற்கு தேவதைகளாலும் விக்நம் செய்ய முடியாது என்கிறது. விசேஷம் முன்னமே யுரைக்கப்பட்டது.

தா-ஹா. ப்ரம்மத்தை யறிந்து த்யானித்து நிச்சல ஸ்ம்ருதி பெற்று ப்ரத்யக்ஷம்போலான பக்தியைச் செய்தவன், தப்பாமல் ப்ரம்மம்போலவே யாகிறான். இவனுக்கு குணாஷ்டக முதிக்கிறது. மற்றவை ஸ்பஷ்டமானதால் விரிக்கப்படவில்லை.

௧௦. 𑌤𑌦𑌤𑌦𑍃𑌚𑌾𑌽𑌭𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌂 𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌵𑌨𑍍𑌤𑌃 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌿𑌯𑌾 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌨𑌿𑌷𑍍𑌠𑌾𑌃 𑌸𑍍𑌵𑌯𑌂 𑌜𑍁𑌹𑍍𑌵𑌤 𑌏𑌕𑌰𑍍𑌷𑌿𑌂 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌯𑌨𑍍𑌤𑌃 । 𑌤𑍇𑌷𑌾𑌮𑍇𑌵𑍈𑌤𑌾𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌂 𑌵𑌦𑍇𑌤 𑌶𑌿𑌰𑍋𑌵𑍍𑌰𑌤𑌂 𑌵𑌿𑌧𑌿𑌵𑌦𑍍𑌯𑍈𑌸𑍍𑌤𑍁 𑌚𑍀𑌰𑍍𑌣𑌮𑍍॥

౧౦. తదేతదృచాభ్యుక్తం క్రియావంతః శ్రోత్రియా బ్రహ్మనిష్ఠాః స్వయం జుహ్వత ఏకర్షిం శ్రద్ధయన్తః । తేషామేవైతాం బ్రహ్మవిద్యాం వదేత శిరోవ్రతం విధివద్యైస్తు చీర్ణమ్॥

(ப-ம்.) 𑌤𑌦𑍇𑌤𑌤𑍍 - இந்தப்ரம்மவித்யாஸம்பந்தவிதியானது, 𑌋𑌚𑌾 - இருக்கினால், 𑌅𑌭𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌮𑍍 - சொல்லப்பட்டது. 𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌵𑌨𑍍𑌤𑌃 - கருமாநுஷ்டாநபரர்களாயும், 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌿𑌯𑌾𑌃 - வேதாத்யயனம் செய்தவர்களாயும், 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌨𑌿𑌷𑍍𑌠𑌾𑌃 - பரமாத்மநிஷ்டையுடையவர்களாயும், 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌯𑌨𑍍𑌤𑌃 - சிரத்தையுடையவர்களாயும், 𑌏𑌕𑌰𑍍𑌷𑌿𑌂 𑌸𑍍𑌵𑌯𑌂 𑌜𑍁𑌹𑍍𑌵𑌤 - அக்நிஹோத்ரிகளாயும், 𑌶𑌿𑌰𑍋𑌵𑍍𑌰𑌤𑌂 𑌵𑌿𑌧𑌿𑌵𑌤𑍍 𑌯𑍈𑌃 𑌚𑍀𑌰𑍍𑌣𑌮𑍍 - சாஸ்திரப்படி வேதவ்ரதத்தை யநுஷ்டித்தவர்களாயிருக்கிற, 𑌤𑍇𑌷𑌾𑌮𑍇𑌵 - அவர்களுக்கே, 𑌏𑌤𑌾𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌂 𑌵𑌦𑍇𑌤 - இந்தப்ரம்மவித்யையை யுபதேசிக்கக்கடவன்.

ஸம்-ஹா. இதற்கு பரம்பரை லக்ஷணம் கூறி முடிக்கிறது. ப்ரம்மஜ்ஞாநத்தில் விருப்பமுடையவர்களாயிருக்கிறவர்களுக்கு இது உபதேசிக்கத்தக்கது.

ரா-ா. பஞ்சமஹாயஜ்ஞம் முதலியவை செய்கிறவர்கள் வேதத்தை யோதினவர்களுமிதற்குத்தக்கவர்கள்.

பதாந்வயார்த்த பேதங்கள்.

பதஉரையைப்போலவே இரண்டு பாஷ்யங்களுக்கும்கருத்து. விசேஷங்களில்லை. மற்ற விசாரங்கள் ஸூத்திர பாஷ்யத்தில் காண்க.

௧௧. 𑌤𑌦𑍇𑌤𑌤𑍍𑌸𑌤𑍍𑌯𑌮𑍃𑌷𑌿𑌰𑌙𑍍𑌗𑌿𑌰𑌾𑌃 𑌪𑍁𑌰𑍋𑌵𑌾𑌚 𑌨𑍈𑌤𑌦𑌚𑍀𑌰𑍍𑌣𑌵𑍍𑌰𑌤𑍋𑌽𑌧𑍀𑌤𑍇 𑌨𑌮𑌃 𑌪𑌰𑌮𑌋𑌷𑌿𑌭𑍍𑌯𑍋 𑌨𑌮𑌃 𑌪𑌰𑌮𑌋𑌷𑌿𑌭𑍍𑌯𑌃॥

౧౧. తదేతత్సత్యమృషిరంగిరాః పురోవాచ నైతదచీర్ణ-
వ్రతోఽధీతే నమః పరమఋషిభ్యో నమః పరమఋషిభ్యః॥

(ப-ம்.) 𑌤𑌦𑍇𑌤𑌤𑍍 𑌸𑌤𑍍𑌯𑌮𑍍 - அப்படிப்பட்ட இந்த அக்ஷரப்ரம்மஸத்யஸ்வரூபத்தை, 𑌅𑌙𑍍𑌗𑌿𑌰𑌾𑌃 𑌋𑌷𑌿𑌃 -அங்கிரஸ்ஸென்கிற ருஷியானவர், 𑌪𑍁𑌰𑌾 𑌉𑌵𑌾𑌚 - முதலிலுபதேசித்தார். 𑌅𑌚𑍀𑌰𑍍𑌣𑌵𑍍𑌰𑌤𑌃 - சிரோவ்ரதம் செய்யாதவர், 𑌏𑌤𑌤𑍍 - இதை, 𑌨 𑌅𑌧𑍀𑌤𑍇 - அத்யயநம்பண்ணக்கூடாது. 𑌪𑌰𑌮𑌋𑌷𑌿𑌭𑍍𑌯𑌃 𑌨𑌮𑌃 𑌪𑌰𑌮𑌋𑌷𑌿𑌭𑍍𑌯𑌃 𑌨𑌮𑌃 - ஆசார்யபரம்பரையில் சேர்ந்தமகர்ஷிக்கு நமஸ்காரங்கள்.

ஸம்-ஹா. இந்த அக்ஷர ஸ்வரூபத்தை அங்கிரஸ்ஸுயென்கிற ருஷியானவர் விதிப்படிவந்து கிட்டின சௌநகருக் குபதேசித்தார். ஆகையால் இப்படியே முமுக்ஷுவாய் விதிப்படி வந்துகிட்டின சிஷ்யனுக் குபதேசிக்கக்கடவன். இந்த உபநிஷத்தை சிரோவ்ரதமென்கிற விதியைச் செய்யாதார் அதயநம் செய்யக்கூடாது. அந்த ஸம்ஸ்காரம் பல

த்தைத்தருவதி லநுகூலமானது. இந்த ப்ரம்மவித்யைமுடிந்தது. இது எந்த ப்ரம்மா துடங்கி பரம்பரையாய் வந்ததோ அப்படியா சார்ய பரம்பரையில் சேர்ந்த அந்த ப்ரம்மா முதலுள்ள அனைவருக்கும் அநேக நமஸ்காரம். அவர்களேயன்றோ ப்ரம்மஸா க்ஷாத்காரம் பெற்றார்கள். ஆதரத்தா லிரட்டித்துச் செல்லுகிறது. அன்றியே முண்ட கோபநிஷத்து முடிந்ததென் றறிவித்தலு மொரு பயன்.

ரா-ஸா. அத்யாபநம் என்பது ஓதிவித்தல் அத்யயநம் ஓதல். முன் மந்திரத்தில் அத்யாபநம் சிரோவ்ரதம் செய்யாதவனுக்குத் தகாது அவனுக்குச் சொல்லக்கூடாது; என்று கூறப்பட்டது. இந்த மந்திரத்தில் சிரோவ்ரதம் செய்யாதவன், இதை அத்யயநம் செய்யக்கூடாதென்று சொல்லுகிறது என்று பேதமறிக.

பதாந்வயார்த்த பேதங்கள்.

புரோவாச என்று சங்கர பாஷ்யததில் பாடம். ப்ரோவாசஎன்று இராமாநுஜ பாஷ்யத்தில் பாடம், மற்ற கருத்தில் பேதமில்லை.

ரா-ஸா. இம்முண்டகோபநிஷத்து முழுதும் நாராயணனையே கூறுகிறதென்று வ்யாச சூத்திரங்களில் ஒன்பது சூத்திரங்களால் வெளியிடப்பட்டிருக்கிறது ஆகையால் இது முழுதும் நாராயணனையே பேசுகிறது.

இதி த்ருதீயமுண்டகே த்விதீயகண்டம்.

---

முண்டகோபநிஷத் முற்றும்.

ஹரி: ஓம்.

மாண்டூக்யோபநிஷத்வ்யாக்யாரம்ப:.

மாண்டூக்யோபநிஷத்வ்யாக்யானம்.

க. ஓமித்யேதத³க்ஷரமித³ம் ஸர்வம் தஸ்யோபவ்யாக்²யானம் பூ⁴தம் ப⁴வத்³ப⁴விஷ்யதி³தி ஸர்வமோங்கார ஏவ । யச்சான்யத் த்ரிகாலாதீதம் தத³ப்யோங்கார ஏவ॥ க॥

౧. ఓమిత్యేతదక్షరమిదం సర్వంతస్యోపవ్యాఖ్యానంభూతంభవద్ భవిష్యదితిసర్వమోంకారఏవయచ్చాన్యత్ త్రికాలాతీతంతదప్యోంకారఏవ॥ ౧॥

(ப-ம்.) இத³ம் - இந்த, ஸர்வம் - யெல்லாவுலகமும், ஓமிதி - ஓமென்று சொல்லப்படுகிற, ஏதத் - இந்த, அக்ஷரம் - எழுத்து, தஸ்ய - அந்தயெழுத்திற்கு, உபவ்யாக்²யாநம் - விரிவானபொருள், (கத்²யதே - சொல்லப்படுகிறது,) பூ⁴தம் - சென்றது, ப⁴வத் - நிகழ்கிறது, ப⁴விஷ்யத் - வருவது இதி - என்கிற, ஸர்வம் - எல்லாவுலகமும், ஓங்கார ஏவ - ஓமென்கிற எழுத்தாலே, த்ரிகாலாதீதம் - மேற்கூறிய மூன்று காலங்களிலு மடங்காத, அந்யத் - வேறாகிய, யத் - யாதொருவஸ்துவிருக்கிறதோ, தத³பி - அந்தவஸ்துவும், ஓங்கார ஏவ - ஓமென்னும் எழுத்துதான்.

ஸம்-ஹா. இவ்வுபநிஷத்து ப்ரணவத்யாநவிதிகூறுகின்றது. ஸகலவஸ்துக்களையும் சொல்லும் வார்த்தைகளுக்கு ஓங்காரமே காரணமாகையாலும் யெல்லாப்பொருள்களுக்கும்ப்ரம்மமே இடமாகையாலும்பொருள்களும்பெயரும் ஒன்றாகையாலும் ஓங்காரத்தின் பொருளும் பிரம்மமாகையாலும் ஓங்காரமே யெல்லாப்பொருள்களும் என்று சொல்லப்படுகிறது. 'இவ்வாறே' எல்லாப்பொருளு மோங்காரமே, இவைமுதலிய வேதங்களைக்

ரா-ஹா. இந்த மாண்டூக்யத்தி லோங்காரோபாஸநத்தை விதிக்கின்றது. நான்கு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்ட ப்ரணவத்தை நான்குபாதங்களோடு கூடின ப்ரம்மமாக தியானிக்கச்சொல்வதற்கு இந்தப் பிரகரணம் ஆரம்பிக்கப்படுகின்றது. ப்ரணவத்தில்நின்றும் உண்டான வ்யாஹ்ருதிகளில்நின்றும் உண்டாகிய வேதங்களைக்கொண்டு இப்புவனங்கள் படைக்கப்பட்டதாதலால் இவ்வுலகங்களை ஓங்காரமென்று சொல்லுகிறது. அப்ப்ரணவத்தை தியாநிக்கவேண்டியவிதிகள் விரிவாய்சொல்லப்படுகின்றன. இவ்வுலகங்கள் ஓம் என்றுசொல்லப்பட்ட அக்ஷரமே என்று, அதின்விரிவுகள்சொல்லப்படுகின்றன. மூன்று காலங்களிலும் வேறுபாடில்லாததும் மேற்கூறியகாலங்களில் அடங்காமலிருப்பதும் மேற்கூறிய ப்ரணவமே.

உ. ஸர்வம் ஹ்யேதத்³ப்³ரஹ்மாயமாத்மா ப்³ரஹ்ம ஸோயமாத்மா சதுஷ்பாத்॥ உ॥

౨. సర్వంహ్యేతద్బ్రహ్మాయమాత్మాబ్రహ్మసోయమాత్మాచతుష్పాత్॥ ౨॥

(ப்-ம்.) ஏதத் - இந்த, ஸர்வம் - எல்லாவஸ்துக்களும், ப்ரஹ்ம ஹி - பிரம்மம்தான், அயம் - இந்தப்ரணவம், ஆத்மா - ஆன்மாவான, ப்ரஹ்ம - பிரமம். ஸோயம் - முன்கூறியஇந்த ஆத்மா - ப்ரஹ்மமானது, சதுஷ்பாத் - நாலுபாதங்களையுடையது.

ஸம்-ஹா. மேல் ப்ரணவரூபமென்று சொல்லப்பட்ட யெல்லாவுலகங்களும் பிரமமே. இத்தால் மேற்கூறிய ப்ரணவமும்ப்ரம்மமும் ஒன்றென்று சொல்லிற்ருயிற்று. இஜ்ஜீவனும் அந்தப்ரம்மந்தான். முற்கூறிய ப்ரணவத்தால் சொல்லப்பட்ட ப்ரம்மம் நாலு பாதங்களையுடையது. இதில்கீழ்மூன்றுபாதங்களையறிந்து நாலாவதுபாதத்தை யறியவேண்டியது. கீழ் மூன்றுபாதங்களும் நாலாவதுபாதத்தை யறிவதற்குக்காரணம் நாலாவது பாதம் யெல்லாராலும் அறியவேண்டியது.

ரா-ஹா. ஸர்வரூபமான ப்ரம்மம் ஓங்காரமேயாம். அதாவது ப்ரணவத்தில் ஸர்வரூபியான ப்ரம்மமென்கிற நினைவுவரவேணு மென்றவாறு. ப்ரணவமாக தியானிக்கச் சொன்ன பிரம்மம் நாலுபாதத்தோடுகூடியது. அதாவது ப்ரணவத்தை நாலுபாதங்களை யுடையதாகச் சொல்லப்போகின்றமையால் நாலுபாதங்களையுடைய ப்ரணவத்தை நாலு பாதங்களுடைய ப்ரம்மமாக தியானிக்கவேண்டு மென்றபடி. ப்ரம்மத்தினுடைய நாலு பாதங்களிவை என்பது மேலேவிளங்கும். மேல்கூறிய யெல்லாவஸ்துக்களிலும் நிறைந்தது, பிரமன்முதலிய ஜீவர்களிலும் நிறைந்திருப்பது மேற்கூறியப்ரம்மமே. அந்த ப்ரம்மம் நான்குபிரிவுகளோடு கூடியது.

இதி மாண்டூக்யோபநிஷதி ப்ரதமகண்டம்.

அத மாண்டூக்யோபநிஷதி த்விதீயகண்டம்.

---

௧. ஓம் ஜாகரிதஸ்தாநோ பஹிஷ்ப்ரஜ்ஞஃ ஸப்தாங்க ஏகோநவிம்சதிமுகஃ ஸ்தூலபுக் வைச்வாநரஃ ப்ரதமஃ பாதஃ॥ ௩॥

౧. ఓంజాగరితస్థానో బహిఃప్రజ్ఞః సప్తాంగ ఏకోనవింశతిముఖః స్థూలభుక్ వైశ్వానరః ప్రథమః పాదః॥ 3॥

(ப்-ம்) ஜாகரிதஸ்தாநஃ - விழிக்குமிடத்திலிருப்பவனும், பஹிஷ்ப்ரஜ்ஞஃ - உருவம்முதலியதில் அறிவையுடையவனும், ஸப்தாங்கஃ - ஏழுஅங்கங்களோடுகூடினவனும், ஏகோநவிம்சதிமுகஃ - பத்தொனபதுமுகங்களோடுகூடியும், ஸ்தூலபுக் - உருவம்முதலியதை யநுபவிக்குமவனுமாகிய, வைச்வாநரஃ - யெல்லாஜனங்களையும் நியமிக்கின்றமையால் வைச்வாநரனென்றுபெயர்கொண்டவன், ப்ரதமஃ பாதஃ - முதல்பாதம்.

ஸம்-ஹா. விழித்துக்கொள்ளும் ஸ்வபாவத்தை யுடையவனும் தன்னை யொழிந்த வஸ்துக்களை அறியுமவனும் சுவர்க்கம் சூரியன் காற்று ஆகாயம் நீர் பூமி நெருப்பு இவைகளின் உருவமாகிய தலை கண் பிராணன் நடுவுடல் உபஸ்தம் கால் முகம் என்கிற ஏழு அங்கங்களோடு கூடினவனும் அறியும் புலன்கள் ஐந்தும் அறியாப் புலன்கள் ஐந்தும் பிராணன்முதலிய ஐந்துவாயுக்களும் மனம் புத்தி அகங்காரம் சித்தம் என்கிற நான்கும் ஆகபத்தொன்பது முகங்களையுடையவனும் சத்தம் முதலியவைகளை அறியும் தன்மையுள்ளவனுகிய ஜீவரூபியானவன் முதல்பாதம்.

ஸா-ஹா. விழித்திருக்கும் ஜீவனுக்கதிகாரியாயும் உருவம்முதலியதை யறியும் தன்மையுள்ளவனும் சுவர்க்கம் சூரியன் காற்று ஆகாயம் நீர் பூமி இவைகளின் உருவமாகிய தலை கண் பிராணன் நடுவுடல் உபஸ்தம் கால் என்கிற ஆறும் ஜீவனுமாகிய ஏழு அங்கங்களையுடையவனும் மேற்கூறிய பத்தொன்பது முகங்களை யுடையவனும் உருவம்முதலியதை யநுபவிக்குமவனுமான அநிருத்தன் என்கிற பெயர்கொண்ட வைச்வாநரன்முதல்பாதம் என்றுபொருள். கண்ணிலிருக்குமவனும் புறம்பானவஸ்துக்களை யறியுமவனும் நாலுகைகள் இரண்டுகால் துதிக்கை ஒன்று ஆக ஏழுஅங்கங்களை யுடையவனும் பத்தொன்பது முகங்களை யுடையவனு மிருக்கிற வைச்வாநரன் முதல்பாதம் என்றும் சொல்லுவர்.

உ. 𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑌸𑍍𑌥𑌾𑌨𑍋𑌽𑌨𑍍𑌤𑌃𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌃 𑌸𑌪𑍍𑌤𑌾𑌙𑍍𑌗 𑌏𑌕𑍋𑌨𑌵𑌿𑌂𑌶𑌤𑌿𑌮𑍁𑌖𑌃 𑌪𑍍𑌰𑌵𑌿𑌵𑌿𑌕𑍍𑌤𑌭𑍁𑌕𑍍𑌤𑍈𑌜𑌸𑍋 𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑌃 𑌪𑌾𑌦𑌃॥ ௪॥

౨. స్వప్నస్థానోంతఃప్రజ్ఞస్సప్తాంగఏకోనవింశతిముఖఃప్రవివిక్తభుక్తైజసోద్వితీయఃపాదః॥౪॥

(ப-ம்,) 𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑌸𑍍𑌥𑌾𑌨𑌃 - ஸ்வப்நத்துக்கதிகாரியாயும். 𑌅𑌨𑍍𑌤𑌃𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌃 - மனதாலறியுந்தன்மை யுள்ளவனாயும், 𑌸𑌪𑍍𑌤𑌾𑌙𑍍𑌗𑌃 - ஏழங்கங்களை யுடையவனாயும், 𑌏𑌕𑍋𑌨𑌵𑌿𑌂𑌶𑌤𑌿𑌮𑍁𑌖𑌃 - பத்தொன்பது முகத்தையுடையவனாயும், 𑌪𑍍𑌰𑌵𑌿𑌵𑌿𑌕𑍍𑌤𑌭𑍁𑌕𑍍 - அயலாரறியாமல் தான்மட்டும் அனுபவிக்குமவனுமான, 𑌤𑍈𑌜𑌸𑌃 - தைஜஸன், 𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑌃 𑌪𑌾𑌦𑌃 - இரண்டாவதுபாதம்.

ஸ0-ஹா. ஒருவஸ்துக்களையும் அறியாமல் ஒளிமாத்திரத்தால் அறியத்தக்க அறிவினால்அறியக்கூடிய தைஜஸன் இரண்டாவதுபாதம். முன்பாதத்தில்வெளியில்உள்ளஉருவம்முதலிய வஸ்துக்களை யறிகிறதாகையால் ஸ்தூலபுக் என்று சொல்லப்பட்டது. இரண்டாவது பாதத்தில் த்ருதிமாத்திரமாயிருந்த அறிவை யறிகிறதாதலால் ப்ரவிவிக்தபுக் என்று சொல்லப்பட்டது.

ஸா-ஹா. ஸ்வப்நாவஸ்தையை யடையும் ஜீவனுக் கதிகாரியாயும் ஸ்வப்நத்தில் வேறுமனிதர்களால் அறியப்படாத நுட்பமானபொருள்களை வெளிச்சம்போல்அறிவித்தலால் தைஜஸனென்று பெயர்கொண்ட ப்ரத்யும்நன் இரண்டாவது பாதம். என்றுபொருள் கழுத்திலிருக்குமவனுய் ஆதலால் தைஜஸன் என்று பெயர்கொண்டவன் ஆன்மாவுக்கு இரண்டாவதுபாதம் என்றுரைப்பாருமுளர்.

௩. 𑌯𑌤𑍍𑌰 𑌸𑍁𑌪𑍍𑌤𑍋 𑌨 𑌕𑌂𑌚𑌨 𑌕𑌾𑌮𑌂 𑌕𑌾𑌮𑌯𑌤𑍇 𑌨 𑌕𑌂𑌚𑌨 𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑌂 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 𑌤𑌤𑍍𑌸𑍁𑌷𑍁𑌪𑍍𑌤𑌂 𑌸𑍁𑌷𑍁𑌪𑍍𑌤𑌸𑍍𑌥𑌾𑌨 𑌏𑌕𑍀𑌭𑍂𑌤𑌃 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌨𑌘𑌨 𑌏𑌵𑌾𑌨𑌨𑍍𑌦𑌮𑌯𑍋 𑌹𑍍𑌯𑌾𑌨𑌨𑍍𑌦𑌭𑍁𑌕𑍍 𑌚𑍇𑌤𑍋𑌮𑍁𑌖𑌃 𑌪𑍍𑌰𑌾𑌜𑍍𑌞𑌸𑍍𑌤𑍃𑌤𑍀𑌯𑌃 𑌪𑌾𑌦𑌃 ॥ ௫॥

3. యత్రసుప్తోనకంచనకామంకామయతేనకంచన స్వప్నంపశ్యతితత్సుషుప్తంసుషుప్తస్థానఏకీభూతఃప్రజ్ఞానఘనఏవానందమయోహ్యానందభుక్ చేతోముఖఃప్రాజ్ఞస్తృతీయఃపాదః॥౫॥

(ப-ம்.) 𑌯𑌤𑍍𑌰 - எந்தவிடத்தில். 𑌸𑍁𑌪𑍍𑌤𑌃 - உறங்கினவன், 𑌕𑌂𑌚𑌨 𑌕𑌾𑌮𑌂 - ஒருவஸ்துவையும், 𑌨 𑌕𑌾𑌮𑌯𑌤𑍇 - ஆசைப்படுகிறதில்லையோ, 𑌕𑌂𑌚𑌨 𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑌂 - ஒரு கனவையும், 𑌨 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 - பார்க்கிறதில்லையோ, 𑌤𑌤𑍍 - அது, 𑌸𑍁𑌷𑍁𑌪𑍍𑌤𑌂 - ஸுஷுப்தம் என்று பெயர்கொண்டது. 𑌸𑍁𑌷𑍁𑌪𑍍𑌤𑌸𑍍𑌥𑌾𑌨𑍇 - மேற்கூறிய ஸுஷுப்தஸ்தாநத்தில், 𑌏𑌕𑍀𑌭𑍂𑌤𑌃 - ஒன்றாயிருக்குமவனாய்,

ப்ரஜ்ஞாநகந ஏவ - ஜ்ஞாநஸ்வரூபியாய், ஆநந்தமய: - ஆநந்தஸ்வரூபியாய், ஆநந்தபுக் - ஆநந்தத்தை யனுபவிப்பிக்குமவனாய், சேதோமுக: - மனதாலறியத்தக்கவனான, ப்ராஜ்ஞ: - ப்ராஜ்ஞனென்கிறபெயர்கொண்ட ஸங்கர்ஷணன், த்ருதீய: பாத: - மூன்றாவதுபாதம்.

ஸம்-ஸா. மேற்கூறிய ஸுஷுப்த ஸ்தாநத்தையுடையவனாய், த்வைதத்தைவிட்டு பிரிவில்லாத ஜ்ஞாநஸ்வரூபியாய் விஷயங்களை யறிகிறதாலுண்டான ஆயாஸமில்லாதவனாய், அறிவை முகமாகவுடையவனான ப்ராஜ்ஞன் மூன்றாவதுபாதம்.

ரா-ஸா. ஜனங்களின் ஸுஷுப்திக்கே யிடமாயும் ஜ்ஞாநஸ்வரூபியாயும் ஸுஷுப்திகாலத்தில் உண்டான ஆநந்தத்தை விளைக்குமவனாயும் நிர்மலமானமனதா லறியக்கூடியவனுமான ப்ராஜ்ஞன் என்கிற ஸங்கர்ஷணன் மூன்றாவதுபாதம். ஹ்ருதய கமலத்தி லிருப்பவனாயும் மேலிரண்டுபாதங்களில்சொல்லிய வைச்வாநர தைஜஸர்களோடு ஜ்ஞாநாநந்தங்களால் ஸமானனாயும் ஜ்ஞானஸ்வரூபியாயும் ஆநந்தஸ்வரூபியாயும் ஆநந்தத்தையனுபவிப்பிக்குமவனாயும் ஜ்ஞாநத்தையே யெல்லாவுருபாக உடையவனாயும் வெளியுருவங்களை தோற்றுவிக்காமையால் ப்ராஜ்ஞனென்கிற பெயர்கொண்டவன்மூன்றாவதுபாதம்.

௪. ஏஷ ஸர்வேஶ்வர ஏஷ ஸர்வஜ்ஞ ஏஷோऽந்தர்யாம்யேஷ யோநி: |
ஸர்வஸ்ய ப்ரபவாப்யயௌ ஹி பூதாநாம் || ௬ ||

౬. ఏష సర్వేశ్వర ఏష సర్వజ్ఞ ఏషోఽన్తర్యామ్యేష యోనిః సర్వస్య ప్రభవాప్యయౌ హి భూతానామ్॥

(ப-ம்.) ஏஷ: - இந்தப்ராஜ்ஞனென்று பெயர்கொண்டவன், ஸர்வேஶ்வர: - சகலத்திற்கும் ஈசுவரன், ஏஷ: - இவன், ஸர்வஜ்ஞ: - சகலத்தையும், அறிந்தவன், ஏஷ: - இவன், அந்தர்யாமீ - உட்புகுந்து நடத்துகிறவன், ஏஷ: - இவன், ஸர்வஸ்ய - சகலத்திற்கும், யோநி: - காரணம், ஏஷ: - இவன், பூதாநாம் - பிராணிகளுக்கு, ப்ரபவாப்யயௌ ஹி - பிறப்பும் இறப்பும்.

ஸம்-ஸா. பேதப்பட்டுப் புலப்படும் வஸ்துக்களுக்கெல்லாம் சுத்தஸ்வரூபனான இவனே ஈசன். இவனே மனிதர்முதலிய பேதங்களையுடையவனாய் யெல்லாவஸ்துக்களையும் அறிகிறவன். இவனே யெல்லாவஸ்துவையும் உட்புகுந்து நடத்துகிறவன். இவனே யெல்லாவற்றிற்கும் காரணம். ஆதலால் பிராணிகளுக்கு பிறப்பும் இறப்பும் இவனே.

ரா-ஸா. முன்சொன்ன குணங்கள் மூன்று பாதங்களுக்கும் பொதுவாயிருந்தாலும் ஒவ்வொரு பாதங்களிலும் கூறப்பட்டகுணங்களோடு தியானம் செய்வதற்காகவே மூன்றிலும் குணங்களோதப்படவில்லை. இப்பாதத்தில் நாலுபாதங்களுக்கும் பொதுவான குணங்களைச் சொல்லுகிறது.

பதாந்வயார்த்த பேதங்கள்.

மேற்கூறிய சப்தார்த்தம்போலவே கருத்து.

௫. நாந்த:ப்ரஜ்ஞம் ந பஹிஷ்ப்ரஜ்ஞம் நோபயத:ப்ரஜ்ஞம் ந ப்ரஜ்ஞாநகநம் ந ப்ரஜ்ஞம் நாப்ரஜ்ஞம் | அத்ருஷ்டமவ்யவஹார்யமக்ராஹ்யமலக்ஷணமசிந்த்யமவ்யபதேஶ்யமேகாத்மப்ரத்யயஸாரம் ப்ரபஞ்சோபஶமம் ஶாந்தம் ஶிவமத்வைதம் சதுர்த்தம் மந்யந்தே ஸ ஆத்மா ஸ விஜ்ஞேய: || ௭ ||

౭. నాన్తఃప్రజ్ఞం న బహిఃప్రజ్ఞం నోభయతఃప్రజ్ఞం న ప్రజ్ఞానఘనం న ప్రజ్ఞం నాప్రజ్ఞమ్। అదృష్టమవ్యవహార్యమగ్రాహ్యమలక్షణమచిన్త్యమవ్యపదేశ్యమేకాత్మప్రత్యయసారమ్। ప్రపంచోపశమం శాంతం శివమద్వైతం చతుర్థం మన్యంతే స ఆత్మా స విజ్ఞేయః॥ ౭॥

(ப - ம்.) அந்த:ப்ரஜ்ஞம் ந - ஸ்வப்நஜ்ஞாந மில்லாததும், ந பஹி:ப்ரஜ்ஞம் - ஜாகரதசையில்லாததும், ந உபயத:ப்ரஜ்ஞம் - இவ்விரண்டு மில்லாததும், ந ப்ரஜ்ஞாநகநம் - அஜ்ஞாநப்ரஜ்ஞை யில்லாததும், ந ப்ரஜ்ஞம் - ப்ராஜ்ஞ ஸ்வரூபத்தில் வேறானதும், ந அப்ரஜ்ஞம் - ஸமஸ்தருக்கும் ஜ்ஞாநத்தைத் தருவதும், அத்ருஷ்டம் - கண் முதலிய இந்திரிய ஜ்ஞாநத்திற்கு கோசரமாகாததும், அவ்யவஹார்யம் - வாகிந்திரியத்தின் வ்யாபாரத்திற்கு எட்டாததும், அக்ராஹ்யம் - பாணீந்திரியத்திற்குப் பிடிபடாததும், அலக்ஷணம் - அநுமாநப்ரமாணத்திற்கும் தெரியாததும், அசிந்த்யம் - இஃதென்று சொல்லமுடியாததும், அவ்யபதேஶ்யம் - இப்படிப்பட்டதென்று நிச்சயிக்கப்படாததும், ஏகாத்மப்ரத்யயஸாரம் - ஜ்ஞாநாநந்த ஸ்வரூபமுடையதும், ப்ரபஞ்சோபஶமம் - ஸங்கர்ஷணாதி அவதாரங்களுக்குலயஸ்தாநமாகியதும், ஶாந்தம் - பசிதாஹ முதலியவைநீங்கியதும், ஶிவம் - ஜந்மஜரை முதலியவையில்லாதமங்கள ரூபமாகியதும், அத்வைதம் - ஒப்பில்லாததுமான வாஸுதேவ ஸ்வரூபத்தை, சதுர்த்தம் - நான்காவது ரூபமாக, மந்யந்தே - எண்ணுகிறார்கள். ஸ: - அந்தவாஸுதேவன், ஆத்மா - ஸர்வாந்தர்யாமீ ஸ: - அந்த வாஸுதேவன், விஜ்ஞேய: - அறியத்தக்கவன்.

ஸம்-ஹா. நான்காவது பாதம் நிரூபிக்கப்படுகிறது. மேல் இத்துரீய ப்ரம்மத்தில் சப்தங்களுக்கு வ்ருத்தி யில்லாமையால் ஒரு பதத்தாலும் சொல்லப்படாதென்று நிர்விசேஷமென்று ரூபித்துச் சொல்லப்போகிறது. நிர்விசேஷத்தில் சப்தங்களுக்கு வ்ருத்தியில்லையன்றே. அப்படியாகிலது சூந்யமேயாமென்கிற ஸந்தேஹம் வாராது நீங்குவதற்கு, பொய்யான எல்லா ப்ரபஞ்ச மயக்கங்களுக்கு மதிஷ்டானமா யொன்றிருத்தல் வேண்டுமானதால் இந்த ப்ரம்மம் சூந்யமல்ல ; ஈய்யத்தை வெள்ளியென்றும் கயிற்றைப் பாம்பென்றும் தூணைப் புருஷனென்றும் கானலைத் தண்ணீரென்றும் மலைக்கும்போது வெள்ளி பாம்பு முதலியவை பொய்யானாலும், அவைமுதலிய ப்ரமங்களுக்கு, அதிஷ்டாநமாகிய ஈய்யம, கயிறு, தூண், கானல் இவை முதலானவஸ்துக்கள் சூந்யமின்றி யிருப்பதுபோல இந்த ப்ரபஞ்சாதிஷ்டாநமாகிய ப்ரம்மமும்சூந்யமாகாது. அப்படியாயின் ஸவிசேஷமே யாமென்றும் சொல்ல வழியில்லை. வாஸ்தவத்தில் குடமுதலியவை தண்ணீருக்கிடமாவதுபோல ப்ரம்மமும் வாஸ்தவத்தில்ப்ராணுதி ப்ரபஞ்சத்திற்கு ஸ்தாநமாகிலன்றே ஸவிசேஷமாகலாம் அவ்வாறு இல்லையன்றே. சிப்பையில் வெள்ளிபோல ப்ரபஞ்சம் தோற்றுவதே யன்றி ஸத்யமல்ல வன்றே. விசேஷங்கள் மெய்யாகிலன்றே ப்ரம்மம் ஸவிசேஷமாகலாம். அபரமார்த்தமாகையாலே அஸத்தான ப்ரபஞ்சத்திற்கும் பரமார்த்தமாகையாலே ஸத்தான ப்ரம்மத்திற்கும், ஸம்பந்தம் வாஸ்தவமாகுமோ ; ஆகையால் ஸவிசேஷமாகாது. ஆகையால் சப்தத்தால் சொல்லப்படாது. வஸ்து ஸம்பந்தமுடைய பொருளையே யன்றே சப்தம் கூறுகின்றது. ப்ரபஞ்ச ஸம்பந்தம் வஸ்து வல்லவென்று ரூபித்திருக்கின்றது. வேறு ப்ரமாணங்

களுக்கு கோசரமாகாமையாலும் பசு முதலிய வற்றைப்போல் சப்தகோசரமன்று. சமையற்காரனைப்போல் கிரியையுடையது மல்லாமையாலும் சப்தத்தால் சொல்லப்படாது. வஸ்திரம் முதலியவைபோல வெளுப்பு முதலிய ரூபமில்லாமையாலும் சொல்லுக்கு விஷயமாகாது. இவ்வாறு பயனில்லாதிருப்பதால் முயற்கொம்புபோல் பொய்யென்று சொல்லவழியில்லை என்று முன் ரூபித்துச்சொன்னோம். அன்றியும், இந்த ப்ரம்மஸ்வரூபத்தை யறிவதினால் இந்த விஷயங்களில் வைராக்யம் பிறக்கும். ஈயந்தெரிந்தால் வெள்ளியாசை நீங்குவதுபோலவே யென்க. இந்த துரீய ப்ரம்மஸ்வரூப ஜ்ஞாநம் வந்த பின் அவித்யை முதலிய தோஷங்களுக்கிடமில்லை யன்றோ. இந்த ஜ்ஞாநம் வருவதற்குக் காரணமில்லை என்னும் குறையில்லை. உபநிஷத்துக்களெல்லா மிதற்கே யிருக்கின்றன வாகையாலென்க. அவையாவன தத்வமஸி முதலியவை. இப்படிப்பட்ட ஆத்மாவைச் சதுஷ்பாத் என்று சொல்லியிருக்கிறது. இவ்வாத்மாவின் அவித்யையினால் வந்த அபரமார்த்தமாகிய கயிற்றில் தோற்றிய ஸர்ப்பம்போலனவாகிய மூன்று பாதங்களினுடைய ஸ்வரூபத்தை ப்ரபஞ்ச வ்ருக்ஷத்திற்கு முளைபோல்வதென்று சொல்லி இப்போது, பரமார்த்த ஸத்ய ஸ்வரூபத்தை கயிற்றைப்போல் அதிஷ்டாநமென் றறியுமாறு, ப்ரமஸர்ப்பம்போன்ற மூன்று பாதங்களையும் நீக்கிச்சொல்லுகிறது நாந்தঃப்ரஜ்ஞம் என்கிற இந்த சுலோகம். நான்கு பாதங்களின் ஸ்வரூபத்தைச் சொல்லவே, கீழ்ச்சொல்லிய மூன்று பாதங்களிலு மின்னான்காவது பாதம் வேறாயதென்று விளங்குகின்றமையால் அவைகளிலிதை வேறென்று சொல்வதில் பயன் யாதெனில், பாம்பல்ல வென்பதினால் கயிறென்றறிவிப்பதுபோல இவ்வாறு கூறுவதினால் சுயரூபமறியப்படுகின்றமையாலும் நிர்விசேஷப் பொருளை விதிகொண்டு கூறமுடியாமையாலு மென்றறிக. அன்றியே இம்மூன்று பாதங்களோடு இந்தநான்காவது பாதத்திற்கு ஐக்யம் தோற்றுவது மிதற்குப்பயன். இம்மூன்றவஸ்தைகளை யுடையதில் துரீயம் வேறாயின், நிர்விசேஷமான அத்துரீயத்தை யறிவதற்குபாய மில்லாமையயால், சாஸ்த்ரோபதேசம் வீணாவதோடு சூந்யவாதம் செய்தாப்போலாகும். கயிற்றில் பாம்பு முதலிய ப்ரமம்போல் விகல்பிக்கப்படுகிற மூன்றவஸ்தைகளிலு மாத்மா ஒருவனாயின் அவ்வவஸ்தைகளை நீக்குகின்ற ப்ரமாணத்தால் அப்போதே அநர்த்தகாரணமாகிய ப்ரமப்ரபஞ்சம் முடிந்துபோகையால் பயன்கை புகுந்ததென்று துரீயத்தை யறிவதற்கு மடைவதற்கும் வேறு ப்ரமாணத்தையாவது உபாயத்தையாவது தேடவேண்டியதில்லை. அஜ்ஞாநம் நீங்கின பின்னு மறியவேண்டியவை யுண்டென்றும் அவைகளில் ப்ரமாணம் செல்லுகிற தென்றும் சொல்பவர், சேதிக்கவேண்டிய பொருள் வேறுபட்ட பின்னும் சேதிக்கவேண்டிய பொருளுண்டென் றுரைப்பாரோடொப்பர். பொருளையு மிருளையும் வேறாக்குவதற்கென்று ப்ரவர்த்தித்த ப்ரமாணம் எப்போதுவிரோதியான இருளைக்கழிக்குமோஅப்போது பொருளறிவு மிடையிலிசைகின்றது. பொருளறிவு ப்ரமாணத்தின் பயனன்று. இதற்கு முன் கூறியதே திருஷ்டாந்தம். இவ்வாறே யிங்கு மாத்மாவி லேற்றப்பட்டிருக்கிற அவித்யையினால் காண்கிற அந்தঃப்ரஜ்ஞத்வம் முதலிய அவஸ்தைகளை விட ஆத்மஸ்வரூபத்திற்குள்ள விவேகத்தைக் காட்டவந்த ப்ரமாணத்தாலதற்கு விரோதியான அவ்வவஸ்தைகள் நீங்குவதைவிட ஆத்மவிஷயத்தில் வேறு பயனில்லையன்றே "அறிந்தபோது பேதமில்லை, என்கிற சுருதியின்படி இவ்வவஸ்தையை நீக்கி யறிந்போதே ஸகலபேத ப்ரம ப்ரபஞ்சமுமொழிந்து விடுமன்றோ. தத்வஜ்ஞாநமும் பேதநிவ்ருத்தி ஸமயத்திலேயே நாசத்தை யடையும். அன்றேல், தத்வஜ்ஞாநமாகிய பேத தங்கி நிற்கையால் அதுநீங்கவழியில்லை. வேறு ஜ்ஞாநமதைப் போக்கில், அதைப்போக்க மற்றொரு ஜ்ஞாநம் வேணுமென்ற நவஸ்தை வருமென்க. அவ்வாறாயின் த்வைதம் நிவ்ருத்தியாது. ஆகையால் பேதநிஷேதம் செய்கிற ப்ரமாணஸம காலத்தில்தானே ஸம

தாநர்த்தங்களும் கழியுண்ணுமென்பது ஸித்தமாயிற்று. ஆகவே, விச்வதேஜஸாதி ஸமஸ்தபேதநிஷேதம் செய்யப்படுகிறது. தோற்றுகிறவஸ்துக்களை இல்லை என்பதெவ்வாறெனில் ஒருபோது தோற்றி மற்றொருபோது தோற்றாமையாலென்றறிக. ஆயின் ஜ்ஞாநமும் ஸுஷுப்தியில் தோற்றாமையால் சூந்யமென வேண்டுமெனில் அப்போதும் ஜ்ஞாநம் தோற்றிக்கொண்டே நிற்கின்றது. "நவிஜ்ஞாதுர்விஜ்ஞாதேர்விபரிலோபோவித்யதே" ஜ்ஞாநம் எப்போதும் தோற்றுமென்று ச்ருதி சொல்லுகின்றமையாலிதுஸ்பஷ்டம், ஆகையா லத்வைதமாக ஆத்மதத்வத்தை யறியவேணும்.

ரா-ஸா. விச்வதைஜஸ பிந்நமாய், ஸுஷுப்தி ஸ்தாநத்திலிருக்கும் ப்ராஜ்ஞஸ்வரூபத்தில் வேறாய் ஸர்வஜ்ஞத்வம்முதலிய குணங்களோடு கூடியதாய் பாஹ்யேந்த்ரியங்களுக்கு கோசரியாததாய் கர்மேந்திரியம் ஜ்ஞாநேந்த்ரியம் இவைகளுக்கு மவிஷயமாய் அநுமாநப்ரமாணத்தாலு மறியப்படாததாய் இஃதித்தகையதெனச் சிந்திக்க முடியாததாய் ஆத்மஜ்ஞாந மாத்ரகோசரமாய் ஸங்கர்ஷணப்ரத்யும்ந அநிருத்தர்களுக்கும் லயஸ்தாநமாய் "ஏதந்நாநாவதாராணாம்நிதாநம்பீஜமவ்யயம்" என்று எல்லா அவதாரங்களுக்கும் மூலகாரணமாகையாலே சாந்தமாய் மங்களஸ்வரூபமாய், தன்னோடொத்த பொருளில்லாததாயிருக்கின்ற வாஸுதேவமூர்த்தியை நான்காவதாக நினைக்கிறார்கள். ஆகையால் சுருதி சொன்னபடி யவனை யறியக்கடவன் என்று கருத்து. முக்தருக்கு ஜ்ஞாநாநந்தங்களைத் தந்தவனாய், ஜ்ஞாநாநந்த மயமாய் மித்யாஜ்ஞாந சூந்யமான ஜீவஸ்வரூபத்தை நியமிக்கிறவன் அறியத்தக்கவனென்று முறைப்பர்.

இதி ப்ரதமகண்டம். (in Grantha) இதி மாண்டூக்யோபநிஷதி த்விதீயகண்டம்.

ஸோயமாத்மாத்யக்ஷரமோங்காரோதிமாத்ரம் பாதாமாத்ரா மாத்ராச்ச பாதா அகார உகாரோமகார இதி॥ அ॥

## (Grantha:) ஸோயமாத்மா... த்ருதீயகண்டம்.

௧. ஸோயமாத்மாத்யக்ஷரமோங்காரோதிமாத்ரம் பாதா மாத்ரா மாத்ராச்ச பாதா அகார உகாரோ மகார இதி॥ அ॥

౧. సోయమాత్మాధ్యక్షరమోంకారోఽధిమాత్రం పాదామాత్రా మాత్రాశ్చపాదా అకార ఉకారో మకార ఇతి॥ ౮॥

(ப - ம்.) அக்ஷரே - அதிமாத்ரே - அக்ஷரங்களிலும், மாத்திரைகளிலுமிருக்கிற, ஸ ஓங்கார: - நாதஸ்வரூபமான அந்த ஓங்காரமானது, அயம் ஆத்மா - இந்த பரமாத்மாவாக த்யாநிக்கத் தக்கது, அகார: உகார: மகார: இதி - அகர உகர மகர நாதங்களாகிற, மாத்ரா: - மத்திரைகள், பாதா: - நாலம்சங்கள், பாதா: - அம்சங்கள், மாத்ரா: - நாலுமாத்திரைகள்.

ஸ0-ஸா. அவ்வாத்மா அக்ஷரரூபத்தா லோங்காரமாகிறது. மாத்திரைகளாகப் பிரிக்கப்பட்டு அகார உகார மகார ரூபமாய் பாதங்களாகிறது. பாதங்களே மாத்திரைகள் மாத்திரைகளே பாதங்கள்.

ரா-ஸா. அக்ஷரஸ்வரூபமாயும் மாத்ராஸ்வரூபமாயு மிருக்கிற ப்ரணவ மென்கிற ஓங்காரமானது, பரமாத்மாவாக த்யாநிக்கத்தக்கது. ஏனென்றால் பரமாத்மாவுக்கு பாதங்களாகச் சொல்லப்பட்ட ஸங்கர்ஷண ப்ரத்யும்ந அநிருத்த வாஸுதேவர்கள், ப்ரணவத்தின் மாத்திரைகளாகிய அகாரம் உகாரம் மகாரம் நாதம் இவைகளுக்குப் பொருளாயிருக்கின்றார்கள். ஆகையால் அந்நால்வரும் நாலு மாத்திரைகளாக த்யாநிக்கத்தக்கவராவர். நாலுமாத்திரைகளையு மந்நால்வராக த்யாநிக்கலாம். பரமாத்மாவினுடைய பாதங்க

ளாகச் சொல்லப்பட்ட அந்நால்வருக்கும் மாத்திரைகளென்கிற அகாரம் உகாரம் மகாரம் நாதங்களாகிற இந்நாலுக்கும் பேதமின்றி த்யாநிக்கப்படும். ஆகையால் ஸங்கர்ஷணர்முதலிய நாலு பாதங்களையுடைய பரமாத்மாவுக்கும் அகார முதலிய நாலுமாத்திரைகளையுடைய ப்ரணவத்திற்கு மபேதமாக த்யாநம் கூடும் ஆகையால் ப்ரணவத்தை பரமாத்மாவாக த்யாநிக்கலாமன்றோ. ஆக ப்ரணவத்தில் ப்ரம்மமென்று த்யாநத்தையும், ப்ரணவ மாத்திரைகளாகிய அகார முதலிய வர்ணங்களில் ஸங்கர்ஷணர் ப்ரத்யும்நர் அநிருத்தர் வாஸுதேவர் என்கிற த்யாநத்தையும் செய்யவேணுமென்று விதித்தவாறு.

உ. ஜாகரிதஸ்தாநோ வைஶ்வாநரோऽகார: ப்ரதமா மாத்ராऽऽப்தேராதிமத்த்வாத்வாऽऽப்நோதி ஹ வை ஸர்வாந் காமாநாதிஶ்ச பவதி ய ஏவம் வேத ||

౨. జాగరితస్థానో వైశ్వానరోఽకారః ప్రథమా మాత్రాఽఽప్తేరాదిమత్త్వాద్వాఽఽప్నోతి హ వై సర్వాన్ కామానాదిశ్చ భవతి య ఏవం వేద॥ ౯॥

(ப் - ம்.) ஜாகரிதஸ்தாந: - ஜாகரணஸ்தாநத்தி லிருக்கிற, வைஶ்வாநர: - வைச்வாநரனானவன், அகார: - அகாரமாகிய, ப்ரதமா மாத்ரா - ப்ரணவத்தில் முதல் மாத்திரை, ஆப்தே: - வியாபித்திருக்கின்றமையாலும், ஆதிமத்த்வாத் - ஆதியுடையதாகின்றமையாலு மிங்ஙனம் சொல்லப்படும்; ய: ஏவம் வேத - எவனிவ்வாறு அறிவனோ, அவன், ஸர்வாந் காமாந் - எல்லா இஷ்டங்களையும், ஆப்நோதி ஹ வை - அடைகிறானன்றோ, ஆதிஶ்ச பவதி - முதல்வனுயுமாகிறான்.

ம௦௦-ஸா. அங்கு விசேஷநியமம் கூறப்படுகிறது. ஜாகாரஸ்தாந முடைய வைச்வாநரன் அகாரமாகிய முதல் மாத்திரை. அகரத்தால் எல்லாச் சொற்களுமாக்ரமிக்கப்பட்டு நிற்கின்றமையாலும், ஆதியுடைத்தா யிருக்கின்றமையாலும், எல்லா வஸ்துக்களிலும் வ்யாபித்து முதல்வனுயிருக்கிற வைச்வாநரனை முதல் மாத்திரை யென்று சொல்லத்தகும். இந்த ஸாத்ருச்யத்தா லகாரம் வைச்வாநரனைச் சொல்லுமன்றோ. பேருக்கும் பொருளுக்கும் பேதமில்லை யென்று முன்னமே சொன்னேம். எல்லாச் சொர்க்களிலும் அகாரம் வ்யாபித்திருக்கிற தென்பதில், "அகாரோவைஸர்வாவாக்" (அகரமே எல்லாச் சொற்களும்) என்கிற சுருதி ப்ரமாணமாகின்றது. வைச்வாநரன் வ்யாபித்திருப்பவனென்று, "தஸ்யஹவைதஸ்யாத்மநோ வைச்வாநரஸ்யமூர்த்தைவஸுதேஜா:" (இவ்வைச்வாநரனே யுலகமெல்லாம்) என்கிற சுருதி விளங்கச் செய்கிறது. இவ்வாறறிந்தவனுக்குப் பயன்கூறுகின்றது. எல்லா காமங்களையுமடைகிறான் எல்லோரிலும் முதல்வனுகிறான்.

ரா-ஸா. கீழ்ச்சொல்லிய விஷயத்தையே விரித்துச் சொல்லுகிறது. முதல் மாத்திரையாகிய அகாரத்தில் ஜாகரிதஸ்தாநமுடைய வைச்வாநரனென்கிற அநிருத்தனென்று த்யாநம் செய்யவேண்டியது. அகாரமாக வைச்வாநரமூர்த்தியை த்யாநம் செய்வதற்குக் காரணமென்ன வென்றால்; வ்யாப்தியும், ஆதியாயிருக்கும் தன்மையும். அதாவது அநிருத்தமூர்த்தி ஸமஸ்தஜகத்தையும் வ்யாபித்திருப்பதுபோல ஸமஸ்த சப்தத்திற்கு மகாரம் காரணமாகின்றமையால் எல்லா சப்தங்களிலும் வ்யாபித்திருக்கையும் எல்லாச் சொற்களுக்கும் முதலான அகாரத்தா லநிருத்தன் போதிக்கப்படுகையும். இந்த ஸாத்ருச்யத்தையறிந்து இவ்வாறு த்யாநம் செய்கிறவன் எல்லா இஷ்டங்களையுமடைகிறான். எல்லாரிலு முதல்வனுகிறான்.

௩. ஸ்வப்நஸ்தாநஸ்தைஜஸ உகாரோ த்விதீயா மாத்ரோத்கர்ஷாதுபயத்வாத்வோத்கர்ஷதி ஹ வை ஜ்ஞாநஸந்ததிம் ஸமாநஶ்ச பவதி நாஸ்யாப்ரஹ்மவித்குலே பவதி ய ஏவம் வேத ॥ ௧௦ ॥

3. స్వప్నస్థానస్తైజస ఉకారో ద్వితీయమాత్రోత్కర్షా దుభయత్వాద్వా ఉత్కర్షతి హవై జ్ఞానసంతతింసమానశ్చభవతినాస్యాబ్రహ్మవిత్కులేభవతియఏవంవేద॥ ౧౦॥

(ப - ம்.) ஸ்வப்நஸ்தாந: - ஸ்வப்நஸ்தாநத்தையுடையவனு யிருக்கிற, தைஜஸ: - தைஜஸன், த்விதீயா மாத்ரா - இரண்டாவது மாத்திரையாகிய, உகார: - உகாரம், உத்கர்ஷாத் - அதிசயத்தாலும், உபயத்வாத்வா - இரண்டு ரூபமாயிருக்கின்றமையாலு மிங்ஙனம் சொல்லப்படுகிறது, ய: ஏவம் வேத - யவனிதை யறிகிறானோ அவன், ஜ்ஞாநஸந்ததிம் - ஜ்ஞாநஸந்தாநத்தை, உத்கர்ஷதி ஹ வை - அதிசயமாயடைகிறான், ஸமாந: ச பவதி - ஸரியானவனாகிறான், அஸ்ய குலே அப்ரஹ்மவித் ந பவதி - இவன் வம்சத்தில் ப்ரம்மஜ்ஞாநமில்லாதவன் பிறப்பதில்லை.

ஶ௦-ஹா. தைஜஸன் விச்வமூர்த்தியிலும்சிறந்தவனாகின்றமையாலும் அகாரத்திலு முகாரம் சிறப்புடையதாகின்றமையாலும்,தைஜஸன் விச்வமூர்த்தி ப்ராஜ்ஞமூர்த்தி இவர்களுக்கு நடுவே தைஜஸமூர்த்தி யிருக்கின்றமையாலும், அகார மகாரங்களுக்கு நடுவில் உகார மிருப்பதாலும் ஸ்வப்நஸ்தாநத்திலிருக்கிற தைஜஸன், இரண்டாவது மாத்திரையாகிய, உகாரமாகிறான். இதை யறிந்தவனுக்கு பயன்கூறுகின்றது. ஜ்ஞாநஸந்ததி வளர்ந்து சிறந்தவனாவானிதை யறிந்த மகான். இவன்தன் தோழருக்குப்போலப் பகைவருக்கு மிஷ்டனாகிறான். ஆகையாலனைவருக்கு ஸமானனாகிறான். இவன் குலத்தில் ப்ரம்மஜ்ஞாநமில்லாதவன் பிறப்பதில்லை

ரா-ஹா. ஸ்வப்நஸ்தாநத்தி லிருக்கின்றமையால் தைஜஸனென்று சொல்லப்படுகிற ப்ரத்யும்நன் உகாரமாகிய இரண்டாவது மாத்திரையாகிறான். அதாவது இரண்டாவது மாத்திரையாகிய உகாரத்தில் தைஜஸனென்கிற ப்ரத்யும்நனென்று த்யாநம்செய்ய வேண்டுமென்றவாறு. இதற்குக் காரணமென்ன வென்றால் ; உத்கர்ஷமும், இரண்டாயிருக்கையும். அதாவது விச்வமூர்த்தி யென்கிற அநிருத்தமூர்த்தியைக் காட்டிலும் தைஜஸமூர்த்தி யென்கிற ப்ரத்யும்நமூர்த்தி சிறந்தவராவதுபோல அகாரத்திலு முகாரம் சிறந்திருப்பதும், விச்வமூர்த்தி ப்ராஜ்ஞமூர்த்தி இவர்களுக்கு நடுவில் தைஜஸமூர்த்தி யிருப்பதுபோல அகார மகாரங்களுக்கு நடுவிலுகார மிருப்பதுமாம். விச்வமூர்த்தியை விட தைஜஸமூர்த்தி ஸூக்ஷ்மரூப முடையவராகையால் சிறந்தவராகிறார். ஆயினும், ஸகல குணங்களும் பூர்ணமாயிருப்பது கொண்டு ஸமாநர்களே யாகிறார்கள். அகாரத்திலு முகாரம் லயஸ்தாநமாகையால் சிறப்புடையதாகின்றது. அக்ஷரமாவதுகொண்டு ஸமாநமே யாமென்றறிக. இவ்வாறறிந்தவனுக்குப் பயன்சொல்லுகிறது. இங்ஙனமறிந்தவன் சிஷ்யர் சிஷ்யருக்கு சிஷ்யர் எல்லாரும் ஜ்ஞாநவான்களாகி ஜ்ஞாநஸந்ததியால் சிரேஷ்டனாகிறான். இதர ஸந்தாநங்களிலுமிவன் ஸந்தாநத்தில் ப்ரம்மவித்யை யதிசயப் படுமென்று கருத்து.உயர்ந்தவரோடு தானுமுயர்ந்தவனாகின்றமையால் ஸமாநனாகிறான் இவன் குலத்தில் ப்ரம்மஜ்ஞாநமில்லாதவன் ஜநிப்பதில்லை,

௪. ஸுஷுப்தஸ்தாந: ப்ராஜ்ஞோ மகாரஸ்த்ருதீயா மாத்ரா மிதேரபீதேர்வா மிநோதி ஹ வா இதம் ஸர்வமபீதிஶ்ச பவதி ய ஏவம் வேத ॥ ௧௧ ॥

౪. సుషుప్తస్థానః ప్రాజ్ఞో మకారస్తృతీయా మాత్రా మితేరపీతేర్వా మినోతి హ వా ఇదం సర్వమపీతిశ్చ భవతి య ఏవం వేద॥ ౧౧॥

(ப - ம்.) ஸுஷுப்தஸ்தாந: - ஸுஷுப்திஸ்தாநத்தையுடையவனை, ப்ராஜ்ஞ: - ப்ராஜ்ஞன், த்ருதீயாமாத்ரா - மூன்றாவது மாத்திரையாகிய மகார: - மகாரமாகிறான், மிதே: - அளவிடப்படுகின்றமையாலும், அபீதே:வா - லயத்தையடைகின்றமையாலு மிங்ஙனம் சொல்லப்படுகிறது ய: ஏவம் வேத - யவனிவ்வாறு அறிகிறானோ அவன், இதம் ஸர்வம் மிநோதி - இவையெல்லாவற்றையு மளக்கின்றான், அபீதி: ச பவதி - லயமுண்டாகிறது.

பாஷ்யம்-ஸா. நெல்லு முதலியவைபடி மரக்கால் முதலிய வற்றால் அளக்கப்படும்போது படிமுதலிய வற்றில் உள்ளே சேர்ந்து வெளியாகின்றன. அவைபோல விச்வதைஜஸ மூர்த்திகள், ப்ராஜ்ஞமூர்த்தியில் லயகாலத்தில்லயித்து அதாவதுப்ராஜ்ஞமூர்த்திக்குள்சேர்ந்து உத்பத்திகாலத்தில் வெளியாகின்றமையால். ப்ராஜ்ஞமூர்த்தி விச்வ தைஜஸர்களை யளக்கிறாப்போல் காணப்படுகிறது. அவ்வாறே ப்ரணவத்தைச் சொல்லி முடித்து மறுபடியும் சொல்லும்போது அதாவது'ஓமோம்'என்னும்போது முதலில் அகாரஉகாரங்கள் மகாரத்தில் புகுகிறாப்போலவும்பின்பு மகாரத்தினின்று வெளியாகிறாப்போலவும்தோற்றுகின்றமைகொண்டு மகாரம் அகார உகாரங்களை யளக்கிறதென்று சொல்லவழியிருக்கிறது. அளக்குங் காலத்திற்போல உள்ளே புகுந்து வெளிவருகின்ற ஸமாதிதோற்றமை யாலென்றறிக. ஆக இவ்வாறு ப்ராஜ்ஞமூர்த்தி, விச்வ தைஜஸமூர்த்திகளை யளக்கின்றமையாலும், மகாரம் அகார உகாரங்களை யளக்கின்றமையாலும், ப்ராஜ்ஞமூர்த்தி மகாரமாகிறான். அன்றியே ப்ரணவத்தைச் சொல்லி முடிக்கும்போது மகாரத்தில் அகார உகாரங்கள் சேர்ந்து போகின்றமையாலும், ஸுஷுப்தி காலத்தில் ப்ராஜ்ஞமூர்த்தியில் விச்வ தைஜஸமூர்த்திகள் சேர்ந்து போகின்றமையாலும் ப்ராஜ்ஞன் மகாரமாகிறான். இவ்வாறறிந்தவன் ஜகத்தையுள்ளபடி யறிகிறான். ஜகத்காரண ப்ரம்மஸ்வரூபனுமாகிறான், என்று வித்வானுக்கு பலம் கூறுகின்றது. முக்யமான ப்ரணவத்தையுபாஸிப்பது சிறந்ததென்று கூறுவதற்கு இவ்விடம் பயன் கூறப்பட்டதேயன்றி யிதற்குத் தனித்துப் பயனில்லை யென்று கொள்க

நா-ஸா. ஸுஷுப்தி ஸ்தாநத்திலிருக்கின்றமையால் ப்ராஜ்ஞனென்கிற ஸங்கர்ஷணமூர்த்தி மூன்றாவது மாத்திரையாகிய மகாரமாகிறான். மூன்றாவது மாத்திரையாகிய மகாரத்தில் ஸங்கர்ஷணனென்று த்யாநம்செய்ய வேண்டுமென்றவாறு. இதற்குக் காரணம் யாதெனில் அளவும் லயமும். அதாவது ப்ராஜ்ஞன், அளவுகோலளவிடப்படும் பொருள்களைச் சேருவதுபோலவ்வோ வஸ்துக்களி லாத்மாவாகச் சேருகின்றமையால் ஸமஸ்தத்தையும் அளவிடுவதுபோல, மகாரமும் எல்லைக்கல்போல அகார உகாரங்களுடைய எல்லையில் அதாவது கோடியில் நின்று இதுவரையில் அகார உகாரங்கள் இனி மேலில்லை யென்று எல்லைக்கல்லளந்து காட்டுவதுபோலவே யளந்து காட்டுவதும், ப்ராஜ்ஞனிடத்தில் ஸகல ஜகத்தும் லயிப்பதுபோல'மகாரத்தில் அகார உகாரங்கள் லயிப்பதுமாம். மகாரத்தில் அகார உகாரங்கள் முடிவுபெறுகின்றமையால், மகாரத்தி லகார உகாரங்கள் லயிக்கின்றன வென்று கூறப்பட்டதென்றறிக. இவ்வாறறிந்தவனுக்கு பயன்வருமாறுகிரமத்தில் கூறுகின்றது. யவனிவ்விஷயத்தை யறிகிறானோ அவன் இவ்வுலகத்தை யெல்லா மளவிட்டறிகிறான். பரமாத்மஸ்வரூபத்தில் லயம்பெறுகிறான்

பதாந்வயார்த்தபேதங்கள்.

இம் மூன்று சுலோகங்களிலும் சொல்லப்பட்ட ஸாத்ருச்யத்தால் விச்வமூர்த்தி முதலிய மூன்று மூர்த்திகளையும் அகார முதலிய மூன்று மாத்திரைகளும் போதிக்கின்றமையால் போதகமாகிய சப்தத்திற்கும் போதிக்கப்படும் பொருளுக்கு மபேதமாகையால் மூன்று மாத்திரைகளும் மூன்று மூர்த்திகளென்று சங்கரபாஷ்யத்தில் வ்யாக்யாநம். த்யாநவிதியாக இராமாநுஜ பாஷ்யத்தில் வ்யாக்யாநம் செய்யப்பட்டது. இதர விஷயங்களில் பேதாபேத ஸூக்ஷ்மங்கள் இம்மூன்று சுலோகங்களுக்கு மிரண்டு மதபாஷ்யங்களையும் கமநத்துடன் படித்தால் நன்றாய் விளங்கும்.

இதி மாண்டூக்யோபநிஷதி த்ருதீய: கண்ட:.

அத மாண்டூக்யோபநிஷதி சதுர்த்த: கண்ட:.

௧. அமாத்ரஶ்சதுர்த்தோऽவ்யவஹார்ய: ப்ரபஞ்சோபஶம: ஶிவோऽத்வைத ஏவமோங்கார ஆத்மைவ ஸம்விஶத்யாத்மநாऽऽத்மாநம் ய ஏவம் வேத ய ஏவம் வேத॥

౧. అమాత్రశ్చతుర్థోऽవ్యవహార్యః ప్రపంచోపశమశ్శివోऽద్వైత ఏవ మోంకార ఆత్మైవ సంవిశత్యాత్మనాత్మానం య ఏవం వేద య ఏవం వేద॥

(ப-ம்.) அமாத்ர: - அளவில்லாதவனாய்; அவ்யவஹார்ய: - வாகிந்திரியத்திற்கு கோசரியாதவனாய், ப்ரபஞ்சோபஶம: - ஸகலப்ரபஞ்சலயஸ்தாநமாய், ஶிவ: - மங்களரூபனாய், அத்வைத: - த்வைதமில்லாதவனாய், சதுர்த்த: - நாலாவதுமூர்த்தியாயிருக்கிற, ஆத்மா - அந்தராத்மாவாகிய வ்யூஹ வாசுதேவமூர்த்தி, ஏவம் - இப்படிப்பட்ட, ஓங்கார ஏவ - ப்ரணவமே யாகிறான், ய ஏவம் வேத - எவனிப்படி யறிகிறானோ அவன், ஆத்மநா - பரமாத்மாநுக்ரஹத்தினால், ஆத்மாநம் - பரமாத்மாவை - ஸம்விஶதி - அடைகிறான்.

ஸ0-ஸா. வாக்கு மநம் இவற்றுக்கு கோசரமாகாமையால் இப்படிப்பட்டதென்று சொல்லவும் நினைக்கவுங் கூடாதஸ்வரூபமுடைய துரீயமூர்த்தியாகிய ஆத்மா, மாத்திரையில்லாதவனாகிறான். ப்ரபஞ்ச நிவ்ருத்திக்குக் காரணமாகிறான். மங்களரூபியாகிறான். த்வைதமில்லாதவனாகிறான், அதாவது பேதமில்லாதவனாகிறான். ஓங்காரஸ்வரூபியாகிறான். இவ்வாறு ஓங்காரத்யாநம் செய்கிறவனால் ப்ரயோகிக்கப்பட்ட மூன்றுமாத்திரைகளுடைய ப்ரணவமானது மூன்று பாதங்களுடைய ஆத்மாவேயாம். இவ்வாறறிந்தவன் தன்னாலே தன்னைச் சேருகிறான், பரமாத்மைக்யத்தைப் பெறுகிறானென்றவாறு. பரமாத்மாவுக்கு மிவனுக்கும் பேதமில்லாமையால் தன்னைச் சேருகின்றானென்றது. பரமார்த்தத்தை யறிந்தவர், ஸம்ஸாரபீஜமாகிய மூன்றாவது ரூபத்தைநீக்கி ஆத்மாவில் ப்ரவேசித்தமையால் மறுபடியுண்டாகிறதில்லை. துரீயமூர்த்தி ஸம்ஸாரபீஜமாகாமையாலே

ன்க. கயிற்றையும் பாம்பையும் விவேகித் தறிந்தவனுக்கு கயிற்றில் லயித்த பாம்பு மறுபடியும் பிறக்குமோ; புத்தியில் ஸம்ஸ்கார மழிந்தபின்பு முன்போல மறுபடியும் ஸர்பப்ரமம் தோற்றுதன்றே. உத்தமாதிகாரிக ளல்லாதவர்களுக்காயின் இந்த ப்ரண வம் உபாஸநம் செய்கிற மகிமையால், நல்லறிவுகூடி நல்நடத்தையி விழிந்து ஸந்யாஸி களாய் மாத்திரைகளுக்கும் பாதங்களுக்கும் ஸாமார்யத்தை யறியும்படியாக, ப்ரம்மஜ் ஞாநத்திற்கு ஸாதநமாய் ஆலம்பநமாகின்றது. இவ்விஷயங்களின் ஸூக்ஷமம் கௌட பாதகாரிகையில் வெளியாகும்.

ரா-ஹா. அளவற்ற மகிமை பொருந்தியவனுகையால் கீழ்ச்சொல்லியபடி கருமே ந்திரியம் ஜ்ஞாநேந்திரியம் முதலிய வற்றிற்கு விஷயமாகாதவனுயிருக்கிற ஆத்மாவாகிய வ்யூஹவாஸுதேவமூர்த்தி நாலாவதாகிய நாதத்திற்குப் பொருளாகிருன். ஓங்காரத்தி லேகதேசமாகிய நாதரூபியாகிறுனென்றவாறு. அகார உகார மகாரங்களுக்குமேல் நாத மாகையால் நாதம் நாலாவதாகிறது. ஸமஸ்தப்ரணவத்தின் பொருளாகிய பரவாஸு தேவமூர்த்திக்கும் வ்யூஹவாஸுதேவமூர்த்திக்கு மதிகபேதமில்லை யென்று காட்டுவத ற்கு, நாதத்தின் பொருளாகிய வ்யூஹவாஸுதேவமூர்த்தியை ப்ரணவமே யென்றது. இவ்வாறு அநிருத்தன் ப்ரத்யும்நன் ஸங்கர்ஷணன் வ்யூஹவாஸுதேவன் பரவாஸுதே வன், இவர்களாக அகார உகார மகாரநாத ஸமஸ்தப்ரணவங்களை யுபாஸிக்கிறவர்கள் பரமாத்மாநுக்ரஹத்திஞல் அந்த உபாயத்திஞலே க்ரமத்தில் அந்த பரமாத்மாவையே சேருகிறுர்கள்.

### பதாந்வயார்த்தபேதங்கள்.

இவ்வுபநிஷத்தில் ப்ரணவமென்கிற ஓங்காரத்தைக்கொண்டு பரமாத் மத்யாநம் செய்யும்படி சொல்லுகிறது. இந்த ப்ரணவமானது அகாரம், உகாரம், மகாரம், என்று மூன்று வர்ணங்களையுடையது. இம்மூன்றெழுத் தும் சேர்ந்து 'ஓம்' என்று ஓரெழுத்தாயிருக்கிறது. இதிலடங்கிய மூன்றெ ழுத்தையும் தனித்தனியே த்யாநித்து ஒன்றுசேர்த்தும் த்யாநிக்கவேணும். தனியே த்யாநிக்கும்போது அகாரத்தை, விச்வமூர்த்தி, என்றும், உகார த்தை, தைஜஸமூர்த்தி, என்றும், மகாரத்தை ப்ராஜ்ஞமூர்த்தி யென்றும் த்யா நிக்கவேண்டும். அகண்டரூபியாகிய பரமாத்மா ஒருவரேயாயினும் அவர் எங்கும் நிறைந்திருக்கின்றமையால் மாயா ஸம்பந்தத்தாலுண்டாகிய இந்த சரீரத்திலு மிருக்கின்றுர். இந்த சரீரத்தில் ஜாகரஸ்தாநமென்றும் ஸ்வப் நஸ்தாநமென்றும் ஸுஷுப்திஸ்தாநமென்றும் ஸ்தாநங்களுண்டு. அந்தந்த ஸ்தாநங்களில் ஸம்பந்தத்தைக்கொண்டு அந்தந்த நாமங்கள் அந்த ஒரு பர மாத்மாவுக்கே கிடைத்திருக்கின்றது, ஆகையால் விச்வரென்றும் தைஜஸரெ ன்றும் ப்ராஜ்ஞரென்றும் பரமாத்மாவுக்கு நாமங்களுண்டா யிருக்கின்றன ஜாகரஸ்தாநத்தி லிருக்கின்றமையால் விச்வமூர்த்தியென்றும், ஸ்வப்நஸ்தாநத் திலிருக்கின்றமையால் தைஜஸமூர்த்தியென்றும் ஸுஷுப்திஸ்தாநத்திலிரு க்கின்றமையால் ப்ராஜ்ஞமூர்த்தியென்றும் பெயராயிற்று. இப்படி த்யாநிப் பது பரமாத்மாவே எல்லாமென்கிற தத்வஜ்ஞாநத்திற்குக் காரணமாக ஸமஸ்த ப்ரணவத்யாநத்திற்கு அங்கமாகிறது. ஸமஸ்த ப்ரணவத்யாநம வது அகார உகார மகாரங்களை யொன்றுசேர்த்துச் சொல்லுவதினுலுண்ட

கிற ப்ரணவமென்கிற ஓங்காரத்தில் அகண்டரூபியாகிய பரமாத்மா என்கிற த்யாநம். அதாவது ப்ரணவமே பரமாத்மா என்கிற த்யாநம். அகண்ட பரமாத்ம ஸ்வரூபத்தையே துரீயமென்கிறது. இந்த த்யாநத்தால் அவித்யை முதலிய தோஷங்கள் நீங்கி ப்ரபஞ்ச ப்ரமம்கழிந்து பரமாத்ஸ்வரூபத்தில் லயம்பெற்று பரப்ரம்மமென்கிற அந்த ஸ்வரூபத்தோடு அபேதமாய் விடுகிறான். பின்பிவனுக்கு ப்ரபஞ்சப்ரமமும் ஸம்ஸாரதுக்கங்களுமில்லை நித்யாநந்த சித்ஸ்வரூபத்தைப் பெறுகிறானென்று சங்கரபாஷ்யாபிப்ராயம்.ப்ரணவமென்கிற அக்ஷரத்தை த்யாநிக்கும்படி இவ்வுபநிஷத்து விதிக்கின்றது.அதாவது பரமாத்மாவென்றும் பரப்ரம்மமென்றும் சொல்லப்படுகிறநாராயணநாமமுடைய பகவான். பரவ்யூஹரூபத்தாலைந்துரூபியாயிருக்கிறான். பரத்தில் பரவாஸுதேவமூர்த்தியென்று ஒரு ரூபத்தையும் வ்யூஹத்தில் வாஸுதேவமூர்த்தி ஸங்கர்ஷணமூர்த்தி ப்ரத்யும்நமூர்த்தி அநிருத்தமூர்த்தி என்று, நான்குரூபத்தையு மடைந்திருக்கிறானென்றவாறு. இந்த மூர்த்திபேதங்கள், திருமேனி பேதத்தாலும் கல்யாணகுணங்களின் ப்ரகாசம் அப்ரகாசம் இவைகளாலு முண்டாயின. ஸங்கர்ஷணாதி மூர்த்திகளுக்கு வ்யூஹமென்றும் பரவாஸுதேவனுக்கு பரமென்றும் திருநாமம். இந்த பரவாஸுதேவ மூர்த்தியில், ஸகல கல்யாணகுணங்களும் பூர்ணமாய் ப்ரகாசிக்கின்றமையால் இந்த மூர்த்தி ப்ரதாநமூர்த்தி. மற்ற நாலுமூர்த்திகளும் இந்த மூர்த்தியிலிருந்து வெளியாகி சிலசில குணங்கள் ப்ரகாசிக்கும்படி விளங்குகின்றார்கள். ஆகையாலிந்நால்வருமந்த பரவாஸுதேவனுடைய அம்சங்களாகிறார்கள். ஆகவே இந்நால்வரையு மந்த பரவாஸுதேவனுடைய நான்குபாதங்களாகச் சொல்லுகிறார்கள். ஆக இந்நால்வராகிய நாலுபாதங்களை யுடையவனந்த பரவாஸுதேவனாகிய பரமாத்மா. இந்த பரவாஸுதேவ மூர்த்திக்கு எப்போதும் அந்தர்த்தாநம் கிடையாது. மற்ற நாலு மூர்த்திகளுக்கும் பரவாஸுதேவனிடத்தி லந்தர்த்தாநமுண்டு. இந்த அந்தர்த்தாநத்தையே லயமென்றும் சொல்லுகிறது. இவ்வாறு பரவாஸுதேவ மூர்த்தியினிடத்தி லிருந்து ஆவிர்பவித்து அந்தர்தாநத்தை யடைகிற இந்நால்வரில் வ்யூஹவாஸுதேவனைத் துரீயனென்றும் ஸங்கர்ஷண மூர்த்தியை ப்ராஜ்ஞனென்றும் ப்ரத்யும்ந மூர்த்தியை தைஜஸனென்றும் அநிருத்தமூர்த்தியை, விச்வன் அல்லது வைச்வாநரனென்றும் இவ்வுபநிஷத்து பேசுகின்றது. அநிருத்தமூர்த்தி ஜாகரதசையோடு கூடிய ஜீவாத்மாவை நியமிக்கிறான் ஆகையாலே விச்வமூர்த்தியென்று சொல்லப்படுகிறான். ப்ரத்யும்நமூர்த்தி ஸ்வப்நதசையோடு கூடிய ஜீவனை நியமிக்கிறான். ஆகையாலே தைஜஸனென்று சொல்லப்படுகிறான். ஸங்கர்ஷணமூர்த்தி ஸுஷுப்தி தசையோடுகூடிய ஜீவனை நியமிக்கிறான். ஆகையாலே ப்ராஜ்ஞனென்று சொல்லப்படுகிறான். வ்யூஹவாஸுதேவமூர்த்தி இம்மூவரிலும் விலக்ஷணனாகையாலே துரீயனென்று சொல்லப்படுகிறான்; என்று பரமாத்மஸ்வரூபத்தை யறிந்து, ப்ரணவம், அகாரம் உகாரம்

மகாரம் நாதம் இவற்றையுடையதா யிருக்கிறது. நாதமாவது-ஒலி. இந்நா லேயும் நாலுமாத்திரைகளாக அறிந்துகொள்க. ஆக ப்ரணவம் நாலுமாத் திரை யுடையதாயிற்று. ஆக இந்நாலுஞ்சேர்ந்து ஓமென்று ப்ரணவமாகிறது. இவ்வாறு நாலாகப் பிரிந்திருக்கிற ப்ரணவ மாத்திரைகளுக்கு வ்யஸ்த ப்ர ணவமென்றும், ஒன்றுசேர்ந்த ஓமென்கிற எழுத்துக்கு ஸமஸ்த ப்ரணவ மென்றும் பெயரென்று ப்ரணவ ஸ்வரூபத்தை யறிந்து, அங்கங்கு சொல் லப்பட்ட ஸாத்ருச்யங்களைத் தெரிந்துகொண்டு முதல் மாத்திரையை அதாவது அகாரத்தை அநிருத்த மூர்த்தியாகவும், இரண்டாவது மா த்திரையை அதாவது உகாரத்தை ப்ரத்யும்ந மூர்த்தியாகவும், மூன்று வது மாத்திரையை அதாவது மகாரத்தை ஸங்கர்ஷண மூர்த்தியாகவும், நாலாவது மாத்திரையை அதாவது நாதத்தை வாஸுதேவமூர்த்தியாகவும் ஸமஸ்த ப்ரணவத்தை அதாவது ஒன்றுசேர்ந்த ப்ரணவத்தை பரவாஸு தேவ மூர்த்தியாகவும் த்யாநித்து ஹ்ருதயத்தில் நித்தியமாவனே செய்யக்கட வன். இவ்வாறு த்யாநம் செய்தவன் அந்த பரமாத்மாநுக்ரஹத்தினுல் க்ரம த்தில் அதாவது முதலில் அநிருத்த ஸாயுஜ்யத்தைப் பெற்று பின்புப்ரத்யும் நஸாயுஜ்யத்தைப் பெற்று, அதின்பின், ஸங்கர்ஷண ஸாயுஜ்யத்தைப்பெற்று பின்பு வ்யூஹ வாஸுதேவ ஸாயுஜ்யம் பெற்று அந்தத்தில் பரமபதத்தில் பரவாஸுதேவ ஸாயுஜ்யத்தைப் பெற்று புநராவ்ருத்தியின்றி பரப்ரம்மா நந்தத்தை யநுபவிக்கிறுன் என்று இராமாநுஜ பாஷ்யத்தின் கருத்து. மற்ற பேத ஸூக்ஷ்மங்களே யிங்கு சொன்ன படிகளுக்கு விரோதமின்றி ஸூக்ஷ்மபுத்தியா லந்தந்த சுலோக வ்யாக்யாநங்களில் கண்டுகொள்க.யஎவம் வேத, 'யஎவம் வேத' என்று இரட்டித்துச் சொன்னது இவ்வுபநிஷத்து முடி ந்ததென்று விளக்குவதற்காம். இதுநிற்க; இவ்வுபநிஷத்தின் கருத்தை அத் வைதமதத்தில் சங்கராசாரியருக்கு முற்பட்டவராகிய கௌடபாதாசாரிய ரென்கிற ஒரு பண்டிதர், அத்வைதமதத்திற் கநுகூலமாக அனேக சுலோக ங்களால் வெளியிட்டிருக்கிறுர். அந்த சுலோகங்களுக்கு கௌடபாதகாரிகை என்று பெயரிட்டிருக்கிறுர்கள். கௌடபாதகாரிகை என்று அந்த சுலோக ங்களுக்குக் காரணப்பெயராகின்றது. காரிகை என்றுல் சுலோகமென்று பொருள். அந்த சுலோகங்களே நான்கு ப்ரகரணமாகப் பிரித்திருக்கின்றுர். முதலாவது ஆகம ப்ரகரணம், இரண்டாவது வைதத்ய ப்ரகரணம் மூன்று வது அத்வைத ப்ரகரணம் நான்காவது அலாதசாந்திப் ப்ரகரணம். இந்த ப்ரகரணங்களில் ஆகம ப்ரகரணமானது மாண்டூக்கியோபநிஷத்தில் சொல் லப்படுகிற விஷயங்களே யதிகமாகக் கலந்து செய்யப்பட்டிருக்கிறது. இப் படிப்பட்ட கௌடபாதகாரிகைகளுக்கு நாலு ப்ரகரணங்களுக்கும் சங்கராசா ரியர் வ்யாக்யாநம் செய்திருக்கிறுர். மாண்டூக்யோபநிஷத்திற்கு தனியேசங்க ராசாரியர் வ்யாக்யாநம் செய்யவில்லே. கௌடபாத காரிகைகளில் முதல்ப்ரக ணத்திற்கு பாஷ்யம்செய்யும்போது மாண்டூக்யோபநிஷத்தை எடுத்து வ்யாக்

யாகம் செய்துவிட்டார். இவ்வாறு மாண்டூக்யோபநிஷத்திற்கும் கௌடபாத காரிகையில் முதல் ப்ரகரணத்திற்கும் கலந்து கலந்து வ்யாக்யாநம் செய்யப் பட்டிருக்கின்றமையால் பலர் கௌடபாத காரிகையில் முதல் ப்ரகரணத்தை யும் மாண்டூக்யோபநிஷத்தே என்று ப்ரமிக்கிறார்கள். சுமார் இருநூறு வருஷத்திற்கு முன்னிருந்த கூரநாராயணமுனி, என்று பெயருடைய விசிஷ்டாத்வைதமத பண்டிதரொருவர் கௌடபாதகாரிகையில் முதல் ப்ரகரணத்தையும் மாண்டூக்யோபநிஷத்தாக எடுத்துக்கொண்டு வ்யாக்யாநம் செய்திருக்கிறார். ஆயினும் நாம் அந்த சுலோகங்களை மாண்டூக்யோபநிஷத் தல்லவென்றே நினைக்கவேண்டியிருக்கிறது. அத்வைத மதாசாரியராகிய சங்கராசாரியரும், அத்வைதமதத்தில் சிறந்த பண்டிதராகிய ஆநந்தகிரி ஆசாரியரும் அந்த சுலோகங்களை மாண்டூக்யோபநிஷத் தல்லவென்றும் கௌடபாத காரிகையில் ஆகம ப்ரகரணமென்றும் சொல்லியிருக்கின்றமையாலும் விசிஷ்டாத்வைத மத பண்டிதராகிய இரங்க ராமாநுஜமுனி மாண்டூக்யோபநிஷத்திற்கு வ்யாக்யாநம் செய்தவர் இந்த சுலோகங்களுக்கு வ்யாக்யாநம் செய்யாமையாலும் மற்றும் சில காரணங்களாலுமென்றறிக. ஆயினும் சில விடங்களில் முன்னோர் செய்த க்ரந்தங்களில் அந்த காரிகைகளை ப்ரமாணமாக எடுத்திருப்பதால் ஸந்தேகத்திற் கிடமுண்டு. புத்திமான்கள் உண்மையை யாராய்ந்துகொள்வர். ஆகவே இவ்வளவே மாண்டூக்யோபநிஷத் தென்று இவ்வளவுக்கும் கௌடபாதகாரிகை பாஷ்யத்தில் கலந்திருக்கிற மாண்டூக்யோபநிஷத்தின் சங்கரபாஷ்யத்தையும், இராமாநுஜபாஷ்யத்தையும், அந்தந்த சுருதிகளின்கீழ் எழுதினோமென்றறிக.

இதி மாண்டூக்யோபநிஷத் அவதாரிகா.

மாண்டூக்யோபநிஷத்ஸூத்ராணி.

ஹரி: ஓம்.

## கௌடபாதகாரிகா வ்யாக்யா.

கௌடபாதகாரிகாயாம் வ்யவஹாரவ்யாகரணம்.

### பதாந்வயார்த்தபேதங்கள்.

இந்த கௌடபாத காரிகையின் கதைகளை மாண்டூக்யோபநிஷத்தின் முடிவில் சொல்லியிருக்கிறோம். அங்கு, சொன்ன காரணங்களால் கௌடபாதகாரிகை முதல் ப்ரகரணத்தில் உபநிஷத்தென்கிற ஸந்தேக மனேகருக்குண்டா யிருக்கின்றமையாலும் மற்ற மூன்று ப்ரகரணங்களிலு மத்வைத மதத்தை நன்கு சொல்லியிருப்பதாலு மிதுவும் புத்திமான்களுக்கு அவச்யமென்று இந்தகௌடபாதகாரிகை நாலுப்ரகரணங்களையும் சங்கரபாஷ்யத்தோடும் சிலவிடங்களில் விசேஷாபிப்பிராயங்களோடும் விசேஷ விஸ்தரமின்றி எழுதுகிறோம்.

### கௌடபாதகாரிகைக்கு சங்கரபாஷ்யத்திலுள்ள அவதாரிகை.

சங்கராசாரியர்செய்த மங்களச்சுலோகம்.

ப்ரஜ்ஞாநாம்சுப்ரதாநைஸ்த்திரசரநிகரவ்யாபிபிர்வ்யாப்யலோகாந், புங்க்த்வாபோகாந்தஸ்தவிஷ்டாந்புநரபிவிஷயோத்பாஸிதாந்காமஜந்யாந், பீத்வா ஸர்வாந்விசேஷாந் ஸ்வபிதிமதுரபுங்மாயயாபோஜயந்நோ மாயாஸங்க்யாதுரீயம்பரமம்ருதமஜம்ப்ரம்மயத்தந்நதோஸ்மி.

இந்தசுலோகத்தின் கருத்து.

ஜ்ஞாநரூபியாகிய ப்ரம்மம், மாயாஸம்பந்தத்தால் பசு பக்ஷி மநுஷ்யாதி ரூபத்தையடைந்த ஜீவர்களைப்போல் தோற்றுகிற தன்னுடைய அம்சங்களா லிவ்வுலகமெல்லாம் வ்யாபித்து ஜாகரதசையில் ஸ்தூல போகங்களையும் ஸ்வப்நத்தில் காமஸங்கல்பத்தாலு மவித்தையினாலும் கர்மத்தினாலும் தோற்றுகிற ஸூக்ஷ்ம போகங்களையும் அநுபவித்து ஸுஷுப்தியில் ஒருவித போகமுமின்றி காரணாநந்த ஸ்வரூபமாய் நின்று ஸர்வாதீதமாய்க்கொண்டு நாம் ஸுகதுக்கங்களை யநுபவிக்கும்படி செய்கிற நித்யசுத்த பரப்ரம்மத்தை வணங்கினேனென்பதாம். இதனால் ஜீவனுக்கும் ப்ரம்மத்திற்கு மபேதம் ஸூசிக்கப்படுகிறதென்று அத்வைதமத ஸம்ப்ரதாயம்.

மற்றொரு மங்களசுலோகம்.

யோவிச்வாத்மாவிதிஜவிஷயாந்ப்ராச்யபோகாந்ஸ்த்தவிஷ்டாந் பச்சாச்சாந்யாந்ஸ்வமதிவிபவாந் ஜ்யோதிஷாஸ்வேநஸூக்ஷ்மாந், ஸர்வாநேதாந்புநரபிசநைஸ்ஸ்வாத்மநிஸ்தாபயித்வாஹித்வாஸர்வாந்விசேஷாந் விகதகுணகண: பாத்வஸௌநஸ்துரீய:. *

தருமம் அதர்மம் இவைகளாலுண்டாகிய விஷயங்களை யநுபவித்து ஸூக்ஷ்மஜ்யோதிஸ்ஸாலே ஸ்வப்நத்தை யநுபவித்து எல்லாவற்றையும் தன்னி லடக்கிகொண்டு ஸமஸ்த விசேஷங்களும் நீங்கி நிர்க்குணமாயிருக்கிற துரீய சுத்த ப்ரம்மம் விக்நங்களைப் போக்கி நம்மையளித்து ரக்ஷிக்கவேணுமென்பதாம்.

* நாலாமடி மற்றமூன்றடிகளுக்குச் சமாநமாயிராமையால், குற்றமில்லை.

## அபிப்பிராய விசேஷங்கள்.

இவ்விரண்டும் சங்கராசாரியர் செய்த சுலோகங்களேயென்று அநேக பண்டிதர்களி னபிப்ராயம். சிலர் முதல் சுலோகம் கௌடபாதகாரிகையில் சேர்ந்ததென்றும் இரண்டாவது சுலோகம் சங்கராசாரியர் செய்ததென்றும் சொல்லுகிறார்கள். இது ஸரியல்ல ; ஏனென்றால் முதல் சுலோகம் கௌடபாதகாரிகையாயின் அதற்கு சங்கராசாரியர் மற்ற சுலோகங்களுக்குப்போல வ்யாக்யாநம் செய்திருப்பார்; அவ்வாறு வ்யாக்யாநம் செய்யாமையால் முதல் சுலோகமும் சங்கராசாரியர் செய்ததேயாமென்று ஆநந்தகிரியாசாரியர் சொல்லியிருக்கிறார்.

## அவதாரிகை.

ஶ்ரீ-ஸா. வேதாந்தங்களின் பொருள்களை சுருக்கமாகவிளக்கத்தக்க நாலுப்ரகரணங்க ளடங்கிய மாண்டூக்யோபநிஷத் வ்யாக்யாநமான கௌடபாதகாரிகை நம்மால் விவரிக்கப்படுகிறது. இந்த கௌடபாதகாரிகையில் ரோகத்தினால் வருத்தமடைந்தவனுக்கு ரோகம்நீங்குவதுபோல இவ்வாத்மாவுக்கு பிரபஞ்சம் நீங்கினால் அத்வைதமுண்டாகின்றதாகையால் அவித்யையால் செய்யப்பட்ட இந்தபிரபஞ்சம் வித்யையினால் நிவ்ருத்திக்குமென்றெண்ணி ப்ரம்மவித்யை சொல்லுவதற்கு ஆரம்பிக்கப்படுகிறது அதில் ஆத்மாவின் அறிவுக்குக் காரணமான ஓங்காரத்தை நிரூபிக்கிறதற்கு முதல் பிரகரணம் ஆரம்பிக்கப்படுகிறது. இரண்டாவது பிரகரணத்தில் பிரபஞ்சங்கள் பொய்யென்றும் மூன்றாவதுபிரகரணத்தில் அத்வைதத்தின் மெய்யானதன்மையும் நான்காவது பிரகரணத்தில் அத்வைதத்தின் மெய்யானதன்மைக்கு விரோதியான ஆக்ஷேபங்களுக்கு ஸமாதானமும் சொல்லப்படுகிறது.

க. 𑌬𑌹𑌿𑌷𑍍𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑍋 𑌵𑌿𑌭𑍁𑌰𑍍𑌵𑌿𑌶𑍍𑌵𑍋 𑌹𑍍𑌯𑌨𑍍𑌤𑌃𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌸𑍍𑌤𑍁 𑌤𑍈𑌜𑌸𑌃।
𑌘𑌨𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌸𑍍𑌤𑌥𑌾 𑌪𑍍𑌰𑌾𑌜𑍍𑌞 𑌏𑌕 𑌏𑌵 𑌤𑍍𑌰𑌿𑌧𑌾 𑌸𑍍𑌮𑍃𑌤𑌃॥

உ. 𑌦𑌕𑍍𑌷𑌿𑌣𑌾𑌕𑍍𑌷𑌿𑌮𑍁𑌖𑍇 𑌵𑌿𑌶𑍍𑌵𑍋 𑌮𑌨𑌸𑍍𑌯𑌨𑍍𑌤𑌸𑍍𑌤𑍁 𑌤𑍈𑌜𑌸𑌃।
𑌆𑌕𑌾𑌶𑍇 𑌚 𑌹𑍃𑌦𑌿 𑌪𑍍𑌰𑌾𑌜𑍍𑌞𑌸𑍍𑌤𑍍𑌰𑌿𑌧𑌾 𑌦𑍇𑌹𑍇 𑌵𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌃॥

౧. బహిః ప్రజ్ఞో విభుర్విశ్వో హ్యన్తఃప్రజ్ఞస్తు తైజసః।
ఘనప్రజ్ఞస్తథా ప్రాజ్ఞ ఏక ఏవ త్రిధా స్మృతః॥

౨. దక్షిణాక్షిముఖే విశ్వో మనస్యన్తస్తు తైజసః।
ఆకాశే చ హృది ప్రాజ్ఞస్త్రిధా దేహే వ్యవస్థితః॥

(ப - ம்.) 𑌬𑌹𑌿𑌃𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌃 - வெளியறிவுடையவனும், 𑌵𑌿𑌭𑍁𑌃 - யெங்கும் நிறைந்தவனுமான, 𑌵𑌿𑌶𑍍𑌵𑌃 - வைச்வாநரனும், 𑌅𑌨𑍍𑌤𑌃𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌃 - உள்ளறிவையுடையவனான, 𑌤𑍈𑌜𑌸𑌃 - தைஜஸனும், 𑌤𑌥𑌾 - அப்படியே, 𑌘𑌨𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌃 - நிறைந்த அறிவையுடைய, 𑌪𑍍𑌰𑌾𑌜𑍍𑌞𑌃 - ப்ராஜ்ஞனும், 𑌏𑌕 𑌏𑌵 - ஒருவன் தானே, 𑌤𑍍𑌰𑌿𑌧𑌾 - மூன்று ஸ்தானத்தில் இருக்கிறவனாக, 𑌸𑍍𑌮𑍃𑌤𑌃 - யெண்ணப்பட்டான்.

(ப - ம்.) 𑌦𑌕𑍍𑌷𑌿𑌣𑌾𑌕𑍍𑌷𑌿𑌮𑍁𑌖𑍇 - வலது கண்ணாகிற முகத்தில், 𑌵𑌿𑌶𑍍𑌵𑌃 - வைச்வாநரனும், 𑌅𑌨𑍍𑌤𑌃 - உள்ளே, 𑌮𑌨𑌸𑌿 - மனதில், 𑌤𑍈𑌜

ஸ: - தைஜஸனும், ஹ்ருதி - ஹிருதயமென்கிற, ஆகாஶே ச - ஆகாயத்தில் ப்ராஜ்ஞ: - ப்ராஜ்ஞனும், தேஹே - தேகத்தில், த்ரிதா - மூன்று விதமாக, வ்யவஸ்தித: - இருக்கிறான்.

ஸம்-ஹா. கிரமமாக மூன்றுஸ்தானத்தை யுடைத்தாயிருக்கையாலும் அனேகனென்கிற நினைவினாலும் மூன்றுஸ்தானத்திலும் வேறுபட்டவனையும் ஒருவனாகவும் சுத்தனாகவும் ஒன்றுடன்சேராதவனாகவும் ஈச்வரனிருக்கிறான்.

வி-ஹா. சகலாவயவங்களுக்குள் வலதுகண்ணே முக்கியமாகையால் கண்ணால் அறியுமவனான வைச்வாநரனும் அறிந்ததை மனதால் நினைக்கிறதாகையால் மனதாலறியும் தைஜஸனும் இந்திரியங்களின் ஸம்பந்தமில்லாமல் ஹ்ருதயாகாசத்தில் இருக்கிறவறிவு ரூபமான ப்ராஜ்ஞனும் ஒன்றுஎன்று சொல்லப்பட்டது. ஈச்வரன் ஒருவனே இந்ததேகத்தில் மூன்றுஇடங்களில ஜாகரிதஸ்தானனாகவும் ஸ்வப்நஸ்தானனாகவும் ஸுஷுப்தஸ்தானனாகவும் வலதுகண்ணிலும் மனதிலும் ஹ்ருதயாகாசத்திலும் மூன்றிடத்திலு மிருக்கிறான்.

௩. விஶ்வோ ஹி ஸ்தூலபுங் நித்யம் தைஜஸ: ப்ரவிவிக்தபுக் ।
ஆநந்தபுக் ததா ப்ராஜ்ஞஸ் த்ரிதா போகம் நிபோதத ॥

௪. ஸ்தூலம் தர்பயதே விஶ்வம் ப்ரவிவிக்தம் து தைஜஸம் ।
ஆநந்தஶ்ச ததா ப்ராஜ்ஞம் த்ரிதா த்ருப்திம் நிபோதத ॥

3. విశ్వోహిస్థూలభుఙ్నిత్యం తైజసఃప్రవివిక్తభుక్ ।
ఆనందభుక్తథాప్రాజ్ఞస్త్రిధాభోగంనిబోధత ॥

౪. స్థూలంతర్పయతేవిశ్వంప్రవివిక్తంతుతైజసమ్ ।
ఆనందశ్చతథాప్రాజ్ఞంత్రిధాతృప్తింనిబోధత॥

(ப-ம்.) விஶ்வ: - வைச்வாநரனானவன், நித்யம் - ஸர்வகாலமும், ஸ்தூலபுக் - உருவம் முதலியதை யனுபவிக்குமவன், தைஜஸோ ஹி - தைஜஸனோ வென்றால், ப்ரவிவிக்தபுக் - பிறரறியாதபோகங்களை யடையுமவன், ததா - அப்படியே, ப்ராஜ்ஞ: - ப்ராஜ்ஞன் என்பவன், ஆநந்தபுக் - ஆநந்தத்தை யனுபவிக்குமவன் (இதி) - (என்று) த்ரிதா - மூன்று விதமாக, போகம் - போகத்தை, நிபோதத - அறிவீர்கள்.

(ப-ம்.) விஶ்வம் - விச்வமூர்த்தியை, ஸ்தூலம் - ஸ்தூலரூபமானது, தர்பயதே - த்ருப்திப்படுகின்றது. தைஜஸம் து - தைஜஸமூர்த்தியை, ப்ரவிவிக்தம் - ஏகாந்தம் த்ருப்திப்படுத்துகிறது. ததா - அப்படி, ப்ராஜ்ஞம் - ப்ராஜ்ஞமூர்த்தியை, ஆநந்தஶ்ச - ஆநந்தம்த்ருப்தியடைவிக்கிறது. த்ருப்திம் - த்ருப்தியை, த்ரிதா நிபோதத - மூன்றுவிதமாயறியுங்கோள்.

ஸம்-ஹா. விச்வன் முதலியவர்களுக்கு மூன்றுவிதமாக தேகத்தில் இருப்பை சொல்லி அவர்களுக்கே மூன்றுவிதமான போகத்தையும் இவ்விரண்டு சுலோகத்தா சொல்லுகிறது.

வி-ஹா. அறிவீர்கள் யென்று இம்மந்திரத்தை யறிந்த ஈசுவரன் தான் உபதேசிக்குமவர்களைப்பார்த்துச் சொல்லுகிறது.

௫. த்ரிஷு தாமஸு யத்போஜ்யம் போக்தா யஸ்ச ப்ரகீர்திதஃ ।
வேதைததுபயம் யஸ்து ஸ புஞ்ஜாநோ ந லிப்யதே ॥

౫. త్రిషుధామసుయద్భోజ్యంభోక్తాయశ్చప్రకీర్తితః ।
వేదైతదుభయంయస్తుసభుంజానోనలిప్యతే॥

(ப - ம்.) த்ரிஷு - மூன்று விதமான, தாமஸு - ஸ்தானங்களில், யத் - யாதொன்று, போஜ்யம் - அனுபவிக்கக் கூடியதோ, யஸ்ச - யாதொருவனும், போக்தா - அனுபவிக்கிறவனாக, ப்ரகீர்திதஃ - கூறப்பட்டானோ, ஏதத் - இந்த, உபயம் - இரண்டையும், யஃ - யாதொருவன், வேத - அறிகிறானோ, ஸது - அவன் தானே, புஞ்ஜாநஃ - ஸகல வஸ்துக்களையு புஜித்தபோதிலும், நலிப்யதே - அதுகளில் உண்டான விரோதங்களால் பூசப்பட்டவனாகிறதில்லை.

ஸ0-ஹா. ஜாகர ஸ்வப்ந ஸுஷுப்தி யென்றுகூறப்பட்டமூன்றிடத்தில் ஸ்தூல ப்ரவிவிக்த ஆநந்த யென்று சொல்லப்பட்ட ஒன்றேயாகிய மூன்று போகங்களையும் விச்வ தைஜஸ ப்ராஜ்ஞ என்று சொல்லப்பட்ட ஒருவனேயாகி யனுபவிக்கிறவனையும் யாரொருவன் போஜ்யமிதென்றும் போக்தாவிவனென்று மறிகிறானோ அவன் அப்போகத்தாலுண்டான தோஷங்களை யடையமாட்டான்.

வி-ஹா. விச்வன்முதலிய ரூபங்களையும் அவர்களின் இடத்தையும் அவர்களின் போகங்களையும் உள்ளபடி யறிந்தவர்களுக்கு பலத்தைச்சொல்லுகிறது.

௬. ப்ரபவஸ் ஸர்வபாவாநாம் ஸதாமிதி விநிஸ்சயஃ
ஸர்வம் ஜநயதி ப்ராணஸ் சேதோம்ஸூந் புருஷஃ ப்ருதக் ॥

౬. ప్రభవస్సర్వభావానాంసతామితివినిశ్చయః।
సర్వంజనయతిప్రాణశ్చేతోంశూన్పురుషఃపృథక్॥

(ப - ம்.) ஸர்வபாவாநாம் - எல்லாப் பொருள்களுக்கும், ப்ரபவஃ - பிறப்பிடம் - (ஆத்மா - மேற்கூறிய ஆன்மாவே), இதி - என்று, ஸதாம் - நல்லோர்களுடைய, விநிஸ்சயஃ - உறுதி, ப்ராணஃ - பிராணன் எனகிற புருஷஃ - புருஷன் எனவும் பெயர்கொண்ட மேற்கூறிய ஆன்மாவே ஸர்வம் - யெல்லாப் பொருளையும், சேதோம்ஸூந் - அறிவென்னும்வெளிச்சத்தோடு கூடின ஜீவர்களையும், ப்ருதக் - தனியாக, ஜநயதி - உண்டு

ஸ0-ஹா. ஆதிகாலத்தில் காரணரூபமா யிருக்கிற வஸ்துக்களுக்கே பிறப்பு. இதுவே திண்ணம். இத்தால் இல்லாத வஸதுக்களுக்கு பிறப்பில்லை யென்று விளங்குகிறது. இது ஆதியில் விதையாயிருந்த வைகளையே செடிகளாகக் காண்கையால் தெரியலாம் புருஷன்என்றும் ப்ராணன் என்றும் சொல்லப்பட்ட ஆன்மாவே அறிவின் தோற்றங்களான இவர்களையும் மற்ற யெல்லாப் பொருளையும் விளக்கின்றது.

வி-ஹா. ஏஷயோநிஸ்ஸர்வஸ்ய,என்று மேற்கூறிய ப்ராம்மணத்தின் அர்த்தத்தை இம்மந்திரம் சொல்லுகிறது.

௭. விபூதிம் ப்ரஸவம் த்வந்யே மந்யந்தே ஸ்ருஷ்டிசிந்தகா: |
ஸ்வப்நமாயாஸரூபேதி ஸ்ருஷ்டிரந்யைர்விகல்பிதா ||

౭. విభూతింప్రసవంత్వన్యేమన్యంతేసృష్టిచింతకాః ।
స్వప్నమాయాస్వరూపేతిసృష్టిరన్యైర్వికల్పితా॥

(ப - ம்.) அந்யே - வேறு, ஸ்ருஷ்டிசிந்தகா: - படைப்பை விசாரிக்குமவர்கள், ப்ரஸவம் - படைப்பை, விபூதிம் - பிரம்மத்தின் பகுவிதமான பிறப்பாக, மந்யந்தே - யெண்ணுகிறார்கள், அந்யை: - வேறு சிலர்களால், ஸ்ருஷ்டி: - படைப்பானது, ஸ்வப்நமாயாஸரூபா - கனவிலுண்டான பொய் யான பொருள்களின் உருவுடையதென்று, விகல்பிதா - அனேக விதமாக சொல்லப்பட்டது.

ஸ0-ஹா. ஈசனது படைப்பைச் சிந்தைசெய்யுமவர்கள் பிரமத்தின் விரிவுகளை இப்புவனங்களென்று சொல்லுவார்கள். வேறுசிலர்கள் ஈசன் படைப்பு ஸ்வப்நம்போல வும் இந்திரசாலம்போலவும் என்று சொல்லுவார்கள். ஆனால் முமுக்ஷுக்கள் விச்வ தைஜஸ ப்ராஜ்ஞ என்கிற மூன்றுஉருவத்திலும் வேறுபட்ட மெய்யான உருவத்தையே விரும்புவர்கள்.

வி-ஹா. முன் மந்திரத்தில் ஸதாமிதிவிநிச்சய: என்கிற நல்லோர் கொள்கைக்கு எதிரான தீயோர்கொள்கையை விவரிக்கிறது.

௮. இச்சாமாத்ரம் ப்ரபோ: ஸ்ருஷ்டிரிதி ஸ்ருஷ்டௌ விநிஶ்சிதா: |
காலாத்ப்ரஸூதிம் பூதாநாம் மந்யந்தே காலசிந்தகா: ||

౮. ఇచ్ఛామాత్రంప్రభోస్సృష్టిరితిసృష్టౌవినిశ్చితాః ।
కాలాత్ప్రసూతింభూతానాంమన్యంతేకాలచింతకాః॥

(ப - ம்.) ஸ்ருஷ்டௌ - படைப்பில், விநிஶ்சிதா: - முடிவான கொள்கையை யுடையவர்கள், ப்ரபோ: - ஈசனுடைய, ஸ்ருஷ்டி: - படைப்பு, இச்சாமாத்ரம் - யெண்ணமே, இதி - என்றும், காலசிந்தகா: - காலத்தையே தெய்வமாக யெண்ணுமவர்கள், பூதாநாம் - பொருள்களுக்கு, காலாத் - காலத்தின் நின்றும், ப்ரஸூதிம் - பிறப்பையும், மந்யந்தே - யெண்ணுகிறார்கள்.

ஸ0-ஹா. ஈச்வரவாதிகளான சிலர் ஈசனுடைய யெண்ணமொழிய படைப்புவே றில்லை யென்றும் காலவாதிகளான சிலர் யெல்லாப் பொருள்களும் காலத்தில் நின்று முண்டாகின்றன வென்றும் சொல்லுகிறார்கள்.

வி-ஹா. எல்லாப் பொருள்களையும் எக்காலத்திலும் அறியும் தன்மையும் எவ்வித வல்லமையும் உள்ள ஈசந்தானே மற்றொரு உதவிகளன்றிக்கே தனதிச்சையினாலேயே உலகங்களை யமைக்கிறான் என்பது வேதாந்தமறிந்தவர்களின் முடிவான கொள்கை காலவாதிகள் காலமே காரணமென்று சொல்லுவர்கள்.

௯. போகார்த்தம் ஸ்ருஷ்டிரித்யந்யே க்ரீடார்த்தமிதி சாபரே ।
தேவஸ்யைஷ ஸ்வபாவோऽயமாப்தகாமஸ்ய கா ஸ்ப்ருஹா ॥

౯. భోగార్థం సృష్టిరిత్యన్యే క్రీడార్థమితి చాపరే ।
దేవస్యైష స్వభావోऽయమాప్తకామస్య కా స్పృహా ॥

(ப-ம்.) அந்யே - வேறு சிலர், ஸ்ருஷ்டி: - படைப்பானது, ப்ரபோ: - ஈசனுக்கு, போகார்த்தம் - சுகத்தின் பொருட்டென்றும், அபரே - வேறு சிலர், க்ரீடார்த்தமிதி - விளையாட்டின் பொருட்டென்றும், மந்யந்தே - யெண்ணுகிறார்கள், தேவஸ்ய - ஈசனுக்கு, அயம் - இந்த விளையாட்டாயிருக்கிற, ஏஷ: - இந்தபடைப்பானது, ஸ்வபாவ: - தனக்கான தன்மை, ஆப்தகாமஸ்ய - யெல்லாப் பயனையும் அடைந்தவனுக்கு, ஸ்ப்ருஹா - ஆசை, கா - ஏது.

*ஸ0-ஸா. ஈசன் படைப்பு சுகத்திற்கென்று சிலரும் விளையாட்டுக்கென்று சிலரும் சொல்லுவர்கள். கயிறு முதலியவை பாம்பு முதலானதாக தோற்றுவது அஜ்ஞானத்தின் தன்மையாவதுபோல் ஈசன் சுபாவத்தால் படைக்கிறான்.*

*வி-ஸா. சுகம் என்றும் விளையாடல் என்றும் ஈசன் படைப்புக்குப் பயனகளை சிற்சிலர் சொல்லுவர்கள் பயன்களை அடைந்தவனுக்கு வேறு பயனை யெண்ணவேண்டுவதில்லை யாதலால் ஈசனுக்கு விளையாட்டான படைப்பானது இயல்பு.*

௧௦. நிவ்ருத்தேஸ்ஸர்வது:காநாமீசாந: ப்ரபுரவ்யய: ।
அத்வைதஸ்ஸர்வபாவாநாம் தேவஸ்துர்யோ விபுஸ்ஸ்ம்ருத: ॥

౧౦. నివృత్తేస్సర్వదుఃఖానామీశానః ప్రభురవ్యయః ।
అద్వైతస్సర్వభావానాం దేవస్తుర్యో విభుస్స్మృతః ॥

(ப-ம்.) ஸர்வது:காநாம் - எல்லாதுக்கங்களுடையவும், நிவ்ருத்தே: - நாசத்திற்கு, ஈசாந: - நியந்தாவாயும், ப்ரபு: - ஸ்வாமியாயும், அவ்யய: - அழிவில்லாதவனாயும், விபு: - வ்யாபியாயுமிருக்கிற, துர்யோதேவ: - துரீயதேவன், ஸர்வபாவாநாம் - எல்லாபதார்த்தங்களுக்கும், அத்வைத: - பேதமில்லாதவன்.

*ஸ0-ஸா. இந்த துரீய ப்ரம்மஸ்வரூபத்தை யறிந்தபோது ஸமஸ்த துக்கங்களும் நீங்குகின்றன. ஏனென்றால் ஸமஸ்த பேதங்களும் நீங்கிப்போகின்றமையா லென்க. பேதமுண்டாகிலன்றோ துக்கங்களுக்குக் காரணமுண்டு.*

*வி-ஸா. எல்லா துக்கங்களும் நிவ்ருத்திப்பதற்குக் காரணமாய் ப்ரம்மருத்திராதிகளை நியமிக்கிறவனாய் மித்யாஜ்ஞாநம் நீங்குவதற்கு ஹேதுவாயிருப்பவன் துரியரூபி.*

௧௧. கார்யகாரணபத்தௌ தாவிஷ்யேதே விச்வதைஜஸௌ ।
ப்ராஜ்ஞ: காரணபத்தஸ்து த்வௌ தௌ துர்யே ந ஸித்த்யத: ॥

౧౧. కార్యకారణబద్ధౌ తావిష్యేతే విశ్వతైజసౌ ।
ప్రాజ్ఞః కారణబద్ధస్తు ద్వౌ తౌ తుర్యే న సిద్ధ్యతః ॥

(ப்-ம்.) 𑌤𑍌 𑌵𑌿𑌶𑍍𑌵𑌤𑍈𑌜𑌸𑍌 - அந்தவிச்வமூர்த்தியும் தைஜஸமூர்த்தியும், 𑌕𑌾𑌰𑍍𑌯𑌕𑌾𑌰𑌣𑌬𑌦𑍍𑌧𑍌 - கார்யம் காரணம் இவைகளின் பந்தமுடையவர்களாக, 𑌇𑌷𑍍𑌯𑍇𑌤𑍇 - கொள்ளப்படுகிறார்கள், 𑌪𑍍𑌰𑌾𑌜𑍍𑌞𑌃 - ப்ராஜ்ஞமூர்த்தியும், 𑌕𑌾𑌰𑌣𑌬𑌦𑍍𑌧𑌃 - காரணபந்தமுடையவராகக் கொள்ளப்படுகிறார், 𑌤𑍁𑌰𑍍𑌯𑍇 - துரீயமூர்த்தியில், 𑌤𑍌 𑌦𑍍𑌵𑍌 - அந்த இரண்டுவிதபந்தங்களும், 𑌨 𑌸𑌿𑌧𑍍𑌯𑌤𑌃 - சேராமலிருக்கின்றன.

ஸ0-ஸா. துரீயஸ்வரூபத்தை விசதம் செய்வதற்கு விச்வ தைஜஸ ப்ராஜ்ஞர்களின் தோஷங்களைச் சொல்லுகிறது. பலம், பீஜம், இவ்விரண்டாலும் விச்வ தைஜஸர்களும் பீஜத்தால் ப்ராஜ்ஞனும் கட்டுபட்டிருக்கிறார்கள். துரீயனுக்கு எவ்வித பந்தமுமில்லை.

வி-ஸா. இந்த பந்தாபந்தங்கள் ஜீவாத்மாவின் வழியாலே இந்த மூர்த்திகளுக்குண்டாகிறது சுயமாகவல்ல. சுயமாகா எல்லா மூர்த்திகளும் நிர்தோஷ கல்யாணகுணமுடையவர்களேயாம்.

௧௨. 𑌨𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌨 𑌪𑌰𑌾𑌂𑌶𑍍𑌚𑍈𑌵 𑌨 𑌸𑌤𑍍𑌯𑌂 𑌨𑌾𑌪𑌿 𑌚𑌾𑌨𑍃𑌤𑌮𑍍 |
𑌪𑍍𑌰𑌾𑌜𑍍𑌞𑌃 𑌕𑌿𑌂𑌚𑌨 𑌸𑌂𑌵𑍇𑌤𑍍𑌤𑌿 𑌤𑍁𑌰𑍍𑌯𑌂 𑌤𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌦𑍃𑌕𑍍𑌸𑌦𑌾 ||

౧౨. నాత్మానంనాపరాంశ్చైవనసత్యంనాపిచానృతమ్ ।
ప్రాజ్ఞఃకించనసంవేత్తితుర్యంతత్సర్వదృక్సదా॥

(ப்-ம்.) 𑌪𑍍𑌰𑌾𑌜𑍍𑌞𑌃 - ப்ராஜ்ஞமூர்த்தி, 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌮𑍍 - ஆத்மஸ்வரூபத்தையும், 𑌪𑌰𑌾𑌨𑍍 - இதரஸ்வரூபங்களையும், 𑌸𑌤𑍍𑌯𑌮𑍍 - ஸத்யஸ்வரூபத்தையும், 𑌅𑌨𑍃𑌤𑌮𑍍 - மித்யாரூபத்தையும், 𑌕𑌿𑌂𑌚𑌨 - மற்றுள்ள எந்த விஷயத்தையும், 𑌨 𑌸𑌂𑌵𑍇𑌤𑍍𑌤𑌿 - அறிகிறதில்லை. 𑌤𑍁𑌰𑍍𑌯𑌮𑍍 𑌤𑌤𑍍 - அந்ததுரீயரூபமானது, 𑌸𑌦𑌾 - எப்போதும், 𑌸𑌰𑍍𑌵𑌦𑍃𑌕𑍍 - எல்லாவற்றையு மறியானிற்கும்.

ஸ0-ஸா. ப்ராஜ்ஞன் பீஜநித்திரையுடையனுகையாலே ஸ்வஸ்வரூபாதிகளை யறிவதில்லை. துரீயனுக்கு எப்போதும் ஸர்வதர்சநமுமுண்டு. அஜ்ஞாநாந்ய தாஜ்ஞாநங்களில்லாதவன் துரீயன். அஜ்ஞாநஸம்பந்தமுடையவன் ப்ராஜ்ஞன். ஸூர்யப்ரகாசத்தில் அப்ரகாசமுமந்யதாப்ரகாசமும் கிடையாதன்றே.

வி-ஸா. ப்ராஜ்ஞன் ஜீவனுடைய ஸ்வரூபஸுகத்தைவிடமற்றொன்றை யதிஷ்டிக்கிறதில்லை. துரீயன் முக்தாத்மாக்களுக்கு எல்லாவற்றையும் ப்ரகாசிக்கச் செய்கிறான்.

௧௩. 𑌦𑍍𑌵𑍈𑌤𑌸𑍍𑌯𑌾𑌗𑍍𑌰𑌹𑌣𑌂 𑌤𑍁𑌲𑍍𑌯𑌮𑍁𑌭𑌯𑍋𑌃 𑌪𑍍𑌰𑌾𑌜𑍍𑌞𑌤𑍁𑌰𑍍𑌯𑌯𑍋𑌃 |
𑌬𑍀𑌜𑌨𑌿𑌦𑍍𑌰𑌾𑌯𑍁𑌤𑌃 𑌪𑍍𑌰𑌾𑌜𑍍𑌞𑌸𑍍𑌸𑌾 𑌚 𑌤𑍁𑌰𑍍𑌯𑍇 𑌨 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 ||

౧౩. ద్వైతస్యాగ్రహణంతుల్యముభయోఃప్రాజ్ఞతుర్యయోః।
బీజనిద్రాయుతఃప్రాజ్ఞస్సాచతుర్యేనవిద్యతే॥

(ப்-ம்.) 𑌪𑍍𑌰𑌾𑌜𑍍𑌞𑌤𑍁𑌰𑍍𑌯𑌯𑍋𑌃 𑌉𑌭𑌯𑍋𑌃 - ப்ராஜ்ஞ துரீயர்களிருவர்க்கும், 𑌦𑍍𑌵𑍈𑌤𑌸𑍍𑌯𑌾𑌗𑍍𑌰𑌹𑌣𑌮𑍍 - பேதஜ்ஞாந மில்லாதிருப்பது, 𑌤𑍁𑌲𑍍𑌯𑌮𑍍 - ஸமாநமானது, 𑌪𑍍𑌰𑌾𑌜𑍍𑌞𑌃 - ப்ராஜ்ஞமூர்த்தி, 𑌬𑍀𑌜𑌨𑌿𑌦𑍍𑌰𑌾𑌯𑍁𑌤𑌃 - பீஜநித்திரையோடுகூடினவன், 𑌤𑍁𑌰𑍍𑌯𑍇 - துரீயமூர்த்தியில், 𑌸𑌾 𑌚 𑌨 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 ·

ஸ0-ஹா. பேதப்ரபஞ்சஜ்ஞாந மிருவருக்கு மில்லாமையால் ப்ராஜ்ஞ துரீயர்களு க்கு பேதமென்ன வென்கிற சங்கையை நீக்குவதற்கு இந்தசுலோகம். அந்யதாஜ்ஞாநத் திற்குக் காரணமான அஜ்ஞாநஸம்பந்தம் ப்ராஜ்ஞமூர்த்தியி லிருக்கின்றது துரீயத்தி லந்த ஸம்பந்தமில்லை. ஆகையாலிதுவே பேதமென்று கருத்து.

வி-ஹா. அஹங்கார மமகாரங்களை யுண்டுபண்ணி வைய்யாமலிருக்கிற ஸ்வபாவ மிருவருக்கு முண்டாயினும் அஹங்கார மமகாரங்களுக்குக் காரணமான ஸம்ஸாரஸம்ப ந்தத்தைக் கல்பித்துவைத்திருக்கிறான் ஜீவாத்மாவுக்கு ப்ராஜ்ஞமூர்த்தி. மோக்ஷத்தை யே ஸங்கல்பிக்கிறான் துரீயமூர்த்தி என்றுபொருள்.

௧௪. 𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑌨𑌿𑌦𑍍𑌰𑌾𑌯𑍁𑌤𑌾𑌵𑌾𑌦𑍍𑌯𑍌 𑌪𑍍𑌰𑌾𑌜𑍍𑌞𑌸𑍍𑌤𑍍𑌵𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑌨𑌿𑌦𑍍𑌰𑌯𑌾 ।
𑌨 𑌨𑌿𑌦𑍍𑌰𑌾𑌂 𑌨𑍈𑌵 𑌚 𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑌂 𑌤𑍁𑌰𑍍𑌯𑍇 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌨𑌿𑌶𑍍𑌚𑌿𑌤𑌾𑌃 ॥

౧౪. స్వప్ననిద్రాయుతావాద్యౌ ప్రాజ్ఞస్త్వస్వప్ననిద్రయా ।
న నిద్రాం నైవ చ స్వప్నం తుర్యే పశ్యంతి నిశ్చితాః ॥

(ப-ம்.) 𑌆𑌦𑍍𑌯𑍌 - முதலில் சொல்லப்பட்ட விச்வதைஜஸர்கள், 𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑌨𑌿𑌦𑍍𑌰𑌾𑌯𑍁𑌤𑍌 - ஸ்வப்நம்நித்திரை இவைகளுடன்கூடியவர்கள், 𑌪𑍍𑌰𑌾𑌜𑍍𑌞𑌃 - ப்ராஜ்ஞமூர்த்தி, 𑌅𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑌨𑌿𑌦𑍍𑌰𑌯𑌾 - ஸ்வப்நமின்றி நித்திரையோடுகூடியவன், 𑌤𑍁𑌰𑍍𑌯𑍇 - துரீயமூர்த்தியில், 𑌨𑌿𑌦𑍍𑌰𑌾𑌂 - நித்திரையையும், 𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑌂 - ஸ்வ ப்நத்தையும், 𑌨𑌿𑌶𑍍𑌚𑌿𑌤𑌾𑌃 - தத்வஜ்ஞாநிகள், 𑌨𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 - காண்கிறதில்லை.

ஸ0-ஹா. ஸ்வப்நமென்பது அந்யதாஜ்ஞாநம், நித்திரை யென்பது அஜ்ஞாநம் ஜா கரதசையிலு மந்யதாஜ்ஞாநமுண்டு அஜ்ஞாநமுமுண்டு. துரீயனுக்கிவையில்லை.

பதாந்வயார்த்த பேதங்கள்.

கூரநாராயண முனி பாஷ்யத்தில் ஜீவத்வாரத்தாலிந்த ஸ்வப்நநித்ரைக ளையு மவையில்லாமையையும் கொள்ளவேணும் என்று வ்யாக்யானம் செய் யப்பட்டது.

௧௫. 𑌅𑌨𑍍𑌯𑌥𑌾 𑌗𑍃𑌹𑍍𑌣𑌤𑌃 𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑍋 𑌨𑌿𑌦𑍍𑌰𑌾 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌮𑌜𑌾𑌨𑌤𑌃 ।
𑌵𑌿𑌪𑌰𑍍𑌯𑌾𑌸𑍇 𑌤𑌯𑍋𑌃 𑌕𑍍𑌷𑍀𑌣𑍇 𑌤𑍁𑌰𑍀𑌯𑌂 𑌪𑌦𑌮𑌶𑍍𑌨𑍁𑌤𑍇 ॥

౧౫. అన్యథాగృహ్ణతస్స్వప్నో నిద్రా తత్త్వమజానతః ।
విపర్యాసే తయోః క్షీణే తురీయం పదమశ్నుతే ॥

(ப-ம்.) 𑌅𑌨𑍍𑌯𑌥𑌾𑌗𑍃𑌹𑍍𑌣𑌤𑌃 - அந்யதாஜ்ஞாநமுடையவனுக்கு, 𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑌃 - ஸ்வப்நமுண்டாகிறது. 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 - வாஸ்தவத்தை, 𑌅𑌜𑌾𑌨𑌤𑌃 - அறியாதவனு க்கு, 𑌨𑌿𑌦𑍍𑌰𑌾 - நித்திரையுண்டாகிறது. 𑌤𑌯𑍋𑌃 𑌵𑌿𑌪𑌰𑍍𑌯𑌾𑌸𑌕𑍍𑌷𑍀𑌣𑍇 - அந்த ஸ்வப்நநித்திரைகள் மாறிவருவதொழிந்தால், 𑌤𑍁𑌰𑍀𑌯𑌂𑌪𑌦𑌮𑌶𑍍𑌨𑍁𑌤𑍇 - துரீயஸ்தாநத்தை யடைகிறான்.

ஸ0-ஹா. கயிற்றைப் பாம்பென்று ப்ரமிப்பதுபோல ஜகத்தை ப்ரமிப்பது, தத்வத் தையறியாம லிருப்பது, இவைகழிந்து தத்வநிலைபெற்றால் துரீயஸ்தாநத்தை யடைகி றான். அப்போது இந்த ஸ்வப்நமும் நித்ரையும் விட்டுப்போகின்றது.

வி-ஹா. தேஹத்தி லாத்ம ப்ரமத்தையுடையவனுக்கு ப்ரமபரம்பரை யுண்டாகும், பகவானுடைய தத்வத்தை யறியாதவனுக்கு அஜ்ஞானமுண்டாகும் இந்த தேஹாத்மப்ரமம் நீங்கி தத்வஜ்ஞானம் பிறந்தால்பரமாத்ம ஸாக்ஷாத்காரம் பெற்று முக்தனாகிறான்.

கசு. 𑌅𑌨𑌾𑌦𑌿𑌮𑌾𑌯𑌯𑌾 𑌸𑍁𑌪𑍍𑌤𑍋 𑌯𑌦𑌾 𑌜𑍀𑌵𑌃 𑌪𑍍𑌰𑌬𑍁𑌧𑍍𑌯𑌤𑍇 ।
𑌅𑌜𑌮𑌨𑌿𑌦𑍍𑌰𑌮𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑌮𑌦𑍍𑌵𑍈𑌤𑌂 𑌬𑍁𑌧𑍍𑌯𑌤𑍇 𑌤𑌦𑌾 ॥

౧౬. అనాదిమాయయా సుప్తో యదా జీవః ప్రబుధ్యతే ।
అజమనిద్రమస్వప్నమద్వైతం బుధ్యతే తదా ॥

(ப்-ம்.) 𑌅𑌨𑌾𑌦𑌿𑌮𑌾𑌯𑌯𑌾 - ஆதியில்லாத அவித்யையினால், 𑌸𑍁𑌪𑍍𑌤𑌃 உறங்கிக்கிடக்கிற, 𑌜𑍀𑌵𑌃 - ஸம்ஸாரத்தையடைந்திருக்கிற ஆத்மா, 𑌯𑌦𑌾 எந்தகாலத்தில், 𑌪𑍍𑌰𑌬𑍁𑌧𑍍𑌯𑌤𑍇 - விழித்துக்கொள்ளுகிறானோ, 𑌤𑌦𑌾 - அப்போது, 𑌅𑌜𑌂 - ஜன்மவிகாரமில்லாததும், 𑌅𑌨𑌿𑌦𑍍𑌰𑌂 - நித்திரையில்லாததும், 𑌅𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑌂 - ஸ்வப்நமில்லாததுமான, 𑌅𑌦𑍍𑌵𑍈𑌤𑌂 - ப்ரம்மாபேதஸ்வரூபத்தை, 𑌬𑍁𑌧𑍍𑌯𑌤𑍇 - அறிகிறான்.

ஸ௦-ஹா. ஸம்ஸாரிஜீவன் மூலாவித்யையினாலும் தூலாவித்யையினாலும், என் வீடு, என் மனைவி என் பிள்ளை, என்றிவ்வாறு ப்ரமித்துக்கொண்டு கிடக்கும்போது தத்வஜ்ஞானியாகிய குருவினருளால் எப்போது நீ ஸம்ஸாரியாகாய் அந்த ப்ரம்மமேயாகிறாய், என்று தத்வோபதேசம் பெறுகிறானோ அப்போது ஜன்மஜராமரணாதி விகாரசூந்யமான துரீயாத்வைத ஸ்வரூபத்தையடைகிறான்.

வி-ஹா. அநாதிகரும ப்ரவாஹத்தினால்ஸம்ஸாரத்தி லழிந்துக்கிடக்கிற ஜீவன் நிர்ஹேதுக பகவத்கடாக்ஷத்தினால் எப்போது தத்வத்தை யறிகிறானோ அப்போது ஸர்வதுக்க நிவர்த்தகனான பரமாத்மாவை யடைந்துபரமாநந்தத்தை யடைகிறான்.

கஎ. 𑌪𑍍𑌰𑌪𑌞𑍍𑌚𑍋 𑌯𑌦𑌿 𑌵𑌿𑌦𑍍𑌯𑍇𑌤 𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑍇𑌤 𑌨 𑌸𑌂𑌶𑌯𑌃 ।
𑌮𑌾𑌯𑌾𑌮𑌾𑌤𑍍𑌰𑌮𑌿𑌦𑌂 𑌦𑍍𑌵𑍈𑌤𑌮𑌦𑍍𑌵𑍈𑌤𑌂 𑌪𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑌤𑌃 ॥

౧౭. ప్రపంచో యది విద్యేత నివర్తేత న సంశయః ।
మాయామాత్రమిదం ద్వైతమద్వైతం పరమార్థతః ॥

(ப்-ம்) 𑌪𑍍𑌰𑌪𑌞𑍍𑌚𑌃 ஜகத்தானது, 𑌵𑌿𑌦𑍍𑌯𑍇𑌤𑌯𑌦𑌿 - உளதாயின், 𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑍇𑌤 - ஒழியும், 𑌨𑌸𑌂𑌶𑌯𑌃 - ஸந்தேஹமில்லை. 𑌇𑌦𑌂𑌦𑍍𑌵𑍈𑌤𑌂 - இந்த பேதப்ரபஞ்சமானது, 𑌮𑌾𑌯𑌾𑌮𑌾𑌤𑍍𑌰𑌂 - மாயையினால் தோற்றுகின்றது. 𑌪𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑌤𑌃 - வாஸ்தவத்தில், 𑌅𑌦𑍍𑌵𑍈𑌤𑌂-அத்வைதமே ஸத்யமாயிருக்கிறது.

ஸ௦-ஹா. வாஸ்தவத்தில் ப்ரபஞ்சமுண்டாயின் அத்வைதம் ஸத்யமாகாதுதான், ப்ரபஞ்சம் மாயையினால்தோற்றுகிற பொய்யாகையால் அத்வைத விரோதமில்லை. கல்பிக்கப்பட்ட ப்ரபஞ்சமும் கயிற்றில் பாம்புபோலவும் இந்திரஜால வஸ்துக்கள்போலவு முண்மை யறிந்தார்க்கில்லை.ஆகையால் பேதம் பொய். அபேதமே ஸத்யம்.

வி-ஹா. அஹங்கார மமகாரங்கள் இவனுக்கு ஸ்வபாவமாயிருப்பதாயி னப்போத இவனுக்கு முக்தியோக்தையில்லையாம். கர்மோபாதியினால் வந்ததாகையால் பரமாத்மாநுக்ரஹத்தினா லவ்வைநீங்குமானதால் பரமஸாம்யமாகிய முக்தியுண்டாகும்.

கஎ. விகல்போ விநிவர்த்தேத கல்பிதோ யதி கேநசித் |
உபதேசாதயம் வாதோ ஜ்ஞாதே த்வைதம் ந வித்யதே ||

౧౮. వికల్పో వినివర్తేత కల్పితో యది కేనచిత్ ।
ఉపదేశాదయం వాదో జ్ఞాతే ద్వైతం న విద్యతే ॥

(ப-ம்.) யதி கேநசித் - ஒருகாரணத்தால், கல்பித: - கல்பிக்கப்பட்டிருக்கிற, விகல்ப: - பேதமானது, விநிவர்த்தேத-நிவ்ருத்தியாகும், அயம் வாத: - இந்தபேதவாதம், உபதேசாத் - உபதேசத்தால்வந்தது. ஜ்ஞாதே - அறிந்தபின், த்வைதம் - பேதம் நவித்யதே - கிடையாது.

ஸம்-ஹா. ஆசாரியன் சிஷ்யன் சாஸ்திரம் என்று பல பேதங்கள் தத்வஜ்ஞாநிகளுக்கே உண்டாயிருக்கின்றமையால் அத்வைதம் சொல்லமுடியாதென்கிற ஆக்ஷேபத்திற்கு சமாதாநமாக இந்தச்லோகம் சொல்லப்படுகிறது. அதாவது உபதேசத்திற்காக ஏற்படுத்தப்பட்ட பேதமே யன்றி இந்த பேதமும் வாஸ்தவமன் றுகையால் தத்வஜ்ஞாநம் பிறந்தபின் இவையு மழிந்துபோகின்றமையா லத்வைதத்திற்கு விரோத மில்லை.

வி·ஹா. மாகான்களுடைய உபதேசத்தா லஹங்கார மமகாரங் கழிததுபோமாகையால், பகவானுடைய பேரருளால் இவன் முக்தி பெறுவதற்கு விரோத மில்லை.இப்படி மகான்கள் கூறுகின்றார்கள்.

பதாந்வயார்த்த பேதங்கள்.

“நிவ்ருத்தே ஸர்வதுக்காநாம்” என்கிற சுலோகமுதல் இந்தசுலோகம் வரையிலுள்ள சுலோகங்கள் “நாந்த:ப்ரஜ்ஞம்” என்கிற மந்திரத்தின்கருத்தை வெளியிடுகின்றனவென்று அந்த மந்திரவ்யாக்யாநம் செய்தபின் சங்கரபாஷ்யத்தில் வ்யாக்யானம் செய்யப்பட்டன. “அத்ரைதேச்லோகாபவந்தி” என்று இந்தசுலோகங்களுக்கு அவதாரிகை எழுதப்பட்டது. அந்த வாக்யத்திற்கு “நாந்த:ப்ரஜ்ஞம்” என்கிற இம்மந்திரத்தின் வ்யாக்யாநமாக இந்தசுலோகங்களிருக்கின் றனவென்று பொருள். கூரநாராயணமுநி இந்த சுலோகங்களை மாண்டூக்யோபநிஷத்தே என நினைத்து சுருதியேசுலோகங்களையும் படிக்கிறதென்று வ்யாக்யாநம் செய்தார். இவர்,விசிஷ்டாத்வைதமத பண்டிதரென்று முன் சொல்லியிருக்கிறோம்.

கஅ. விச்வஸ்யாத்வவிவக்ஷாயாமாதிஸாமாந்யமுத்கடம் |
மாத்ராஸம்ப்ரதிபத்தௌ ஸ்யாதாப்திஸாமாந்யமேவ ச ||

౧౯. విశ్వస్యాత్వవివక్షాయామాదిసామాన్యముత్కటమ్ ।
మాత్రాసంప్రతిపత్తౌ స్యాదాప్తిసామాన్యమేవ చ ॥

(ப-ம்·) விச்வஸ்ய - விச்வமூர்திக்கு, அத்வவிவக்ஷாயாம் - அகாரரூபத்தைச் சொல்லும்போது, ஆதிஸாமாந்யம் - முதலாவதாயிருக்கின்றமையாகிற ஸாத்ருச்யம், உத்கடம் - ஸ்பஷ்டமாயிருக்கின்றது, மாத்ராஸம்ப்ரதிபத்தௌ - அகாரஸ்வரூபத்தை விசாரிக்கும்போது, ஆப்திஸாமாந்யம் - வ்யாபித்திருக்கின்றமையாகிற ஸாத்ருச்யமும் ஏவச - விளங்குகின்றது,

ஸம்-ஹா. அகாரத்தை விச்வமூர்த்தி என்று சொன்னது இரண்டு ஸாத்ருச்யங்களாலே, முதலாவது முதலாயிருக்கை. இரண்டாவது-வ்யாபித்திருக்கை. அகாரம்சப்தங்களுக்கு முதல். விச்வமூர்தி அர்த்தங்களுக்கு முதல். அகாரம் சப்தங்களை வ்யாபித்திருக்கின்றது. விச்வமூர்தி அர்த்தங்களை வ்யாபித்திருகின்றான்.

வி-ஹா. விச்வமூர்த்தியை எல்லா அக்ஷரங்களுக்கும் முதலாவதான அகாரத்திற்கு வாச்யனாகத்யாநம் செய்கிற உபாசகனுக்கு பலம் எல்லாரிலும் முதல்வனாகை. வ்யாபநகுணத்தாலே விச்வமூர்த்தியை தியாநிப்பவன் விச்வமூர்தியினுடையசாம்யத்தைப் பெறுகிறான்,

௨௰. 𑌤𑍈𑌜𑌸𑌸𑍍𑌯𑍋𑌤𑍍𑌵𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑍇 𑌉𑌤𑍍𑌕𑌰𑍍𑌷𑍋 𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍇 𑌸𑍍𑌫𑍁𑌟𑌮𑍍।
𑌮𑌾𑌤𑍍𑌰𑌾𑌸𑌮𑍍𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌤𑍍𑌤𑍌 𑌸𑍍𑌯𑌾𑌦𑍁𑌭𑌯𑌤𑍍𑌵𑌂 𑌤𑌥𑌾𑌵𑌿𑌧𑌮𑍍॥

౨౦. తైజసస్యోత్వవిజ్ఞానే ఉత్కర్షో దృశ్యతే స్ఫుటమ్ ।
మాత్రాసమ్ప్రతిపత్తౌ స్యాదుభయత్వం తథావిధమ్॥

(ப்-ம்.) 𑌤𑍈𑌜𑌸𑌸𑍍𑌯 - தைஜஸமூர்த்தியை, 𑌉𑌤𑍍𑌵𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑍇 - உகாரரூபமாகத்யாநிக்கும்போது, 𑌉𑌤𑍍𑌕𑌰𑍍𑌷𑌃 - உத்கர்ஷமானது, 𑌸𑍍𑌫𑍁𑌟𑌮𑍍 - நன்றாய், 𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍇 - காணப்படுகிறது, 𑌮𑌾𑌤𑍍𑌰𑌾𑌸𑌮𑍍𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌤𑍍𑌤𑍌 - உகாரரூபத்தை சிந்திக்கும்போது, 𑌉𑌭𑌯𑌤𑍍𑌵𑌮𑍍 - இரண்டாயிருக்கை, 𑌤𑌥𑌾𑌵𑌿𑌧𑌮𑍍 - அப்படிப்பட்டது.

ஸம்-ஹா. முன்போலவே எல்லாம்.

வி-ஹா. முன் சொன்னபடி தைஜஸனை, உத்கர்ஷத்தால், ப்ரணவத்தி லிரண்டாவது மாத்திரையாகிய உகாரத்திற்குப் பொருளென்று த்யாநிப்பவனுக்கு, ஸர்வோத்கர்ஷங்களுமுண்டு. முன்சொன்ன வழியே இரண்டுக்கும் காரணமாகின்றமையால் உகாரத்திற்குப் பொருளென்று த்யாநிப்பவனுக்கு, ஸர்வஜ்ஞத்வம் ஸமாநத்வ மிரண்டு முண்

௨௧. 𑌮𑌕𑌾𑌰𑌭𑌾𑌵𑍇 𑌪𑍍𑌰𑌾𑌜𑍍𑌞𑌸𑍍𑌯 𑌮𑌾𑌨𑌸𑌾𑌮𑌾𑌨𑍍𑌯𑌮𑍁𑌤𑍍𑌕𑌟𑌮𑍍 ।
𑌮𑌾𑌤𑍍𑌰𑌾𑌸𑌮𑍍𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌤𑍍𑌤𑍌 𑌤𑍁 𑌲𑌯𑌸𑌾𑌮𑌾𑌨𑍍𑌯𑌮𑍇𑌵 𑌚॥

౨౧. మకారభావే ప్రాజ్ఞస్య మానసామాన్యముత్కటమ్ ।
మాత్రాసమ్ప్రతిపత్తౌ తు లయసామాన్యమేవ చ॥

(ப்-ம்.) 𑌪𑍍𑌰𑌾𑌜𑍍𑌞𑌸𑍍𑌯 - ப்ராஜ்ஞமூர்த்தியை, 𑌮𑌕𑌾𑌰𑌭𑌾𑌵𑍇 - மகாரமா த்யாநிக்கும்போது, 𑌮𑌾𑌨𑌸𑌾𑌮𑌾𑌨𑍍𑌯𑌮𑍍 𑌉𑌤𑍍𑌕𑌟𑌮𑍍 - அளவிடுதல்ஸமாநமாயிரு கிறது, 𑌮𑌾𑌤𑍍𑌰𑌾𑌸𑌮𑍍𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌤𑍍𑌤𑍌 - மகாஸ்வரூபத்தை சிந்திக்கும்போது 𑌲𑌯𑌸𑌾𑌮𑌾𑌨𑍍𑌯𑌮𑍇𑌵 𑌉𑌤𑍍𑌕𑌟𑌮𑍍 - லயமாகிற ஸாத்ருச்யமுத்கடமாய் விள

ஸம்-ஸா. அளவும் லயமும் ப்ராஜ்ஞனுக்கும் மகாரத்திற்கும் ஸாத்ருச்யமாயிருக்கிறதென்று பொருள்.

வி-ஸா. முதல்ஸாம்யத்தா லுபாஸிப்பதற்கு முதப்பலம். இரண்டாவது ஸாம்யதாலுபாஸிப்பதற்கு இரண்டாவதுபலம் என்றுபொருள்.

உஉ. த்ரிஷு தா⁴மஸு யஸ்துல்யம் ஸாமாந்யம் வேத்தி நிஶ்சித꞉ ।
ஸ பூஜ்ய꞉ ஸர்வபூ⁴தாநாம் வந்த்³யஶ்சைவ மஹாமுநி꞉ ॥

౨౨. త్రిషుధామసుయస్తుల్యంసామాన్యంవేత్తినిశ్చితః ।
సపూజ్యస్సర్వభూతానాంవంద్యశ్చైవమహామునిః॥

(ப - ம்.) த்ரிஷு தா⁴மஸு - மூன்றிடங்களிலும், துல்யம் ஸாமாந்யம் - ஸமாநமாயிருக்கிற ஸாத்ருச்யத்தை, ய꞉ வேத்தி - எவனறிகிறானோ, ஸ꞉ ஏஷ꞉ - அப்படிப்பட்ட இவன், மஹாமுநி꞉ - ப்ரம்மஸ்வரூபத்தை யறிந்தவரில் சிறந்தவன், ஸர்வபூ⁴தாநாம் - எல்லாப்ராணிகளுக்கும், பூஜ்ய꞉ - பூசிக்கத்தக்கவன், வந்த்³ய꞉ ச - நமஸ்கரிக்கத்தக்கவன்.

ஸம்-ஸா. இவ்வாறு அகார உகார மகாரங்களுக்கும் விச்வதைஜஸப்ராஜ்ஞர்களுக்கு முண்டான ஸாம்யத்தை எவனறிகிறானோ அவன் எல்லாரிலும் சிறந்தவன்.

வி-ஸா. கீழ்ச்சொல்லியபடி உபாஸிப்பவனுக்கு, கீழ்ச்சொல்லிய பயன்களுண்டாகிறதென்றறிந்தவனுக்கும், ஸர்வச்லாக்ய முண்டாகுமென்று முன்சொன்ன விஷயத்தை யுறுதிப்படுத்திப் பேசுகிறது.

உ௩. அகாரோ நயதே விஶ்வமுகாரஶ்சாபி தைஜஸம் ।
மகாரஶ்ச புந꞉ ப்ராஜ்ஞம் நாமாத்ரே வித்³யதே க³தி꞉ ॥

౨౩. అకారోనయతేవిశ్వముకారశ్చాపితైజసమ్ ।
మకారశ్చపునఃప్రాజ్ఞంనామాత్రేవిద్యతేగతిః॥

(ப-ம்.) அகார꞉ - அகாரமானது, விஶ்வம் - விச்வமூர்த்தியை, நயதே - அடைவிக்கின்றது. உகார꞉ - உகாரமானது, தைஜஸம் - தைஜஸமூர்த்தியை, நயதே - அடைவிக்கின்றது, மகாரஶ்ச புந꞉ - மகாரமும், ப்ராஜ்ஞம் - ப்ராஜ்ஞமூர்த்தியை, நயதே - அடைவிக்கின்றது. அமாத்ரே - துரீயமூர்த்தியினிடத்தில், க³தி꞉ - கதியானது, ந வித்³யதே - இல்லை.

ஸம்-ஸா. மூன்று மாத்திரைகளுக்கும் கதியை அடைகின்ற தன்மையிருக்கின்றது. பின்பு பீஜம் க்ஷயித்துப்போகையால் துரீயத்தில் கதியில்லை.

வி-ஸா. விச்வாதிமூர்திகளை யுபாஸநம் செய்வதினால் ஸர்வச்லாக்கிய பலமுண்டாவதும் தவிர விச்வாதிமூர்தி ப்ராப்தியு முண்டாகிறதென்று சொல்லுகிறது. துரீயமூர்தியை யுபாஸித்தவனுக்கு கதியில்லை என்பதில்லை. கதியுண்டென்று சொல்லவமைந்திருக்க, கதியில்லை என்பதில்லை என்றது, சிலர் கதியில்லை என்று சொல்லுகின்றமையால் வருகிற ஸந்தேஹம் நீக்குவதற்கு.

## பதாந்வயார்த்தபேதங்கள்.

இந்த சுலோகத்தில் விசிஷ்டாத்வைதமத பண்டிதர்களின் பாஷ்யத்தில் வித்யதேகதி꞉ என்கிற விடத்தில் வித்யதே அகதி꞉ என்று பதம். சங்கர பாஷ்யத்தில், வித்யதே, கதி꞉, என்று பதம்.

## விசேஷ விஷயங்கள்.

'விச்வஸ்யாத்வவிவக்ஷாயாம்' என்பதுமுதல் ஐந்துசுலோகங்கள், 'ஸோயமாத்மா' என்கிற சுருதி தொடங்கி நாலுசுருதிகளுக்கு வ்யாக்யாநமாக கௌடபாதாசாரியர்

செய்தவை. சங்கரபாஷ்யத்தில் அந்த நாலு சுருதிகளுக்கும் வ்யாக்யானம் செய்து அதின் பின் இந்த சுலோகங்களை யெடுத்து வ்யாக்யானம் செய்யப்பட்டிருக்கின்றது. விசிஷ்டாத்வைதமத பண்டிதர்களாகிய கூர நாராயணமுனி முதலிய சிலர் இந்தசுலோகங்களையும் மாண்டூக்யோப நிஷத்தாக நினைத்து வ்யாக்யானம் செய்திருக்கிறார்கள். அந்த பாஷ்யங்களை இங்கு எழுதலாயிற்று. இந்த சுலோகங்களுக்கு முன்னும், "அத்ரைதேச்லோகாபவந்தி" என்று அவதாரிகை சங்கரபாஷ்யத்திலுண்டு. அதற்கு முன் சொன்னபடியே பொருள்.

௨௪. 𑌓𑌙𑍍𑌕𑌾𑌰𑌂𑌪𑌾𑌦𑌶𑍋𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌤𑍍𑌪𑌾𑌦𑌾𑌮𑌾𑌤𑍍𑌰𑌾𑌨𑌸𑌂𑌶𑌯𑌃 ।
𑌓𑌙𑍍𑌕𑌾𑌰𑌂𑌪𑌾𑌦𑌶𑍋𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾𑌨𑌕𑌿𑌂𑌚𑌿𑌦𑌪𑌿𑌚𑌿𑌨𑍍𑌤𑌯𑍇𑌤𑍍 ॥

౨౪. ఓంకారంపాదశోవిద్యాత్పాదామాత్రానసంశయః ।
ఓంకారంపాదశోజ్ఞాత్వానకించిదపిచింతయేత్ ॥

(ப்-ம்.) 𑌓𑌙𑍍𑌕𑌾𑌰𑌮𑍍- ப்ரணவத்தை, 𑌪𑌾𑌦𑌶𑌃-பாதம்பாதமாக, 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌤𑍍- அறிந்துகொள்ளக்கடவன், 𑌪𑌾𑌦𑌾𑌃 - பாதங்கள், 𑌮𑌾𑌤𑍍𑌰𑌾𑌃 - மாத்திரைகள், 𑌨𑌸𑌂𑌶𑌯𑌃 - ஸந்தேகமில்லை, 𑌓𑌙𑍍𑌕𑌾𑌰𑌮𑍍 - ப்ரணவத்தை, 𑌪𑌾𑌦𑌶𑌃 - பாதம் பாதமாக, 𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 - அறிந்துகொண்டு, 𑌕𑌿𑌂𑌚𑌿𑌦𑌪𑌿 - ஒன்றையும், 𑌨𑌚𑌿𑌨𑍍𑌤𑌯𑍇𑌤𑍍 - சிந்திக்கக்கூடாது.

ஸ௦-ஹா. முன்சொல்லிய ஸாத்ருச்யங்களாலே ஓங்காரத்தின் மாத்திரைகளே ஆத்மாவினுடைய பாதங்கள், பாதங்களே ஓங்காரத்தினுடைய மாத்திரைகள் இவ்வாறு ப்ரணவத்தை யறிந்தவன் வேறு ப்ரயோஜனத்தை எதையும் சிந்திக்கக்கடவனல்லன். எல்லா மிவனாலே யடையப்பட்டமையாலென்க.

வி-ஹா. அகண்ட ப்ரணவப் பொருளான பரமாத்வை அகண்ட ப்ரணவப் பொருளாகிய விச்வமூர்த்தி முதலிய நான்கு பாதங்களை யுடையவராக சிந்திக்கவேண்டியது. இவ்வாறறிந்தவனெல்லா பலங்களையும் பெற்றவனாகிறானதால் வேறுசிந்தை செய்ய வேண்டியதில்லை என்று கருத்து.

௨௫. 𑌯𑍁𑌞𑍍𑌜𑍀𑌤𑌪𑍍𑌰𑌣𑌵𑍇𑌚𑍇𑌤𑌃𑌪𑍍𑌰𑌣𑌵𑍋𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌨𑌿𑌰𑍍𑌭𑌯𑌮𑍍 ।
𑌪𑍍𑌰𑌣𑌵𑍇𑌨𑌿𑌤𑍍𑌯𑌯𑍁𑌕𑍍𑌤𑌸𑍍𑌯𑌨𑌭𑌯𑌂𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇𑌕𑍍𑌵𑌚𑌿𑌤𑍍 ॥

౨౫. యుంజీతప్రణవేచేతఃప్రణవోబ్రహ్మనిర్భయమ్ ।
ప్రణవేనిత్యయుక్తస్యనభయంవిద్యతేక్వచిత్ ॥

(ப்-ம்.) 𑌚𑍇𑌤𑌃 - நெஞ்சை, 𑌪𑍍𑌰𑌣𑌵𑍇 - ப்ரணவத்தில், 𑌯𑍁𑌞𑍍𑌜𑍀𑌤 சேர்க்கக்கடவன், 𑌪𑍍𑌰𑌣𑌵𑌃 - ப்ரணவமானது, 𑌨𑌿𑌰𑍍𑌭𑌯𑌮𑍍 - அபயஸ்வரூபமகிய, 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 - ப்ரம்மம், 𑌪𑍍𑌰𑌣𑌵𑍇 - ப்ரணவத்தில், 𑌨𑌿𑌤𑍍𑌯𑌯𑍁𑌕𑍍𑌤𑌸𑍍𑌯 - எப்போதும்சிந்தையுடையவனுக்கு, 𑌕𑍍𑌵𑌚𑌿𑌦𑍍𑌭𑌯𑌮𑍍𑌨𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇- எங்கும்பயமில்லை

ஸ௦-ஹா. தத்வஜ்ஞானமில்லாதவனுக்கும் ப்ரணவத்தைத் யானிப்பதினால் தத்வஞானம் பிறக்குமாகையால ப்ரவணத்தில் நெஞ்சைச் செலுத்தி ப்ரணவத்யானம் செய் வேண்டியது. ப்ரணவமே ப்ரம்மரூபமானது, இந்தப்ரணவத்தில் நித்யம் சிந்தையுள்ளவனுக்கு எங்கும் பயமில்லை என்று சொல்லுகின்றது.

வி-ஸா. ஸ்ரீமந்நாராயணனை நித்யத்யாநம் செய்து அகண்ட ப்ரணவப் பொருளாக சிந்திக்கவேண்டியது. அவன் கல்யாண குணங்கள் நிறைந்தவன் இவனை தியாநித்தவனுக்கும் பயமென்பதுண்டோ. எங்கும் பயமில்லை சுகத்தையடைகிறான். ஆகையால் ஸம்ஸாரத்தைக் கழித்துக்கொள்ளவதில் எண்ணமுடையவன் அவச்யம் ப்ரணவார்த்தமான அவனை த்யாநம் செய்யவேணுமென்று இந்த சுலோகத்தின் கருத்து.

உசு. ப்ரணவோ ஹ்யபரம் ப்ரஹ்ம ப்ரணவஸ்ச பரஸ்ஸ்ம்ருத:।
அபூர்வோऽநந்தரோऽபாஹ்யோऽநபர: ப்ரணவோऽவ்யய:॥

௨௬. ప్రణవో హ్యపరంబ్రహ్మప్రణవశ్చపరస్స్మృతః।
అపూర్వోనంతరో బాహ్యోనపరః ప్రణవోవ్యయః॥

(ப-ம்.) ப்ரணவ: - ப்ரணவம், அபரம் ப்ரஹ்ம ஹி - அபரமான ப்ரம்மமாகின்றது. ப்ரணவ: - ப்ரணவம், பர: ச - பரமானப்ரம்மமாக, ஸ்ம்ருத:- ஸ்மரிக்கப்படுகிறது, ப்ரணவ: - ப்ரணவம், அபூர்வ: - அபூர்வமானது, அநந்தர: - பேதமில்லாதது. அபாஹ்ய: - வெளிப்படாதது. அநபர: - கார்யரூபமில்லாதது, அவ்யய: - அழிவில்லாதது.

ஸ0-ஸா. பராபரப்ரம்மம் ப்ரணவமே. நிர்விசேஷ ப்ரம்மஸ்வரூபமும் ப்ரணவமே. அந்தந்த அதிகாரிகளுக்குத் தக்கபடி யிருக்கின்றது.

வி-ஸா. ப்ரணவப் பொருளான நித்ய ஸ்வரூபமும் அவதாரங்களில் ஸ்வரூபமும் எல்லாம் கல்யாண குணங்களெல்லாவற்றாலும் பூர்ணங்களேயாம். இது சுருதிகளிலெங்கும் ப்ரஸித்தமாயிருக்கின்றது. ஆகையா லப்படிப்பட்ட பரமாத்மாவினுடைய ஸமஸ்தஸ்வரூபங்களையும் சொல்லுகிற இந்த ப்ரணவமும் ஸர்வ பூர்ணமே யாகின்றது.

உஎ. ஸர்வஸ்ய ப்ரணவோ ஹ்யாதிர்மத்யமந்தஸ்ததைவ ச।
ஏவம் ஹி ப்ரணவம் ஜ்ஞாத்வா வ்யஶ்நுதே தத³நந்தரம்॥

௨௭. సర్వస్యప్రణవో హ్యాదిమధ్యమంతస్తథైవచ।
ఏవంహిప్రణవంజ్ఞాత్వావ్యశ్నుతేతదనంతరమ్॥

(ப-ம்.) ஸர்வஸ்ய - எல்லாவற்றிற்கும், ப்ரணவ: - ப்ரணவமானது, ஆதி: ஹி - முதலானது, மத்யம் - நடுவுள்ளது, ததைவ ச - அப்படியே, அந்த: ச - முடிவிலிருப்பது, ஏவம் - இவ்வாறு, ப்ரணவம் - ப்ரணவத்தை, ஜ்ஞாத்வா - அறிந்துகொண்டு, தத³நந்தரம் - அதற்குப்பின், வ்யஶ்நுதே - ப்ரம்மத்தையடைகிறான்.

ஸ0-ஸா. மாயாஸ்ருஷ்டிகளுக்கு மாயாவி, காரண மாகிருப்போல இம்மாயா ப்ரபஞ்சத்திற்கு காரணமும் இருப்பும லயமும் இந்த ப்ரணவமே யென்றறிந்தவன் பரமாத்மஸ்வரூபத்தை யடைகிறான்.

வி-ஸா. ஸமஸ்த ஜகத்தினுடைய பிறப்புக்கு மிருப்புக்கு மிறப்புக்கும் காரணமாகிய, பரப்ரம்மம், பரவாசுதேவன், பரமாத்மா, என்று சொல்லப்படுகிற ஸ்ரீமந் நாராயணனை யறிந்தவன் பரமபதத்தை யடைகிறான்.

௨௮. 𑌪𑍍𑌰𑌣𑌵𑌂𑌹𑍀𑌶𑍍𑌵𑌰𑌂𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯𑌹𑍃𑌦𑌿𑌸𑌂𑌸𑍍𑌥𑌿𑌤𑌂 ।
𑌸𑌰𑍍𑌵𑌵𑍍𑌯𑌾𑌪𑌿𑌨𑌮𑍋𑌂𑌕𑌾𑌰𑌂𑌮𑌤𑍍𑌵𑌾𑌧𑍀𑌰𑍋𑌨𑌶𑍋𑌚𑌤𑌿॥

౨౮. ప్రణవంహీశ్వరంవిద్యాత్సర్వస్యహృదిసంస్థితమ్ ।
సర్వవ్యాపినమోంకారంమత్వా ధీరో న శోచతి॥

(ப·ம்.) 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 - ஸமஸ்தப்ராணிகளுடையவும், 𑌹𑍃𑌦𑌿 - ஹ்ருதயத்தில், 𑌸𑌂𑌸𑍍𑌥𑌿𑌤𑌂 - இரானின்ற; 𑌈𑌶𑍍𑌵𑌰𑌂 - பரமாத்மாவை; 𑌪𑍍𑌰𑌣𑌵𑌂 - ப்ரணவமாக; 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌤𑍍 - அறியக்கடவன். இப்படி, 𑌓𑌂𑌕𑌾𑌰𑌂-ப்ரணவத்தை, 𑌸𑌰𑍍𑌵𑌵𑍍𑌯𑌾𑌪𑌿𑌨𑌂 - எல்லாவற்றிலும் வ்யாபித்திருப்பதாக, 𑌮𑌤𑍍𑌵𑌾 - தியாநித்தவனுன, 𑌧𑍀𑌰𑌃 - தீரனுன உபாஸகன், 𑌨𑌶𑍋𑌚𑌤𑌿- துக்கத்தையடையான்.

ஸ0-ஸா. ஹ்ருதய ப்ரதேசத்தில் ப்ரணவத்தை த்யாநிக்கக்கடவன். ஸர்வவ்யாபி என்று ப்ரணவத்தை தியானித்த புத்திமான் சோகிபபதில்லை. இங்கு பல சுருதிகளும் சாக்ஷியாகின்றன.

வி-ஹா. "ஈச்வரஸ் ஸர்வபூதாநாம் ஹ்ருத்தேசே ர்ஜுநதிஷ்டதி, தமேவசரணங் கச்ச" என்று ஸமஸ்த ப்ராணிகளின் ஹ்ருதயத்திலும் ஈச்வரன்வஸிக்கின்ருனவனைச் சரணம் புகவேணு மென்று ஸ்ம்ருதி சொன்னபடி ப்ரணவப் பொருளான ஹரியை ஹ்ருதயத்தில் தியாநம் செய்யவேண்டியது. இப்படி தியாநித்த புத்திமான் சோகமடைவதில்லை. அபஹதபாப்மத்வம் முதலிய குணங்கள் ஆவிர்பவித்து முக்தனுகிருன்.

௨௯. 𑌅𑌮𑌾𑌤𑍍𑌰𑍋𑌽𑌨𑌨𑍍𑌤𑌮𑌾𑌤𑍍𑌰𑌶𑍍𑌚𑌦𑍍𑌵𑍈𑌤𑌸𑍍𑌯𑍋𑌪𑌶𑌮𑌃𑌶𑌿𑌵𑌃 ।
𑌓𑌂𑌕𑌾𑌰𑍋𑌵𑌿𑌦𑌿𑌤𑍋𑌯𑍇𑌨𑌸𑌮𑍁𑌨𑌿𑌰𑍍𑌨𑍇𑌤𑌰𑍋𑌜𑌨𑌃॥

౨౯. అమాత్రోఽనంతమాత్రశ్చద్వైతస్యోపశమశ్శివః ।
ఓంకారోవిదితోయేనసమునిర్నేతరోజనః॥

(ப-ம்.) 𑌅𑌮𑌾𑌤𑍍𑌰𑌃 - மாத்திரையில்லாததும், 𑌅𑌨𑌨𑍍𑌤𑌮𑌾𑌤𑍍𑌰𑌶𑍍𑌚 - அளவில்லாததும், 𑌦𑍍𑌵𑍈𑌤𑌸𑍍𑌯 - பேதப்ரபஞ்சத்திற்கு, 𑌉𑌪𑌶𑌮𑌃 - லயஸ்தாநமாயும். 𑌶𑌿𑌵𑌃 - சிவமாயுமிருக்கிற. 𑌓𑌂𑌕𑌾𑌰𑌃 - ப்ரணவமானது. 𑌯𑍇𑌨 - எவனால். 𑌵𑌿𑌦𑌿𑌤𑌃 - அறியப்பட்டதோ; 𑌸𑌃 - அவன். 𑌮𑍁𑌨𑌿𑌃 - முநியாகிருன். 𑌨𑍇𑌤𑌰𑍋𑌜𑌨𑌃 - மற்றவன் முநியாகான்.

ஸ0-ஸா. ஸர்வபேதங்களும் நீங்கிப்போகின்றமையால் சிவமாய் அதாவதுமங்களரூபமாய் அளவிடப்படாத மகிமை பொருந்திய துரீயமூர்த்தியாகிய ஓங்காரத்தை யறிந்தவனே முனியாகிருன் மற்ற ஸகல சாஸ்திரங்களையும் கற்றுணர்ந்தவனுயினு மந்யன் முநியாகமாட்டான்.

வி-ஹா. ஸமஸ்தவ்யஸ்த ப்ரணவங்களின் உபாஸநத்தை முடித்து அவ்வாறு உபாஸிப்பவனைக் கொண்டாடுகிறது. நித்யமூல ஸ்வரூபியாயும் தன்னிச்சையா லநேகம் திருமேனியைக் கொண்டருளுகிற நாராயணனை யவன் த்யாநிக்கின்ருனே அவனே முனியாகிருன். இதர ஜனங்கள் ஸம்ஸார துக்கத்தை யடைகிருர்கள்.

"ஓங்காரம் பாதசோவித்யாத், என்கிற சுலோகம் முதலாறு சுலோகங்கள் அமாத்ரச்சதுர்த்தோவ்யவஹார்யஃ, என்கிற சுருதிக்கு வ்யாக்யாநமாக கௌடபாதாசாரியரா

செய்யப்பட்டவை அந்த சுருதிக்கு பாஷ்யம்செய்து அந்த சுருதியின் கீழே இந்த சுலோகங்களுக்கு வ்யாக்யானம் செய்திருக்கிறார். இந்த சுலோகங்களை மாண்டூக்யோபநிஷத்தாக நினைத்து கூரநாராயணமுநி முதலிய வசிஷ்டாத்வைத பண்டிதர்களிதற்கு வ்யாக்யானம் செய்திருக்கிறார்கள். அந்த பாஷ்யங்களை இந்த சுலோகங்களின் கீழ் எழுதினோமென்றறிக.

𑌇𑌤𑌿 𑌗𑍌𑌡𑌪𑌾𑌦𑌕𑌾𑌰𑌿𑌕𑌾𑌯𑌾𑌮𑍍 𑌆𑌗𑌮𑌪𑍍𑌰𑌕𑌰𑌣𑌮𑍍.

ஸ்ரீபரப்ரம்மணேநம:.

அபிப்ராயவிசேஷங்கள்.

மாண்டூக்யோபநிஷத்தில் கண்டங்கள் நான்கு. முதல் கண்டத்தில் இரண்டு சுருதிகள். இரண்டாவது கண்டத்தில், ஐந்து சுருதிகள். மூன்றாவது கண்டத்தில், நாலு சுருதிகள். நான்காவது கண்டத்தில் ஒரு சுருதி. ஆக பன்னிரண்டு சுருதிகள் இந்த மாண்டூக்யோபநிஷத்திலடங்கி யிருக்கின்றன. கௌடபாதகாரிகையில் ஆகமப்ரகரணமென்கிற முதல் ப்ரகரணம், இருபத்தொன்பது சுலோகங்களோடு கூடியிருக்கின்றது. இம்முதல் ப்ரகரணத்திலிருக்கிற இருபத்தொன்பது சுலோகங்களில் பஹிஃப்ரஜ்ஞ:, என்கிற சுலோகம் முதல் ஒன்பது சுலோகங்கள், மாண்டூக்யோபநிஷத்தில் இரண்டாவது கண்டம் நான்காவது சுருதி வரையிலுள்ள ஆறு சுருதிகளுக்கு வ்யாக்யானமாக கௌடபாதாசாரியரால் செய்யப்பட்டவை; சங்கராசாரியர் செய்த கௌடபாதகாரிகையின் பாஷ்யத்தில், ஆகமப்ரகரணம், வைதத்யப்ரகரணம், அத்வைதப்ரகரணம், அலாதசாந்திப்ரகரணம், என்கிற நான்கு ப்ரகரணங்களடங்கிய அந்த கௌடபாதகாரிகைக்கு ப்ரயோஜநம் முதலிய வற்றோடு அவதாரிகை கூறியபின், மாண்டூக்யோபநிஷத்து இரண்டாவது கண்டம் நான்காவது சுருதி வரையிலுள்ள ஆறு சுருதிகளையு மெடுத்து வரிசையாய் வ்யாக்யானம் செய்து, "அத்ரைதேசுலோகாபவந்தி" என்று இந்த சுருதிகளுக்கு இவை வியாக்யான சுலோகங்களென்று, கௌடபாதாசாரியர் சொல்லிய வாக்யத்தை விவரித்து இந்த ஒன்பது சுலோகங்களுக்கும் க்ரமமாய் வ்யாக்யானம் செய்திருக்கின்றார். இந்த ஒன்பது சுலோகங்களுக்குமேல் "நிவ்ருத்தேஸர்வதுக்காநாம்" என்கிற பத்தாவது சுலோகம் முதல் ஒன்பது சுலோகங்கள், மாண்டூக்யோபநிஷத்து இரண்டாவது கண்டம் ஐந்தாவது சுருதிக்கு வ்யாநமாக கௌடபாதாசாரியரால் செய்யப்பட்டவை. இந்த ஒன்பது சுலோகங்களுக்கும் சங்கராசாரியர் செய்த கௌடபாதகாரிகையின் பாஷ்யத்தில் மாண்டூக்யோபநிஷத்து இரண்டாவது கண்டத்தி லைந்தாவது சுருதியை எடுத்து வ்யாக்யானம் செய்து "அத்ரைதேச்லோகாபவந்தி" இந்த சுருதிக்கு வ்யாக்யான மிந்த சுலோகங்களென்று கௌடபாதாசாரியர் சொல்லிய வாக்யத்தை விவரித்து பின் வரிசையாய் வ்யாக்யான மெழுதப்பட்டிருக்கிறது. ஆகவே, மாண்டூக்யோபநிஷத்து இரண்டாவது கண்டம் வரையிலுள்ள ஏழு சுருதிகளுக்கு பதினெட்டு சுலோகங்களால் அத்வைதமதத்திற்கிணங்க கௌடபாதாசாரியரால் வ்யாக்யானம்செய்யப்பட்டதென்று ஸ்பஷ்டமாயிற்று. இந்த பதினெட்டு சுலோகங்களுக்குமேல் "விச்வஸ்யாத்வவிவக்ஷாயாம்" என்கிற சுலோகம் முதல் ஐந்து சுலோகங்கள் மாண்டூக்யோபநிஷத் மூன்றாவது கண்டத்திலுள்ள நாலு சுருதிகளுக்கு வ்யாக்யானமாக கௌடபாதாசாரியரால் செய்யப்பட்டவை. இந்த ஐந்து சுலோகங்களுக்கும் முன், சொன்னபடி மாண்டூக்யோபநிஷத்தில் மூன்றாவது கண்டத்தி லைந்து சுருதிகளையு மெடுத்து வ்யாக்யானம் செய்தபின், "அத்ரைதேச்லோகாபவந்தி" இந்த நாலு சுருதிகளுக்கு வ்யாக்யானமாக இந்த ஐந்து சுலோகங்களிருக்கின்றன வென்று கௌடபாதாசாரியர் சொல்லிய வாக்யத்தை

விவரித்தபின் வ்யாக்யாநம் செய்திருக்கின்றார். இந்த இருபத்திமூன்று சுலோகங்களுக்குமேல் "ஓங்காரம் பாதசோவித்யாத்" என்கிற சுலோகம் முதலுள்ள ஆறு சுலோகங்கள், மாண்டூக்யோபநிஷத்து நான்காவது கண்டத்திலுள்ள ஒரு சுருதிக்கு வ்யாக்யமாக கௌடபாதாசாரியரால் செய்யப்பட்டவை. இந்த ஆறு சுலோகங்களுக்கும் முன் சொன்னபடி அந்த ஒரு சுருதியையு மெடுத்து வ்யாக்யாநம் செய்து "அத்ரைதேச்லோகாபவந்தி" என்று இந்த ஒரு சுருதிக்கு வ்யாக்யாநமாக இந்த ஆறு சுருதிகளிருக்கின்றன என்று கௌடபாதாசாரியர் சொல்லிய வாக்யத்தை விவரித்தபின் வ்யாக்யாநம் செய்திருக்கிறார். ஆக இருபத்தொன்பது சுலோகங்களடங்கிய ஆகமப்ரகரணமென்கிற முதல் ப்ரகரணம் நாலு கண்டங்களடங்கிய மாண்டூக்யோபநிஷத்திலுள்ள பன்னிரண்டு சுருதிகளுக்கு வ்யாக்யாநமாக கௌடபாதாசாரியரால் செய்யப்பட்டதென்பது விளங்கிற்று. சங்கராசாரியர் செய்த இந்த கௌடபாதகாரிகையின் ஆகமப்ரகரண பாஷ்யத்தில் நடுவில் மாண்டூக்யோபநிஷத்தை எடுத்து வ்யாக்யாநம் செய்ததற்குக் காரணம் கௌடபாதாசாரியர் மாண்டூக்யோபநிஷத்தை இடையிலே சேர்த்துச் சேர்த்துப் படித்து இங்கு இந்த சுலோகங்களை வ்யாக்யாநமாகக் காண்கவென்று, சுலோகங்களைச் சேர்த்திருப்பதேயாம். ஆக, இவ்வாறு ஆகமப்ரகரணத்திற்கு வ்யாக்யாநம் செய்யும்போது மாண்டூக்யோபநிஷத்திற்கும் சங்கராசாரியர் பாஷ்யம் செய்தவராயினர். கூரநாராயணமுநி முதலிய சில விசிஷ்டாத்வைத பண்டிதர்கள் "அத்ரைதேச்லோகாபவந்தி" என்கிற வாக்யத்தையும், உபநிஷத்தில் சேர்ந்ததேயென்று நினைத்தார்கள். இங்கு சங்கராசாரியர் ஆநந்தகிரி ஆசாரியர் முதலிய அத்வைதபண்டிதர்களனேகர் இந்த ஆகமப்ரகரண சுலோகங்களை உபநிஷத்தல்லவென்று ஒப்புக்கொண்டிருக்கவும், உபநிஷத்திற்குப்போலவே இதற்குமவர்கள் வ்யாக்யாநம் செய்தது, இந்த ஆகமப்ரகரணத்தையும் மாண்டூக்யோபநிஷத்தாக ப்ரமித்தமையாலென்று சிலர் சொல்லுகிறார்கள். சில விசிஷ்டாத்வைத பண்டிதர்கள், ப்ரத்யக்ஷமாக சங்கரபாஷ்யத்தில் இந்த ஆகமப்ரகரணம் மாண்டூக்யோபநிஷத் தல்லவென்று சொல்லும்போது இதைப்பாராமல் ப்ரமித்தார்களென்று சொல்வது பொருந்தாமையால், சிலரிதை மாண்டூக்யோபநிஷத்தென்று சொல்வது கொண்டு, தங்கள் பாண்டித்யமகிமையைக் காட்டுவதற்கு, கௌடபாதாசாரியர் அத்வைதமதத்திற்கே அநுகூலமாக எண்ணிச்செய்த சுலோகங்களையும் விசிஷ்டாத்வைத மதத்திற்கிணங்க வ்யாக்யாநம் செய்தார்கள் இதனை லத்வைதிகளுக்கு மத்வைதமதத்தை இதரமதங்கலவாமல் சொல்லக்கூடாமையால், அத்வைதமதம் சுத்தமல்ல வென்பது நன்றாய் விளங்குமென்பது அவர்களின் கருத்தென்று சொல்லுகிறார்கள். வேறே சிலர், மாண்டூக்யோபநிஷத்தையே கௌடபாதகாரிகை என்று சங்கராசாரியர் கூறினரென்று ஸந்தேகப்படுகிறார்கள். அது யுக்தமல்ல, ப்ராமாணிக சிகாமணியாகிய சங்கராசாரியரிடத்தி லிவ்வித ஸந்தேகங்கொள்வதில் அவரிடத்திலஸூயை தவிர வேறு காரணமில்லாமையாலென்க. அன்றியே அத்வைதமதத்தையே தெளிவாய்ப் பேசுகிற அந்த சுலோகங்களை சுருதி என்று சொல்வது அவர் மதத்திற்கு பலமாகுமே யல்லது கௌடபாதகாரிகை என்பதில் பயனில்லை. அவர் சுருதியை கௌடபாதகாரிகை என்று ப்ரமித்தாரெனபதும் வீண்வாதமேயாம். மாண்டூக்யோபநிஷத்தில் நாலாவது கண்டத்திலிருக்கிற சுருதியில் யஏவம்வேத, யஏவம்வேத' என்று இரட்டிப்பு, காணப்படுகின்றமையால் அவ்வளவோடு அந்த உபநிஷத்து முடிந்ததென்று விளங்குகின்றமையாலென்க. இதுநிற்க, மாண்டூக்யோபநிஷத்தி லடங்கி யிருக்கிற பன்னிரண்டு சுலோகங்களுக்கும் வேறு விதமாக கண்டங்கள் பிரித்து மூன்று, அல்லது ஐந்து கண்டங்களென்று சிலர் சொல்வது ஸம்ப்ரதாயத்திற்கு விரோதமானதால் நம்பத்தக்கதன்று. இதிலுள்ள விசேஷங்களை புத்திமான்கள்

கித்துக் கொள்ளவேண்டியது. கௌடபாதகாரிகையில் மற்ற மூன்று ப்ரகாணங்களுக்கும் விசிஷ்டாத்வைத பண்டிதர் யாரும் வ்யாக்யாநம் செய்யவில்லை. ஆனதால் சங்கர பாஷ்யமொன்றே எழுதப்படுகிறது. சில விடங்களில் ஆநந்தகிரி ஆசாரியர் முதலிய பண்டிதர்களின் அபிப்ராயமும் காட்டப்படும் என்றறிக.

இனி மூன்றுப்ரகரணங்களிலும் சுருதியென்கிற ஸந்தேகமு மில்லாமையாலும் கருத்தைக்கொண்டு பதவுரை ஊகித்துக்கொள்ளும்படி ஸுலபமா யிருக்கின்றமையாலும் பதவுரை எழுதப்படாது.

ஸ்ரீகுருபரம்பராயைநம:.

𑌅𑌥 𑌗𑍌𑌡𑌪𑌾𑌦𑌕𑌾𑌰𑌿𑌕𑌾𑌯𑌾𑌂 𑌵𑍈𑌤𑌥𑍍𑌯𑌪𑍍𑌰𑌕𑌰𑌣𑌮𑍍.

௧. 𑌵𑍈𑌤𑌥𑍍𑌯𑌂𑌸𑌰𑍍𑌵𑌭𑌾𑌵𑌾𑌨𑌾𑌂𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑌆𑌹𑍁𑌰𑍍𑌮𑌨𑍀𑌷𑌿𑌣𑌃।
𑌅𑌨𑍍𑌤𑌃𑌸𑍍𑌥𑌾𑌨𑌾𑌤𑍍𑌤𑍁𑌭𑌾𑌵𑌾𑌨𑌾𑌂𑌸𑌂𑌵𑍃𑌤𑌤𑍍𑌵𑍇𑌨𑌹𑍇𑌤𑍁𑌨𑌾॥

౧. వైతథ్యంసర్వభావానాంస్వప్నఆహుర్మనీషిణః।
అంతఃస్థానాత్తుభావానాంసంవృతత్వేనహేతునా॥

ஸ0-ஹா. "ஒன்றே இரண்டாவதில்லை" என்று சுருதியின்படி, "அறிந்தபோது பேதமில்லை" என்று முன்கூறினர். இஃதுபதேச மாத்திரத்தால் நம்பத்தக்கதோ; அல்லது யுக்தியாலும் பேதமில்லை என்று நிரூபிக்கக் கூடுமோ வென்று சங்கை நீங்குவதற்கு பேதமதத்தில் யுக்தி தூஷணங்கள் சொல்லக்கருதி இவ்விரண்டாவது ப்ரகரணம் துடங்குகின்றார். உள்ளும் வெளியுமுள்ள வஸ்துக்கள் அதாவது சரீரத்திற்குள்ளும் வெளியில் கண் முதலிய இந்திரியங்களுக்குப் புலப்படு மவையுமான வஸ்துக்களெல்லாம் ஸ்வப்நத்தில் பொய்யாய் விடுகின்றனவென்பது பண்டிதர்களனைவரும் சம்மதித்த விஷயமே. இதற்குக் காரணம் இவ்வாத்மா சரீரத்திற்குள்ளிருக்கும்போது சரீரத்திற்குள் மலை, யானை, முதலிய மிகவும் பெரிய வஸ்துக்களை ஸ்வப்நத்தில் காண்கிறான். அவைகள் தங்குவதற்கு இடமில்லாத சூக்ஷ்மமான நாடிகளில் அவைகளிருப்பதாகப் பிறக்கிற ஸ்வப்நஜ்ஞாநம் பொய்யாவதில் ஸந்தேகமில்லை யன்றோ. ஆக, ஸ்தாநம் முதலியவை கூடாமையே ஸ்வப்நம் பொய்யாவதற்குக் காரணம். த்வைத மதத்தை அதாவது பேதவாதி மதத்தைப் பொய்யென்று யுக்தியால் ரூபிக்க வந்தவர் ஸ்வப்நம் பொய்யென்பது எல்லோரும் சம்மதித்த விஷயமே என்று சொல்லுகிற விதற்குக் காரணம், என்னவென்றால் இரண்டு வஸ்துக்களேர்ப்பட்டபோது பேதமேர்ப்படு மாகையால் ப்ரம்மத்தை யொழிந்த எல்லாப் பொருளையும் பொய்யென்றே லொழிய பேதம் பொய்யென்பது கூடாமையால் ஜகத்திலுள்ள ஸகல வஸ்துக்களும் பொய்யே என்று சொல்லவேண்டி வருகின்றமையால் அப்படி எல்லாவற்றையும் பொய்யென்னும்போது ஒரு திருஷ்டாந்தம் காட்டவேண்டுகின்றமையால் ஸ்வப்நம் பொய்யாவதுபோல எல்லாம் பொய்யென்று திருஷ்டாந்தம் கூறவேண்டி, ஸ்வப்நத்தை சிலவாதிகள் மெய்யென்று கொள்ளுகின்றமையால் ஸ்வப்நம் எவ்வாறு பொய்யாமென்று ஆக்ஷேபம் வாராமைக்காக ஸ்வப்நம் பொய்யென்பதில் காரணங்களைக் கூறுகின்றார். ப்ரமாணத்தை யநுசரித்த யுக்தியைக் கொள்ளலாமே யன்றி ப்ரமாண விருக்தமான யுக்தி ஒப்புக்கொள்ளத்தக்க தன்றாகையால் முதல் ப்ரகரணத்தில் ப்ரமாணத்தைக் கூறி இந்த ப்ர

கரணத்தில் த்வைத மதம் பொய்யென்பதில் யுக்தி சொல்லுகிறார். ஆனதாலந்த ப்ர கரணத்திற்குப்பின் இந்த ப்ரகரணம் வைக்கப்பட்டதென்றறிக.

உ. 𑌅𑌦𑍀𑌰𑍍𑌘𑌤𑍍𑌵𑌾𑌚𑍍𑌚 𑌕𑌾𑌲𑌸𑍍𑌯 𑌗𑌤𑍍𑌵𑌾 𑌦𑍇𑌶𑌾𑌨𑍍𑌨 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 ।
𑌪𑍍𑌰𑌤𑌿𑌬𑍁𑌦𑍍𑌧𑌶𑍍𑌚 𑌵𑍈 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌦𑍇𑌶𑍇 𑌨 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 ॥

౨. అదీర్ఘత్వాచ్చ కాలస్య గత్వా దేశాన్న పశ్యతి।
ప్రతిబుద్ధశ్చ వై సర్వస్తస్మిన్ దేశే న విద్యతే॥

ஸ0-ஹா. முன்சுலோகத்தில் சரீரத்திற்குள்ளடங்காத பெருத்த வஸ்துக்களையெல் லாம் ஸ்வப்நத்தில் காண்கின்றமையால் அந்தந்த வஸ்துக்களுக்குத்தக்க விடமில்லாமை யால் ஸ்வப்நம் பொய்யென்று சொன்னார். இந்தசுலோகத்தில், சரீரத்திற்குள்ளே அந்த வஸ்துக்களைக் கண்டாலன்றோ அவ்வாறு பொய்யென்பதற்கு, இவ்வாத்மா அந் தந்த வஸ்துக்களிருக்குமிடம் சென்று அவ்வோ வஸ்துக்களைக் காண்கிறானென்று கூறில் அந்த தோஷ மில்லையே; ஆனதினால் அவ்வாறேகொண்டு ஸ்வப்நத்தை மெய் யென்பது தக்கதேயாமென்கிற சங்கைக்குப் பரிஹாரம் கூறுகின்றார். இவ்வாத்மா சரீரத்தை விட்டு தேசாந்தரம் சேர்ந்து அந்த தேசங்களிலிருக்கிற வஸ்துக்களை ஸ்வப் நத்தில் காண்கிறானென்று சொல்ல வழியில்லை. அனேக மாசகாலம் பிரயாணம் செய் தடைய வேண்டிய தேசத்திலிருக்கிற வஸ்துக்களை ஒரு க்ஷணத்தில் ஸ்வப்நத்தில் காண்கிறான். அவ்வளவு அல்பகாலத்தில் அவ்வளவு தூரம் போகமுடியாமையாலிது பொய்யே யாமென்க. அன்றியே, எந்த தேசத்தில் இவன் ஸ்வப்நம் கண்டானோ இவன் விழித்துக்கொண்டபோது அந்த தேசத்திலிருப்பதில்லை, நாமிப்போது காசியி லிருக்கிறோமென்று ஸ்வப்நத்தில் நினைத்துக்கொண் டிருக்கும்போதே விழித்துக்கொ ண்டு பார்த்தா லிவன், முன் படுத்துக்கொண்டிருந்த விடத்திலே கிடக்கிறானன்றோ. ஸ்வப்நத்தில் தேசாந்தரம் போவது மெய்யாயின் ஸ்வப்நம் காண்பவனில் ஒருவனாவது தான் ஸ்வப்நங் கண்ட தேசத்தில் விழித்துக்கொள்ளலா மன்றோ. அப்படியோ காண ப்படவில்லை. மேலும், இரவில் கண்ணுறங்கினவன் ஸ்வப்நத்தில் பகலாகக் காண்கி றான். தனியேபடுத்தவன், அனேகமாயிரம்பேரோடு கூடிக்கலந்துபேசி விளையாடினதாக ஸ்வப்நங் காண்கிறான். இவன் வாஸ்தவமாய் அவ்வாறு பலரோடு கூடியிருப்பானாயின் அவர்களிலொருவராவது நானிவனை இன்னசமயத்திலின்னவிடத்தில் கண்டேனென்று இவன் எந்ததேசத்தில் எந்தகாலத்தி லவர்களோடு கூடி தனதாகஸ்வப்நம் கண்டானோ அந்த தேசத்தையு மந்த காலத்தையும் குறிப்பிட்டுச் சொல்லவேண்டும். அப்படி சொல் லுவதில்லையன்றோ. ஆகையாலந்தந்த தேசங்களுக்குப் போய் ஸ்வப்நங் காண்கிறா னென்று சொல்லுவதற்கிடமில்லை. இதனால் அந்த ஆக்ஷேபத்திற்கிடமில்லை.

௩. 𑌅𑌭𑌾𑌵𑌶𑍍𑌚 𑌰𑌥𑌾𑌦𑍀𑌨𑌾𑌂 𑌶𑍍𑌰𑍂𑌯𑌤𑍇 𑌨𑍍𑌯𑌾𑌯𑌪𑍂𑌰𑍍𑌵𑌕𑌮𑍍 ।
𑌵𑍈𑌤𑌥𑍍𑌯𑌂 𑌤𑍇𑌨 𑌵𑍈 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌂 𑌸𑍍𑌵𑌪𑍍𑌨 𑌆𑌹𑍁𑌃 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌿𑌤𑌮𑍍 ॥

౩. అభావశ్చ రథాదీనాం శ్రూయతే న్యాయపూర్వకమ్ ।
వైతథ్యం తేన వై ప్రాప్తం స్వప్న ఆహుః ప్రకాశితమ్॥

ஸ0-ஹா. இவ்வாறு யுக்தியினால் ஸ்வப்நம் பொய்யென்று ஏற்படுவதோடுவேதத் திலும் ஸ்வப்நம் பொய்யென்று சொல்லுகின்றது. அந்த சுருதியிலும் இந்ததேசகாலவி ரோதமே யுக்தியாகக் காட்டப்பட்டது. ஸ்வப்நத்தில் தேரில்லை தேரோடும் வீதியில்லை திருநாளில்லை. ஆயினும் தேரும் வீதியும் திருநாளும் ஸ்வப்நத்தில் காணப்படுகி

தன்றே என்று சுருதி கூறுகின்றது. ஆக சுருதியினாலும் யுக்தியாலும் ஸ்வப்நம் பொய்யென்பது சித்தமாயிற்று. ஆக, உலகம் பொய்யென்பதற்கு இது திருஷ்டாந்தமாக்கப்படுமென்க.

௪. 𑌅𑌨𑍍𑌤𑌃𑌸𑍍𑌥𑌾𑌨𑌾𑌤𑍍𑌤𑍁𑌭𑍇𑌦𑌾𑌨𑌾𑌂𑌤𑌸𑍍𑌮𑌾𑌜𑍍𑌜𑌾𑌗𑌰𑌿𑌤𑍇𑌸𑍍𑌮𑍃𑌤𑌮𑍍 ।
𑌯𑌥𑌾𑌤𑌤𑍍𑌰𑌤𑌥𑌾𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑍇𑌸𑌂𑌵𑍃𑌤𑌤𑍍𑌵𑍇𑌨𑌭𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 ॥

౪. అన్తస్థానాత్తుభేదానాంతస్మాజ్జాగరితేస్మృతమ్ ।
యథాతత్రతథాస్వప్నేసంవృతత్వేనభిద్యతే ॥

ஸம்-ஸா. இவ்வாறு ஸ்வப்நத்தில் காணப்படுகிற பொருள்கள், காணப்படுகின்றமையால் பொய்யானது போல, உலகமும் காணப்படுகின்றமையால் பொய்யேயென்றறியத்தக்கது. உலகமெல்லாம் பொய்யாகின்றது. ஏனென்றால், கண்ணுக்குப் புலப்படுகிற தன்றே. கண்ணுக்குப் புலப்பட்டமாத்திரத்தால் பொய்யென்று சொல்வது கூடுமோவெனில், கூடும். கண்ணுக்குப் புலப்படுகின்றமையால் ஸ்வப்நம் பொய்யாகிற தன்றே. ஸ்வப்நத்தில் பொருளுள்ளே காணப்படுகிறது; உலகம் வெளியே காணப்படுகின்றது. இவ்வளவு பேதமொழிய பொய்யாவதிலும் காணப்படுவதிலும் பேதமில்லை.

௫. 𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑌜𑌾𑌗𑌰𑌿𑌤𑌸𑍍𑌥𑌾𑌨𑍇𑌹𑍍𑌯𑍇𑌕𑌮𑌾𑌹𑍁𑌰𑍍𑌮𑌨𑍀𑌷𑌿𑌣𑌃 ।
𑌭𑍇𑌦𑌾𑌨𑌾𑌂𑌹𑌿𑌸𑌮𑌤𑍍𑌵𑍇𑌨𑌪𑍍𑌰𑌸𑌿𑌦𑍍𑌧𑍇𑌨𑍈𑌵𑌹𑍇𑌤𑍁𑌨𑌾 ॥

౫. స్వప్నజాగరితస్థానేహ్యేకమాహుర్మనీషిణః ।
భేదానాంహిసమత్వేనప్రసిద్ధేనైవహేతునా ॥

ஸம்-ஸா. இவ்வாறு உலகம் பொய்யென்று தீர்ந்தமையால் இவ்வுலகத்தையும் ஸ்வப்நமேயென்று விவேகிகள் சொல்லுகின்றார்கள். முன்சொன்ன ஹேதுக்களால் ஸ்வப்நம் பொய்யென்று ஸித்தித்தமையாலும் அதுபோல உலகமெல்லாம் பொய்யேயாகின்றமையாலுமென்க.

௬. 𑌆𑌦𑌾𑌵𑌨𑍍𑌤𑍇𑌚𑌯𑌨𑍍𑌨𑌾𑌸𑍍𑌤𑌿𑌵𑌰𑍍𑌤𑌮𑌾𑌨𑍇𑌽𑌪𑌿𑌤𑌤𑍍𑌤𑌥𑌾 ।
𑌵𑌿𑌤𑌥𑍈𑌸𑍍𑌸𑌦𑍃𑌶𑌾𑌸𑍍𑌸𑌨𑍍𑌤𑍋𑌽𑌵𑌿𑌤𑌥𑌾𑌇𑌵𑌲𑌕𑍍𑌷𑌿𑌤𑌾𑌃 ॥

౬. ఆదావన్తేచయన్నాస్తివర్తమానేఽపితత్తథా ।
వితథైస్సదృశాస్సన్తోఽవితథాఇవలక్షితాః ॥

ஸம்-ஸா. இன்னமும் பல காரணங்களாலும் உலகம் பொய்யென்று விளங்குகின்றது, முன்னும் பின்னுமில்லாத பொருள்நடுவிலுமில்லாததேயாம். கானல்தண்ணீர் முதலியவை முன்னுமில்லாமல் பின்னுமில்லாமல் நடுவில் தோற்றி யழிகின்றமையால் பொய்யாகின்றதன்றே அதுபோலவே, உலகத்தில் காணப்படுகிற பொருளும் முதலிலுமில்லாமல் அந்தத்திலுமில்லாமல் நடுவில் காணப்படுகின்றமையால் பொய்யேயாகின்றது. ஆக இவ்வாறுலகம் பொய்யாயினு மறிவிலாதாருக்கு மெய்போல் காண்கிறது. வாஸ்தவத்தில் பொய்யென்பது பொய்யான ஸ்வப்நத்திற்கு ஸமானமாகின்றமையாலென்க.

௭. 𑌸𑌪𑍍𑌰𑌯𑍋𑌜𑌨𑌤𑌾𑌤𑍇𑌷𑌾𑌂𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑍇𑌵𑌿𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 ।
𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑌾𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑌵𑌤𑍍𑌤𑍍𑌵𑍇𑌨𑌮𑌿𑌥𑍍𑌯𑍈𑌵𑌖𑌲𑍁𑌤𑍇𑌸𑍍𑌮𑍃𑌤𑌾𑌃 ॥

౭. సప్రయోజనతాతేషాంస్వప్నేవిప్రతిపద్యతే ।
తస్మాదాద్యన్తవత్త్వేనమిథ్యైవఖలుతేస్మృతాః ॥

ஸ௦-ஹா. விழித்துக்கொண்டிருக்கும்போது காணப்படுகிற வஸ்துக்கள்பயனுடையவாயிருக்கின்றன. கூறைசோறு நீர் குதிரைமுதலிய பொருள்கள், உடுக்கவும், பசியடக்கவும் தாகந்தீர்க்கவும் பயணம் செய்யவு முபயோகப்படுகின்றன. ஸ்வப்நத்தில் காணப்பட்டவஸ்துக்கள் அவ்வாறு பயன்பட்டவையல்ல. ஆதலால் ஸ்வப்நம் போலவே விழித்துக்கொண்டிருக்கும்போது காணப்படுகிற உலகம் பொய்யென்பது ஸரியல்லவென்கிற ஸந்தேஹத்தை இந்த சுலோகம் நீக்குகின்றது. விழித்துக்கொண்டிருக்கையில்காணப்படுகிற உலகமெல்லாம் பொய்யேயாம், ஏனென்றால் ஸ்வப்நத்தில் காணப்படுகிற பொருள்களும் அப்போது பயனுடையவைபோலவே தோற்றுகின்றதன்றோ. ஸ்வப்நத்தில் பசியெடுத்தபோது ஸ்வப்நத்தில் சோறுண்டானுகில் அப்போது தீருகின்றதன்றோ. இவ்வாறே மற்றவைகளுக்கும் காண்க. ஸ்வப்னத்தில் வயிறுநிரம்ப புசித்தவன் விழித்துக்கொண்டஉடனே பசியால் வருந்துகின்றமையால் ஸ்வப்நத்தில் சோறுஇவன் பசியை நீக்கவில்லையே யெனில் இது விழித்துக்கொண்டிருக்கும் போதும் துல்யமே. விழித்துக்கொண்டிருந்தபோது வயிறுநிரம்பபுசித்தவன், ஸ்வப்நத்திலுடனே பெறும்பசியால் வருந்துகின்றான். அப்போது விழித்திக்கொண்டிருக்கும்போது இவன் புசித்ததும் வீணாயிற்றன்றோ. ஆகையால் ஸ்வப்நம் போலவே இதுவும் ப்ரயோஜநமில்லாததாகையால் பொய்யென்பதில் யாதொருதடையுமில்லை.

௮. 𑌅𑌪𑍂𑌰𑍍𑌵𑌂 𑌸𑍍𑌥𑌾𑌨𑌿𑌧𑌰𑍍𑌮𑍋 𑌹𑌿 𑌯𑌥𑌾 𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑌨𑌿𑌵𑌾𑌸𑌿𑌨𑌾𑌮𑍍 ।
𑌤𑌾𑌨𑌯𑌂 𑌪𑍍𑌰𑍇𑌕𑍍𑌷𑌤𑍇 𑌗𑌤𑍍𑌵𑌾 𑌯𑌥𑍈𑌵𑍇𑌹 𑌸𑍁𑌶𑌿𑌕𑍍𑌷𑌿𑌤𑌃 ॥

౮. అపూర్వం స్థానిధర్మో హి యథా స్వర్గనివాసినామ్।
తానయం ప్రేక్షతే గత్వా యథైవేహ సుశిక్షితః॥

ஸ௦-ஹா. உறங்கும்போதும் விழித்துக்கொண் டிருக்கும்போதும் காணப்படுகிற பொருள்களுக்கு பேதமில்லாமையால் ஸ்வப்நத்தில் கண்ட வஸ்துக்களைப்போல் விழித்துக்கொண்டிருக்கும்போது காணப்படுகிற பொருள்களும் பொய்யே என்று சொல்லுவது யுக்தமல்ல, ஏனென்றால் திருஷ்டாந்தமாகிய ஸ்வப்நத்தில் கண்ட பொருளுக்கும் விழித்துக்கொண்டிருக்கும்போது காணப்படுகிற பொருளுக்கும், ஒத்துமையில்லை. விழித்துக்கொண்டிருக்கும்போது காணப்படுகிற பொருள்களையே ஸ்வப்நத்தில் காண்கிறானென்கிற நிச்சயமில்லை. எப்போதுங் காணுதவைகளையுங் காண்கிறான். நான்கு தந்தங்களையுடைய யானையின்பேரில் எட்டுகைகளுடன் தானேறி வீதிவலம்வர்தாகக் காண்கிறான். இவ்வாறு விழித்திருக்கும்போதில் காணப்படாத விசித்திரங்களையெல்லாம் ஸ்வப்நத்தில் காண்கிறான். அதுபோன்ற ஒருபொருளைப் பொய்யென்று சொல்லுவதற்கு திருஷ்டாந்தங் கிடையாமையால் அவ்வாறுகண்ட ஸ்வப்நம் மெய்யேயாகின்றது. ஆகையால் ஸ்வப்நமெல்லா பொய்யென்பது கூடாதாயிற்று. ஆகவே, ஸ்வப்நம்போல உணர்வுகாலத்தில் வஸ்துக்கள் பொய்யென்று சொல்லுவதும் மிகவும் கூடாததாயிற்று. என்று ஆக்ஷேபிப்பது ஸரியல்ல. ஸ்வப்நத்தில் அபூர்வமாய்க் காணப்படுகிற வஸ்துக்களஸத்யங்களென்று சொல்வதறகுக் கூடாது. அவையெல்லாம் ஸ்வப்நகாலத்திலிந்த ஆத்மாவுக்குத் தோற்றுகிற தருமங்கள். சுவர்க்கமுதலிய லோகங்களில் ஆயிரங்கண்கள் முதலியவை இந்த ஆத்மாவுக்குத் தோற்றுவதுபோல ஸ்வப்நத்திலும் அநேக விசித்திரங்கள் அந்த ஸ்வப்நஸ்தாநத்தில் தோற்றுகின்றன. ஸ்வயமாயுண்டானவையல்ல. ஸுவர்க்கத்திலிருக்கின்ற தேவேந்திரன் முதலியவர்களுக்கு ஆயிரங் கண்கள் முதலிய விசேஷங்க ளுண்டாயிருக்கின்றன வன்றோ. ஆனதால் தன் சித்த விகாரத்தால் கற்பிக்கப்பட்டவையாகிய விசித்திரப் பொருள்களை இவ்வாத்மா ஸ்வப்நஸ்

த்ரம் சேர்ந்து காண்கிறான். ஒரு தேசத்திலிருந்து மற்றொரு தேசம் போவதற்கு நன்றாய் வழி தெரிந்தவன் அந்ததேசத்திலுள்ள விசித்திரங்களை அந்த தேசத்திற்குப் போய் காண்பதுபோல ஆத்மாவும் ஸ்வப்நஸ்தாநத்திற்குச் சென்று அவ்விடத்தில் தோற்றிய விசித்திரங்களைக் காண்கிறான். ஆத்மாவினுடைய ஸ்வப்நஸ்தாநத்தில் தோற்றுகிற தருமங்களாகிய வஸ்துக்கள், கயிறு முதலிய ஸ்தாநங்களில் தோற்றுகிற பாம்பு முதலிய ஸ்தாந தருமங்கள்போல பொய்யே யாகின்றன. ஆகையால் கானல் ஜலம்போல ஸ்வப்நம் பொய்யென்பது ஸித்தமாகின்றமையால் அதுபோல உலகமும் பொய்யேயாகின்றது.

கூ. ஸ்வப்நவ்ருத்தாவபி த்வந்தச்சேதஸா கல்பிதம் த்வஸத் |
பஹிச்சேதோக்ருஹீதம் ஸத்த்ருஷ்டம் வைதத்யமேதயோ: ||
౯. స్వప్నవృత్తావపిత్వన్తశ్చేతసాకల్పితంత్వసత్ ।
బహిశ్చేతోగృహీతంసద్దృష్టంవైతథ్యమేతయోః॥

பத-ஹா. ஸ்வப்நம்போல விழித்துக்கொண்டிருந்தபோது கண்ட பொருளும் பொய்யே யென்பதை வலியுறுத்துகின்றார். ஸ்வப்நத்தில் காணப்படுகின்ற பொருள் அடுத்த க்ஷணத்தில் காணப்படாமையால் பொய்யாகின்றது என்பது உறுதியாயிருக்கவும் அந்த ஸ்வப்நத்திலேயே சில பொருள்களைப் பொய்யென்றும் சில பொருள்களை மெய்யென்றும் நினைக்கின்றான். ஆனாலும் எல்லாம் பொய்யேயாகின்றது அவ்வாறே விழித்துக்கொண்டிருக்கும்போதும் காணப்படுகிற சில பொருள்களைப் பொய்யென்றும் சில பொருள்களை மெய்யென்றும் நினைக்கின்றான். ஆகையால் ஸ்வப்நத்தில் பொய் யென்றும் மெய்யென்றும் நினைக்கப்பட்ட எல்லாம் பொய்யேயாவதுபோல விழித்துக் கொண்டிருக்கும்போதும் பொய்யென்றும் மெய்யென்றும் நினைக்கப்படுகிற எல்லாம் பொய்யேயாகின்றது. விழித்துக்கொண்டிருக்கும்போது காணப்படுகிற சில பொருள் களில் ஸத்தென்கிற நினைவும் சொலவும் அவை பொய்யென்பதற்கு விரோதமான வல்ல. ஆகையால் உலகம் பொய்யேயாகின்றது.

கய. ஜாக்ரத்வ்ருத்தாவபி த்வந்தச்சேதஸா கல்பிதம் த்வஸத் |
பஹிச்சேதோக்ருஹீதம் ஸத்யுக்தம் வைதத்யமேதயோ: ||
౧౦. జాగ్రద్వృత్తావపిత్వంతశ్చేతసాకల్పితంత్వసత్ ।
బహిశ్చేతోగృహీతంసద్యుక్తంవైతథ్యమేతయోః॥

பத-ஹா. மனோரதமாத்திரத்தால் நினைக்கப்படுகிறவை எப்போதும் பொய்யாயும் வெளியில்காணப்படுகிற வைஸத்தாயும் தோற்றுவதுவிழித்துக்கொண்டிருக்கும்போதும் ஸ்வப்நகாலத்திலும் ஸமானமாகையால் ஸ்வப்நத்தில்போல விழித்துக்கொண்டிருக்கும் போதும் ஸத்தென்று மஸத்தென்றும தோற்றுகிற எல்லாம் பொய்யே யாகின்றது ஆகையால் உலகம் பொய்யென்று முன் சுலோகத்தில் சொல்லியபடி இதற்கும் வ்யாக் யாநம் செய்துகொள்க.

கக. உபயோரபி வைதத்யம் பேதாநாம் ஸ்தாநயோர்யதி |
க ஏதாந்புத்யதே பேதாந்கோ வை தேஷாம் விகல்பக: ||

கஉ. கல்பயத்யாத்மநாத்மாநமாத்மா தேவ: ஸ்வமாயயா |
ஸ ஏவ புத்யதே பேதாநிதி வேதாந்தநிச்சய: ||

౧౧. ఉభయోరపి వైతథ్యం భేదానాం స్థానయోర్యది ।
క ఏతాన్ బుధ్యతే భేదాన్ కో వై తేషాం వికల్పకః ॥

౧౨. కల్పయత్యాత్మనాత్మానమాత్మా దేవస్స్వమాయయా ।
స ఏవ బుధ్యతే భేదానితి వేదాంతనిశ్చయః ॥

ஸ0-ஹா. இவ்வாறு எல்லாம் பொய்யாயின் ப்ரமிப்பவனார் கல்பிக்கின்றவன் யார் கல்பிக்கப்படுமவையவை; ஆகையால் எல்லாம் பொய்யென்பது கூடுமோ என்று ஒருவன் ஆக்ஷேபிக்க அதற்கு சமாதாநம் சொல்லுகிறார். மாத்யமிக மதத்திற்போல யாம் ஸர்வசூந்யவாதம் செய்வதில்லை. நித்யமான ஆத்மாவை ஒப்புக்கொள்ளுகிறோம். ஆகையாலந்த ஆத்மாதன்னிடத்தில் தனை யேகல்பித்துத்தானே ப்ரமிக்கின்றது. ஆகையால் ப்ரமமும் ப்ரமிக்கின்றவனும் ப்ரமிக்கப்படும் பொருளும் எல்லாமந்த ஆத்மாவே அஃதொழிந்தமற்றவை பொய்யென்று சொல்லுகிறோம்.ஆனதால்எங்கள் பேரிலந்த ஆக்ஷேபம்செய்யத்தக்கதன்று ; என்று ஸமாதானம் சொல்லுகிறார். இதற்கெல்லா மாநாதியான அந்த ஆத்மாவினுடைய மாயையே காரணமாகின்றது. என்று வேதாந்திகளின் கொள்கை.ஆகையால் கயிற்றில் கல்பிக்கப்பட்ட பாம்புபோல இவ்வுலகம் பொய்யேயாகின்றது.இதில் முதல் சுலோகம் ஆக்ஷேபம். இரண்டாவது சுலோகம் ஸமாதாநம்.

கங. விகரோத்யபராந்பாவாநந்தஶ்சித்தே வ்யவஸ்திதாந்|
நியதாம்ஶ்ச பஹிஶ்சித்த ஏவம் கல்பயதே ப்ரபு: ||

౧౩. వికరోత్యపరాన్ భావానంతశ్చిత్తే వ్యవస్థితాన్ ।
నియతాంశ్చ బహిశ్చిత్త ఏవం కల్పయతే ప్రభుః ॥

ஸ0-ஹா. உலகத்தில் குயவன் சேணியன் முதலியவர்கள், குடம் வஸ்திரம் முதலிய காரியங்களைச் செய்ய நினைத்தவர் முதலில் செய்யவேண்டிய விதத்தை நெஞ்சிலேர்ப்பாடுசெய்துகொண்டு பின் அதே ரூபத்தில் வெளியில் ரூபநாமங்களை உண்டுபண்ணுகிறார்களோ அவ்வாறே இந்த ஆதிகர்த்தாவான ஆத்மாவும் மாயையாகிற தன்னெஞ்சில் அவ்யக்தமாய் நாமரூபங்களை யேர்ப்படுத்தி ஸ்ருஷ்டி செய்யவேண்டியபடி நிர்மித்துக்கொண்டு பின்பு எல்லோரும் நாமரூபங்களால் வ்யக்தமாய் வ்யவஹரிக்கும்படி செய்கிறான் என்று பொருள். இது கல்பிக்கும் வழியாகும்.

கச. சித்தகாலா ஹி யேऽந்தஸ்து த்வயகாலாஶ்ச யே பஹி: |
கல்பிதா ஏவ தே ஸர்வே விஶேஷோ நாந்யஹேதுக: ||

౧౪. చిత్తకాలా హి యేఽంతస్తు ద్వయకాలాశ్చ యే బహిః ।
కల్పితా ఏవ తే సర్వే విశేషో నాన్యహేతుకః ॥

ஸ0-ஹா. பொய்யாயிருக்கின்ற கற்பிக்கப்பட்ட பொருள்கள் கற்பிக்கப்படுகிற காலத்திலேயே காணப்படுகின்றன. இவ்வுலகமோ நிலைபெபற்றதாய் எல்லாக் காலத்திலும் முன்கண்ட பொருளிதென்று ப்ரத்யபிஜ்ஞையுடன் வேறு காலத்திலும் காணப்படுகின்றது. ஆகையாலிவ்வுலகத்தை கல்பிக்கப்பட்டதென்று சொல்லுவ தெவ்வாறெனில் அதற்கு இந்த சுலோகம் ஸமாதானமாயிருக்கின்றது. உள்ளே தோற்றுகிற சித்த காலங்களென்கிற கல்பிக்கப்பட்ட வஸ்துக்களும் இரண்டு காலங்களையுடைய வெளியில் கல்பிக்கப்பட்ட வஸ்துக்களும் எல்லாம் பொய்யே. ப்ரத்யபிஜ்ஞையினால் விசேஷமில்லை. அதுவே இதென்று தோற்றுகிற ப்ரத்யபிஜ்ஞை ஸ்வப்நத்திலு முண்

டாகையால் ப்ரத்யபிஜ்ஞையினுல் பொய்யல்லவென்பது கூடாது. ப்ரத்யபிஜ்ஞையில் தோற்றுகிற பொருள்கள் இரண்டு காலங்களையுடையனவென்று சொல்லப்படும். அக்காலத்தில் கண்டதே இக்காலத்திலு மிருக்கிறதென்கிற ப்ரத்யபிஜ்ஞையில் இரண்டு காலங்களிலும் ஸம்பந்தம் தோற்றுகின்றமையாலென்க.

கரு. அவ்யக்தா ஏவ யேந்தஸ்து ஸ்புடா ஏவ ச யே பஹி: |
கல்பிதா ஏவ தே ஸர்வே விசேஷஸ்த்விந்த்ரியாந்தரே ||

౧౫. అవ్యక్తా ఏవ యే౽న్తస్తు స్ఫుటా ఏవ చ యే బహిః ।
కల్పితా ఏవ తే సర్వే విశేషస్త్వింద్రియాంతరే॥

ஸ0-ஹா. லோகாநுபவம் ஸ்புடமாயிருக்கின்றது. ஸ்வப்நாநுபவம் ஸ்புடமாகாமலிருக்கின்றது. ஆனதால் ஸ்வப்நம்போல உலகம் பொய்யல்லவென்பது கூடாது. உள்ளே ஸ்புடமன்றியில் தோற்றுகின்ற வஸ்துக்களும் வெளியில் ஸ்புடமாய் தோற்றுகின்ற வஸ்துக்களும் எல்லாம் மநஸ்ஸின் தோற்றமேயாகையால் பொய்யேயாகின்றன. இவ்வாறு ஒன்று ஸ்புடமாயும் ஒன்று ஸ்புடமாகாமலு மிருப்பதற்குக் காரணம் இந்திரியம் வேறுபட்டமையாலென்றறிக. வெளியிந்திரியரியங்களால் காணப்படுகின்றமையால் வெளிப்பொருள்கள் ஸ்புடமாயும் அந்தக் காரணத்தினுல் மாத்திரமே தோற்றுகின்றமையால்ஸ்வப்நம் அஸ்புடமாயும் தோற்றுகின்றது. ஆனதால் ஸ்வப்நம்போல உலகமும் பொய்யே யென்பதில் விரோதமில்லை.

கசு. ஜீவம் கல்பயதே பூர்வம் ததோ பாவாந்ப்ருதக்விதாந் |
பாஹ்யாநாத்யாத்மிகாம்ச்சைவ யதாவித்யஸ்ததாஸ்ம்ருதி: ||

౧౬. జీవం కల్పయతే పూర్వం తతో భావాన్పృథగ్విధాన్ ।
బాహ్యానాధ్యాత్మికాంశ్చైవ యథావిద్యస్తథాస్మృతిః॥

ஸ0-ஹா. உள்ளும் வெளியும் தோற்றுகிற வஸ்துக்களுக்கு ஒன்றோடொன்று ஸம்பந்தமுண்டாம்படி கல்பித்ததற்குக் காரணம் என்னவென்ருல் நான்செய்கிறேன் எனக்கு ஸுகமுண்டாகிறது எனக்கு துக்கமுண்டாகிறது என்று, இவ்வாறின்றி சுத்தமாயிருக்கிற ஆத்ம ஸ்வரூபத்தில் கயிற்றில் பாம்புபோல கல்பித்து பின் அந்த ஜீவனுக்கு, சுகதுக்கங்கள் விளையும்படியாக மற்ற வஸ்துக்களைக் கல்பித்து, க்ரியைகாரகம் பலம் முதலியவைகளை கல்பிக்கின்ருன், இதற்குக் காரணம் இவன் அறிந்தபடி ஸ்ம்ருதி வருவதேயாம். இது முன் கல்பத்திலிருந்த பேதத்தை யநுசரித்து வந்தது.

கஎ. அநிச்சிதா யதா ரஜ்ஜுரந்தகாரே விகல்பிதா |
ஸர்பதாராதிபிர்பாவைஸ்தத்வதாத்மா விகல்பித: ||

౧౭. అనిశ్చితా యథా రజ్జురంధకారే వికల్పితా ।
సర్పధారాదిభిర్భావైస్తద్వదాత్మా వికల్పితః॥

ஸ0-ஹா. முன் சுலோகத்தில் சொல்லியபடி முதலில் எல்லா கல்பநத்திற்கும் மூலமான ஜீவ கல்பனைக்கு மூலஞ்சொல்லுகின்றது. உலகத்தில், தன்னுடைய ஸ்வரூபந் தெரியாதபோது கயிறு முதலியவை, பாம்பென்றும் தாரையென்றும் ப்ரமிக்கப்படுவதுபோல ஆத்மா நானிது என்று ப்ரமிக்கப்படுகிறது. அங்கு கயிற்றின் நிச்சயம் தெரியாமையால் ப்ரமம்பிறந்தது. இங்கு சுத்தசித்ஸ்வரூபம் என்று ஆத்மதத்வநிச்சயம்

பிறவாமையால், நானென்றும் இதென்றும் ப்ரமமுண்டாகிறது. நிச்சயமிருந்தால் பிரம்மம் பிறவாது. தன் விரலைத்தான் மற்றொன்றாக ப்ரமிக்கிறதில்லையன்றோ. ஆகையால் அவித்யையினால் உலகப்ரமமுண்டாகின்றது. என்று எல்லா உபநிஷத்துக்களினுடையவும் ஸித்தாந்தம்.

கஅ. நிஶ்சிதாயாம் யதா ரஜ்ஜ்வாம் விகல்போ விநிவர்த்ததே |
ரஜ்ஜுரேவேதி சாத்வைதம் தத்வதாத்மவிநிஶ்சய: ||

౧౮. నిశ్చితాయాంయథారజ్జ్వాంవికల్పోవినివర్తతే।
రజ్జురేవేతిచాద్వైతంతద్వదాత్మవినిశ్చయః॥

௱0 ஸா. ப்ரமித்தபின் இஃது கயிறேயன்றி வேறல்லவென்று உறுதிபிறந்தபின் மற்றொன்று மின்றிய த்வைதமாவதுபோல ஆத்மநிச்சயம் பிறந்தபின் அத்வைதமேயாகின்றது. இந்த தத்வஜ்ஞானம் சாஸ்திரமாகிற சூரியனால் அஜ்ஞானமாகிற இருள்நீங்கியபின் பிறக்கும்.

கக. ப்ராணாதிபிரநந்தைஶ்ச பாவைரேதைர்விகல்பித: |
மாயைஷா தஸ்ய தேவஸ்ய யயா ஸம்மோஹித: ஸ்வயம் ||

౧౯. ప్రాణాదిభిరనన్తైశ్చ భావైరేతైర్వికల్పితః।
మాయైషాతస్యదేవస్యయయాసమ్మోహితస్స్వయమ్॥

௱0 ஸா. ஆத்மா ஒருவனாயி னளவில்லாத ப்ராணன்முதலிய விகல்பங்கள், என் உண்டாகின்றனவென்று அறியாமையால் ப்ரச்நம் செய்கிறவனுக்கு விடைதருகின்றது இச்சுலோகம். ஆத்மாவாகிய அவனையும் மோகிக்கும்படிசெய்கிற அவனுடைய மாயையினால் இப்படிப்பட்ட கணக்கில்லாத பேதமுண்டாகிறது.

உ0. ப்ராண இதி ப்ராணவிதோ பூதானீதி ச தத்வித: |
குணா இதி குணவிதஸ்தத்வானீதி ச தத்வித: ||

உக. பாதா இதி பாதவிதோ விஷயா இதி தத்வித: |
லோகா இதி லோகவிதோ தேவா இதி ச தத்வித: ||

உஉ. வேதா இதி வேதவிதோ யஜ்ஞா இதி ச தத்வித: |
போக்தேதி ச போக்த்ருவிதோ போஜ்யமிதி ச தத்வித: ||

உ௩. ஸூக்ஷ்ம இதி ஸூக்ஷ்மவித: ஸ்தூல இதி ச தத்வித: |
மூர்த்த இதி மூர்த்தவிதோऽமூர்த்த இதி ச தத்வித: ||

உச. கால இதி காலவிதோ திஶ இதி ச தத்வித: |
வாதா இதி வாதவிதோ புவனானீதி தத்வித: ||

உரு. மன இதி மனோவிதோ புத்திரிதி ச தத்வித: |
சித்தமிதி சித்தவிதோ தர்மாதர்மௌ ச தத்வித: ||

உசு. பஞ்சவிம்ஶக இத்யேகே ஷட்விம்ஶ இதி சாபரே |
ஏகத்ரிம்ஶக இத்யாஹுரனந்த இதி சாபரே ||

உஎ. 𑌲𑍋𑌕𑌾𑌨𑍍𑌲𑍋𑌕𑌵𑌿𑌦𑌃𑌪𑍍𑌰𑌾𑌹𑍁𑌰𑌾𑌶𑍍𑌰𑌮𑌾𑌇𑌤𑌿𑌤𑌦𑍍𑌵𑌿𑌦𑌃 |
𑌸𑍍𑌤𑍍𑌰𑍀𑌪𑍁𑌂𑌨𑌪𑍁𑌂𑌸𑌕𑌂𑌲𑍈𑌙𑍍𑌗𑌾𑌃𑌪𑌰𑌾𑌪𑌰𑌮𑌥𑌾𑌪𑌰𑍇 ||

உஅ. 𑌸𑍃𑌷𑍍𑌟𑌿𑌰𑌿𑌤𑌿𑌸𑍃𑌷𑍍𑌟𑌿𑌵𑌿𑌦𑍋𑌲𑌯𑌇𑌤𑌿𑌚𑌤𑌦𑍍𑌵𑌿𑌦𑌃 |
𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌰𑌿𑌤𑌿𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌵𑌿𑌦𑌃𑌸𑌰𑍍𑌵𑍇𑌚𑍇𑌹𑌤𑍁𑌸𑌰𑍍𑌵𑌦𑌾 ||

౨౦. ప్రాణఇతిప్రాణవిదోభూతానీతిచతద్విదః ।
గుణాఇతిగుణవిదస్తత్వానీతిచతద్విదః ॥

౨౧. పాదాఇతిపాదవిదోవిషయాఇతితద్విదః ।
లోకాఇతిలోకవిదఃదేవాఇతిచతద్విదః ॥

౨౨. వేదాఇతిచవేదవిదఃయజ్ఞాఇతిచతద్విదః ।
భోక్తేతిచభోక్తృవిదోభోజ్యమితిచతద్విదః ॥

౨౩. సూక్ష్మఇతిసూక్ష్మవిదఃస్థూలఇతిచతద్విదః ।
మూర్తఇతిమూర్తవిదోఽమూర్తఇతిచతద్విదః ॥

౨౪. కాలఇతికాలవిదోదిశఇతిచతద్విదః ।
వాదాఇతివాదవిదోభువనానీతితద్విదః ॥

౨౫. మనఇతిమనోవిదోబుద్ధిరితిచతద్విదః ।
చిత్తమితిచిత్తవిదోధర్మాధర్మౌచతద్విదః ॥

౨౬. పంచవింశకఇత్యేకేషడ్వింశఇతిచాపరే ।
ఏకత్రింశకఇత్యాహురనన్తఇతిచాపరే ॥

౨౭. లోకాఁల్లోకవిదఃప్రాహురాశ్రమాఇతితద్విదః ।
స్త్రీపున్నపుంసకంలైఙ్గాఃపరాపరమథాపరే ॥

౨౮. సృష్టిరితిసృష్టివిదోలయఇతిచతద్విదః ।
స్థితిరితిస్థితివిదఃసర్వేచేహతుసర్వదా ॥

உ0-உஅ. ஆத்மஸ்வரூபத்தின் தத்வத்தை யறியாமையால் கயிற்றில் பாம்புபோல அவித்யையினால் ஸமஸ்தப்ராணி பேதங்களும் கல்பிக்கப்பட்டிருக்கின்றன. என்று விசேஷ விசிஷ்டார்தம். இதின் விஸ்தரவ்யாக்யாநம் விசேஷ ப்ரயோஜந மில்லாமையால் செய்யப்படவில்லை. ப்ராணம் முதல் ஸ்திதிவரையிலுள்ள ஸமஸ்தமும் பீஜாத்மாவாகிய இந்த ப்ராணனுடைய காரிய பரம்பரையில் சேர்ந்தவையாகின்றன.

பதாந்வயார்த்தபேதங்கள்.

(20) ப்ராணஸ்வரூபத்தை யறிந்தவர்களாகிய ஹிரண்யகர்ப மதஸ்தரும் வைசேஷிகர் முதலானோரும் ஹிரண்யகர்ப்பனையும் ஈச்வரனையும் ஜகத் காரணம் என்று சொல்லுகிறார்கள். இது கல்பனையேயாகின்றது. ஹிரண்ய கர்பனுக்காவது கேவலேச்வரனுக்காவது ஸ்வதந்திரமாய் ஜகத்தை ஸ்ருஷ்டி செய்யத்தக்க சக்தியில்லை. இவர்களுக்கு அப்படிப்பட்ட சக்தி யுண்டென்று வேதப்ரமாணங் கூறாமையாலென்க. ஹிரண்ய கர்பாகமத்தில் ஹிரண்யகர்பனுக்கு அவ்வித சக்தி யுண்டென்று சொல்லியிருந்தபோதிலும் அபௌரு

ஷேயமான வேதத்திற்கு விரோதமாக புருஷர்களால் செய்யப்பட்ட ஆகமங்களிற் சொல்லுகிற விஷயங்கள் நம்பத்தக்கவை யன்றாகையால் அது ஸரியல்ல. தடஸ்தனாக வைசேஷிகர்கள் சொல்லுகிற ஈச்வர விஷயத்திலும் ப்ரமாணமில்லை. யுக்தியுமில்லை. ஆகையாலதுவும் ஒப்புக்கொள்ளத்தக்கதல்ல. ஆகையால் ப்ராணவித்துக்களென்கிற இவர்கள் சொல்லுவதும் கல்பனையேயாம். லோகாயதிகர் என்கிற சார்வாகமதஸ்தர்கள், ப்ருதிவி அப்பு, தேயம், வாயு என்கிற நான்கு பூதங்களும் ஜகத்திற்குக் காரணம். வேறு காணப்படாத பொருள்கள் காரணங்களாகமாட்டா. அவைகளுண்டென்பது நம்பத்தக்கதல்ல வென்கிறார்கள். இதுவும் கல்பனையேயாம்; ஜடங்களான பூதங்களைக் காரணமென்பது யுக்திக்குச்சேராது. இவை ஜடங்களாகையாலே ஸ்வதஸ்ஸித்தங்களல்ல. அதாவது தங்களுடைய ஸத்தையில் தாங்கள் ப்ரமாணமாகா வென்கை. தம்முடைய குணங்களால் ப்ரகாசிக்கின்றனவென்றும் சொல்லப்போகாது. தங்குணங்கள் தம்மை விஷயீகரிக்கமாட்டாமையாலென்க. நெருப்பினுடைய உஷ்ணகுணமானது நெருப்பைச் சுடுகிறதில்லையன்றோ. ஆகயால் பூதவித்துக்களென்கிற இந்த லோகாயதிகர் சொல்லுவதும் கல்பனையேயாகின்றது. ஸாங்கியர்கள்,ஸத்வரஜஸ்தமஸ்ஸுக்களாகிற குணங்கள் ஸமங்களாய்க்கொண்டு மகான் அஹங்காரம் தன்மாத்திரை பூதங்கள் ரூபமான ஜகத்திற்குக் காரணமென்கிறார்கள். இதுவும் கல்பனையேயாகின்றது. ஸாம்யத்தை யடைந்திருக்கிற குணங்கள் காரணமென்றால் ப்ரளயம் வருவதற்குக் காரணமில்லை. ஸாம்யம் தப்பினபோதுப் ப்ரளயமென்றால் ஸாம்யம் தப்புவதற்குக் காரணமென்ன. காரணமின்றி ஸாம்யம் தப்புமாயின் எப்போதும் ஸாம்யம் தபபக்கூடுமாகையால் எப்போதும் ப்ரளயம்வரவேணும்.ஒரு காரணமுண்டாயின் அந்தகாரணம்நித்யமானால்எப்போதும் ஸாம்யம் தப்பவேணும். அநித்யமாயின் அதற்குக் காரணம் சொல்லவேணுமென்ற நவஸ்தை வரும். ஆகையால் குணவித்துக்களென்கிற இவர்கள் சொல்லுவதும் கல்பனையேயாம். சைவர்கள், ஆத்மா, அவித்யை, சிவன் என்று மூன்று தத்வங்களை ஜகத்காரணமென்று சுருக்கமாய்ச் சொல்லுகிறார்கள். இதுவும் கல்பனையேயாம். சிவன் பேதப்பட்டவனாயின் ஜடரூபியாகிறான். பேதப்படானாயின், மூன்று தத்வங்களென்பது பொருந்தாது. ஆகையால் தத்வ வித்துக்களென்று சொல்லப்படுகிற சைவர்கள் சொல்லுவதும் கல்பனையேயாமென்று "ப்ராணு இதி ப்ரணவிதஃ" என்கிற இருபதாவது சுலோகத்திற்குக் கருத்து.

(21) ஆத்மா ஒருவனே விச்வ தைஜஸ ப்ராஜ்ஞ துரீயமூர்த்திகளாகிற அம்ச ரூபங்களை யடைந்து ஜகத் காரணமாகிறானென்பதும் கல்பனையேயாகின்றது. நிரம்சமாகிய ஆத்மாவுக்கு அம்சமில்லாமையாலென்க. ஆக பாத வித்துக்கள் சொல்லுகிறபடியும் கல்பனையேயாம். சப்தஸ்பர்ச ரூபரஸகந்தங்களே அநுபவிக்கப் படுகின்றமையால் தத்வமென்று வாத்ஸ்யாயனர்

முதலியவர்கள் சொல்லுகின்றார்கள், சப்தாதி விஷயங்களை விஷத்திலும் கொடியவை என்று சொல்லுகின்றமையால் அவைகளை பரமார்த்த தத்வ மென்பது தகாது. ஆகையால் விஷயவித்துக்களென்கிற வாத்ஸ்யாயகர் முதலியவர் சொல்லுவதும் கல்பனையேயாம். பூலோகம் புவர்லோகம் ஸ்வர்க்க லோகம் என்று மூன்று லோகங்கள் பரமார்த்தமாயிருக்கின்றனவென்று பௌராணிகர்கள் சொல்லுகிறார்கள் இதுவும் கல்பனையேயாகின்றது. அநந்த ஸ்தானங்களை மூன்று ஸ்தானங்களென்று கணக்கிட்டுச் சொல்லுவது தகாமையாலென்க. ஆகையால லோகவித்துக்களென்கிற பௌராணிகர்கள் சொல்லுவதும் கல்பனையேயாகின்றது. அக்நி, இந்திரன் முதலிய தேவதைகளே அந்தந்த பலன்களைத் தருகின்றார்களென்று தேவதா காண்டத்தை யறிந்த வேதவித்துக்களென்கிற இவர்கள் சொல்லுகிறார்கள். இதுவும் கல்பனையாகின்றது. ஈச்வரன் பலன்களைத் தருவதில்லை என்று இவர்க ளபிப்ராயப்படுகிறார்கள். இது யுக்தமல்ல. தேவர்கள், நம்முடைய யத்நத்தை யநுசரித்துபலன்களைத்தருகின்றார்களாயின்வேலைக்காரரோடு ஸமானர்களாகிறார்கள். ஸ்வதந்திரமாய் பலனைத் தருவாராயின் அவர்களைப்பூசிப்பது வீணாகின்றது. அந்த தேவதைகளிடத்தில் பக்தியுடையவரும் இந்த தேவதை பலனைத் தருமோ; தராதோவென்று ஸந்தேகப்படுகிறார்கள். இந்த தேவதைகளினுடைய அநுக்கிரகம் ஸ்வதந்திரமாய் காரியம் செய்ய சக்தியில்லாதது. ஆகையால் இதுவும் கல்பனை என்று, "பாதாஇதிபாதவிதः" என்கிற இருபத்தோராவது சுலோகத்திற்குக் கருத்து.

(22) இருக்குயஜுஸ்ஸாமம் அதர்வணம் என்கிற நான்கு வேதங்களே தத்வங்களென்று வேதபாடகர் சொல்லுகிறார்கள். இதுவும் கல்பனையேயாகின்றது. வேதமாவது உலகத்தில் வழங்குகிற எழுத்துக்களைவிட வேறானதாய்க் காணப்படவில்லை. க்ரமமாக உச்சரிக்கப்பட்ட எழுத்துக்களே வேதமென்று ஒட்புக்கொள்ளப்படுகின்றது அந்த க்ரமமும், உச்சரிக்கும்போது தோற்றி மற்றப்போதில் காணப்படாமையால் கல்பிக்கப்பட்டதேயாம். ஆகையால் வேதம் கல்பிக்கப்பட்டதே யாகின்றமையால் தத்வமாகமாட்டாது. ஆகையால் வேதவித்துக்கள் சொல்லுகிற விதுவும் கல்பனையாகின்றது. ஜ்யோதிஷ்டோமம் முதலிய யஜ்ஞங்கள் தத்வங்களென்று போதாயநர் முதலிய யஜ்ஞநிஷ்டர் சொல்லுகின்றார்கள். இதுவும் கல்பனையாகின்றது. யஜ்ஞமாவது திரவ்யம், தேவதை, த்யாகம் என்று மூன்றையும் சேர்த்து யஜ்ஞமென்று பேரிட்டிருக்கின்றமையால் தனித்தனியே ஒன்றும் யஜ்ஞமல்லவென்றால் இந்த ஸமுதாயம் வஸ்து வாகாமையால் ஸமுதாயமும் யஜ்ஞமாகாது. ஆகையால் யஜ்ஞ வித்துக்கள் சொல்லுகிற விதுவும் கல்பனையேயாம். ஆத்மாவை, போக்தாவென்று, ஸாங்க்யர்கள் சொல்லுகிறார்கள். இந்த ஆத்மாவுக்கு போகம், விகாரமாயின் விகாரமுடைய ஆத்மாவை நித்யமானவனென்று சொல்லக்கூடாது. ஸ்வபாவமாயின் எப்போதும் போக்தாவாகவேண்டும். அப்படியின்றி விஷயங்கள் கிடைத்தபோ

தே போகிக்கிறானன்றோ. ஆனதால் போக்த்ரு வித்துக்கள் சொல்லுகிற விதுவும் கல்பனையேயாம். சமையற்காரர்கள் போஜநம் செய்யப்படுகிற ரஸ வஸ்துக்களே தத்வங்களென்று சொல்லுகிறார்கள். இதுவும் கல்பனையேயாகி ன்றது. வ்யஞ்சநம் முதலிய ரஸங்கள் அப்போதே ஒருவனுக்கு மதுரமா யும் ஒருவனுக்குக் கயந்ததாயும் தோற்றுகின்றமையால் ஒருவிதமா யிருக்க வில்லையன்றோ. ஆனதால் போஜ்ய வித்துக்களென்று சொல்லப்படுகிற விவர்கள் சொல்லுவதும் கல்பனையேயாம். என்று "வேதா இதிசவேதவிதঃ" என்கிற இருபத்திரண்டாவது சுலோகத்தின் கருத்து.

(23) சிலர் ஜீவாத்மாவை அணுவென்று சொல்லுகிறார்கள் இது யுக்த மல்ல. ஒரு சமயத்தில் ஸமஸ்த சரீரத்திலும் பிறக்கிற சுக துக்கங்களை அநுபவிக்கக் கூடாமையாலென்க. ஆகையால் ஸூக்ஷ்ம வித்துக்கள் சொல் லுகிற விது கல்பனையேயாம், லோகாயதிகர் இந்த ஸ்தூல சரீரத்தையே ஆத்மா வென்கிறார்கள். நான் ஸ்தூலனாகிறேனென்று ஸ்தூல சரீரத்தை யே நானென்று சொல்லுகிறானன்றோ என்று அவர்களுடைய அபிப்ராயம். இது தக்கதல்ல; இவன் மரணமடைந்தபோது முறங்கும் போதும் ஜ்ஞாந மில்லாம லிருக்கின்றது. ஸ்தூல சரீரமோ அப்போது மிருக்கின்றது. சரீரமே ஆத்மாவாயின் அக்காலத்திலும் அறிவுண்டாகவேணும். ஆத்மா வுக்கு, அறிவேயன்றோ ஸ்வரூபம். இதுவுமின்றி பூதங்களின் கூட்டத் தால் சரீரமுண்டாயிருக்கின்றது. இந்த பூதங்களில் ஒன்றுவது அறிவுடைய தன்று. இந்த கூட்டமோ பூதங்களைவிட வேறொரு வஸ்துவல்ல, இதற்கு அறிவு ரூபங் கூடாது. ஆனதால் ஸ்தூல வித்துக்களாகிய லோகாயதிகர் சொல்லுகிற தேஹாத்மவாதமும் கல்பிதமேயாகின்றது. சூலம் முதலிய ஆயுதங்களை தரித்திருக்கிற சிவன் முதலானோரை பரமார்த்த தத்வமென்று ஆகமவாதிகள் சொல்லுகிறார்கள். அது ப்ரமம், நம்முடைய சரீரம்போல் சூலம் முதலிய ஆயுதங்களை யேந்துகிற கை முதலிய அவயவங்களோடு கூடிய சிவன் முதலானோருடைய சரீரமும், பூதங்களாலுண்டானதாகை யால் அநித்யமாய்விடும். லீலையினால் சரீரத்தைக் கொண்டிருக்கிறானென்ப தும் லீலை யில்லாதபோது சரீரமில்லாமையா லயுக்தமாகிறது. சரீரமில்லாத போது லீலை யில்லாமையாலு மயுக்தமாகிறது. ஆகையால், மூர்த்த வித்துக் கள் சொல்லுகிற விதுவும் கற்பனையேயாம். ஒருவித ஆகாரமுமின்றி ஸ்வ பாவ சூந்யமே பரமார்த்த தத்வமென்று சூந்யவாதிகள் சொல்லுகின்றார்கள். இதுவும் தக்கதல்ல. ஸ்வபாவ சூந்யம் பரமார்த்தமென்பது கூடாமையா லென்க. ஆகையாலிவ்வாறு அமூர்த்தவித்துக்களென்கிற சூந்யவாதிகள் சொல்லுவதும் கல்பனையேயாம் என்று "ஸூக்ஷ்மா இதி ஸூக்ஷ்மவிதঃ" என்கிற இருபத்துமூன்றாவது சுலோகத்தின் கருத்து.

(24.) ஜ்யோதிஷ பண்டிதர் காலமே பரமார்த்தமென்று சொல்லுகிறார் கள். இதுவும் ப்ரமமேயாம். ஏனென்றால், காலம் ஒன்றாயின், கலைமுஹூர்

தம் என்கிற பேதங் கூடாது. பலவாயினப்போது மதற்கு ஸ்வாதந்திரிய மில்லை. உதயகாலம் உச்சிகாலமென்று க்ரியையின் தருமமாகவன்றோ தோற்றுகின்றது. க்ரியாதருமமன்றாயின், காலத்தினு மவ்வித வ்யவஹாரங் கூடாது. அப்படியன்றாயின் காலபரிச்சேதமின்றி க்ரியைநித்யமாக வேண்டி வரும். ஆகையால், காலவித்துக்களென்கிற ஜ்யோதிஷ பண்டிதர்கள் கூறுகின்ற விதுவும் கல்பனையேயாம். ஸ்வரோதயந் தெரிந்தவர், திக்குக்களைப் பரமார்த்தமென்று சொல்லுகின்றனர். இதுவும் ப்ராந்தியேயாம். அதை யறிந்தவரும் அபஜயத்தை யடைகின்றமையாலென்க. ஆகையால் திக் வித்துக்களென்கிற இவர்கள் கூறுவது கல்பிதமேயாகின்றது. தாதுவாதம், மந்த்ரவாதம, இவைகளை ஸத்யமென்று சிலர் நினைக்கின்றார்கள். இது ப்ரமம் தாம்ரம்முதலிய வஸ்துஸ்வபாவ மிருக்கும்போதாவது அழிந்தபோதாவது வேறுரூபஞ்சேராது. மந்திரவாதத்திலும் பாம்பினால் கடிக்கப்பட்டவன் மந்திரத்தால் மந்திரிக்கப்பட்டாலும் விதியுள்ளவனே ஜீவிக்கிறானேயன்றி விதிமாண்டவன் பிழைப்பதில்லையன்றோ. ஆகையால் வாதவித்துக்களென்று சொல்லுகிற இவர்கள் சொல்லுவதும் கல்பனையேயாகின்றது, புவனகோசத்தை யறிந்தவர்கள் இப்பதினான்கு லோகங்களும் ஸத்யமென்பார். இது ப்ரமம். அப்பதினாலுலோகங்களும் காணப்படாமையாலும் கண்டோமென்பவரும் ஒருவர்சொன்னபடி ஒருவர்சொல்லாமையாலுமென்க. ஆகையால் புவனவித்துக்களென்கிற இவர்கள் சொல்லுகிறவிதுவும் கல்பனையேயாம். என்று "காலா இதி காலவிதஃ" என்கிற இருபத்திநாலாவது சுலோகத்தின்கருத்து.

(25.) லோகாயதிகரில் சிலர் மனஸ்ஸையே ஆத்மா வென்கிறார்கள். இது உசிதமல்ல. மநஸ்ஸு ஸ்வதந்திரமாயின் துன்பப்படவேண்டியதில்லை. ஸ்வதந்திரமில்லையாயின் குடமுதலியவற்றைப்போ லாத்மாவாகமாட்டாது. இது கரணமாகையால் தீபம்போல ஆத்மாவாகக்கூடாது கரணமாகியதீபம் ஆத்மாவாகக்கண்டதில்லையன்றோ. ஆகையால்மனோவித்துக்களென்கிற இவர் சொல்வதும் கல்பனையேயாம். புத்தியே ஆத்மாவென்று பௌத்தர் சொல்லுகின்றனர். ஸுஷுப்தியில் புத்திதோற்றாமையாலும் அறியப்படுவதாயின் கடம்போல் மற்றொன்றா லறியப்படவேண்டுகையாலும் புத்திவித்துக்களென்கிற இவர்கள்சொல்வதும் கல்பனையேயாம்.வெளிப்பட்ட ஆகாரங்களின்றி விஜ்ஞானமயமாயிருக்கிற சித்தமே ஆத்மாவென்று பிறர்கூறுகின்றார். அப்போது புத்தியை ஆத்மாவாகச்சொல்லும்போ துண்டான தோஷங்களுண்டாகையால் சித்தவித்துக்களென்கிற விவர்கள் சொல்வதும் கல்பனையேயாகின்றது. விதித்தவைகைச் செய்கையினாலுண்டாகிற தருமத்தையும் விலக்கியவற்றைச் செய்கையினாலுண்டாகிற அதருமத்தையும் பரமார்த்ததத்வமென்று மீமாம்ஸகர் சொல்லுகின்றனர். காலதேசபேதத்தால் தருமாதருமங்களில் வேறுபாடுகொள்ளப்படுகின்றமையால், தருமாதருமவித்துக்களென்கிற இவர்கள் சொல்வதும் கல்பனையேயாம், என்று "மந இதி மநோவிதஃ" என்கிற இருபத்தஞ்சாவது சுலோகத்திற்குக் கருத்து.

26. காரணமாத்திரமாகிய ப்ரதானமென்கிற மூலப்ராக்ருதி ஒன்று, மகான் அஹங்காரம் சப்ததந்மாத்திரம், ஸ்பர்சதந்மாத்திரம், ரூபதந்மாத்திரம், ரஸதந்மாத்திரம், கந்ததந்மாத்திரம், என்கிற காரணகாரியரூபமாகிய ப்ரக்ருதிவிக்ருதிகளென்கிற தத்வங்கள் ஏழு, செவி, வாய், கண், மூக்கு, த்வக்கு, என்கிற ஐந்து ஜ்ஞானேந்திரயங்கள், வாக்கு, பாணி, பாதம், பாயு, உபஸ்தம், என்கிற கருமேந்திரியமைந்து சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம், என்கிற விஷயங்களைந்து, ஆக விகாரங்கள்பதினாறு, ப்ரக்ருதியுமாகாமல் விக்ருதியுமாகாமல் த்ருசிஸ்வபாவனாய் விளங்குகிற புருஷனென்கிற ஆத்மா ஒருவன், ஆக இருபத்தைந்துதத்வங்கள் வாஸ்தவங்களென்று ஸாங்கியர் கூறுகின்றனர். இங்ஙனமிவர்கள் இருபத்தைந்து தத்வங்களென்று சொல்லும்போது கணக்கைக்கூட்டுவது வீணாகின்றது. அது வேறுதத்வமில்லை என்பதைக்குறிப்பதற்காயின், வேறுபொருளுண்டானபோது அதை இல்லைஎன்பதுகூடாது. இல்லையாயின் அக்குறிப்புசேராது. ஆகையாலவரிங்ஙன மிருபத்தைந்து தத்வங்களைச் சொல்லுவது கல்பனையேயாம். பதஞ்சலி மகாமுநி மதத்தேர் இவ்விருபத்தைந்தோடு ஈச்வரனையும்சேர்த்து இருபத்தாறு தத்வங்களென்று கூறுகின்றார் இதுவும் தக்கதல்லவென்பது கீழ்ச்சொல்லியபடி ஸ்பஷ்டமாகின்றது. அன்றியே, ஈச்வரனைப் புருஷனிற்சேராது பிரிக்கக்காரணமில்லை. புருஷதத்வத்தி லந்தர்பாவமில்லையாயின் கடம்போலீஸ்வரன்ஜடரூபியாய் ஈச்வரனாகான். ஆகையால்அவர்கள்மதமும் கல்பனையேயாகின்றது. பாசுபதாகமவாதிகள், ராகம் அவித்யை நியதிகாலகலை மாயை, என்கிற இவைகளையும் சேர்த்துக்கொண்டு, முப்பத்தோருதத்வமென்கிறார்கள். இவ்வாறு பிரிவுகளைப்பிரிக்கில் அநந்தமாய் பிரிக்கக்கூடுமாகையாலும் கீழ்ச்சொன்ன தோஷங்களாலு மிதுவும் கல்பனையேயாகின்றது, சிலர் கணக்கில்லாத தத்வங்களிருக்கின்றனவென்று கூறுகின்றார்கள். இது கல்பனையே அஜ்ஞானத்தால் விவாதப்படுகிறார்களன்றோ. என்று "பஞ்சவிம்சக இத்யேகே" என்கிற இருபத்தாறுவது சுலோகத்திற்குக்கருத்து.

(27) லோகத்திற்கு த்ருப்திசெய்விப்பது தத்வமென்பது லோகவித்துக்களென்கிற லௌகிகர்களினபிப்ராயம். இதுப்ரமம். தனித்தனியே ருசிபேதமுடைய ப்ரபஞ்சத்தை த்ருப்திசெய்விப்பது ஈச்வரனாலும் கூடாமையாலென்க. தக்ஷர்முதலிய மகர்ஷிகள் ஆச்ரமங்கள் பரமார்த்தங்களென்று ஸாதிக்கிறார்கள். இதுகல்பனை; ஆச்ரமமென்பது வேஷமாயின் சூத்திரரும் ப்ராம்மணரைப்போல் வேஷம்போட்டுக்கொள்ளில் அவர்களுக்கும் ஆச்ரமமுண்டாகவேணும் அப்படி இல்லையன்றோ. ஜாதியோடுகூடியே ஆச்ரமத்தை நிச்சயிப்பது அஸாத்யம். ஜாதியை நிச்சயிக்கப்போகாமையாலெவ்வாறு ஜாதியைக்கூட்டி ஆச்ரமங்களைக்காண்பது. ஆனதாலாச்ரமவித்துக்களென்கிற இவர்கள் சொல்வதும் கல்பனையேயாகின்றது. ஆச்ரமஸம்ஸ்காரங்களை ஆச்ரமமென்றாலும் அவை தேஹத்தைச்சேர்ந்தவையானால் பரலோக ஸம்

பந்தமுடையனவாகா. ஆத்மாவிபுவாகையால் அவனிடத்தில் ஸம்ஸ்காரங்கள் சேராதன்றோ. வையாகரணர்கள், ஸ்த்ரீலிங்கம்புல்லிங்கம் நபும்ஸகலிங்கம் இவைகளையுடைய சப்தமேதத்வமென்கிறார்கள். இங்ஙனமாயின், இந்த லிங்கங்கள் சப்தங்களுக்கு ஸ்வபாவமாயின் ஒன்றுக்கு பலஸ்வபாவங்கள் கூடாமையாலே சில சப்தங்கள் மூன்றுலிங்கங்களாயிருப்பது சேராது, உபாதியினாலென்றால் வாஸ்தவமென்பதுபோயிற்று. ஆனதால் லிங்கர்களென்கிற வையாகரணர்கள் சொல்வதும் கல்பனையேயாகின்றது. இரண்டுப்ரம்மங்களறிய த்தக்கவை, பரமென்று மபரமென்றுமெனச்சிலர். இதுபொருந்தாது. அளவுபட்டது ப்ரம்மமாகாமையினாலு மளவில்லாததே ப்ரம்மமாகையாலுமென்க. அகையாலிங்ஙனம் சிலர் சொல்வதும் கல்பனையேயாம். என்று, "லோகான்லோகவித:ப்ராஹு:" என்கிற இருபத்தேழாவது சுலோகத்தின் கருத்து.

(28.) ஸ்ருஷ்டியும் ஸ்திதியும் லயமும் தத்வமென்று பௌராணிகர் சொல்லுகின்றார்கள் ஸத்துக்கு மஸத்துக்கும் ஜந்மம்முதலியவை கூடாதென்று நிரூபிக்கப்போகின்றமையா லிவர்கள் சொல்லுவது கல்பனையேயாம். ஆனதால் உலகத்தி லவரவர்கள் அவ்லோகங்களில் எத்தனை வகையாகப் பிரமிக்கிறார்களோ அத்தனை வகைகளுமிந்த நிர்விசேஷாத்ம ஸ்வரூபத்தில் கல்பிக்கப்பட்டவையேயாமென்பது திண்ணமென்பது 'ஸ்ருஷ்டிரிதிஸ்ருஷ்டிவித:' என்கிற இருபத்தெட்டாவது சுலோகத்தின் கருத்து.

இந்த ஒன்பது சுலோகங்களுக்கும் விசேஷ கடினமன்று என்கிற அபிப்பிராயத்தால், சங்கராசாரியர் பாஷ்யம் செய்யவில்லை ஆநந்தகிரியாசாரியர் வ்யாக்யானம் செய்தார். அதை யநுஸரித்து விசேஷவிஷயங்களையும் சேர்த்து இந்த சுலோகங்களுக்குக் கருத்தெழுதினேனென்றறிக.

உ௯. யம்பா⁴வம்த³ர்ஶயேத்³யஸ்ய தம்பா⁴வம்ஸதுபஶ்யதி |
தம்சாவதிஸபூ⁴த்வாஸௌ தத்³க்³ரஹஸ்ஸமுபைதிதம் ||

౨౯. యంభావందర్శయేద్యస్యతంభావంసతుపశ్యతి ।
తంచావతిసభూత్వాసౌతద్గ్రహస్సముపైతితమ్॥

பா௦-ஹா. எவ்வாறாயினும் இந்த உபாயங்களுக்கு ஐக்யத்தையடைந்து அந்தந்த பாவங்களைக் காட்டக் கண்டவன் அந்தந்த பாவங்களை அந்த ஆத்மாவாகவே காண்கிறான். அந்த பாவமும் அந்த ஆத்மாவோடு ஐக்யத்தை யடைந்திருக்கின்றமையால் அவனை இரக்ஷிக்கின்றது. அவனு மதையே அறிந்து அதையே அடைகிறான்.

௩௰. ஏதைரேஷோऽப்ருத²க்³பா⁴வை: ப்ருத²கே³வேதிலக்ஷித: |
ஏவம்யோவேத³தத்த்வேன கல்பயேத்ஸோऽவிஶங்கித: ||

30. ఏతైరేషోఽపృథగ్భావైఃపృథగేవేతిలక్షితః ।
ఏవంయోవేదతత్త్వేనకల్పయేత్సోఽవిశంకితః॥

ஸா௦-ஹா. இந்த ரீதியில் ஆத்மாவில் வேறின்றித் தோற்றுகிற ப்ராணாதி பாவங்கள் வேறென்று மூடர்கள் நினைக்கிறார்கள். விவேகிகள் கயிற்றில் வேறாய் பாம்புமுதலியவை யில்லையாவதுபோல இந்த ஆத்மாவில் வேறாய் ப்ராணாதி கல்பனையில்லை. என்றும் ப்ராணன்முதலிய ஸமஸ்தமும் இந்த ஆத்மாவில் ப்ரமத்தால் கல்பிக்கப்பட்டவை என்றும் அறிகிறார்கள். ஆகையால் அவர்களே வேதாந்தத்துக்குப் பொருள்சொல்ல வல்லவராவர்.

௩௧. 𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑌮𑌾𑌯𑍇 𑌯𑌥𑌾 𑌦𑍃𑌷𑍍𑌟𑍇 𑌗𑌨𑍍𑌧𑌰𑍍𑌵𑌨𑌗𑌰𑌂 𑌯𑌥𑌾 ।
𑌤𑌥𑌾 𑌵𑌿𑌶𑍍𑌵𑌮𑌿𑌦𑌂 𑌦𑍃𑌷𑍍𑌟𑌂 𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑍇𑌷𑍁 𑌵𑌿𑌚𑌕𑍍𑌷𑌣𑍈𑌃 ॥

౩౧. స్వప్నమాయే యథా దృష్టే గంధర్వనగరం యథా ।
తథా విశ్వమిదం దృష్టం వేదాంతేషు విచక్షణైః ॥

ஸா௦-ஹா. ஸ்வப்நமும் மாயையும் கந்தர்வ நகரமும்போல வேதாந்தங்களில் புத்திமான்களால் இந்த உலகம் காணப்பட்டது. ஸ்வப்நமாவது, எல்லோருக்கும் பொய்யென்பது தெரிந்த விஷயம். மாயையாவது இந்திரஜாலம் முதலியவை. இதுவும் பொய்யேயன்றோ. கந்தர்வ நகரமாவது - ஆகாயத்தில் ஒருகாலத்தில் விசித்திரமான மெத்தை மேடைமுதலிய விசித்திரங்களையுடைய ஒரு பட்டணம்போல் தோன்றி உடனே மறைகின்றதென்று ப்ரஸித்தம். இதுவும் பொய்யேயன்றோ. ஆனதால் இவைபோல உலகமும் பொய்யென்று "நேஹநாநாஸ்திகிஞ்சந" என்பது முதலிய சுருதிகளால் நன்குவிளங்குகின்றது.

௩௨. 𑌨 𑌨𑌿𑌰𑍋𑌧𑍋 𑌨 𑌚𑍋𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑌿𑌰𑍍𑌨 𑌬𑌦𑍍𑌧𑍋 𑌨 𑌚 𑌸𑌾𑌧𑌕𑌃 ।
𑌨 𑌮𑍁𑌮𑍁𑌕𑍍𑌷𑍁𑌰𑍍𑌨 𑌵𑍈 𑌮𑍁𑌕𑍍𑌤 𑌇𑌤𑍍𑌯𑍇𑌷𑌾 𑌪𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑌤𑌾 ॥

౩౨. న నిరోధో న చోత్పత్తిర్న బద్ధో న చ సాధకః ।
న ముముక్షుర్న వై ముక్త ఇత్యేషా పరమార్థతా ॥

ஸா௦-ஹா. எடுத்த ப்ரகரணத்தை முடிப்பதற்கு இந்த சுலோகஞ் சொல்லப்படுகிறது. த்வைதம் பொய்யென்றும் ஆத்மா ஒன்றே மெய்யென்றும் நிரூபித்தமையாலிது ஸித்தமாயிற்று. அதாவது வேதம் லோகம் இவற்றிலுள்ள ஸமஸ்த வ்யவஹாரமும், அவித்யையின் ஸம்பந்தத்தால் வந்ததென்பதாம். ஆகையால், உத்பத்தி ப்ரளயம் இவ்விரண்டும் பொய். பத்தன், முக்தன், முமுக்ஷு, என்கிற விபாகமும் பொய். வாஸ்தவத்தில் பிறப்பு, இருப்பு, இறப்பு, இவையெல்லாம் பொய்யாகையால் ஸம்ஸாரியென்றும் மோக்ஷம் பெற்றவனென்றும் இவ்வாறு பேதப்பட்ட ஆத்மாக்களெவ்வாறு மெய்யாகப்போகிறார்கள். இவ்வாறு உத்பத்தி ப்ரளயம் இதனைப் பொய்யென்றுசொல்லுவதெங்ஙனமெனில் கூறுகின்றோம். பேதம் பொய்யேயன்றோ. "யத்ரஹித்வைதமிவ பவதி" யதிஹநாநேவபச்யதி "ஆத்மைவேதம் ஸர்வம்" "ப்ரம்மைவேதம் ஸர்வம்" "ஏகமே வாத்விதீயம்" "இதம் ஸர்வம் யதயமாத்மா" "இவனுக்கு பேதம்போல் காணப்படுகிறது" "பேதம்போல் காண்கிறான்" "இவை எல்லாமாத்மாவே" "இவை எல்லாம் ப்ரம்மமே" "ஒன்றே இரண்டாவதில்லை." "ஆத்மரூபமே இவை எல்லாமாகக் காணப்படுகிறது" இவைமுதலிய சுருதிகள் பேதங்களையெல்லாம் பொய்யென்று நன்றாய்ப் பேசுகின்றன. ஆக கீழ்ச்சொல்லிய யுக்திகளாலும் இந்த சுருதிகளாலும் உலகமெல்லாம் பொய்யென்பது பெறப்பட்டது. ஆகவே, பிறப்பு, இருப்பு, இறப்பு, எல்லாம் பொய்யாகின்றது. பொய்யாவது அசத்தன்றோ. மெய்யான ஸத்துக்கேயன்று பிறப்பு முதலியவை யுண்டாகும். பொய்யான அஸத்திற்கு பிறப்புமுதலியவை இல்லையன்றோ

முயல்கொம்புக்குப் பிறப்புண்டோ; அழிவுண்டோ; ஆகையா லதுபோலவே அஸத்துக்கு பிறப்புமுதலியவை என்று விளங்கிற்று. ஆக உலகமெல்லாம் பொய்யே யாகையால் அஸத்தான இவ்வுலகத்தில் ஒன்றுக்கும் பிறப்புமுதலியவை யில்லை. பிறப்புமுதலியவை இல்லாதபோது ஒராத்மாபத்தனென்றும் ஒருவன் முக்தனென்றும் சொல்லுகிற பேதம் பொய்யே என்பது ஸித்தமன்றே. இனி, அத்வைதத்திற்கும் பிறப்புமுதலியவை கூடாதன்றே. அத்வைதம் பிறப்புடையது என்று சொல்லுவது மிகவும் விரோதமுடையது. இனி வ்யவஹாரதசையிலிருக்கிற கடம் படம் முதலியவற்றிற்கு உத்பத்திநாசங்கள் சொல்லுவோமென்றால் அவை கயிற்றில் பாம்புபோல கல்பிக்கப்பட்டவையென்று சொன்னோம். கயிற்றில்தோற்றுகிற பாம்புக்கு பிறப்பு அழிவிருந்தாலன்றே இவ்வுலகத்திற்கும் சொல்லலாம். தோற்றமேயன்றி வாஸ்தவத்தில் பிறக்கவுமிறக்கவு மில்லையன்றே. கயிற்றில்தோற்றுகிற பாம்பானது கயிற்றில்பிறக்குமோ மனதில் பிறக்குமோ; கயிற்றில் பிறக்குமாயின் கயிற்றைக்காணு மவர்களெல்லாம் பாம்பைக் காணவேணும். மனதில் பிறக்குமென்றால் வெளியில் தோற்றுவது கூடாது. ஆதலாலந்த பாம்புக்குப் பிறப்பு சொல்லமுடியாது. ஆதலால் மனதில் தோற்றுகிறதென்றே ஒப்புக்கொள்ளவேணும். அவ்வாறு பிறப்பு முதலியவையின்றி வெறும் தோற்றமாகையால் கயிற்றில்பாம்புபொய்யானதுபோல இவ்வுலகமும்மனதின் தோற்றமேயாகையால்பொய்யேயாம். இவ்வுலகம் மநத்தோற்றமின்றி வாஸ்தவமாயின்இவனுக்கு மநமடங்கிய போதாகிய ஸுஷுப்தி என்கிற பேருறக்கத்திலு முலகம் காணப்பட வேண்டுமன்றே. அப்படி காணப்படுவதில்லை. ஆகையால் மநதில்தோற்றுகிற தோற்றமே இவ்வுலகெல்லாம் என்று ஸ்புடமாகின்றது. ஆனதால், இவ்வுலகத்தின் பேதம் பொய்யாகையால் இவ்வுலகத்திற்கு உத்பத்தி முதலியவை இல்லை என்று கௌடபாதாசாரியர் இந்த சுலோகத்தில் கூறுவது மிகவும் தக்கதேயாகின்றது. ஆக, இவ்வாறு பேதம் பொய்யாகிற விது ஸகல ப்ரமாணங்களாலும் சுருதி சாஸ்திரங்களாலும் காட்டப்படுகிறது. ஆனா லிங்கொரு ஸந்தேஹமுண்டாகின்றது. அதாவது இவ்வாறு ஸகலசாஸ்திரங்களுக்கும் பேதமில்லை யென்பதில் கருத்தாயின் அபேதமான அத்வைத ப்ரம்மஸ்வரூபத்தில் சாஸ்த்ர மில்லாமையால் அத்வைதமும் ப்ரமாண சூந்யமாய் ஸர்வசூந்யவாதமாய் விடுமே என்பதுதான். இதற்கு ஸமாதாநம் பேத ப்ரபஞ்சமுண்டாகையால் சூந்யமில்லை என்பதாயி னப்போது பேதமில்லை என்று முன்சொன்ன ஸித்தாந்தத்திற்கு விரோதம் வருமேயென்றால், இதற்கு முன் ஸமாதாநம் சொல்லி யிருக்கிறோம். அதாவது, இவ்வாறு ப்ரமமானது ஒரதிஷ்டாநமின்றி பிறவாதாகையால் பேத ப்ரபஞ்ச ப்ரமத்திற்கு அதிஷ்டாநமாய் ஒன்றிருக்க வேண்டும். அதுவே சுத்த ப்ரம்மமென்பதுதான். ஆனதால் மறுபடியும் அதை எடுத்து தோஷங்காட்டுவது பயனில்லாததேயாம். இனி, பாம்புக்கு அதிஷ்டாநமாய் தோற்றின கயிறும் வாஸ்தவத்தில் அஸத்யமானதுபோல ப்ரபஞ்ச ப்ரமத்திற்கு அதிஷ்டாநமான ப்ரம்மமும் அஸத்தியமாவதில் விரோதமில்லை. ஆனகையால் ஸர்வசூந்யவாதமே த்ருடப்படுகிறதென்றால் அங்ஙனமல்ல, ப்ரமம் நீங்கியபின்னும் அதற்கு முன்னும் அதிஷ்டாநமாகிய கயிறு காணப்படுகின்றமையால் கயிற்றில் தோற்றின ஸர்பம்போல கயிறு பொய்யாகாது. அவ்வாறே ப்ரபஞ்ச ப்ரமத்திற் கதிஷ்டாநமான ப்ரம்மமும் பொய்யாகாது. ஆனால் கயிறானது ஸர்பகாலத்திற்குமுன்னும் பின்னும் தோற்றுகின்றமையால் ஸர்பம்போல பொய்யாகாவிடினும் காலாந்தரத்தில் பாதிக்கப்படுகின்றமையால் பொய்யேயாகின்றது. ப்ரம்மம் எப்போதும் பாதிக்கப்படாமையால் ஸத்யமேயாகின்றது. ப்ரம்மமும் ப்ரமத்தி லதிஷ்டாநமாய் கோசரிக்கின்றமையால் ப்ரமத்தில் கோசரிக்கிற கயிற்றுப் பாம்புபோல் பொய்யாகக்கூடுமே என்றால் இந்த ப்ரம்மம், ப்ரமத்தில் முக்யமாய் கோசரியாமையால் ரஜ்ஜுஸர்ப்ப ப்ரமத்தில்

முக்யமாய் கோசரியாமல் அதிஷ்டானமாய் கோசரிக்கின்ற ரஜ்ஜு, ஸர்பம்போல் பொய்யாகாமல் ஸத்யமேயாவதுபோல் ஸத்யமேயாகின்றது. கல்பநாதிஷ்டாநம் கல்பனைக்கு முன்னிருக்கவேண்டு மாகையால் ஸர்வகல்பநாதிஷ்டாநமான ப்ரம்மம் ஸத்தேயா மன்றி பொய்யாகாது. இனி ஜ்ஞாநகோசரமாகாத ப்ரம்மத்தை எவ்வாறு சாஸ்திரம் தெரியப்படுத்துமென்றால்; அவித்யையினால் கல்பிக்கப்பட்ட தோஷபேதங்களை நீக்கவே, தானே ப்ரம்மஸ்வரூபம் விளங்குமன்றோ. ஸ்வரூபாம்சத்தில் சாஸ்திரத்தால் காரியமில்லை. அஸித்தமான விஷயத்தையே சாஸ்திரம் போதிக்கின்றமையாலென்க. இது வாஸ்தவ ஜ்ஞாநகோசர மாகாவிடினும் அநுவ்ருத்தியினாலேயே கீழ்ச்சொல்லியவையெல்லாங் கூடும். ஆனதால் ப்ரம்மம் நிர்விசேஷமென்பது வேத வித்துக்களின்

௩௩. பாவைரஸத்பிரேவாயமத்வயேந ச கல்பித: ।
பாவா அப்யத்வயேநைவ தஸ்மாதத்வயதா சிவா ॥

33. భావైరసద్భిరేవాయమద్వయేనచకల్పితః ।
భావాఅప్యద్వయేనైవతస్మాదద్వయతాశివా॥

ப௦-ஸா. முன்சுலோகத்தில் சொல்லிய விஷயத்தையே ஹேதுக்களால் வலியுறு கயிற்றிலில்லாத ஸர்பம் தாரைமுதலியவற்றை இது பாம்பு இது தாரை என்று, ப்ரமிப்பதுபோல ப்ரம்மத்திலில்லாத ப்ராணாதிவஸ்துக்களை ப்ரம்மத்தி லிருக்கின்றனவாக ப்ரமிக்கின்றோம். ப்ரமத்திற்குக் காரணம் மனதேயாகின்றது. மனது செல்லாதபோது ஒரு வஸ்துவும் காணப்படுவதில்லையன்றோ. ஆத்மாவுக்காயின் சலநமில்லை. மனத்திற்காயின் சலநமே குணமாகின்றது. ஆகையால் சலநமுடைய மனஸ்ஸின் தருமங்களை பரமார்த்தங்களென்று யார் சொல்லுவர். ஆகையா லஸத்துக்களான வஸ்துக்களால் அத்வயரூபியான ஆத்மா ப்ரமிக்கப்படுகிறான். இந்த ப்ரமத்திற்கு ஆத்மாவே அதிஷ்டாநமாகிறது. ஆகையால் ப்ரமத்தால் வந்தது கயிற்றில் தோற்றிய பாம்புபோல பயத்தைத் தரும். பரமார்த்தமான அத்வைதமே சிவகரமானது. அதாவது மங்களஸ்வரூபமானது.

௩௪. நாத்மபாவேந நாநேதம் ந ஸ்வேநாபி கதஞ்சந ।
ந ப்ருதங்நாப்ருதக்கிஞ்சிதிதி தத்வவிதோ விது: ॥

3४. నాత్మభావేననానేదంనస్వేనాపికథంచన।
నపృథఙ్నాపృథక్కించిదితితత్త్వవిదోవిదుః॥

ப௦-ஸா. இந்த பேத ப்ரபஞ்சவஸ்துவானது ஆத்மதாதாத்ம்யத்தாலும் ஸ்வதாதாத்ம்யத்தாலும் ஸித்திப்பதில்லை. ஆத்மா அஜடமாகின்றமையாலும் ப்ரபஞ்சம் ஜடமாகின்றமையாலும் முதலாவது கூடாது. இது ஸ்வதாதாத்ம்யமாய் ஸ்வதந்திரமாயி ருத்மாவேயாகவேண்டி யிருக்கின்றமையா லிரண்டாவதுங் கூடாது. பேதமே தருமமாயாவது ஸ்வரூபமாயாவது ஸித்தியாதாகையாலும் ப்ரபஞ்சபேதம் ஸித்தியாது. ஆகையால் அத்வைதமே தத்வமென்று தத்வவித்துகளினபிப்ராயம்.

### பதாந்வயார்த்தபேதங்கள்.

பேதம் ஸ்வரூபமாயும் தருமமாயும் ஸித்தியாதுஎன்கிற விஷயம் நன்கு நிரூபிக்கப்படவேண்டியதாயினும் இவ்விடத்தில் நிரூபிக்கப்படவில்லை. இது பேததூஷண ப்ரகரணத்தில் கண்டாராயத்தக்கது.

௩௫. 𑌵𑍀𑌤𑌰𑌾𑌗𑌭𑌯𑌕𑍍𑌰𑍋𑌧𑍈𑌰𑍍𑌮𑌨𑌿𑌭𑌿𑌰𑍍𑌵𑍇𑌦𑌪𑌾𑌰𑌗𑍈𑌃।
𑌨𑌿𑌰𑍍𑌵𑌿𑌕𑌲𑍍𑌪𑍋𑌹𑍍𑌯𑌯𑌂𑌦𑍃𑌷𑍍𑌟𑌃𑌪𑍍𑌰𑌪𑌞𑍍𑌚𑍋𑌪𑌶𑌮𑍋𑌽𑌦𑍍𑌵𑌯𑌃॥

3౫. వీతరాగభయక్రోధైర్మునిభిర్వేదపారగైః ।
నిర్వికల్పోహ్యయందృష్టఃప్రపంచోపశమోఽద్వయః॥

ஸo-ஹா. ஸமஸ்த ராகத்வேஷமுதலிய துர்க்குணங்கள் நீங்கிய மகாமுனிகளால் இவ்வாறே வேதாந்தப்பொருள் விசாரிக்கப்பட்டு, ப்ரபஞ்சம் பொய்யென்றும் அத்வைதமே ஸத்யமென்றும் மங்களமென்றும் நிச்சயிக்கப்பட்டது.

௩௬. 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍇𑌵𑌂𑌵𑌿𑌦𑌿𑌤𑍍𑌵𑍈𑌨𑌮𑌦𑍍𑌵𑍈𑌤𑍇𑌯𑍋𑌜𑌯𑍇𑌤𑍍𑌸𑍍𑌮𑍃𑌤𑌿𑌮𑍍।
𑌅𑌦𑍍𑌵𑍈𑌤𑌂𑌸𑌮𑌨𑍁𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌜𑌡𑌵𑌲𑍍𑌲𑍋𑌕𑌮𑌾𑌚𑌰𑍇𑌤𑍍॥

3౬. తస్మాదేవంవిదిత్వైనమద్వైతేయోజయేత్స్మృతిమ్ ।
అద్వైతంసమనుప్రాప్యజడవల్లోకమాచరేత్ ॥

ஸo-ஹா. ஆகையா லிவ்வாறறிந்து நெஞ்சை அத்வைதத்தில் செலுத்தவேணும் தன்னை உலகமெல்லாம் இப்படிப்பட்டவனென் றறிந்துகொள்ள முடியாமலிருக்கும்படி அத்வைதத்தை யடையவேணும்.

௩௭. 𑌨𑌿𑌸𑍍𑌤𑍁𑌤𑌿𑌰𑍍𑌨𑌿𑌰𑍍𑌨𑌮𑌸𑍍𑌕𑌾𑌰𑍋𑌨𑌿𑌸𑍍𑌸𑍍𑌵𑌧𑌾𑌕𑌾𑌰𑌏𑌵𑌚।
𑌚𑌲𑌾𑌚𑌲𑌨𑌿𑌕𑍇𑌤𑌶𑍍𑌚𑌯𑌤𑌿𑌰𑍍𑌯𑌾𑌦𑍃𑌚𑍍𑌛𑌿𑌕𑍋𑌭𑌵𑍇𑌤𑍍॥

3౭. నిస్తుతిర్నిర్నమస్కారోనిస్స్వధాకారఏవచ ।
చలాచలనికేతశ్చయతిర్యాదృచ్ఛికోభవేత్ ॥

ஸo-ஹா. தன்னைப்பிறர் துதி செய்யவேண்டுமென்கிற நினைவும் தன்னைப்பிறர் வணங்கவேண்டுமென்கிற நினைவும்நீங்கியவனுய் தாரேஷணை புத்ரேஷணை முதலியவை இல்லாதவனுய் பரமஹம்ஸபரிவ்ராஜக ஸந்யாசத்தை யடைந்தவனுய் தேஹதாரணம் முதலிய காலந்தவிர மற்ற காலங்களில் தன் சரீரத்தை மறந்தவனுய் தானுய்கிடைத்த ஆஹாரங்களைக்கொண்டு த்ருப்தியடைகிறவனுயிருந்து அத்வைதத்தை யடையவேணும்.

௩௮. 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌮𑌾𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌿𑌕𑌂𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌂𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾𑌤𑍁𑌬𑌾𑌹𑍍𑌯𑌤𑌃।
𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑍀𑌭𑍂𑌤𑌸𑍍𑌤𑌦𑌾𑌰𑌾𑌮𑌸𑍍𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌦𑌪𑍍𑌰𑌚𑍍𑌯𑍁𑌤𑍋𑌭𑌵𑍇𑌤𑍍॥

3౮. తత్త్వమాధ్యాత్మికందృష్ట్వాతత్త్వందృష్ట్వాతుబాహ్యతః॥
తత్త్వీభూతస్తదారామస్తత్త్వాదప్రచ్యుతోభవేత్॥

ஸo-ஹா. இவ்வாறு அத்வைதத்தை அறிந்து எப்போதும் நானே ப்ரம்மம், என்கிற த்யாநம் செய்யவேணும். இதரவிஷயங்களில் நெஞ்சைச் செலுத்தாமல் தத்வ ஸ்வரூபத்தை யடைந்து தத்வத்தை விடாதவனுகவேணும். இப்படியே எல்லா ஆத்மாக்கள் விஷயத்திலும் தத்வநிச்சயமுடையவனுகவேணும்.

இதி கௌடபாதகாரிகாயாம் 𑌵𑍈𑌤𑌥𑍍𑌯𑌪𑍍𑌰𑌕𑌰𑌣𑌮𑍍.

ஸ்ரீபரப்ரம்மணேநம:.

ஸ்ரீபரப்ரம்மணேநமஃ.

# 𑌅𑌥 𑌗𑍌𑌡𑌪𑌾𑌦𑌕𑌾𑌰𑌿𑌕𑌾𑌯𑌾𑌂 𑌅𑌦𑍍𑌵𑍈𑌤𑌪𑍍𑌰𑌕𑌰𑌣𑌂.

க. 𑌉𑌪𑌾𑌸𑌨𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑍋 𑌧𑌰𑍍𑌮𑍋 𑌜𑌾𑌤𑍇 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌿 𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 ।
𑌪𑍍𑌰𑌾𑌗𑍁𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑍇𑌰𑌜𑌂 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌤𑍇𑌨𑌾𑌸𑍌 𑌕𑍃𑌪𑌣𑌃 𑌸𑍍𑌮𑍃𑌤𑌃 ।

౧. ఉపాసనాశ్రితో ధర్మో జాతే బ్రహ్మణి వర్తతే ।
ప్రాగుత్పత్తేరజం సర్వం తేనాసౌ కృపణః స్మృతః ॥

ஸ0-ஹா. ஆத்மஸ்வரூபத்தை யொழிந்தவையெல்லாம் பொய்யே அத்வைதமே ஸத்யமென்று செய்த ப்ரதிஜ்ஞையின்படி த்வைதம் பொய்யென்பதை வைதத்ய ப்ரகரணத்தில் நிரூபித்தார். இந்த ப்ரகரணத்தில் அத்வைதமே ஸத்யமென்பதை யுக்திகளாலும் காட்டுகின்றார். எவன் நானுபாஸநம் செய்து ப்ரம்மத்தை யடையப்போகிறேனென்றும் அபேதத்தை யடையப்போகிறேனென்றும் நினைக்கிறானோ அவன் ப்ரம்மாபேதஸ்வரூபத்தை நன்குணராமையால் ப்ரம்ம வித்துக்களால் தாழ்ந்தவனாக நினைக்கப்படுவான்.

உ. 𑌅𑌤𑍋 𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌾𑌮𑍍𑌯𑌕𑌾𑌰𑍍𑌪𑌣𑍍𑌯𑌮𑌜𑌾𑌤𑌿 𑌸𑌮𑌤𑌾𑌂 𑌗𑌤𑌮𑍍 ।
𑌯𑌥𑌾 𑌨 𑌜𑌾𑌯𑌤𑍇 𑌕𑌿𑌂𑌚𑌿𑌜𑍍𑌜𑌾𑌯𑌮𑌾𑌨𑌂 𑌸𑌮𑌂𑌤𑌤𑌃 ॥

౨. అతో వక్ష్యామ్యకార్పణ్యమజాతి సమతాం గతమ్ ।
యథా న జాయతే కించిజ్జాయమానం సమంతతః ॥

ஸ0-ஹா. ஆகையால் ப்ரம்ம ஸ்வரூபாத்வைதத்தை பலத்ருஷ்டாந்தங்களாலும் நான் சொல்லுகின்றேன். அனதாலிதை யறிந்து உத்தம ப்ரம்மவித்தாகும் வழியை அடையவேணும். ஆகையால், பிறவாததாகி ஸாம்யத்தையடைந்த, அத்வைதஸ்ரூபத்தை யறியவேணும்.

௩. 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌹𑍍𑌯𑌾𑌕𑌾𑌶𑌵𑌜𑍍𑌜𑍀𑌵𑍈𑌰𑍍𑌘𑌟𑌾𑌕𑌾𑌶𑍈𑌰𑌿𑌵𑍋𑌦𑌿𑌤𑌃 ।
𑌘𑌟𑌾𑌦𑌿𑌵𑌚𑍍𑌚 𑌸𑌂𑌘𑌾𑌤𑍈𑌰𑍍𑌜𑌾𑌤𑌾𑌵𑍇𑌤𑌨𑍍𑌨𑌿𑌦𑌰𑍍𑌶𑌨𑌮𑍍 ॥

3. ఆత్మా హ్యాకాశవజ్జీవైర్ఘటాకాశైరివోదితః ।
ఘటాదివచ్చ సంఘాతైర్జాతావేతన్నిదర్శనమ్ ॥

ஸ0-ஹா. ஆகாயம்போல் ஸூக்ஷ்மமாய் நிரவயவமாய் எங்கும் நிறைந்ததாயிருக்கின்றபரமாத்மஸ்ரூபத்தில்நின்றும்கடாகாசம்முதலியவையாகாசத்தினின்றுமுண்டாவதுபோல் ஜீவர்கள் உண்டானார்கள். கடாகாசம் முதலியவற்றால் ஆகாசம் பிறப்புடையதானதுபோல ஜீவர்களால் ஆத்மா பிறப்புடையவனாகின்றான். ஆகையால் வேதாந்தங்களில் ஜீவர்கள் பரமாத்மாவினிடத்தில் பிறந்ததாய்ச் சொல்லுகிற வாக்யங்களுக்கு மகாசத்தில் கடாகாசம் போலப்பிறந்தனரென்று கருத்து.வாஸ்தவத்தில் பிறந்தார்களன்று. அவ்வாகாசத்தில் கடம் முதலியவைபோலவே பரமாத்மாவினிடத்தில் ப்ருதிவீ முதலியஸமஸ்த பூதங்களும் உண்டாகின்றன. ஆகையால் மந்த புத்திகளுக்கு ஜாதியை ஒப்புக்கொள்ளும்போது இது திருஷ்டாந்தம்.

௪. 𑌘𑌟𑌾𑌦𑌿𑌷𑍁 𑌪𑍍𑌰𑌲𑍀𑌨𑍇𑌷𑍁 𑌘𑌟𑌾𑌕𑌾𑌶𑌾𑌦𑌯𑍋 𑌯𑌥𑌾
𑌆𑌕𑌾𑌶𑍇 𑌸𑌂𑌪𑍍𑌰𑌲𑍀𑌯𑌨𑍍𑌤𑍇 𑌤𑌦𑍍𑌵𑌜𑍍𑌜𑍀𑌵𑌾 𑌇𑌹𑌾𑌤𑍍𑌮𑌨𑌿 ॥

౪. ఘటాదిషు ప్రలీనేషు ఘటాకాశాదయో యథా ।
ఆకాశే సంప్రలీయంతే తద్వజ్జీవ ఇహాత్మని॥

ப௦-ஹா. எவ்வாறு கடம் பிறந்தால் கடகாசம் பிறக்கின்றதோ, கடமழிந்தால் கடகாசமழிகின்றதோ, அவ்வாறே, தேஹம்பிறந்தால் ஆத்மாபிறக்கிறுன் தேஹமழிந்தால் ஆத்மா அழிகிறுன். அதாவது லயிக்கிறுன். இதனுல்எப்படி கடாகாசத்திற்கு கடமாகிய உபாதியினுலே பிறப்பும் நாசமுமே யன்றி வாஸ்தவத்தி லில்லையோ அப்படியே ஆத்மாவுக்கும் சரீரமாகிய உபாதியினுல் பிறப்புவிநசம் இவை யுண்டாகின்றனவே யன்றி வாஸ்வத்திலல்ல இப்படியே அனேகோபாதிகளையும் உதாஹரணமாகக் கொள்க.

௫. யதைகஸ்மின் கடாகாஸே ரஜோதூமாதிபிர்யுதே |
ந ஸர்வே ஸம்ப்ரயுஜ்யந்தே தத்வஜ்ஜீவாஸ்ஸுகாதிபி:||

౫. యథైకస్మిన్ ఘటాకాశే రజోధూమాదిభిర్యుతే।
న సర్వే సంప్రయుజ్యంతే తద్వజ్జీవాస్సుఖాదిభిః॥

ப௦-ஹா. எல்லாதேஹங்களிலு மாத்மா ஒருவனுயின், ஒருவன்ஜர்மம் ஜரைமரணம் முதலிய தர்மங்களால் வருத்த மடையும்போது எல்லோருக்கும், அந்ததுக்கம் வருமென்றும் ஒருவன் செய்த பாபபுண்ணிய பலத்தை மற்றொருவன் அனுபவிக்கின்றமையால் ஸங்கரமும் வருமென்று சொல்லுகிற த்வைதிகளை மறுக்கின்ற திந்தசுலோகம். ஒரு கடாகாசமானது, புகைமுதலிய அழுக்கினு லாக்ரமிக்கப்பட்டிருந்தாலும், மற்ற கடகாசங்களுக்கு அந்த அழுக்கினுல் கெடுதி யில்லையன்றே. இவ்வாறே ஒருஜீவாத்மாவுக்கு ஸுகதுக்க முதலிர சுபா சுபங்கள் உண்டானுலும் மற்ற ஜீவாத்மாக்களுக்கு அவையுண்டாகா. ஆத்மாஒருவனே யன்றே வென்றுல் நாம் திருட்டாந்தம் சொன்ன ஆகாசம் இரண்டன்றே: எல்லா கடங்களிலு மிருக்கிற ஆகாசம் ஒன்றே யன்றே. ஆயினும் அந்த கடம் முதலியவை வேறுபடுதலால் அந்த ஆகாசமும் வேறுபட்டு ஒன்றில் படிந்த அழுக்கு ஒன்றுக்கின்றி யிருக்கின்றதன்றே. இவ்வாறே ஜீவாத்மாக்களுக்கும் பேதாபேதங்கள் காண்க. இனி, இவ்வாறு ஆத்மா ஒருவனுயினும் தலைநோய் முதலிய துன்பங்களை அச்சரீரத்திலிருக்கின்ற ஆத்மா ஒருவனே யன்றே அநுபவிக்கின்றுன். தலைமட்டிலுள்ள ஆத்மாவே அநுபவிக்கிறுனென்பதில்லையன்றே. ஆனதால் உபாதி வேறுயினும் ஆத்மா ஒருவனேயாகையால், ஒரு சரீரத்தில் ஓரவயவத்தில் வந்த துன்பத்தைஅச்சரீரத்தில் எல்லா அவயவங்களிலுமுள்ள ஆத்மா அனுபவிப்பதுபோல் எல்லாசரீரங்களிலுமுள்ள ஆத்மாவும் ஒரு சரீரத்திலுண்டான ஸுக துக்கங்களையு மநுபவிக்கவேணும் என்றுல், இந்த ஆக்ஷேபம் ஸாங்க்ய மதஸ்தன் செய்யக்கூடாது. ஸாங்கியன் ஸுக துக்கங்களை ஆத்மாவில் இருப்பனவாக ஒப்புக்கொள்ளவில்லை யன்றே. புத்திக்கேயன்றே ஸுகதுக்கங்களைச் சொல்லுகிறுன். ஆதலால் கேவலஜ்ஞாந ஸ்வரூபனுன ஜீவாத்மாவுக்கு சரீரந்தோறும் பேதத்தைக் கொள்ளுவதில் அவர்களுக்கு ஒரு யுக்தியுமில்லை. ஜீவாத்ம பேதமில்லையாயின் ப்ரக்ருதிஜீவாத்மாவின் பொருட்டென்பது கூடாமையால்ஜீவாத்மபேதத்தை ஒப்புக்கொள்ளவேணுமென்று சொல்லவேண்டியதில்லை. இந்தப்ரக்ருதி தருமங்கள் ஆத்மாவில் சேருகின்றன வில்லையன்றே. பிரகிருதியினுலேற்படுகிற பந்தமாவது மோக்ஷமாவது பேதப்பட்ட ஜீவாத்மாக்களைச் சேருமாயின் பந்தமோக்ஷநியமத்திற்காக ஜீவாத்மாக்களை பேதப்பட்டவர்களாக ஒப்புக்கொள்வது தக்கதாகும். ஸாங்கியர்கள் பந்தமோக்ஷங்களை ஜீவாத்மாக்களுக்குக் கொள்ளவில்லையன்றே. நிர்விசேஷ ப்ரகாச ரூபமான ஜீவாத்மாக்களை நித்யமுக்தராகவன்றே ஒப்புக்கொள்ளுகிறுர்கள். ஆகையால்ஒரு ஜீவனை ஒப்புக்கொண்டபோதிலும் ப்ரக்ருதி ஜீவாத்மாவின் பொருட்டென்பதும்கூடுகின்றது. ஆகையால் ஜீவாத்மாக்களை பேதப்பட்டவர்களாக ஒப்புக்கொள்வது வீணேயாம். ஜீவனிருப்பதையே காரணமாக்கிக்கொண்டு ப்ரக்ருதிதானே பந்தத்தை *

யும் மோக்ஷத்தையு மடைகின்றதென்றும் அந்த ஜீவனும், ஜ்ஞானஸ்வரூபஸத்தாமாத்திரத்தால்ப்ரக்ருதியின் ப்ரவ்ருத்தியில் காரணமாகிறனென்றும் ஜீவாத்மாவுக்கு ஒரு விசேஷ தருமமும் வேண்டியதில்லையென்றும் சொல்லுகிற ஸாங்கியர் கேவல மூடத்தனத்தால்ஒருபயனுமின்றி வேதார்த்த விருத்தமாக ஜீவாத்மபேதத்தை ஒப்புகொள்ளுகிறார்கள். ஆனதால் ஸாங்கியர் கரணங்களின் ஸம்பந்தம் ஒருவனுடையது, மற்றொருவனுக்கு வரவேண்டுமாகையால் ஜீவபேதம் கொள்ளவேணுமென்று ஆக்ஷேபிக்கக் கூடாது. இனிதார்க்கிகர் ஆக்ஷேபிப்பார்களாயின், அவர்களுக்கு சமாதானம் சொல்லுகிறோம், தார்க்கிகர்கள் ஆத்மாவுக்கே ஸுகதுக்கங்களை யொப்புக்கொள்ளுகிறார்கள்.அது பிழை. ப்ரதேசமில்லாதஆத்மஸ்வரூபத்தில் ஸுகதுக்க ஸமவாயங்களையொப்புக்கொள்ளத்தகுமோ; இதுவுமின்றி ஆத்மாமநஸ்ஸோடுசேர்ந்தபோது அந்தந்த ஜ்ஞானமுண்டாகிற தன்று சொல்லுகின்றமையால் எப்போதும் ஜ்ஞானஸ்ம்ருதிகளுண்டாக வேணும். ஏககாலத்தில் எல்லாஸ்ம்ருதி ஜ்ஞானங்களு முண்டாகவேணும். வேறுவேறு ஜாதியான ஆத்மாவுக்கும் மநஸ்ஸுக்கும் ஸம்பந்தமும் கூடாது. த்ரவ்யத்திற்கும் குணம் முதலியவற்றிற்கும் ஸம்பந்தமுண்டானதுபோல் ஆத்மாவுக்கும் மநஸ்ஸுக்கும் ஸம்பந்தங் கூடுமென்பது தகாது. த்ரவ்யத்தைவிட வேறாய் ரூபமுதலிய குணங்களும் கருமம் ஸாமாந்யம் விசேஷம் ஸமவாயம் இவைகளு மில்லையன்றோ. எங்கள் மதத்தில் த்ரவ்யத்தைவிட குணம் முதலியவை வேறு, ஸுகம் துக்கம் இச்சை முதலியவை ஆத்மாவைவிட வேறு, என்றால் இவ்வாறு பேதப்பட்டவை யொன்று சேருவது கூடுமோ. அயுதஸித்தங்களாகையால் கூடுமென்றால் அநித்யங்களான ஸுக துக்கம் இச்சை முதலியவற்றோடு நித்யமான ஆத்மஸ்வரூபத்திற்கு அயுதஸித்திகூடாது. (அயுதஸித்தியாவது பிறிவின்றியிருக்கை என்று தார்க்கிகர்மதம்) இவற்றோடு மயுதஸித்தியுண்டென்றால் ஆத்மபரிமாணம்போல இவற்றையும் நித்யங்களேயெனக் கொள்ள வேணும். அது விருத்தம் இஷ்டமுமல்ல. ஸுகம் துக்கம் இச்சைமுதலியவை நீங்குவதே மோக்ஷமென்று ஸித்தாந்தமாகையாலென்க. ஸமவாயம் த்ரவ்யத்தைவிட வேறாயின் குணத்திற்குப்போல அதற்கும் த்ரவ்யத்தோடு ஒரு ஸம்பந்தம் சொல்லவேணும். ஸமவாயம் நித்ய ஸம்பந்தமாகையாலது வேண்டப்படாதென்றாலும் அந்த ஸம்பந்தமுடைய குணமுதலியவை எல்லாம் நித்யமாகவேண்டும். மிகவும் வேறுபட்டதாயின் 'அதினுடையதிது' என்று வ்யவஹாரங் கூடாது. ஆவது மழிவதுமான குணங்களை ஆத்மாவுக்கு ஒப்புக்கொண்டால் ஆத்மாவு மநித்யமாகவேண்டிவரும். தேஹத்திற்குப் போலவே விகாராதி தோஷங்களும் தப்பாது ஆகாசத்திற்கு உபாதியினு லழுக்குவருவதுபோல் ஆத்மாவுக்கு அவித்யையினுல் ஸுகதுக்கங்கள் வருமென்கிற பக்ஷத்தில் வ்யவஹாரதசையில் பந்தமோக்ஷங்களுக்கு ஒரு விரோதமுமில்லை. எல்லாமதஸ்தரும் அவித்யாஸம்பந்தத்தை ஒப்புக்கொள்ளுகிறார்கள். பரமார்த்தத்தில் துக்கம் முதலியவற்றின்ஸம்பந்தமே கிடையாது. ஆகையால் அந்த தார்க்கிகர்களும் வீணாகவே ஜீவாத்மபேதத்தைக் கூறுகின்றார்கள்.

சு. ரூபகார்யஸமாக்²யாஶ்ச பி⁴த்³யந்தே தத்ர தத்ர வை ।
ஆகாஶஸ்ய ந பே⁴தோ³ஸ்தி தத்³வஜ்ஜீவேஷு நிர்ணய: ॥

౬. రూపకార్యసమాఖ్యాశ్చభిద్యన్తే తత్రతత్రవై।
ఆకాశస్య న భేదో స్తి తద్వజ్జీవేషు నిర్ణయః॥

ஸ-0ஹா. ஒருஆத்மாவில் ஆத்மபேதத்தைப்பற்றிய வ்யவஹாரம்அவித்யையினுல்விரோதமின்றிக்கூடுவதெப்படிஎன்றால் சொல்லுகின்றோம். எவ்வாறு,ஒரு ஆகாயத்தில்தானே

கடாகாசம் மடாகாசம்என்கிற ஸ்வரூபபேதமும் அதிலுல் கடாகாசம் சிறியது, மடாகாசம் பெரியது, என்று தரும பேதமும், கடகாசத்தில் தண்ணீரெடுப்பது மடாகாசத்தில் உறங்கப்படுப்பது, என்று காரிய பேதமும், கடம் மடம், என்று பெயரும் பேதப்படுகிறதோ; அவ்வாறே ஸமஸ்த பேதவ்யவஹாராதிளும் உபாதியிஞல் ஒரு ஆத்மாவுக்கே உண்டாகின்றன. வாஸதவத்தில் பேதவ்ய வஹாரங்களொன்றும் பரமார்த்தங்களல்ல.

எ. நாகாஶஸ்ய க4டாகாஶோ விகாராவயவௌ யதா2 |
நைவாத்மன: ஸதா3 ஜீவோ விகாராவயவௌ ததா2 ||

௭. నాకాశస్య ఘటాకాశో వికారావయవౌ యథా ।
నైవాత్మనస్సదా జీవో వికారావయవౌ తథా ॥

ஸ௦-ஹா. சிழ்ச்சொல்லிய வ்யவஹாரங்கள் பரமார்த்தங்களே யாவதில் விரோதமில்லையே யென்ருல் அங்ஙனமல்ல; கடாகாசம் மகாசத்தின் விகாரமல்லவன்ருே. குண்டலம் முதலிய பூஷணங்கள் பொன்னின் விகாரமேயாவதுபோல் கடாகாசமும் வாஸ்தவத்தில் மகா காசத்தின் விகாரமாயின் இதற்கு பர மார்த்தத்தில் தோஷ சம்பந்தம் சொல்லக்கூடும். அங்ஙன மன்ருகையால் மகாசம் போலவே வாஸ்தவத்தில் நிர்தோஷமாகையால் இதற்கு பரமார்த்த தோஷங்கள் சொல்லக் கூடாது. தண்ணீருக்கு நுறை முதலிய விகாரமுண்டாவது போல் ஆகாசத்திற்கில்லை யன்ருே. ஒரு மரத்திற்கிளைகள் போல மகாசத்திற்கு கடாகாசம் அவயவ மல்ல; இவ்வாறே ஜீவர்களும், ஆத்மாவினுடைய விகாரமுமல்ல அவயவங்களுமல்ல. ஆனதால் கடாகாசத்திற்குப் போலவே இந்த ஜீவனுக்கு பரமார்த்த தோஷங்கள் தட்டாது, என்பது வேதாந்த நிச்சயம்.

அ. யதா2 ப4வதி பா3லானாம் க3க3னம் மலினம் மலை: |
ததா2 ப4வத்யபு3த்3தா4னாமாத்மாபி மலினோ மலை: ||

౮. యథా భవతి బాలానాం గగనం మలినం మలైః ।
తథా భవత్యబుద్ధానామాత్మాపి మలినో మలైః ॥

ஸ௦-ஹா. எவ்வாறு ஆகாயம் ஸ்வயம்சுத்தமாயிருக்கவும் தூசி புகை மேகம்முதலிய அழுக்குடையதுபோல் அவிவேகிகள்எண்ணுகிருர்களோ; விவேகிகளுக்காயின் சுத்தமென்றேஅபிப்ராயமோ, அவ்வாறேஇவ்வாத்மாவுக்கும், ஸுகதுக்கங்கள்உண்டாகிறது வாஸ்தவமென்று அவிவேகிகளுக்குத் தோற்றுகின்றது. விவேகிகளுக்காயின் நித்யசுத்தமாய் தோற்றுகின்றது. எவ்வாறுதாஹத்தால் வருந்துகிறவன் தன்னஜ்ஞானத்திஞல் ஒருகெட்டநிலத்தை தண்ணீரலைநுறைமுதலியவற்ருேடு கூடியதென்றுஏர்ப்படுத்திஞலும் அங்கு தண்ணீர் முதலியவை வாராவோ; விவேகிகளும் நினையார்களோ; அவ்வாறே என்க. ஆகையால் கடாகாசம் முதலியவற்றிற்கு உபாதியிஞல் தோஷங்களேயன்றி வாஸ்தவத்திலில்லையாவதுபோல ஆத்மாவுக்கும் துன்பம் முதலியவை பரமார்த்தத்திலில்லை என்க. இவ்வாறு திருட்டாந்தங்களாலிதை ரூபித்துக்காட்டுவதற்கு இந்த சுலோகம் சொல்லப் பட்டது.

கூ. மரணே ஸம்ப4வே சைவ க3த்யாக3மனயோரபி |
ஸ்தி2தௌ ஸர்வஶரீரேஷு ஆகாஶேனாவிலக்ஷண: ||

౯. మరణే సంభవే చైవ గత్యాగమనయోరపి ।
స్థితౌ సర్వశరీరేషు ఆకాశేనావిలక్షణః ॥

ஸ௦-ஹா. இனி ஜீவாத்மா மரணத்தை யடைந்தபின் தருமம் செய்திருந்தால் ஸ்வர்க்கம்போகின்றான். அதர்மம் செய்திருந்தால் நரகம் போகிறானென்றும், அவ்வாறு சென்று தருமாதருமபலன்களை யனுபவித்தபின் இப்புவியில் சேர்ந்து கருமத்திற்குத்தக்கபடி யோநியில் புகுந்து மனிதனும் பசுவாயும் பிறக்கிறானென்றும் வேதங்கள் முறையிடுகின்றன. கடாசம்போ லகண்டாத்மஸ்வரூபத்தி லுபாதியினால் ஜீவனென்றால், கடாகாசம் கடத்தையுடைத்தபின் அத்தேசத்தைவிட்டு தேசாந்தரத்திற்குப்போவதில்லை யன்றோ; அவ்வாறே சரீரம்போன பிறகும் ஜீவாத்மா அந்தவிடத்தைவிட்டு லோகாந்தரம்போவது கூடாமையால் இந்த அத்வைதவாதம் சரியில்லை என்று ஆக்ஷேபம்வரும். இதற்கு ஸமாதானம்; ஆத்மாவினிடத்தில் எல்லா வ்யவஹாரங்களும் அவித்யையினால் வந்ததாகையால் வாஸ்தவமல்ல; ஆகையால் இவ்வாத்மா வாஸ்தவத்தில் தேசாந்தரம் போவதில்லை. போவதாய்ச் சொல்லுவது பொய்யேயாம். அவ்வாறு கூறுவது மவித்யையினாலேயாம்.

௧௦. 𑌸𑌙𑍍𑌘𑌾𑌤𑌾𑌃𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑌵𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑍇𑌆𑌤𑍍𑌮𑌮𑌾𑌯𑌾𑌵𑌿𑌸𑌰𑍍𑌜𑌿𑌤𑌾𑌃 ।
𑌆𑌧𑌿𑌕𑍍𑌯𑍇𑌸𑌰𑍍𑌵𑌸𑌾𑌮𑍍𑌯𑍇𑌵𑌾𑌨𑍋𑌪𑌪𑌤𑍍𑌤𑌿𑌰𑍍𑌹𑌿𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇॥

౧౦. సఙ్ఘాతాస్స్వప్నవత్సర్వే ఆత్మమాయావిసర్జితాః।
ఆధిక్యే సర్వసామ్యే వా నోపపత్తిర్హి విద్యతే॥

ஸ௦-ஹா. கடம் முதலியவற்றோடு ஸமானமான இந்த தேவதை மநுஷ்யர் பசு பக்ஷி முதலிய தேஹங்கள் ஸ்வப்நம்போல இவ்வாத்மாவி னவித்யையினால் கல்பிக்கப்பட்டவை. இந்த சரீரத்தின் தாரதம்யத்தினால் பேதமில்லை. எல்லாம் அவித்யையினால் கல்பிக்கப்பட்டவையாகையால் எல்லாம் பொய்யே யாகின்றன.

௧௧. 𑌰𑌸𑌾𑌦𑌯𑍋𑌹𑌿𑌯𑍇𑌕𑍋𑌶𑌾𑌵𑍍𑌯𑌾𑌖𑍍𑌯𑌾𑌤𑌾𑌸𑍍𑌤𑍈𑌤𑍍𑌤𑌿𑌰𑍀𑌯𑌕𑍇।
𑌤𑍇𑌷𑌾𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌪𑌰𑍋𑌜𑍀𑌵𑌃𑌖𑌂𑌯𑌥𑌾𑌸𑌂𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌿𑌤𑌃॥

౧౧. రసాదయో హి యే కోశా వ్యాఖ్యాతాస్తైత్తిరీయకే।
తేషామాత్మా పరో జీవః ఖం యథా సంప్రకాశితః॥

ஸ௦-ஹா. தைத்திரீயோபநிஷத்தில் "அந்நரஸமயஃ" என்கிற சுருதிமுதல் அனேக கோசங்கள் சொல்லப்பட்டன; அவை எல்லாவற்றிற்கும் பரமாத்மாவே ஆத்மாவாகின்றான். அவன் ஆகாயம்போல் சுத்தனென்று நாமிங்கு நிரூபித்துக் காட்டியபடியிருப்பவனேயன்றி தார்க்கிகமதத்தில் சொல்லப்படுகிற ஆத்மாவைப்போல் புத்திகோசரனன்று. ஆகையால் தைத்திரீயோபநிஷத்திற்கும் பரமாத்மைக்யத்திலே தாத்பர்யமென்று விளங்கிற்று.

௧௨. 𑌦𑍍𑌵𑌯𑍋𑌰𑍍𑌦𑍍𑌵𑌯𑍋𑌰𑍍𑌮𑌧𑍁𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌪𑌰𑌂𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌿𑌤𑌮𑍍।
𑌪𑍃𑌥𑌿𑌵𑍍𑌯𑌾𑌮𑍁𑌦𑌰𑍇𑌚𑍈𑌵𑌯𑌥𑌾𑌕𑌾𑌶𑌃𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌿𑌤𑌃॥

౧౨. ద్వయోర్ద్వయోర్మధుజ్ఞానే పరం బ్రహ్మ ప్రకాశితమ్।
పృథివ్యాముదరే చైవ యథాకాశః ప్రకాశితః॥

ஸ௦-ஹா. ப்ருஹதாரண்யகோபநிஷத்திலும் பரமாத்மைக்யமே சொல்லப்படுகிறதென்று கூறுகின்றார். அதிதைவதம் அத்யாத்மம், முதலியவற்றில் முழுதிலும்பரமாத்மாவே என்று ப்ரகாசிப்பிக்கப்பட்டது. வயிற்றிலும் புவியிலுமாகாசம் ஒன்றேயாவதுபோல எங்கும் பரமாத்மா ஒருவனே யாவான். அது அநுமாநப்ரமாணத்தால் ஸாதிக்கப்படுகிறது.

௧௩. ஜீவாத்மநோரநந்யத்வமபேதேந ப்ரஶஸ்யதே ।
நாநாத்வம் நிந்த்யதே யச்ச ததேவம் ஹி ஸமஞ்ஜஸம்॥

౧౩. జీవాత్మనోరనన్యత్వమభేదేన ప్రశస్యతే ।
నానాత్వం నింద్యతే యచ్చ తదేవం హి సమంజసమ్॥

பா-ஷா. சுருதியிலும் வ்யாஸர் முதலிய மகர்ஷிவசநங்களிலும் பேதம் நிந்திக்கப்பட்டு அபேதம் ஸ்துதிக்கப்படுகிறது. இது ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும், அபேதத்தைச் சொன்னாலொழிய சேராது. ஆனதால் ஜீவாத்மாவி னபேதமங்கீகரிக்கத் தக்கது.

௧௪. ஜீவாத்மநோ: ப்ருதக்த்வம் யத் ப்ராகுத்பத்தே: ப்ரகீர்த்திதம்।
பவிஷ்யத்வ்ருத்த்யா கௌணம் தந்முக்யத்வம் ஹி ந யுஜ்யதே॥

౧౪. జీవాత్మనోః పృథక్త్వం యత్ప్రాగుత్పత్తేః ప్రకీర్తితమ్ ।
భవిష్యద్వృత్త్యా గౌణం తన్ముఖ్యత్వం హి న యుజ్యతే॥

பா-ஷா. வேதவாக்யங்களால் ஜீவாத்மாக்களுக்கு பேதம் சொல்லப்பட்டிருக்க பேதம் யுக்தமல்லவென்னக் கூடுமோ வென்றால், அது ஔபாதிக பேதத்தை யநுவதித்துச் சொல்லுகிற அமுக்யப்ரயோகமேயன்றி வேதாந்தங்களில் அபூர்வமாய்ச் சொல்லுகிற அபேதம்போல் முக்யமன்று.

௧௫. ம்ருல்லோஹவிஸ்புலிங்காத்யை: ஸ்ருஷ்டிர்யா சோதிதாந்யதா।
உபாய: ஸோவதாராய நாஸ்தி பேத: கதஞ்சந॥

౧౫. మృల్లోహవిస్ఫులింగాద్యైః సృష్టిర్యా చోదితాన్యథా।
ఉపాయః సోవతారాయ నాస్తి భేదః కథంచన॥

பா-ஷா. ஸ்ருஷ்டியை விதிக்கிற வாக்யங்களில் ஸ்வபாவமாய் பேதமே சொல்லப்படுகின்றமையால் அத்வைதத்தையே அங்கீகரிப்பது கூடாதென்றால் அங்ஙனமல்ல; ஜீவாத்ம பரமாத்மைக்யத்தைச் சொல்லி யத்வைதத்தை போதிப்பதற்காகவே இந்த ஸ்ருஷ்ட்யாதிகள் சொல்லப்படுகின்றனவென்று கொள்ளவேணும். பேதம் தோற்றினாலும் பேதத்தில் தாத்பர்யம் கொள்ளப்போகாது. ஆகையால் ஸ்ருஷ்டி ப்ரகரணங்களில் சொல்லுகிற வாக்யங்களுக்கு பரஸ்பரவிரோத மிருப்பதால் ப்ராணஸம்வாத வாக்யம்போல அந்த அர்த்தத்தில் அவை ப்ரமாணங்களல்ல. அங்கு காட்டப்பட்ட திருஷ்டாந்தங்களாலும் பேதம் ஸித்தியாது. அவையாவன மண்முதலியவை. ஆனதாலத்வைதத்தில் விரோதமில்லை.

௧௬. ஆஶ்ரமாஸ்த்ரிவிதா ஹீநமத்யமோத்க்ருஷ்டத்ருஷ்டய:।
உபாஸநோபதிஷ்டேயம் ததர்தமநுகம்பயா॥

౧౬. ఆశ్రమాస్త్రివిధా హీనమధ్యమోత్కృష్టదృష్టయః ।
ఉపాసనోపదిష్టేయం తదర్థమనుకమ్పయా॥

பா-ஷா. இவை எல்லாவற்றையு மப்ரமாணமென்றாலும் மோக்ஷத்தைப் பெறுவதற்கென்று உபாஸநத்தை விதிக்கிற வேதவாக்யங்களால் அநேகஉபாஸநங்களும் அந்தந்த உபாஸநங்களுக்கு அதிகாரி பேதங்களும் அவர்களால், உபாஸிக்கப்படுகிற ஒரு ஆத்மாவும் சொல்லப்படுகின்றன. உபாஸிப்பவனும் உபாஸிக்கப்படுகிறவனு மொன்றாகக் கூடாது. ஆக இவ்வாக்யங்களால் ஆத்மபேத முண்டென்று காட்டப்படுகின்றமை

யால், இவற்றை அப்ரமாண மென்னப்போகாமையால் பேதம் மெய்யேயாம். அத்வைதம் யுக்தமல்லவென்று வருகிற ஸந்தேஹத்தை இந்த சுலோகம் போக்குகின்றது. இவ்வுலகின்கண் மூன்றுவகைப்பட்ட அதிகாரிகளிருக்கின்றார்கள். அவர்களாகிறார் உத்தமதிருஷ்டிகள், மத்யமதிருஷ்டிகள் அதமத்ருஷ்டிகள் எனப்படுவோர்; அதமத்ருஷ்டிகளுக்கு கருமத்தையும், மத்யமத்ருஷ்டிகளுக்கு, உபாஸநத்தையும் விதித்திருக்கின்றது. நிர்விசேஷப்ரம்மஜ்ஞாநிகள் உத்தமத்ருஷ்டிகள். அவர்களுக்கு உபாஸநம் வேண்டியதில்லை. ஆகையால் மந்தாதிகாரிகளுக்காக தயையினால் பேதத்தை கல்பித்து உபதேசித்திருக்கின்றது. இவ்வித உபாஸநம் முதலியவை செய்பவர் முடிவில் நிர்விசேஷ ப்ரம்மஜ்ஞாநத்தை யடைந்து முக்தராகிறார்கள்.

க௭. 𑌸𑍍𑌵𑌸𑌿𑌦𑍍𑌧𑌾𑌨𑍍𑌤𑌵𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌾𑌸𑍁 𑌦𑍍𑌵𑍈𑌤𑌿𑌨𑍋 𑌨𑌿𑌶𑍍𑌚𑌿𑌤𑌾 𑌦𑍃𑌢𑌮𑍍।
𑌪𑌰𑌸𑍍𑌪𑌰𑌂 𑌵𑌿𑌰𑍁𑌧𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌤𑍈𑌰𑌯𑌂 𑌨 𑌵𑌿𑌰𑍁𑌧𑍍𑌯𑌤𑍇॥

౧౭. స్వసిద్ధాన్తవ్యవస్థాసు ద్వైతినో నిశ్చితా దృఢమ్।
పరస్పరం విరుధ్యన్తే తైరయం న విరుధ్యతే॥

ஸம்-ஹா. சாஸ்திரங்களாலும் யுக்திகளாலும் நிச்சயிக்கப்பட்டபடியால் அத்வைதம் மெய்யான மதமாகின்றது. மற்ற மதங்கள் இதற்கு விருத்தங்களாகையாற் பொய்யே யாகின்றன, வேறு மதங்களில் பேதங்களைச் சொல்லுகையால் ராகத்வேஷங்கள் தப்பாது. அத்வைதத்திற்கு அந்த தோஷமில்லை. பேதவாதிகள் பலரும் தங்கள் தங்கள் மதத்தையே மெய்யென்று நினைத்துக்கொண்டு பிறருடன் சண்டை செய்கிறார்கள். ஆனதால் ராகத்வேஷங்களை யடைகிறார்கள். அத்வைதிகளோ வென்றால் பிறரறியாமையால் சில தோஷங்களைச் சொல்லி கலஹத்திற்கு வந்தாலும், இவர்களுக்கு அபேதஜ்ஞாநமுண்டாகையால் தன்னுடைய கையினால் தன் கண்ணுக்கு ஒரு துன்பம் நேரிட்டாலும், கையை வெட்டிவிட வேண்டுமென்கிற த்வேஷமுண்டாகாததுபோல ப்ரதிவாதிகளிடத்தில் இவர்களுக்கு த்வேஷங்கிடையாது. ஆகையால் ராகத்வேஷங்களுக்குக் காரணயான இதரமதங்களைவிட அதற்கு விரோதியான, அத்வைதமதமே சிறந்தது.

க௮. 𑌅𑌦𑍍𑌵𑍈𑌤𑌂 𑌪𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑍋 𑌹𑌿 𑌦𑍍𑌵𑍈𑌤𑌂 𑌤𑌦𑍍𑌭𑍇𑌦 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇।
𑌤𑍇𑌷𑌾𑌮𑍁𑌭𑌯𑌥𑌾 𑌦𑍍𑌵𑍈𑌤𑌂 𑌤𑍇𑌨𑌾𑌯𑌂 𑌨 𑌵𑌿𑌰𑍁𑌧𑍍𑌯𑌤𑍇॥

౧౮. అద్వైతం పరమార్థో హి ద్వైతం తద్భేద ఉచ్యతే।
తేషాముభయథా ద్వైతం తేనాయం న విరుధ్యతే॥

ஸம்-ஹா. அத்வைதத்திற்கு மிக நன்மையுண்டு; த்வைதத்தோடு விரோதமில்லாமையாலும், த்வைதமத்வைத காரியமாகையாலும், த்வைதம் ப்ராந்தமாகின்றமையாலுமெனக. பரமார்த்தத்திற்கு அபரமார்த்தத்தோடு விரோதமில்லை யன்றோ. த்வைதிகளுக்காயின் எல்லா த்வைதங்களும் பரமார்த்தங்களாகையால் பரஸ்பரவிரோதமுண்டு. காரண காரியங்களுக்குள் காரணமே ஸத்யமாகுமன்றோ; ஆக, எவ்வாறு, ஒருவன், ஆனைமேலேறிவருகையில், ஒரு பித்தம் பிடித்தவன் பூமியில் நடந்து வருகையில், நானுமானைமேல் வருகிறேனாகையால் என்பேரில் அந்த ஆனையை சண்டைக்கு விடு, என்று சொல்லப்பட்டாலும் தத்வம் தெரிந்த அவன் இவனோடு சண்டைக்கு வரமாட்டானோ; அவ்வாறே அறியாத்தனத்தால் த்வைதிகள் சொல்லுகிற வாதத்தின்பேரில் அத்வைதிகள், ஆக்ஷேபிக்கப் போகார்கள்,

க௯. 𑌮𑌾𑌯𑌯𑌾 𑌭𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 𑌹𑍍𑌯𑍇𑌤𑌨𑍍𑌨𑌾𑌨𑍍𑌯𑌥𑌾𑌜𑌂 𑌕𑌥𑌂𑌚𑌨।
𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌤𑍋 𑌭𑌿𑌦𑍍𑌯𑌮𑌾𑌨𑍇 𑌹𑌿 𑌮𑌰𑍍𑌤𑍍𑌯𑌤𑌾𑌮𑌮𑍃𑌤𑌂 𑌵𑍍𑌰𑌜𑍇𑌤𑍍॥

౧౯. మాయయా భిద్యతే హ్యేతన్నాన్యథాజం కథఞ్చన।
తత్త్వతో భిద్యమానే హి మర్త్యతామమృతం వ్రజేత్॥

பா-ஷா. நிர்விகாரமாய் அஜமாயிருக்கிற சுத்த ஸதத்வைதப்ரம்மமானது மாயை யினால் பேதப்படுமேயன்றி வாஸ்தவத்தில் பேதப்படாது. ஆகையால் அவயவபேதமில்லாத ஆத்மதத்வத்திற்கு பேதம் பொய்யே யாகின்றது. அவயவமுண்டானாலன்றோ மண்முதலியவை குட முதலியவையாய் விகரிப்பதுபோல பேதமாய் விகரிக்கக்கூடும். ஆனதால் பேதம் பொய்யே யாகின்றது.

௨௦. அஜாதஸ்யைவ பாவஸ்ய ஜாதிமிச்சந்தி வாதிந: |
அஜாதோ ஹ்யம்ருதோ பாவோ மர்த்யதாம் கதமேஷ்யதி ||

౨౦. అజాతస్యైవ భావస్య జాతిమిచ్ఛంతి వాదినః।
అజాతో హ్యమృతో భావః మర్త్యతాం కథమేష్యతి॥

பா-ஷா. சிலர் வாஸ்தவத்தில் அவிகாரமாயிருக்கிற சுத்த ப்ரம்மத்திற்கே உத்பத்தியை ஒப்புக்கொள்ளுகிறார்கள். அது கூடாது, பிறந்தாலழியும், அழியாதது பிறவாததாம். ஆகையால் அதற்குப் பிறப்பில்லை.

௨௧. ந பவத்யம்ருதம் மர்த்யம் ந மர்த்யமம்ருதம் ததா |
ப்ரக்ருதேரந்யதாபாவோ ந கதஞ்சித்பவிஷ்யதி ||

౨౧. న భవత్యమృతం మర్త్యం న మర్త్యమమృతం తథా।
ప్రకృతేరన్యథాభావో న కథఞ్చిద్భవిష్యతి॥

பா-ஷா. பிறப்பது பிறவாமலிராது அழியாமலுமிராது பிறவாதது பிறப்பது மழிவதும் செய்யாது. அந்தந்த வஸ்து ஸ்வபாவம் மாறுமோ; நெருப்புக்கு ஸ்வபாவமான உஷ்ணம் எப்போதாவது மாறுமோ; ஆனதால் ப்ரம்மம் விகாரத்தை யடையாது.

௨௨. ஸ்வபாவேநாம்ருதோ யஸ்ய பாவோ கச்சதி மர்த்யதாம் |
க்ருதகேநாம்ருதஸ்தஸ்ய கதம் ஸ்தாஸ்யதி நிச்சல: ||

౨౨. స్వభావేనామృతో యస్య భావో గచ్ఛతి మర్త్యతామ్।
కృతకేనామృతస్తస్య కథం స్థాస్యతి నిశ్చలః॥

பா-ஷா. எவன் அவிகார ஸ்வரூபமாகிய வஸ்துவுக்கு விகாரத்தை ஒப்புக்கொள்ளுகிறானோ, அவன் இது விகரியாததற்கு முன்னிது அவிகாரமாயிருந்ததென்று எங்ஙனம் சொல்லக்கூடும். விகரிக்கும் வஸ்து எப்போதும் விகாரத்தை யடைகின்றது. ஆனதாலப்படி வாதிப்பது பொய்யேயாம். ஆனதால் விகரித்தபின் மோக்ஷதசையில் அவிகாரரூபத்தை யடையுமென்பதும் பொய்யே யாமென்றுணர்க. ஆனதால் அந்தவாதம் நம்பத்தக்கதல்ல. விகரித்தலாவது விகாரத்தை யடைவதுதான்.

௨௩. பூததோ(அ)பூததோ வாபி ஸ்ருஜ்யமானே ஸமா ச்ருதி: |
நிச்சிதம் யுக்தியுக்தம் ச யத்தத்பவதி நேதரத் ||

౨౩. భూతతోఽభూతతో వాపి సృజ్యమానే సమా శ్రుతిః।
నిశ్చితం యుక్తియుక్తం చ యత్తద్భవతి నేతరత్॥

ஸ0-ஹா. வேதத்தில் அநேக வாக்யங்களால் ஸ்ருஷ்டி சொல்லப்படுகின்றது. ஸ்ருஷ்டியாவது ஸத்துக்கே என்பது ஒப்புக்கொள்ளப்பட்டது. ஸத்துக்கு ஸ்ருஷ்டி என்கிற உத்பத்தியாவது ரூபவிகாரத்தை யடைவதேயாம். ஆனதால் ஸ்ருஷ்டியை போதிக்கின்ற சுருதிவாக்யங்கள் ப்ரமாணமாக வேண்டுவதற்கு விகாரத்தை யொப்புக் கொள்வது தக்கதே யாமென்பது கூடாது. மாயையினால் தோற்றுகிற இந்த தோற்ற த்தையே உத்பத்தி என்று கருதி ஸ்ருஷ்டி வாதங்கள் சுருதியில் காணப்படுகின்றன வென்று சொன்னோம். இங்ஙனம் சொல்வது அமுக்யமென்றாலும், யுக்தி யுக்தமாயும் முன்பு பல சுருதிகளால் நிச்சயிக்கப்பட்ட அவிகார ரூபத்துக்கு விரோதமாகாததுமான பொருளே ஒப்புக்கொள்ளத் தக்கதாம். ஆகையால் ஸ்ருஷ்டியைச் சொல்லுகிற வாக்யங் களுக்கு நம்முடைய பக்ஷம் விரோதமானதல்ல.

உச. 𑌨𑍇𑌹 𑌨𑌾𑌨𑍇𑌤𑌿 𑌚𑌾𑌮𑍍𑌨𑌾𑌯𑌾𑌦𑌿𑌨𑍍𑌦𑍍𑌰𑍋 𑌮𑌾𑌯𑌾𑌭𑌿𑌰𑌿𑌤𑍍𑌯𑌪𑌿 ।
𑌅𑌜𑌾𑌯𑌮𑌾𑌨𑍋 𑌬𑌹𑍁𑌧𑌾 𑌮𑌾𑌯𑌯𑌾 𑌜𑌾𑌯𑌤𑍇 𑌤𑍁 𑌸𑌃 ॥

౨౪. నేహ నానేతి చామ్నాయాదింద్రో మాయాభిరిత్యపి ।
అజాయమానో బహుధా మాయయా జాయతే తు సః॥

ஸ0-ஹா. சுருதிதாத்பர்ய நிச்சயங் கூறுகின்றார். ஸ்ருஷ்டியும், ஸ்ருஷ்டிக்கப் பட்ட பொருள்களும் வாஸ்தவமாயின், அப்போது அஸத்யமென்று வேதவாக்யம் சொல்லக்கூடாது. "நேஹநாநாஸ்தி கிஞ்சந" (பேதப்பட்ட பொருளொன்றுமில்லை) என்கிற சுருதிமுதலிய வாக்யங்களால் ஜகத்து பொய்யென்று சொல்லப்படுகிறது. ஆகையாலத்வைத நிச்சயத்தின்பொருட்டு ஸ்ருஷ்டி கல்பித்துச் சொல்லப்பட்டதென் பது நன்றாய் விளங்குகின்றது, ப்ராணாதி ஸம்வாத வாக்கியங்களில் கற்பித்துச் சொல் லிய கதைபோல ஸ்ருஷ்டியும் கல்பித்துச் சொல்லப்பட்டது. ப்ராணஸம்வாதம் கல் பிக்கப்பட்டதென்பது சிலருக்கு ஸம்மதமன்றாயினும் அது கல்பிதமே என்பதை முன் விளக்கியிருக்கின்றமையால் அது கல்பிதமேயாம். அதுபோல ஸ்ருஷ்டி கதையும் கல் பிதமேயாம். இதுவுமன்றி, "இந்த்ரோமாயாபி: புருரூபஈயதே" (மாயையினால் நானா ரூபங்களுமுண்டாகின்றது.) என்கிற வாக்கியத்தினால், ஸ்ருஷ்டி மாயை என்பது கூற ப்பட்டது. இனி மாயாசப்தத்திற்கு இந்திரியங்களினால் பிறக்கிற ஜ்ஞாநமே பொரு ளாகையினால் ஸ்ருஷ்டி மாயை என்று கூறப்படவில்லை என்றாலும் அந்த இந்திரிய ஜ்ஞாநங்களே அவித்யை என்கிற மாயையாகவே ஒப்புக்கொள்ளுகின்றமையால் இந்த வாக்யம் ஸ்ருஷ்டியை மாயை என்று சொல்லுகிறதென்பது யுக்தமேயாம். இதுவு மன்றி, அஜாயமாநோபஹுதாவிஜாயதே" பிறவாத வஸ்து பலபடியாகப் பிறக்கிறது) என்கிற சுருதியினாலும் ஸ்ருஷ்டியில் ப்ரம்மத்திற்கு வாஸ்தவத்தில் பிறப்பில்லை. மாயை யினாலே பிறப்புண்டாகிறதென்பது விளங்கிற்றன்றே. 'அஜாயமாந:' என்கிற வாக்கி யத்தினால் வாஸ்தவத்தில் பிறப்பில்லை என்கிறது. 'பஹுதாவிஜயதே' என்பதினால் மாயாஸ்ருஷ்டியில் பிறப்பு, என்றுங் கூறப்படுகிறது. இந்த சுருதி வாக்கியத்திற்கு இங்ஙனமே பொருள். அன்றேல், ஒரு ப்ரம்மத்திற்கே பிறப்பும் பிறப்பில்லாமையும் வாஸ்தவத்தில் கூடுமோ; ஆனதால் பிறப்பு மாயை. பிறவாமை பரமார்த்தம். நெருப் பில் உஷ்ணமும் சீதமும் வாஸ்தவத்தில் ஒன்று சேருமோ. ஆனதால் கீழ்ச்சொல் லியபடி ஆத்மா ஒருவனே பரமார்த்தமென்கிற விந்த அத்வைதமே வேதாந்தத் திற்கு உண்மையான பொருள். "தத்ரகோமோஹ: கச்சோக ஏகத்வமநுபச் யத:" என்று, ஒன்றே என்று, அத்வைதத்தை யறிந்தவனுக்கு சோகம் மோகம் முத லிய துக்கங்கள் வருவதில்லை. என்று சுருதி சொல்லுகின்றது. "ம்ருத்யோஸ்ஸ ம்ருத்

யுமாப் நோதிய இஹநாநேவபச்யதி'' என்று; எவன் ஸ்ருஷ்ட்யாதி பேதங்களைக் காண் கிருனே அதாவது பரமார்த்தமென்று நினைக்கிருனே, அவன் மகாஸம்ஸாரியாய் பெரு ந்துன்பத்தை யடைவானென்று சுருதி சொல்லுகின்றது. இவற்றை யெல்லாம் யோசிக் கும்போது அத்வைதமே பரமார்த்தமென்று சொல்வது தக்கதாகின்றது.

உரு. ஸம்பூதேரபவாதாச்ச ஸம்பவ: ப்ரதிஷித்யதே |
கோ ந்வேநம் ஜநயேதிதி காரணம் ப்ரதிஷித்யதே ||

౨౫. సమ్భూతేరపవాదాచ్చ సమ్భవః ప్రతిషిధ్యతే ।
కో న్వేనం జనయేదితి కారణం ప్రతిషిధ్యతే॥

ஸo-ஸா. பேதப்பட்ட ஜகத்து பொய்யென்றும் அத்வைதம் மெய்யென்றும் ரூபி ப்பதற்கு மற்றொரு காரணங் கூறப்படுகின்றது. ஈசாவாஸ் யோப நிஷத்தில் "அந்தந்த ம: ப்ரவிசந்தி யேஸம்பூதி முபாஸதே'' என்கிற வாக்யத்தினுல் பேதப்பட்ட காரியங்க ளையு பாஸிப்பது அஜ்ஞாநத்தா லென்று அந்த உபாஸநத்தை தூஷிக்கின்றமையால் பேதகாரியங்கள் பொய்யென்று வெளியாகின்றது. ஆகையால் பேதகாரியங் கூடாதன் றோ. இனி, அங்குகரும ஸமுச்சயத்திற்காக நிந்தித்தமையாலும் வைராக்யம் பிறந்து வே தாந்தச்ரவணத்திலிழிந்தவனுக்கு பின் வருகிற ப்ரம்ம வித்யையோடு ஒரு புருஷனிடத் தில் ஸாமா நாதிகரண்ய மென்கிற சேர்க்கையை நினைத்து ஸமுச்சயஞ் சொல்லப்பட தாகையால் அவித்யை என்கிற கருமத்திற்கு தத்வஜ்ஞாந காலத்தில் ஸ்திதியில்லை என் பது விளங்கினமையாலந்த அவித்யையோடு ஸமுச்சயத்திற்காக நிந்திக்கப்படுகையாவது அவித்யையினுலாகிய அவை பொய்யாவதுபோல இந்த காரியபேதமும் பொய்யே என்ப தை அறிவித்தற்கேயாகையால் இதுபொய்யென்பதற்கு சாக்ஷியாவதில் விரோதமில்லை என்க. தத்வஜ்ஞாநம் பிறந்தபின் இவ்வாத்மாவுக்கு பேதத்தைப்பற்றிய ஜந்மத்தை யுண்டு பண்ணுவது எவனுக்கு ஸாத்யமென்கிற வாக்யத்தினுலும் ஜந்மபேதம்பொய்யே என்பது விளங்கிற்று. ஆனதாலத்வைதமே யுண்மையானது. ஜந்மகாரணமில்லை என்கிற சுருதி "நாயங்குதச்சிந்நபபூவகச்சித்'' என்கிற வாக்கியமேயாம். இது ரஜ்ஜுஸர்பத் ருஷ்டா ந்தத்தை யொத்திருக்கின்றது.

உசா. ஸ ஏஷ நேதி நேதீதி வ்யாக்யாதம் நிஹ்நுதே யத: |
ஸர்வமக்ராஹ்யபாவேந ஹேதுநாஜம் ப்ரகாசதே ||

౨౬. స ఏష నేతి నేతీతి వ్యాఖ్యాతం నిహ్నుతే యతః ।
సర్వమగ్రాహ్యభావేన హేతునాజం ప్రకాశతే॥

ஸo-ஸா. வேதவாக்யங்களில் அநேக வாக்யங்களால் காரியகாரண பேத பரம் பரை சொல்லப்பட்ட பின் இவையென்றுமில்லை என்று ஸமஸ்தவித பேதங்களையும் நிஷேதிக்கின்றது. ஆனதால் நிர்விசேஷாத்ம ஸ்வரூபத்தைச் சொல்வதற்கே இங்ஙா னம் கூறப்பட்டதென்று விளங்குகின்றது. ஆனதால் ஆத்மாவுக்கு ஜந்மபேதங்களில்லை. இதையறிந்தவனுக்கு ஸ்வயமாக ஸதாத்மஸ்வரூபம் ப்ரகாசிக்கின்றது.

உஎ. ஸதோ ஹி மாயயா ஜந்ம யுஜ்யதே ந து தத்த்வத: |
தத்த்வதோ ஜாயதே யஸ்ய ஜாதம் தஸ்ய ஹி ஜாயதே ||

౨౭. సతో హి మాయయా జన్మ యుజ్యతే న తు తత్త్వతః।
తత్త్వతో జాయతే యస్య జాతం తస్య హి జాయతే॥

ஸ0-ஹா. இவ்வாறு ஆத்மஸ்வரூபம் நிர்விசேஷமாய் க்ரகிக்கப்படாதாயின் சாஸ்திரத்தாலு மறியப்படாது. அப்போது அந்த ஆத்மஸ்வரூபத்தில் ப்ரமாணமில்லை என்கிற ஐயர்தீரச் சொல்லுகின்றது. ஓர் அதிஷ்டானசத்தி லிருந்தே மாயாகாரியங்கள் உண்டாக வேண்டுமாகையால் மாயாகாரியமான இந்த ஜகத்திற்கு அதிஷ்டானமாக ஸத்தான ஆத்மஸ்வரூப முண்டென்றறியப்படும். இதற்கு ஸத்ஸ்வரூபத்தைக் கொள்ளாவிடில் அநவஸ்தை தோஷம் வரும்.

பதான்வயார்த்தபேதங்கள்,

இந்தசுலோகத்தில் ஸதஃ என்கிற பதத்தை ஆறும்வேற்று மையாகக் கொண்டு ஒரு வ்யாக்யாநமும் ஐந்தாம் வேற்றுமையாக வைத்துக்கொண்டு ஒரு வ்யாக்யாநமும் செய்யப்பட்டது. இவ்விரண்டு வ்யாக்யாநங்களிலும் கருத்துக்கு பேதமில்லை.

௨௮. 𑌅𑌸𑌤𑍋 𑌮𑌾𑌯𑌯𑌾 𑌜𑌨𑍍𑌮 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌤𑍋 𑌨𑍈𑌵 𑌯𑍁𑌜𑍍𑌯𑌤𑍇 ।
𑌵𑌨𑍍𑌧𑍍𑌯𑌾𑌪𑍁𑌤𑍍𑌰𑍋 𑌨 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑍇𑌨 𑌮𑌾𑌯𑌯𑌾 𑌵𑌾𑌪𑌿 𑌜𑌾𑌯𑌤𑍇 ॥

౨౮. అసతోమాయయాజన్మతత్త్వతోనైవయుజ్యతే।
వన్ధ్యాపుత్రోనతత్త్వేనమాయయావాపిజాయతే॥

ஸ0-ஹா. அஸத்கார்ய வாதிகளும் சூந்யவாதிகளும் தூஷிக்கப் படுகிறார்கள். ஏனென்றால், அஸத்தான வஸ்துவிலிருந்து வாஸ்தவகாரியமாவது அவாஸ்தவ காரியமாவது பிறவாது. மலடி மகனுக்கு மெய்யான மகனாவது பொய்யான மகனாவதுபிறப் பனே: ஆனதால் ஸதாத்மஸ்வ ரூபத்திலிருந்து இவை எல்லாந்தோற்றுகின்றன. காணாத கல்பனை யொப்பத்தக்கதல்ல.

௨௯. 𑌯𑌥𑌾 𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑍇 𑌦𑍍𑌵𑌯𑌾𑌭𑌾𑌸𑌂 𑌸𑍍𑌪𑌨𑍍𑌦𑌤𑍇 𑌮𑌾𑌯𑌯𑌾 𑌮𑌨𑌃 ।
𑌤𑌥𑌾 𑌜𑌾𑌗𑍍𑌰𑌦𑍍𑌵𑌯𑌾𑌭𑌾𑌸𑌂 𑌸𑍍𑌪𑌨𑍍𑌦𑌤𑍇 𑌮𑌾𑌯𑌯𑌾 𑌮𑌨𑌃 ॥

౨౯. యథాస్వప్నేద్వయాభాసంస్పన్దతేమాయయామనః।
తథాజాగ్రద్వయాభాసంస్పన్దతేమాయయామనః॥

ஸ0-ஹா. மாயையினால் ஸத்துக்கு ஜந்மமென்பது உதாகரணத்தால் காட்டப்படுகின்றது. ஒருமனதானது எவ்வாறு கயிற்றில் பாம்பாய் தோற்றத்திற்குக் காரணமாய் அதை யறிகின்றதோ இவ்வாறே ஸ்வப்நத்தில், விஷய ரூபமாயும், அதையறிகிறதாயும் தோற்றுகின்றது அவ்வாறே விழித்துக்கொண்டிருக்கும்போதும் நானாவித விஷயபேதமாய் தோற்றி யவற்றை யறிவதாக நிற்கின்றது. ஆனதாலிவை யுண்மையல்ல. பரமார்த்த ஸத்தின் காரியமாகின்றது. இவ்வாறு பேதப்பட்ட வஸ்துக்களாய் தோற்றுவது மாயையினாலென்பது பலமுறை கூறப்பட்டது.

௩௦. 𑌅𑌦𑍍𑌵𑌯𑌂 𑌚 𑌦𑍍𑌵𑌯𑌾𑌭𑌾𑌸𑌂 𑌮𑌨𑌃 𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑍇 𑌨 𑌸𑌂𑌶𑌯𑌃 ।
𑌅𑌦𑍍𑌵𑌯𑌂 𑌚 𑌦𑍍𑌵𑌯𑌾𑌭𑌾𑌸𑌂 𑌤𑌥𑌾 𑌜𑌾𑌗𑍍𑌰𑌨𑍍𑌨 𑌸𑌂𑌶𑌯𑌃 ॥

౩౦. అద్వయఞ్చద్వయాభాసమ్మనస్స్వప్నేనసంశయః।
అద్వయఞ్చద్వయాభాసన్తథాజాగ్రన్నసంశయః॥

ஸ0-ஹா. ஸ்வப்நத்தில் வஸ்துக்களைக் காட்டித்தருகின்ற கண் முதலிய இந்திரியங்களுமில்லை. காணக்கூடிய விஷயங்களென்கிற வஸ்துக்களுமில்லை. ஆயினும் பல

வஸ்துக்களும் காணப்படுகின்றன. ஆதலால் அவை பொய்யென்பதில் ஸந்தேகமில்லை. இவ்வாறே இந்த ஜாக்ரத்தசையிலும் வாஸ்தவத்தில் ஒருவித பேதமுமில்லாதிருக்கவும் மாயையினல் பலபேதங்கள் கயிற்றில் பாம்புபோல காணப்படுகின்றன. ஆனதால் இவை பொய்யென்பதினு மையமில்லை. ஆனதாலறியப்படுவ்து அறிவது என்கிற பேதமுமில்லை. அறிவே அங்ஙனம் தோற்றமென்க.

௩௧. [illegible] ।
[illegible] ॥

3౧. మనోదృశ్యమిదం ద్వైతం యత్కిఞ్చిత్సచరాచరమ్ ।
మనసో హ్యమనీభావే ద్వైతం నైవోపలభ్యతే॥

ஸ-ஹா. கயிற்றில் பாம்புபோல் இவ்வுலகினில் விழித்திருக்கும்போதும் தோற்றுகிற எல்லாம் மனதே என்கிறார் கீழ். இதற்கு ப்ரமாணங் கூறுகின்றாரிதில். அதாவது இவ்வுலகமெல்லாம் மனதின் காரியமேயாகின்றது; மனம் தோற்றினபோது தோற்றி மனமடங்கினபோது தோற்றாமையாமென்க. பேருறக்கத்திலும் மூர்ச்சையிலும் யோகத்தால் மனதை யடக்கும்போதும் இவ்வுலகத்திலுள்ள பேதங்களிலொன்றும் தோற்றுவதில்லையன்றோ, இத்தால் மனதினல் இவ்விகல்பங்கள் காணப்படுகின்றனவே யன்றி இவை வாஸ்தவங்களல்லவென்பது திண்ணம்.

௩௨. [illegible] ।
[illegible] ॥

3౨. ఆత్మసత్యానుబోధేన న సఙ్కల్పయతే యదా ।
అమనస్తాం తదా యాతి గ్రాహ్యాభావే తదగ్రహమ్॥

ஸ-ஹா. இவனுக்கு நிச்சேஷமாய் மனோவிகல்ப மொழியுங் காலங் கூறப்படுகின்றது. ஆத்மஸ்வரூபமே ஸத்யம்; காரணமாகின்றமையால்; குடமுதலியவற்றிற்குக் காரணமாகிய மண்போல். "வாசாரம்பணம்விகாரோநாமதேயம் ம்ருத்திகேத்யேவ ஸத்யம்" என்று சுருதி வாக்கியத்தினு மிதையறியலாம். இதை சாஸ்திரப்படி ஆசாரியன் உபதேசிக்க அறிவதுதான், ஆத்மஸ்வரூபைக்யஜ்ஞானமாகின்றது, இந்தஜ்ஞானம் பிறந்த பின் ஸங்கல்பங்கள் நீங்குகின்றன. இவனுக்கப்போது ஸங்கல்பிக்க வேண்டியபொருளில்லை யன்றோ. ஆக ஸங்கல்பிக்கவேண்டிய பொருளில்லாமையால், கொளுத்தக் கூடியவை யில்லாதபோது நெருப்புக்குக் கொளுத்துகிற தன்மை நீங்கிநிற்பதுபோல மனதிற்கும் ஸங்கல்பம் நீங்கிப்போகின்றது. அப்போது மநமில்லாதவனேயாகிறான். அக்காலத்தில் இவ்விதபேதஜ்ஞானங்கள் பிறப்பதில்லை.

௩௩. [illegible] ।
[illegible] ॥

33. అకల్పకమజం జ్ఞానం జ్ఞేయాభిన్నం ప్రచక్షతే।
బ్రహ్మ జ్ఞేయమజం నిత్యమజేనాజం విబుధ్యతే॥

ஸ-ஹா."மநஸைவாநுத்ரஷ்டவ்யம்" என்று மனதினலே ப்ரம்மமறியத்தக்கதென்று சுருதி சொல்லுகின்றமையால் மனமழிந்தபின், ப்ரம்மஜ்ஞானம் பிறப்பது எங்ஙனமெனில் கூறுகின்றார். அத்வைத ஸத்தே பரமார்த்தமாகி த்வைதப்ரபஞ்சமெல்லாம் பொய்யாயழியினு மந்த ப்ரம்மஸ்வரூபஜ்ஞானம் சுயமாகவே உண்டாகும். ஸர்வ கல்ப

ஜீயும் நீங்கியதும் பிறப்பில்லாததுமான ஜஞானஸ்ரூபமன்றோ ப்ரம்மம். ஆனதாலதுவே ஜ்ஞேயமாகின்றது. அதாவது ஸ்வயம்ப்ரகாசமாகையினால் சுயமாகவே விளங்குகின்றது. ஆனதாலறிவு மறியப்படுவதுமொன்றே என்கிறார்கள். அதாவது மற்றொன்றாலறியப்படாது தன்னாலேயே யறியப்படுமென்றவாறு. இந்த ஜ்ஞானஸ்வரூபத்தை யறிகிறவனு மந்த ஜ்ஞானஸ்ரூபமான ப்ரம்மமே. ஆகையினாலறிபவனும் நித்யனே. விகாரமில்லாதவனே. ஆக நிர்விகாரத்தால் நிர்விகாரம் நிர்விகாரனு லறியப்படுமென்றதாயிறு. இதனால் அறிவேயுள்ளது. அதுவே அறிபவனாகவும் அறியப்படும் பொருளாகவும் காணப்படுகிறது. ஸ்வயம் ப்ரகாசமாய் தனக்குத்தானே விளங்குகின்றது. இதையொழிய வேறில்லை என்பது ஸித்தமாயிற்று. இது ப்ரம்மவித்துக்கள் சொல்லும் வார்த்தை. இவ்விடத்தில் த்ருஷ்டாந்தமாக உஷ்ணரூபமாகிய அக்நியையும் ப்ரகாசரூபமாகிய சூரியனையும் எடுத்துக்கொள்ள வேண்டியது. ப்ரமாணங்களாக 'விஜ்ஞானமாநந்தம் ப்ரம்ம' "ஸத்யம் ஜ்ஞானமாநந்தம் ப்ரம்ம" இவைமுதலிய சுருதிகளைக் கொள்க. இவற்றிற்குப்பொருள் ப்ரம்மம் ஸ்வயம்ப்ரகாசஜ்ஞானஸ்வரூபமானது என்பதாம்.

௩௪. 𑌨𑌿𑌗𑍃𑌹𑍀𑌤𑌸𑍍𑌯 𑌮𑌨𑌸𑍋 𑌨𑌿𑌰𑍍𑌵𑌿𑌕𑌲𑍍𑌪𑌸𑍍𑌯 𑌧𑍀𑌮𑌤𑌃 ।
𑌪𑍍𑌰𑌚𑌾𑌰𑌃 𑌸 𑌤𑍁 𑌵𑌿𑌜𑍍𑌞𑍇𑌯𑌃 𑌸𑍁𑌷𑍁𑌪𑍍𑌤𑍇𑌽𑌨𑍍𑌯𑍋 𑌨 𑌤𑌤𑍍𑌸𑌮𑌃 ॥

౩౪. నిగృహీతస్యమనసో నిర్వికల్పస్యధీమతః।
ప్రచారస్సతువిజ్ఞేయస్సుషుప్తేఽన్యోనతత్సమః॥

ஸ0-ஸா. கீழ்சுலோகங்களில் மநஸ்ஸினால் இந்த பேதப்ரபஞ்சம் தொற்றுகிறதென்றும் இந்த மனம் ஒழிந்தபோது இவை கழியுமென்றும், அதற்கு ஸத்யஸத்ப்ரகாச ரூபசுத்த ப்ரம்மைக்யஜ்ஞானம் காரணமென்றும் சொல்லப்பட்டது. இவ்வாறு மனமொழிந்தபின் இந்த ஆத்மஸ்வரூபம் இருக்கும் க்ரமம் முமுக்ஷுக்களுக்கு அறியத்தக்கது. அப்போது ஜ்ஞானரூபியாய் நிர்விகல்பனாய் விளங்குகிறானன்றோ. நித்யமும் சுஷுப்திதசையில் நிர்விகல்பசுக ஜ்ஞானஸ்வரூபமாயிருப்பது ஸ்வப்பிரகாசனாகிய ஆத்மாவுக்கு ப்ரதயக்ஷமாயிருக்கையில் இதை விட மநம் அழிந்தபின் இந்த ஆத்ம ஸ்வரூபமிருக்கிற விதம் வேறில்லாமையால் அறியவேண்டியதில்லை என்பது தக்கதல்ல. ஸுஷுப்திக்கும், மனம் முதலியவை யொழிந்த நிர்விசேஷ தசைக்கும் மிகவும் பேதமுண்டு. ஸுஷுப்தியில் க்லேசகர் மாவித்யைகள் முதலிய துக்கபீஜங்களோடு கூடியிருக்கிறான், ப்ரம்ம ஜ்ஞானம் வந்த தசையில் அவையெல்லாம் நீங்கி சுத்தமாய் சாந்தமாய் க்லேசம் கழிந்து ஸ்வதந்திரமாயிருக்கிற ஸ்வரூபத்தோடு விளங்குகின்றான். ஆனதால் இதற்குமதற்கும் பேதமுண்டாகையா லந்த தசையில் ஸ்வரூப மறியத்தக்கதாம்.

௩௫. 𑌲𑍀𑌯𑌤𑍇 𑌹𑌿 𑌸𑍁𑌷𑍁𑌪𑍍𑌤𑍇 𑌤𑌨𑍍𑌨𑌿𑌗𑍃𑌹𑍀𑌤𑌂 𑌨 𑌲𑍀𑌯𑌤𑍇 ।
𑌤𑌦𑍇𑌵 𑌨𑌿𑌰𑍍𑌭𑌯𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌲𑍋𑌕𑌂 𑌸𑌮𑌨𑍍𑌤𑌤𑌃 ॥

౩౫. లీయతేహిసుషుప్తేతన్నిగృహీతంనలీయతే।
తదేవనిర్భయంబ్రహ్మజ్ఞానాలోకంసమన్తతః॥

ஸ0-ஸா. ஸுஷுப்தியிலும் மோக்ஷத்திலும் ஸ்வரூபத்திற்கு பேதமுண்டென்று சொல்லியதை ரூபிக்கின்றது. ஸுஷுப்தியில் வாஸனை பீஜம் முதலிய வற்றோடு கூடின ஸமஸ்தாவித்யைகளோடு கூடியே லயிக்கிறானே யன்றி இவைகள் சுத்தமாய் நீங்குவதில்லை. ஆகையால் இந்த ஸுஷுப்தியைவிட மோக்ஷத்திற்கு மிகவும் பேதமுண்டு. க்ராஹ்யம் க்ராககம், என்கிற பேதங்களெல்லாம் நீங்கிசுத்தமான லொழிய

சுத்தமாய் பயமில்லாததாய் சாந்தமாய் கேவலஜ்ஞாநஸ்வரூபமாய் விளங்குகிற ப்ரம்மஸ்வரூபத்தோடு ஜீவஸ்வரூபம் அபேதத்தை யடையமாட்டாது. ஆனதால் இந்த பேதங்கள் நீங்குவது மோக்ஷத்திலேயாமன்றி மற்ற ஸுஷுப்தி முதலிய போதுகளிலுண்டாகாது. ஆனதாலந்த விலக்ஷணஸ்வரூப மறியத்தக்கது. அது ஆகாயம்போல் வ்யாபகமானது.

௩௬. அஜமநித்ரமஸ்வப்நமநாமகமரூபகம் |
ஸக்ருத்விபாதம் ஸர்வஜ்ஞம் நோபசார: கதஞ்சந ||

3౬. అజమనిద్రమస్వప్నమనామకమరూపకమ్ ।
సకృద్విభాతం సర్వజ్ఞం నోపచారః కథంచన ॥

ஸா0-ஸா. இந்த ஸ்வரூபமானது ஜன்மகாரணமில்லாமையால் ஜன்மமில்லாதது. கயிற்றில் பாம்புபோல அவித்யையினாலே ஜன்மமென்று சொன்னோம். இந்த அவித்யை ஆத்மஸ்வரூப தத்வஜ்ஞாநத்தால் நிவ்ருத்தியடைந்தது. ஆனதால் பிறப்புக்கு ஹேதுவில்லையன்றோ. ஆனதால் நித்திரையில்லாதது. அவித்யை என்கிற மயையினாலன்றோ நித்திரையாவது. அந்த அவித்யை நீங்கியபடியால் நித்திரைக்கு ஹேதுவில்லையன்றோ. ஆனதால் இந்த ஜகத்தை ப்ரம்மிக்கிற ஸ்வப்நமுமில்லை. அஜ்ஞானத்தாலன்றோ நாமரூபங்களை ப்ரமிக்கின்றான். அது நீங்கினபின், அதற்குக்காரணமில்லையன்றோ. ஆனதால் ரூபநாமங்களில்லாதது. ஸ்வயம் ப்ரகாசமாய் எப்போதும் விளங்குவது. எல்லாவற்றையு மறிந்தது. இந்த ஸ்வரூபா விர்ப்பாவத்தை யடைந்தபின் யோகாப்யாச முதலியவை யொன்றும் செய்யவேண்டுவதில்லை.

௩௭. ஸர்வாபிலாபவிகத: ஸர்வசிந்தாஸமுத்தித: |
ஸுப்ரசாந்த: ஸக்ருஜ்ஜ்யோதி: ஸமாதிரசலோऽபய: ||

3౭. సర్వాభిలాపవిగతస్సర్వచింతాసముత్థితః ।
సుప్రశాంతస్సకృజ్జ్యోతిస్సమాధిరచలోఽభయః ॥

ஸா0-ஸா. வாகிந்திரியம் முதலிய ஸமஸ்த இந்திரியங்களும் நீங்கியது. அந்தக்கரண ஸம்பந்தமில்லாதது. ஸர்வ சாந்திஸ்வரூபமானது. ப்ரகாசரூபமானது, ஸமாதிஸ்வரூபமானது. சலநமில்லாதது. பயமில்லாதது, விகாரமுண்டானாலன்றோ பயமுண்டாவது, விகாரமில்லாமையால் பயமுமில்லை. இப்படிப்பட்டது சுத்தாத்மஸ்வரூபம். இதையறிய வேணும். இதையறிந்த வித்வானே ப்ரம்மம். ஆனதால் ஜீவா பேதத்தைச் சொல்லுகிறது யுக்தமேயாம்.

௩௮. க்ரஹோ ந தத்ர நோத்ஸர்கச்சிந்தா யத்ர ந வித்யதே |
ஆத்மஸம்ஸ்தம் ததா ஜ்ஞாநமஜாதி ஸமதாம் கதம் ||

3౮. గ్రహో న తత్ర నోత్సర్గశ్చింతా యత్ర న విద్యతే।
ఆత్మసంస్థం తదా జ్ఞానమజాతిసమతాం గతమ్॥

ஸா0-ஸா. இந்த விகார சூந்யமான ப்ரம்மத்தை விதிநிஷேதங்களால் கொள்ளவும் விலக்கவுங்கூடாது என்று ரூபித்துக்காட்டுகின்றார். கீழ்ச்சொல்லியபடி ஜாதியில்லாதது ஸாம்யமுடையது என்பது கீழ்ச்சொல்லிய ஹேதுக்களால் விளங்குகின்றதன்றோ. நிர்விகாரமாயும் நிரவயவ மாயுமிருக்கிற வஸ்துவுக்கு இங்கு சொல்லப்பட்டவிஷயங்கள் கூடினவையாமாகையால் அப்படிப்பட்ட ப்ரம்மத்திற்கு இவை நன்றாய்ச் சேரு

மென்க. சிந்தைஎல்லா மொழிந்தமையால் மனோகோசரமுமாகாத அந்த சுத்தப்ரம்மஸ்வரூபத்திற்கு ஒரு தோஷமுமில்லை.

௩௯. 𑌅𑌸𑍍𑌪𑌰𑍍𑌶𑌯𑍋𑌗𑍋 𑌵𑍈 𑌨𑌾𑌮 𑌦𑍁𑌰𑍍𑌦𑌰𑍍𑌶𑌃 𑌸𑌰𑍍𑌵𑌯𑍋𑌗𑌿𑌭𑌿𑌃।
𑌯𑍋𑌗𑌿𑌨𑍋 𑌬𑌿𑌭𑍍𑌯𑌤𑌿 𑌹𑍍𑌯𑌸𑍍𑌮𑌾𑌦𑌭𑌯𑍇 𑌭𑌯𑌦𑌰𑍍𑌶𑌿𑌨𑌃॥

౩౯. అస్పర్శయోగో వై నామ దుర్దర్శః సర్వయోగిభిః।
యోగినో బిభ్యతి హ్యస్మాదభయే భయదర్శినః॥

ஸ௦-ஹா. இங்ஙனம் பரமார்த்த சுத்த ப்ரம்மஸ்ரூபத்தை யடைவது அத்வைதஜ்ஞானத்திற்கு பலமாயின், அனைவருமிதைவிரும்பாம லிருப்பதற்குக் காரணமென்னவென்றால், கூறுகின்றோம். ஸர்வஸம்பந்தங்களும் நீங்கி சுத்தமாயிருக்கின்றமையால் அஸ்பர்சயோகம், என்று பெயரையுடைய இந்த ஸ்வரூபமானது எல்லாயோகிகளுக்கும் சுலபமாய் காணக்கூடியதன்று, மிகவும் வருத்தத்தாலறியத்தக்கது. இப்படிப்பட்ட இந்தஸ்வரூபம் அபயமாயிருந்தாலும் இதை பயஸ்வரூபமாக ப்ரமித்து பயப்படுகிறார்கள். ஆனதாலிதைப்பலரும் விரும்புவதில்லை. இதற்கு அவிவேகமே காரணமானது.

௪௰. 𑌮𑌨𑌸𑍋 𑌨𑌿𑌗𑍍𑌰𑌹𑌾𑌯𑌤𑍍𑌤𑌮𑌭𑌯𑌂 𑌸𑌰𑍍𑌵𑌯𑍋𑌗𑌿𑌨𑌾𑌮𑍍।
𑌦𑍁𑌃𑌖𑌕𑍍𑌷𑌯𑌃 𑌪𑍍𑌰𑌬𑍋𑌧𑌶𑍍𑌚𑌾𑌪𑍍𑌯𑌕𑍍𑌷𑌯𑌾 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌰𑍇𑌵 𑌚॥

౪౦. మనసో నిగ్రహాయత్తమభయం సర్వయోగినామ్।
దుఃఖక్షయః ప్రబోధశ్చాప్యక్షయా శాంతిరేవ చ॥

ஸ௦-ஹா. எந்த அதிக புத்திமான்களுக்கு ப்ரம்மஸ்வரூபமே பரமார்த்தம், இதையொழிந்த மற்றவை எல்லாம் அபரமதார்த்தமென்று புத்தியுண்டாகின்றதோ; கயிற்றில் பாம்புபோல இந்தமநம் முதலியவை கல்பிக்கப்பட்டவை யென்று தோற்றுகின்றதோ; அவர்களுக்கு, ப்ரம்மஸ்ரூபம் ப்ரகாசித்தமையால் அவர்கள் ப்ரம்மஸ்வரூபமேயாகிறார்கள். அப்படி ப்ரம்மஸ்ரூபமேயானவர்களுக்கு மோக்ஷமும், பயமில்லாத தாய் அக்ஷயமாயிருக்கிற சாந்தியும், ஸ்வயமாகவே யுண்டாகிறது. வேறுகாரணம் வேண்டுவதில்லை. இவர்களைவிட வேறான மந்தாதிகாரமுடையவர்கள் ஆத்மாவைவிட வேறுபட்டமநஸ்ஸு முதலியவஸ்துக்களைக் காண்கிறார்கள். இந்த அதிகாரிகளுக்கு யோகம் முதலியவற்றால்ஆத்மஸத்யஸ்வரூபஜ் ஞானமுண்டாகி மனோநிக்ரகம் பிறந்தபின் மோக்ஷமுண்டாகிறது. அதை யனுஸரித்ததுக்க நிவ்ருத்தி முதலிய ஸமஸ்த சுபவிஷயங்களும் அவர்களுக்கு மனஸ்ஸை நிக்ரகிப்பதினாலுண்டாகும்.

௪௧. 𑌉𑌤𑍍𑌸𑍇𑌕 𑌉𑌦𑌧𑍇𑌰𑍍𑌯𑌦𑍍𑌵𑌤𑍍𑌕𑍁𑌶𑌾𑌗𑍍𑌰𑍇𑌣𑍈𑌕𑌬𑌿𑌨𑍍𑌦𑍁𑌨𑌾।
𑌮𑌨𑌸𑍋 𑌨𑌿𑌗𑍍𑌰𑌹𑌸𑍍𑌤𑌦𑍍𑌵𑌦𑍍𑌭𑌵𑍇𑌦𑌪𑌰𑌿𑌖𑍇𑌦𑌤𑌃॥

౪౧. ఉత్సేక ఉదధేర్యద్వత్కుశాగ్రేణైకబిందునా।
మనసో నిగ్రహస్తద్వద్భవేదపరిఖేదతః॥

ஸ௦-ஹா. மனோநிக்ரகம் எப்படிஎன்றால், அது இவன்ப்ரயாஸத்தினால் ஸாத்தியமல்ல. கடல்நீரை குசாக்ரத்தினால் ஒருபிந்து எடுத்து சோஷிப்பிக்க நினைப்பதுபோலாகும். ஆனதால் எவ்வாறாயினும் ப்ரம்மஸ்வரூபத்தை ஸாக்ஷாத்கரிக்கவேணு மென்கிற நிலையுடையனானால் அவனுக்கு எளிதில் உண்டாகும்.

௪௨. 𑌉𑌪𑌾𑌯𑍇𑌨 𑌨𑌿𑌗𑍃𑌹𑍍𑌣𑍀𑌯𑌾𑌦𑍍𑌵𑌿𑌕𑍍𑌷𑌿𑌪𑍍𑌤𑌂 𑌕𑌾𑌮𑌭𑍋𑌗𑌯𑍋𑌃।
𑌸𑍁𑌪𑍍𑌰𑌸𑌨𑍍𑌨𑌂 𑌲𑌯𑍇 𑌚𑍈𑌵 𑌯𑌥𑌾 𑌕𑌾𑌮𑍋 𑌲𑌯𑌸𑍍𑌤𑌥𑌾॥

౪౨. ఉపాయేన నిగృహ్ణీయాద్విక్షిప్తం కామభోగయోః ।
సుప్రసన్నం లయే చైవ యథా కామో లయస్తథా ॥

பா0-ஹா. அந்த உறுதியோடு மேற்கூறப்படுமுபாயங்களால் நெஞ்சை வசப்படுத்த வேண்டும். ஸுஷுப்தியிலும் காமபோகங்களிலும், சென்ற நெஞ்சை அவைகளில் புகவொட்டாமல் தடுத்து ஜயிக்கவேணும். ஸுஷுப்தியில் நெஞ்சு தெளிந்திருந்தாலும் மோகம்போலவே அதுவும் விரோதியாகும். இது குற்றமுடையதென்பது முன்கூறப்பட்டது. ஆனதாலிவற்றிலொன்றிலும் நெஞ்சு செல்லாமல் ஜயிக்கவேண்டும்.

௪௩. து:க²ம் ஸர்வமநுஸ்ம்ருத்ய காமபோ⁴கா³ந்நிவர்தயேத் ।
அஜம் ஸர்வமநுஸ்ம்ருத்ய ஜாதம் நைவ து பஶ்யதி ॥

౪౩. దుఃఖం సర్వమనుస్మృత్య కామభోగాన్నివర్తయేత్ ।
అజం సర్వమనుస్మృత్య జాతం నైవ తు పశ్యతి ॥

பா0-ஹா. இந்த உலகமெல்லாங் கல்பிக்கப்பட்டமையால் துன்பத்திற்கிடமென்று தன்னுடைய அநுபவத்தைக்கொண்டு சிந்தித்து காமபோகங்களால் வருவது துன்பமே இன்பமல்லவென் றுணர்ந்து சிந்திக்கின்றமையால் காமங்களில் வைராக்கியத்தை யடையவேண்டும். இந்த ஜகத்தெல்லாம் பிறப்பில்லாத ப்ரம்மமே என்று ஆசாரியோபதேசத்தாலறிந்த சுருதி வாக்கியங்களினுல் உணர்ந்து த்வைத மென்கிற பேதத்தைக் காணுமல் விடக்கடவன். வாஸ்தவத்தில், த்வைத மில்லையன்றே. இது காமபோகங்களிலிருந்துமனத்தைத் திருப்பும் வழியாம்.

௪௪. லயே ஸம்போ³த⁴யேச்சித்தம் விக்ஷிப்தம் ஶமயேத்புந: ।
ஸகஷாயம் விஜாநீயாத்ஸமப்ராப்தம் ந சாலயேத் ॥

౪౪. లయే సంబోధయేచ్చిత్తం విక్షిప్తం శమయేత్పునః ।
సకషాయం విజానీయాత్సమప్రాప్తం న చాలయేత్ ॥

பா0-ஹா. இவ்வாறு ஜ்ஞாநம் வைராக்யம், இவ்விரண்டுமுடையவனுகி அவ்வுபாயத்தால், ஸுஷுப்தியில் சேருகிற மனஸ்ஸை எழுப்பவேணும் அதாவது ஆத்மவிவேகத்தை யறியும்படி செய்யவேண்டுமென்கை. அப்போது விஷயங்களைப் பற்றுமாயின் முன்சொன்ன உபாயத்தால் அவற்றில் செல்லவொட்டாமல் அடக்கவேண்டும். இப்படி அப்யாஸத்தினுல் விஷயங்களில் செல்லாமலும் ஸுஷுப்தியை யடையாமலும் நடுநிலையிலிருக்கின்ற மனதை ராகபீஜத்தோடுகூடியதென்று நினைக்கவேணும். அதில் நின்று ப்ரயத்நத்தால் ஸாம்யத்தை யடையும்படி செய்யவேணும். எப்போது ஸமத்திற்கு வருமோ அப்போது சலியாமல் நின்று விஷயங்களை நீக்கவேணும்.

௪௫. நாஸ்வாத³யேத்ஸுக²ம் தத்ர நி:ஸங்க³: ப்ரஜ்ஞயா ப⁴வேத் ।
நிஶ்சலம் நிஶ்சரச்சித்தமேகீகுர்யாத்ப்ரயத்நத: ॥

౪౫. నాస్వాదయేత్సుఖం తత్ర నిఃసంగః ప్రజ్ఞయా భవేత్ ।
నిశ్చలం నిశ్చరచ్చిత్తమేకీకుర్యాత్ప్రయత్నతః ॥

பா0-ஹா. அந்த அப்யாசத்தால் யோகம் வந்தபோது ஆத்மாவுக்கு ஒருவித சுகமுண்டாகிறதன்றே. அந்த சுகத்தையு மநுபவிக்கக்கூடாது. கேவலஜ்ஞாநத்தால் நிச்சலமாய் நின்று, சிதாத்ம ஸ்வரூபத்தில் ஒன்றுசேர்க்கவேணும். அந்த யோககாலத்தி லுண்டாகிற சுகமும் கல்பிதமாகையால் பொய்யென்றே நினைக்கவேணும்.

௪௬. 𑌯𑌦𑌾𑌨𑌲𑍀𑌯𑌤𑍇𑌚𑌿𑌤𑍍𑌤𑌂𑌨𑌚𑌵𑌿𑌕𑍍𑌷𑌿𑌪𑍍𑌯𑌤𑍇𑌪𑍁𑌨𑌃 ।
𑌅𑌨𑌿𑌙𑍍𑌗𑌨𑌮𑌨𑌾𑌭𑌾𑌸𑌂𑌨𑌿𑌷𑍍𑌪𑌨𑍍𑌨𑌂𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌤𑌤𑍍𑌤𑌦𑌾॥

౪౬. యదానలీయతేచిత్తంనచవిక్షిప్యతేపునః ।
అనిఙ్గనమనాభాసంనిష్పన్నంబ్రహ్మతత్తదా॥

ஶ௦-ஹா. இந்த உபாயத்தினுல் நிக்ரஹிக்கப்பட்ட மனஸ்ஸானது, எப்போது, ஸுஷுப்தியில் லயத்தை யடையாதோ; விஷயங்களிலும் செல்லாதோ; காற்றில்லாத விடத்தில் வைத்ததீபம்போ லசையாமலிருக்கின்றதோ; அந்த தசையில் ப்ரம்மஸ்வரூப ஸாக்ஷாத்காரம் பிறக்கின்றது.

௪௭. 𑌸𑍍𑌵𑌸𑍍𑌥𑌂𑌶𑌾𑌨𑍍𑌤𑌂𑌸𑌨𑌿𑌰𑍍𑌵𑌾𑌣𑌮𑌕𑌥𑍍𑌯𑌂𑌸𑍁𑌖𑌮𑍁𑌤𑍍𑌤𑌮𑌮𑍍 ।
𑌅𑌜𑌮𑌜𑍇𑌨𑌜𑍍𑌞𑍇𑌯𑍇𑌨𑌸𑌰𑍍𑌵𑌜𑍍𑌞𑌂𑌪𑌰𑌿𑌚𑌕𑍍𑌷𑌤𑍇॥

౪౭. స్వస్థంశాన్తంసనిర్వాణమకథ్యంసుఖముత్తమమ్ ।
అజమజేనజ్ఞేయేనసర్వజ్ఞంపరిచక్షతే॥

ஶ௦-ஹா. அந்த ப்ரம்மஸ்வரூப ஸத்ய சுகமானது, நிலையானது ; ஸகல ஸங்கடங்களும் நீங்கியது; கைவல்யஸ்வரூபத்தை யுடையது. இப்படிப்பட்டதென்று பிறருக்குச்சொல்லிமுடியாதது. அளவில்லாத பெரின்பமானது; யோகிகளுக்கு ப்ரத்யக்ஷமானது, ஸர்வஸ்வரூபமானது நித்யமானது. அது எல்லா மறிந்த ப்ரம்மமே.

௪௮. 𑌨𑌕𑌶𑍍𑌚𑌿𑌜𑍍𑌜𑌾𑌯𑌤𑍇𑌜𑍀𑌵𑌸𑍍𑌸𑌮𑍍𑌭𑌵𑍋𑌽𑌸𑍍𑌯𑌨𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇।
𑌏𑌤𑌤𑍍𑌤𑌦𑍁𑌤𑍍𑌤𑌮𑌂𑌸𑌤𑍍𑌯𑌂𑌯𑌤𑍍𑌰𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌨𑍍𑌨𑌜𑌾𑌯𑌤𑍇॥

౪౮. నకశ్చిజ్జాయతేజీవస్సమ్భవోఽస్యనవిద్యతే ।
ఏతత్తదుత్తమంసత్యంయత్రకిఞ్చిన్నజాయతే॥

ஶ௦-ஹா. இந்தப்படி மனோநிக்ரஹம் ஸ்ருஷ்டி உபாஸனை எல்லாம் பொய். இந்த பரமார்த்தஸ்வரூபத்தை யறிவிப்பதற்காகச் சொல்லப்பட்டவை. பரமார்த்த ஸத்யமன்று. பரமார்த்த ஸத்யமாவது ஜீவன் கர்தாபோக்தா என்கிற பேதங்களோடு பிறப்பதில்லை ஸ்வபாவ ஸத்யமான இந்த ப்ரம்மஸ்வரூபத்தில் ஒன்றும் பிறப்பதில்லை இந்த ப்ரம்மமே ஸர்வோத்தம ஸத்யமானது என்பதுதான். ஆகையாலத்வைதம்ஸர்வோத்தமமானது.

𑌇𑌤𑌿 𑌮𑌾𑌣𑍍𑌡𑍂𑌕𑍍𑌯𑌕𑌾𑌰𑌿𑌕𑌾𑌯𑌾𑌂 𑌅𑌦𑍍𑌵𑍈𑌤𑌪𑍍𑌰𑌕𑌰𑌣𑌂॥

𑌅𑌥 𑌮𑌾𑌣𑍍𑌡𑍂𑌕𑍍𑌯𑌕𑌾𑌰𑌿𑌕𑌾𑌯𑌾𑌂 𑌅𑌲𑌾𑌤𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌪𑍍𑌰𑌕𑌰𑌣𑌂॥

௧. 𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨𑌾𑌕𑌾𑌶𑌕𑌲𑍍𑌪𑍇𑌨𑌧𑌰𑍍𑌮𑌾𑌨𑍍𑌯𑍋𑌗𑌗𑌨𑍋𑌪𑌮𑌾𑌨𑍍 ।
𑌜𑍍𑌞𑍇𑌯𑌾𑌭𑌿𑌨𑍍𑌨𑍇𑌨𑌸𑌂𑌬𑍁𑌦𑍍𑌧𑌸𑍍𑌤𑌂𑌵𑌨𑍍𑌦𑍇𑌦𑍍𑌵𑌿𑌪𑌦𑌾𑌂𑌵𑌰𑌮𑍍॥

౧. జ్ఞానేనాకాశకల్పేనధర్మాన్యోగగనోపమాన్ ।
జ్ఞేయాభిన్నేనసంబుద్ధస్తంవన్దేద్విపదాంవరమ్॥

சங்கரபாஷ்யத்தில் அவதாரிகை.

சகல வேதசாரமாயிராநின்ற ப்ரணவத்தை நிச்சயிக்கிற கிரமத்தில், ஸகலவேதங்களுக்கு மத்வைதமே கருத்தென்று முதல் ப்ரகரணமாகிய

ஆகமப்ரகரணத்தில் ப்ரதிஜ்ஞைசெய்து, வைதத்த்யப்ரகரணத்தில் த்வைதம் பொய்யென்று ரூபிக்கிற வழியாலே அத்வைதத்தை வலியுறுத்தி, மூன்றாவதாகிய அத்வைத ப்ரகரணத்தில் யுக்திகளாலும் சாஸ்திரங்களாலும் நேராக அத்வைதத்தை முதலித்து, நிர்விசேஷ ஸத்யசுத்தஸத் ஸ்வரூப ப்ரகாசமாகிய ப்ரம்மமே ஸத்யம், மற்றவையெல்லாம் பொய்யென்று சொல்லி முடித்தார். இனி இந்த நான்காவது ப்ரகரணத்தில் இந்த அத்வைதத்திற்கு விரோதிகளான த்வைதமதஸ்தரும் சூந்யவாதிகளும் சொல்லுகிறஅபிப்ராயங்கள் ஸரியானவையல்லவென்று மூன்றாம் ப்ரகரணத்தில் கூறியதூஷணங்களை விரித்துரைப்பதற்கு இந்த அலாத சாந்தி ப்ரகரணந் துடங்குகின்றார். கீழ்ச்சொல்லிய தூஷண ஸங்க்ரஹமானது அத்வைதத்தைப் புகழ்வதற்கென்று விளங்குகின்றது. க்லேசமாகியது த்வைதமென்றால் க்லேசமில்லாதது அத்வைதமென்று ஸித்திக்கின்றமையாலென்க. அந்வயவ்யதிரேகங்களிரண்டாலு மொருபொருள் ரூபிக்கப்படவேண்டுமாகையால் இந்த ப்ரகரணத்தில் வ்யதிரேகத்தால் த்வைதவாதிகள் மதமும் சூந்யவாதி மதமும் தப்பானதென்று ரூபித்து அத்வைதமே அழகான மதமென்று காட்டுகின்றார்.

ஸ0-ஹா. முதலிலும் நடுவிலும் முடிவிலும் மங்களமுடைய க்ரந்தம் இடையூறின்றி நிறைவேறி அனைவருமாதரிக்கும் படியாமென்று, முதலிலும் முடிவிலும்போல நடுவிலும் மங்களம்வேண்டி முதல் சுலோகத்தால் அத்வைத ரூபியாகிய ஆசாரியனை வணங்குகின்றார் அத்வைத மதஸம்ப்ரதாய குருவந்தனம் அத்வைத மதவ்ருத்தியின் பொருட்டாகும். ஆசாரிய பூஜைவேண்டியபலனைத் தருவது சாஸ்ராதியில் செய்யத்தக்கது ஆகையால் பரமாத்மாவாகிய நாராயணனைவணங்குகிறேனென்கிறார். அந்த நாராயணன் புருஷோத்தமன். ஆகாசரூபமாகிய தருமங்களை விஷயங்களில் பேதமான ஆகாசம்போன்றஜ் ஞானத்தாலேயறிந்தவன். ஆதலாலந்த நாராயணனைவணங்குகிறேனென்று கருத்து இதனால் இந்தப்ரகரணார்த்தம் ஸூசிப்பிக்கப்பட்டது.

உ. அஸ்பர்ஶயோகோ வை நாம ஸர்வஸத்த்வஸுகோ ஹித꞉।
அவிவாதோ(அ)விருத்தஶ்ச தேஶிதஸ்தம் நமாம்யஹம்॥

2. అస్పర్శయోగో వై నామ సర్వసత్త్వసుఖో హితః।
అవివాదోఽవిరుద్ధశ్చ దేశితస్తం నమామ్యహమ్॥

ஸ0-ஹா. அத்வைதத்தை ஸ்துதிப்பதற்கு அத்வைத மதத்தை வணங்குகிறது. இந்த அத்வைதமானது, ஒன்றோடொருபோதும் ஸம்பந்தமில்லாததானதால் அஸ்பர்ச யோகமென்று ப்ரஸித்தமாய் யோகிகளின் திரளில் கூறப்பட்டது. ஸமஸ்தப்ராணிகளுக்கும் ஸுகமாயும் ஹிதமாயுமுள்ளது. லௌகிகஸுகம்போலன்று. அவிவாதமானது. விரோதமில்லாதது. சாஸ்திரங்களால்காட்டப்பட்டது. ஆனதால் இந்த அத்வைததர்சனத்தை வணங்குகிறேன். இதுவேயன்றோ ஒரேவிதமாய் நித்யமாயிருக்கின்றது.

௩. பூதஸ்ய ஜாதிமிச்சந்தி வாதின꞉ கேசிதேவ ஹி।
அபூதஸ்யாபரே தீரா விவதந்த꞉ பரஸ்பரம்॥

3. భూతస్య జాతిమిచ్ఛంతి వాదినః కేచిదేవ హి ।
అభూతస్యాపరే ధీరా వివదంతః పరస్పరమ్॥

பா॰-ஷா. கீழ்ச்சொல்லியபடி அத்வைதத்திற்கு தோஷமில்லை என்றுகாட்டுவதற்கு த்வைதவாதிகளில் ஒருவருக்கொருவர் விவாதப்பட்டுமுரண்படுமாறு கூறுகின்றார். வைசேஷிகர் நெய்யாயிகர்என்கிறதார்க்கிகர்கள், ஸாங்க்யர்கள் முதலியபலபேர் த்வைதவாதிகளிருக்கின்றார்கள். இவர்களில் சிலர் ஸத்கார்யவாதிகள்; சிலர் அஸத்கார்யவாதிகள். ஸாங்கியர் முதலானோர்ஸத்கார்யவாதிகள். தாக்கிகர் முதலானோர் அஸத்கார்யவாதிகள். ஸத்கார்யவாதமாவது இருக்கும்பொருளே பிறக்குமில்லாதபொருள் பிறவாதென்கிறவாதம். அஸத்கார்யவாதமாவது இல்லாதவஸ்துபிறக்குமேயல்லது இருக்கும்வஸ்து பிறக்கவேண்டியதில்லை என்கிறவாதம். ஸத்கார்யவாதத்திற்கு யுக்தி முயல் கொம்பு முதலிய இல்லாத பொருள் பிறவாமை. இல்லாதது பிறக்குமானால் முயல் கொம்பு பிறக்கவேண்டும். என்று சொல்லுகிறார்கள். அஸத்காரிய வாதத்திற்கு யுக்தி பிள்ளையில்லாதவனுக்கு பிள்ளை பிறந்ததென்கிற வ்யவஹாரம். பிள்ளை முன்னிருக்குமேயானால் பிள்ளை இல்லை என்று சொல்லக்கூடாதன்றோ என்கிறார்கள். இப்படி யொருவருக்கொருவர் விருத்தமாகச் சொல்லி யொருவரை யொருவர் ஜயிக்க விரும்புகின்றார்கள். நாமே பண்டிதர் என்று ஒவ்வொருவரும் நினைக்கிறார்கள்.

ச. பூதம் ந ஜாயதே கிஞ்சித் அபூதம் நைவ ஜாயதே |
விவதந்தோ த்வயா ஹ்யேவம் அஜாதிம் க்யாபயந்தி தே ||

౪. భూతంనజాయతేకించిదభూతంనైవజాయతే ।
వివదన్తోద్వయాహ్యేవమజాతింఖ్యాపయంతితే॥

பா॰-ஷா. முன்னில்லாதது பிறப்பதில்லை. முயற்கொம்புபோல வென்று ஸாங்க்யனும்உள்ளது பிறவாது ஆத்மஸ்வரூபம் போலவென்று தார்க்கிகரும் சொல்வதால் வாஸ்தவத்தில் பிறப்புகூடாதென்பதை வெளியிட்டவர்களானார்கள். இதனாலத்வைதித்திற்கே ஸஹாயமாயிற்று. ஸத்தும், அஸத்தும் ஆகிய இவ்விரண்டுவகையை விடவேறில்லாமையினாலும் இரண்டுக்கும் இரண்டு வாதிகளால் உத்பத்தி கூடாதென்று ஸித்தித்தமையாலுமென்க.

ரு. க்யாப்யமானாம் அஜாதிம் தைர் அனுமோதாமஹே வயம் |
விவதாமோ ந தைஸ் ஸார்த்தம் அவிவாதம் நிபோதத ||

౫. ఖ్యాప్యమానామజాతింతైరనుమోదామహేవయమ్ ।
వివదామోనతైస్సార్థమవివాదంనిబోధత॥

பா॰-ஷா. இங்ஙன மிருவராலும் வெளியிடப்பட்டிருக்கிற உத்பத்தி மித்யாத்வத்தை, அதாவது உத்பத்தி பொய்யென்பதை நாமொப்புக்கொள்ளுகிறோம். அவர்களுடன் நாம் விவாதப்படுவதில்லை. அவர்களில் ஒருவர்க்கொருவர் விவாதப்படுவது போல் நாம் விவாதப்படுவதில்லை யன்றோ. ஆகையா லத்வைதம் அவிவாதமென்று சிஷ்யர்களே அறியுங்கோள்.

சு. அஜாதஸ்யைவ தர்மஸ்ய ஜாதிம் இச்சந்தி வாதினஃ |
அஜாதோ ஹ்யம்ருதோ தர்மோ மர்த்யதாம் கதமேஷ்யதி ||

எ. ந பவத்யம்ருதம் மர்த்யம் ந மர்த்யம் அம்ருதம் ததா ||
ப்ரக்ருதேர் அன்யதாபாவோ ந கதஞ்சித் பவிஷ்யதி ||

௮. ஸ்வபாவேநாம்ருதோ யஸ்ய தர்மோ கச்சதி மர்த்யதாம்।
க்ருதகேநாம்ருதஸ்தஸ்ய கதம் ஸ்தாஸ்யதி நிச்சல:॥

౬. అజాతస్యైవధర్మస్య జాతిమిచ్ఛన్తి వాదినః ।
అజాతో హ్యమృతో ధర్మో మర్త్యతాం కథమేష్యతి॥

౭. న భవత్యమృతం మర్త్యం న మర్త్యమమృతం తథా।
ప్రకృతేరన్యథాభావో న కథఞ్చిద్భవిష్యతి॥

౮. స్వభావేనామృతో యస్య ధర్మో గచ్ఛతి మర్త్యతామ్।
కృతకేనామృతస్తస్య కథం స్థాస్యతి నిశ్చలః॥

பா०-ஹா. கீழ் இந்த சுலோகங்களுக்கு பாஷ்யம் சொல்லியிருக்கிறோம். கீழ்சொன்ன சுலோகங்களை மறுபடியும் எழுதுவதற்குக்காரணம், த்வைதிகளின் பரஸ்பரவிரோதத்தைக் காட்டுகிற ப்ரகரணத்தில் சொல்லி யநுமோதிப்பதற்காகவாம்.

பதாந்வயார்த்தபேதங்கள்.

இந்த மூன்று சுலோகங்களும் அத்வைத ப்ரகரணத்தில் 20 21 22, வது சுலோகங்கள். அங்கு வ்யாக்யாநம் செய்யப்பட்ட கருத்தையே இங்கும் கொள்க.

௯. ஸாம்ஸித்திகீ ஸ்வாபாவிகீ ஸஹஜா அக்ருதா ச யா।
ப்ரக்ருதிஸ்ஸேதி விஜ்ஞேயா ஸ்வபாவம் ந ஜஹாதி யா॥

౯. సాంసిద్ధికీ స్వాభావికీ సహజా అకృతా చ యా।
ప్రకృతిస్సేతి విజ్ఞేయా స్వభావం న జహాతి యా ॥

பா०-ஹா. ப்ரக்ருதிக்கு வ்யத்யாஸம் ஒருபோதும் வராதென்று சொன்னார் கீழ். ப்ரக்ருதியாவது யாதென்கிற ஐயந்தீர ப்ரக்ருதி சப்தத்திற்குப் பொருள் கூறுகின்றாரிதில். லோகத்தில் ப்ரக்ருதிமாறாது என்று அனைவரும் சொல்லுகின்றார். யோகிகளுக்கு, ப்ரக்ருதியாவது-அணிமைமுதலிய ஐச்வர்யத்தை யடைவது. அர்த ஸித்திரூபமாகிய ப்ரக்ருதியானது,பூதபவிஷ்யத் வர்தமானகாலங்களில் எப்போதும் மாறுவதில்லை. நெருப்பு முதலியவற்றிற்கு ப்ரக்ருதியாவது - சுடுகைமுதலியது. இதுவு மெக்காலத்திலும்மாறுகிறதில்லை. பக்ஷி முதலியவற்றிற்கு ப்ரக்ருதி - ஆகாயத்தில் ஸஞ்சரிக்கை. இதுவு மொருகாலத்திலும் மாறுகிறதில்லை. தண்ணீர் முதலியவற்றிற்கு ப்ரக்ருதி-பள்ளமாகிய விடத்தில் தங்குகை. இப்படியே ஒவ்வொன்றுக்கும் ப்ரக்ருதியையறிக. இதில் முதலாவது ப்ரக்ருதிக்கு ஸாம்ஸித்திகி என்றும், இரண்டாவது ப்ரக்ருதிக்கு ஸ்வாபாவிகி என்றும், மூன்றாவது ப்ரக்ருதிக்கு ஸஹஜை, என்றும், நாலாவது ப்ரக்ருதிக்கு அக்ருதை என்றும் பெயர். இவை எல்லாங் காரணப் பெயரேயாகின்றன. இந்த ப்ரக்ருதிகள் ஒரு காலத்திலும் ஒரு தேசத்திலும் மாறுவதில்லையன்றோ. எப்போதும் மாறாதது ப்ரக்ருதி என்று பெயருடையதென்றதாயிற்று. ஆக இவ்வாறு பொய்யாய் மாயையினால் கல்பிக்கப்பட்ட வஸ்துக்களுக்கு ப்ரக்ருதி மாறாமலிருக்க நித்யபரமார்த்த ப்ரம்ம ப்ரக்ருதிமாறுமென்று யார் சொல்லுவர். ஆகையால் ப்ரம்மம் விகாரத்தை யடையுமென்பது மிகவும் பொருத்த மற்ற வார்த்தை என்றபிப்ராயம்.

௧0. ஜராமரணநிர்முக்தாஸ்ஸர்வே தர்மாஸ்ஸ்வபாவத: |
ஜராமரணமிச்சந்தஶ்ச்யவந்தே தந்மநீஷயா ||

౧౦. జరామరణనిర్ముక్తాస్సర్వే ధర్మాస్స్వభావతః ।
జరామరణమిచ్ఛంతశ్చ్యవంతే తన్మనీషయా ॥

பா0-ஹா. ஜீவாத்மாக்க ளெல்லோரும், ஜரைமரணம் முதலியவற்ருல் விடப் பட்டவர்கள். அவர்களுடைய ப்ரக்ருதிவிகார சூந்யமன்றே. இப்படிப்பட்ட ஆத்ம விஷயத்தில் அவிவேகிகள் கயிற்றில் பாம்பைப்போல் ஜரைமரணம் முதலிய தோஷங் களைக் கல்பிக்கின்றார்கள். இந்த கல்பனையால்ஸ்வஸ்வரூபத்திலிருந்து நழுவுகின்றார்கள். இவ்வாறு ஆத்மாவின் ப்ரக்ருதியை அந்யதாவாகக் கல்பித்து அநர்த்தப் படுகிருர்களா கையால் உள்ளதுள்ளபடி யறியவேணும்.

௧௧. காரணம்யஸ்ய வை கார்யம் காரணம் தஸ்ய ஜாயதே |
ஜாயமாநம் கதமஜம் பிந்நம் நித்யம் கதம் ச தத் ||

౧౧ కారణంయస్య వై కార్యం కారణం తస్య జాయతే।
జాయమానం కథమజం భిన్నం నిత్యం కథం చ తత్ ॥

பா0-ஹா. இனி த்வைதிகள் மதங்களில் ஒருவர்க்கொருவர் சொல்லுகிற தூஷண ங்களை வெளியிடுகின்ருர். தார்க்கிகர் ஸாங்க்யரை தூஷிக்குமாறு. ஸத்கார்யவாதிக ளாகிய ஸாங்க்யர்கள் சொல்லுவது மிகவும் சேராததாயிருக்கின்றது. எவனொருவன் காரணத்தையே கார்யமென்று கூறுகின்றானே; அதாவது குடமுதலியவற்றிற்கு மண் போலு பாதான காரணமாகிய வஸ்துவே காரியமாகப் பரிணமிக்கிறதென்று கூறுகின் ருனே; அவனுக்கு நித்யமாகிய ப்ரக்ருதியன்றே மகான் முதலிய காரியமாகப் பிறக்கி றது. இப்படியாயின், காரிமமாகிப் பிறக்கிற ப்ரக்ருதியை நித்யமென் றுரைப்பது எவ் வாறும். பிறப்பில்லாதது காரியமாய் பிறக்கிறது என்று சொல்லுவது விருத்தமன்றே. இப்படியே அவயவத்தோடு கூடிய ப்ரக்ருதியை நித்யமென்பது கூடுமோ; அவயவமில்லை யாயின், மகதாதிரூபமாகப் பரிணமவிகாரத்தை யடைவது சேருமோ; ஆனதால் நித்ய நிர்விகாரம் பிறப்பதில்லை. பிறக்கிறது பரிணமவிகாரத்தை யடைகின்றது, என்று அவர்கள் சொல்வது விருத்தமேயாம். விகாரத்தையுடைய கடம்முதலியவை நித்ய ங்களாகுமோ.

௧௨. காரணாத்யத்யநந்யத்வமத: கார்யமஜம் யதி |
ஜாயமாநாத்தி வை கார்யாத்காரணம் தே கதம் த்ருவம் ||

౧౨. కారణాద్యద్యనన్యత్వమతః కార్యమజం యది ।
జాయమానాద్ధి వై కార్యాత్కారణం తే కథం ధ్రువమ్॥

பா0-ஹா. மேல்சொல்லிய தோஷத்தையே ஸ்பஷ்டமாகக் கூறுகின்ருர். கார ணத்தைவிட காரியம் வேறன்ருயின், காரியத்தை அநித்யமென்று சொல்லக் கூடா மையால் காரியமும் நித்யமாகவேணும். இது விருத்தமாயிருக்கின்றது. காரியத்தை விட காரணம் வேறன்ருயின், காரணத்தை நித்யமென்று சொல்லவழியில்லை.

௧௩. அஜாத்வை ஜாயதே யஸ்ய த்ருஷ்டாந்தஸ்தஸ்ய நாஸ்தி வை |
ஜாதாச்ச ஜாயமாநஸ்ய ந வ்யவஸ்தா ப்ரஸஜ்யதே ||

౧౩. అజాద్వై జాయతే యస్య దృష్టాన్తస్తస్య నాస్తి వై।
జాతాచ్చ జాయమానస్య న వ్యవస్థా ప్రసజ్యతే॥

ப௦-ஹா. நித்யமாகிய வஸ்துவிலிருந்து காரியமுண்டாகிறதென்கிற ஸாங்க்யன் த்ருஷ்டாந்தங் காட்டவேண்டும். த்ருஷ்டாந்தமில்லாதபோது, ஒன்றும் ஸித்தியாதன்றோ. நித்யமான வஸ்துவிலிருந்து அதில் வேறாகாத காரியம் பிறக்கிறதென்பது எங்கும் காணப்படவில்லையன்றோ. காணப்பட்டாலன்றோ த்ருஷ்டாந்தங் காட்டலாம். ஆகையால் நித்யமாகிய ப்ரதாநமென்கிற ப்ரக்ருதியிலிருந்து மகாந்முதலிய காரியமுண்டாகிறதென்றும் அந்த காரியம் ப்ரக்ருதியைவிட வேறல்லவென்றும் சொல்வதற்கு ஒரு ஆதாரமுமில்லை. இந்த தோஷத்திற்கு பயந்து ப்ரதாநத்தை அநித்யமென்றும் பிறப்புடையதென்று மொப்புக்கொண்டாலும் அந்த ப்ரதானகாரணத்திலும் இந்த தோஷங்கள் வருமாகையால் அதற்குக் காரணம் வேறு சொல்லவேண்டி இவ்வாறே காரண பரம்பரைக்குக் கணக்கில்லாமல் அநவஸ்தைவரும்.

கச. ஹேதோராதி³: ப²லம் யேஷாமாதி³ர்ஹேது: ப²லஸ்ய ச।
ஹேதோ: ப²லஸ்ய சாநாதி³: கத²ம் தைருபவர்ண்யதே॥

౧౪. హేతోరాదిః ఫలం యేషామాదిర్హేతుః ఫలస్య చ।
హేతోః ఫలస్య చానాదిః కథం తైరుపవర్ణ్యతే॥

ப௦-ஹா. கார்யகாரணமே ரூபமாகிய ஸம்ஸாரமநாதி என்கிற ஸாங்க்யர் ஆத்ம கார்யமாகிய தேஹம் முதலியவற்றை ஆத்மாவுக்குக் காரணமென்றும், இந்த தேஹாதி ஸங்காதத்திற்கு ஆத்மா காரணமென்றும், ஹேது பலம், என்கிற ஆத்மா தேஹம் எல்லாம் அநாதியென்றும் சொல்லுகின்றார்கள். இது மிகவும் விருத்தமாயிருக்கின்றதன்றோ.

கரு. ஹேதோராதி³: ப²லம் யேஷாமாதி³ர்ஹேது: ப²லஸ்ய ச।
ததா² ஜந்ம ப⁴வேத்தேஷாம் புத்ராஜ்ஜந்ம பிதுர்யதா²॥

౧౫. హేతోరాదిః ఫలం యేషామాదిర్హేతుః ఫలస్య చ।
తథా జన్మ భవేత్తేషాం పుత్రాజ్జన్మ పితుర్యథా॥

ப௦-ஹா. ஹேதுவினால் பிறக்கிற பலத்திலிருந்து ஹேதுவே பிறக்கிறதென்று சொல்லுகிற விது பிள்ளைக்குத் தகப்பன் பிறந்தானென்று சொல்வதுபோ லிருக்கின்றது.

கசு. ஸம்ப⁴வே ஹேதுப²லயோரேஷிதவ்ய: க்ரமஸ்த்வயா।
யுக³பத்ஸம்ப⁴வே யஸ்மாத³ஸம்ப³ந்தோ⁴ விஷாணவத்॥

౧౬. సంభవే హేతుఫలయోరేషితవ్యః క్రమస్త్వయా।
యుగపత్సంభవే యస్మాదసంబంధో విషాణవత్॥

ப௦-ஹா. இந்த தோஷங்களை நீக்கிக் கொள்ளவேணுமானால் காரணம் முன்னேயாம். காரியம் பின்னேயாம். காரணத்தால் காரியம் பிறக்கிறது; காரியத்தால் காரணம் பிறவாது; என்கிற நியமத்தை யொப்புக்கொள்ளவேணும். இங்ஙனமின்றி காரண காரியங்களுக்கு ஸமாந காலத்தில் உத்பத்தியை யொப்புக்கொள்ளப்பார்த்தால் ஏக காலத்தில் பிறக்கிற,பசுவின் இடதுகொம்புவலதுகொம்பு இவைகளுக்குப்போல காரிய காரணபாவங்கூடாது.

௧௭. 𑌫𑌲𑌾𑌦𑍁𑌤𑍍𑌪𑌦𑍍𑌯𑌮𑌾𑌨𑌸𑍍𑌸𑌨𑍍𑌨 𑌤𑍇 𑌹𑍇𑌤𑍁𑌃 𑌪𑍍𑌰𑌸𑌿𑌧𑍍𑌯𑌤𑌿 ।
𑌅𑌪𑍍𑌰𑌸𑌿𑌦𑍍𑌧𑌃 𑌕𑌥𑌂 𑌹𑍇𑌤𑍁𑌃 𑌫𑌲𑌮𑍁𑌤𑍍𑌪𑌾𑌦𑌯𑌿𑌷𑍍𑌯𑌤𑌿 ॥

౧౭. ఫలాదుత్పద్యమానస్సన్న తే హేతుః ప్రసిద్ధ్యతి ।
అప్రసిద్ధః కథం హేతుః ఫలముత్పాదయిష్యతి॥

ஸா॰-ஹா. காரியத்திலிருந்து காரணம் பிறந்தபின் இந்த காரணம் காரியத்தை யுண்டுபண்ணுகிறது, என்றால் காரணம் பிறப்பதற்கு முன் (காரியத்திற்குமுன்) காரணமில்லாமையால் கார்யத்தை இந்த காரணம் எப்படி பிறப்பிக்கும். ஆக, காரணம் பிறவாதபோது காரியம் பிறவாது; காரியம் பிறவாதபோது காரணம்பிறவாது; என்றாய் இரண்டுக்கு மிரண்டுங் கூடாதென்று முடிகின்றது. இதை அந்யோந்யாச்ரய தோஷமென்று கூறுவர்.

௧௮. 𑌯𑌦𑌿 𑌹𑍇𑌤𑍋𑌃 𑌫𑌲𑌾𑌤𑍍𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌃 𑌫𑌲𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌶𑍍𑌚 𑌹𑍇𑌤𑍁𑌤𑌃 ।
𑌕𑌤𑌰𑌤𑍍𑌪𑍂𑌰𑍍𑌵𑌨𑌿𑌷𑍍𑌪𑌨𑍍𑌨𑌂 𑌯𑌸𑍍𑌯 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌰𑌪𑍇𑌕𑍍𑌷𑌯𑌾 ॥

౧౮. యది హేతోః ఫలాత్సిద్ధిః ఫలసిద్ధిశ్చ హేతుతః।
కతరత్పూర్వనిష్పన్నం యస్య సిద్ధిరపేక్షయా॥

ஸா॰-ஹா. கீழ்ச்சொல்லிய தோஷங்களால் ஹேது பலங்களுக்குக் கார்ய காரண பாவங் கூடாமலிருக்கவும் அதை யொப்புக்கொண்டால், இந்த ஹேது பலங்களில் எது முன்னுண்டாயிற்று. அதைச்சொல்லவேண்டும். முன்னுண்டானதாலன்றோ பின்னுண்டானது பிறக்கும்.

௧௯. 𑌅𑌶𑌕𑍍𑌤𑌿𑌰𑌪𑌰𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌕𑍍𑌰𑌮𑌕𑍋𑌪𑍋𑌽𑌥 𑌵𑌾 𑌪𑍁𑌨𑌃 ।
𑌏𑌵𑌂 𑌹𑌿 𑌸𑌰𑍍𑌵𑌥𑌾 𑌬𑍁𑌦𑍍𑌧𑍈𑌰𑌜𑌾𑌤𑌿𑌃 𑌪𑌰𑌿𑌦𑍀𑌪𑌿𑌤𑌾 ॥

౧౯. అశక్తిరపరిజ్ఞానం క్రమకోపోఽథవా పునః ।
ఏవం హి సర్వథా బుద్ధైరజాతిః పరిదీపితా।

ஸா॰-ஹா. இந்த தோஷங்களுக்கு ஸமாதாநம் சொல்ல முடியாதென்று கூறில் அசக்தியும், அஜ்ஞாநமும், முன் சொன்ன க்ரமவ்யத்யாஸமும், ஒப்புக் கொள்ளப்படுகிறது. இவ்வாறு சொல்லிப் பார்த்ததில் ஒரு வழியாலும் உத்பத்தி கூடாமையால் ஜந்மம் வாஸ்தவமல்லவென்பது ஸாதிக்கப்பட்டது. அப்போது பாண்டியத்யகர்வமழிகின்றது.

௨௦. 𑌬𑍀𑌜𑌾𑌙𑍍𑌕𑍁𑌰𑌾𑌖𑍍𑌯𑍋 𑌦𑍃𑌷𑍍𑌟𑌾𑌨𑍍𑌤𑌸𑍍𑌸𑌦𑌾 𑌸𑌾𑌧𑍍𑌯𑌸𑌮𑍋 𑌹𑌿 𑌸𑌃 ।
𑌨 𑌹𑌿 𑌸𑌾𑌧𑍍𑌯𑌸𑌮𑍋 𑌹𑍇𑌤𑍁𑌸𑍍𑌸𑌿𑌦𑍍𑌧𑍌 𑌸𑌾𑌧𑍍𑌯𑌸𑍍𑌯 𑌯𑍁𑌜𑍍𑌯𑌤𑍇 ॥

౨౦. బీజాఙ్కురాఖ్యో దృష్టాన్తస్సదా సాధ్యసమో హి సః ।
న హి సాధ్యసమో హేతుస్సిద్ధౌ సాధ్యస్య యుజ్యతే॥

ஸா॰-ஹா. காரண காரியங்களுக்கு பரம்பரையாய் ஒன்றுக்கொன்று காரணமாகின்றது, என்று சொன்னதற்குக் கருத்தறியாமல் எங்கள் பேரிலிங்ஙனம் தோஷம் சொல்லத்தகுமோ; நாங்கள் அஸித்தமாகிய காரணத்தினால் காரியமுண்டாகிறதென்றாவது அஸித்தமாகிய காரியத்தினால் காரணமுண்டாகிற தென்றாவது, சொல்லவில்லை. பீஜாங்குர ந்யாயத்தாலே காரிய காரணபாவங் கூறுகின்றோம். அதாவது, விதையினால் செடியுண்டாகின்றது, செடியினால் விதையுண்டாகின்றது; என்

பது ப்ரத்யக்ஷமா யிருக்கிறதென்றே. இதை மகனிடத்திலிருந்து தகப்பன் பிறப்பனே வென்கிற யுக்தியைக்கொண்டு மறுக்க முடியுமோ; இவ்வாறே காரிய காரணங்களில் ஒரு காரியம் மற்றொரு காரணத்திற்குக் காரியமாகின்றது, அந்த காரணம் மற்றொரு காரியத்திற்குக் காரணமாகின்றது, என்று சொல்லுகின்றோம்; இதை தூஷிப்பது எங்ஙனம்? பீஜாங்குரந்யாயம் ப்ரத்யக்ஷ ஸித்த மன்றோ வென்று ஸாங்கியர் கீழ்ச்சொல்லிய தூஷணங்களுக்கு ஸமாதானம் சொல்லுகின்றார். ஆதலால் இந்த சமாதானத்தை இந்த சுலோகத்தால் தூஷிக்கின்றார். இந்த பீஜாங்குரந்யாயத்தை உதாகரணமாகக் காட்டுவதும் ஸங்கதமல்ல ; திருட்டாந்தமாவது விவாதப்படுகிற வாதிகளிருவராலும் ஒப்புக்கொள்ளப் பட்டதாயிருக்கவேண்டும். இந்த பீஜாங்குரந்யாயத்தை நா மொப்புக்கொள்ளவில்லை. நம்முடையமதத்தில் வாஸ்தவத்தில் ஒன்றுச்கும் பிறப்பில்லையன்றே. ஆனதால் பீஜாங்குரங்களும் ஒன்றுலொன்று என்கிற நியாயத்திலே பிறக்கவில்லை என்றுதான் எங்களபிப்பிராயம். ஆனதால் வாஸ்தவமாய் காரண காரியங்களுடைய பரம்பரையில் ஒன்றுக்கொன்று காரணமென்பதில் இந்த பீஜாங்குரங்களை திருட்டாந்தமாகக்காட்டுவது தக்கதல்லவன்றே. இனி ப்ரத்யக்ஷத்திலிருப்பதை நீ ஒப்புக்கொள்ளாமல் போவதாலெங்களுக்குக் குறையில்லை. மத்யஸ்தர்களால் ஒப்புக்கொள்ளப்படுகின்ற தன்றே வென்றுல்; இதுவும் தக்கதல்ல; ஏனென்றுல் அனாதி யென்பதற்கு ப்ரத்யக்ஷத்தில் விதையும் முளையும் பிறக்கவுமழியவும் காண்கையால் விரோதமுண்டாகின்றதன்றே. பீஜாங்குற பரம்பரை யனாதியென்றுலும், பரம்பரை யென்பது பீஜாங்குரங்களைவிட வேறல்லவன்றே. ஆகையாலனாதி என்பதற்கு ஒருவித திருட்டாந்தமுமில்லாமையால் காரியகாரணங்க ளனாதியாய் ஒன்றையொன்று பிறப்பித்துக்கொண்டிருக்கிறன வென்பது பொய்யேயாம்.

உக. வூவவு-ாவுாவுரிஜூா நஜாொதஃவுரிஃவகஷ |
ஜாயஊா நாவிஓவெயஷாக்ஷயஉவ ஹவுஷஹயஹொத ||

௨௧. పూర్వాపరాపరిజ్ఞానమజాతేః పరిదీపకమ్ ।
జాయమానాద్ధి వైధర్మాత్కథం పూర్వం న గృహ్యతే ॥

ஶாo-ஹா. ஆக காரிய காரணங்களுக்கு முன்பின் னென்கிற நியமங் கூடாமையால், பிறப்பில்லை என்பது விளக்கப்பட்டது. காரியம் பிறப்பது கண்கண்டதாயிருக்கப் பிறப்பில்லை என்னக் கூடுமோவென்றுல் ; இது காரியமாயி னிது பிறப்பது வாஸ்தவமாகும். பிறப்பது வாஸ்தவமாகில் காரணங் காணப்பட வேண்டுமன்றே. அப்படி காணப்படாமையால் உத்பத்தி பொய்யேயாம். ஆகையா லத்வைதபக்ஷமே பிறராலும் விளக்கப்பட்டது.

உஉ. ஷொதாவா்வுாொதாவாஹிநகிஷிஅவஷூஜாயொத |
ஷ ஒஷ தஒஷ அாஹிநகிஷிஅவஷூஜாயொத ||

௨௨. స్వతో వా పరతో వాపి న కించిద్వస్తు జాయతే ।
స దస త్సదస ద్వాపి న కించిద్వస్తు జాయతే ॥

ஶாo-ஹா. இந்த காரணத்தாலும் வாஸ்தவத்தில் பிறப்பில்லை என்பது விளங்கும். வாஸ்தவத்தில் பிறப்புண்மையானது என்று சொல்லுகிற வாதியை நாம் சில கேள்விகள் கேழ்க்கின்றோம். அவையாவன—பிறக்கும் பொருள் தானே பிறக்கின்றதா? மற்றொன்றால் பிறக்கின்றதா ? தன்னலும் மற்றொன்றுலுமாகக் கலந்து பிறக்கின்றதா ? பிறப்பது ஸத்தான பொருளோ ? அஸத்தான பொருளோ? ஸத்துமஸத்து மாகாத பொருளோ? என்பவையாம். இவற்றுள், ஒன்றுங்கூடாது. தன்னுல்தான் பிறப்பது

கூடுமோ; தான் பிறப்பதற்குமுன் தானில்லாமையால் தனக்குத் தான் காரணமாகக் கூடாது. ஒரு கடமானது அந்த கடமாகிய தன்னாலே பிறக்குமோ; மற்றொன்றாலும் பிறவாது. படமென்கிற வஸ்திரத்திலிருந்து கடமென்கிற குடமுண்டாகுமோ? மற்றொன்று லுண்டாகுமாயி னவ்வாறுண்டாகாம லிருப்பதற்குக் காரணம் யாது? ஒரு ஜாதியா யிருக்கவேண்டுமென்றாலும் குடத்திலிருந்து குடமும் வஸ்திரத்திலிருந்து வஸ்திரமு முண்டாகின்றதோ இல்லையன்றே. ஆகையால் மற்றொன்றாலும் பிறவாது இவ்விரண்டுங் கூடாதபோது இரண்டினாலும் பிறக்கிறதென்பது கூடப்போகின்றதோ. ஆகையால் மிகவும் விரோதமாகையால் தன்னாலும் மற்றொன்றாலும் கூடி யுண்டாகிறதென்பதும் சேராது. குடம் வஸ்திரம் இவை இரண்டாலும் குடமாவது வஸ்திரமாவது உண்டாகின்றதோ, இனி, மண்ணிலிருந்து கடமென்கிற குடம் பிறக்கின்றது. தகப்பனிடத்திலிருந்து மகன் பிறக்கின்றான். இவற்றை இல்லையென்று சொல்லப்போமோ; ஆனதால் இதற்கு வழிசொல்ல வேண்டுமென்றால் அவ்வாறு உலகத்தில் சொல்லுவதொழிய வாஸ்தவத்தில் பிறப்பதில்லை. இவ்வாறு சொல்லுவது மூடத்தனத்தாலே என்பது விவேகிகள், பரீக்ஷித்துப் பார்ப்பதால் வெளியாகின்றது. உலகத்தில் பிறந்தது என்கிற சொல்லால் சொல்லப்படுவது மெய்யோ; பொய்யோ; என்று ஆராயப்படுகின்றது. ஆராய்ந்தறிந்தபோது இந்த பிறப்பு சொல்லினால் மாத்திரமேயன்றி உண்மையல்லவென்று விளங்குகின்றது. ஆகையால் குடம் மகன் எனப்படுகிறவற்றில் ஒன்றும் பிறப்பதில்லை. ஸத்தாயிருந்தால் பிறக்கவேண்டுவதில்லை. முன்னமே ஸத்தாயிருக்கின்றதன்றே; ஸத்தான மண்முதலியவை பிறக்கின்றதோ; அஸத்தாயின் பிறப்பதுகூடுமோ இல்லாதது உண்டாகுமோ; இல்லாத முயற்கொம்புண்டாகுமோ. ஸதஸத்தென்றால் விரோதமாகையாலே பிறவாது. ஆக ஒன்றும் பிறப்பதில்லை என்பது ஸித்தம். இனி க்ஷணிகவாதிகளுக்கு ஒன்றுமே கூடாததாயிற்று. இதற்கு சுருதி "வாசாரம் பணம்" என்பதாம். இதற்குப் பொருள் வ்யவஹாரமேயன்றி பிறப்பது மெய்யல்லவென்று.

௨௩. 𑌹𑍇𑌤𑍁𑌰𑍍𑌨 𑌜𑌾𑌯𑌤𑍇𑌽𑌨𑌾𑌦𑍇𑌃 𑌫𑌲𑌞𑍍𑌚𑌾𑌪𑌿 𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌤𑌃 ।
𑌆𑌦𑌿𑌰𑍍𑌨 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 𑌯𑌸𑍍𑌯 𑌤𑌸𑍍𑌯 𑌹𑍍𑌯𑌾𑌦𑌿𑌰𑍍𑌨 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 ॥

౨౩. హేతుర్న జాయతేఽనాదేః ఫలఞ్చాపి స్వభావతః ।
ఆదిర్న విద్యతే యస్య తస్య హ్యాదిర్న విద్యతే॥

ஶா0-ஹா. காரியங் காரணம் இவற்றை அநாதியென்று ஒப்புக்கொள்ளுகிறவனுக்கு காரணத்திற்காவது காரியத்திற்காவது, காரியத்திலிருந்தாவது காரணத்திலிருந்தாவது பிறப்பில்லை. ஸ்வபாவத்தாலு மிவ்விரண்டும் பிறப்பதில்லை. ஆதியில்லாத பொருளுக்குப் பிறப்புண்டோ; ஆகையா லிவற்றிற்குப் பிறப்பில்லை என்பதே உன்னாலொப்புக் கொள்ளப்பட்டதாயிற்று.

௨௪. 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌪𑍍𑌤𑍇𑌃 𑌸𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑌤𑍍𑌵𑌮𑌨𑍍𑌯𑌥𑌾 𑌦𑍍𑌵𑌯𑌨𑌾𑌶𑌤𑌃 ।
𑌸𑌂𑌕𑍍𑌲𑍇𑌶𑌸𑍍𑌯𑍋𑌪𑌲𑌬𑍍𑌧𑍇𑌶𑍍𑌚 𑌪𑌰𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑌾𑌸𑍍𑌤𑌿𑌤𑌾 𑌮𑌤𑌾 ॥

౨౪. ప్రజ్ఞప్తేః సనిమిత్తత్వమన్యథా ద్వయనాశతః ।
సంక్లేశస్యోపలబ్ధేశ్చ పరతన్త్రాస్తితా మతా॥

ஶா0-ஹா. வஸ்துக்களுக்கு வாஸ்தவத்தில் உத்பத்தி கூடாமையால், நித்யமாகிய ஜ்ஞாநமே தத்வமென்று முன் சொல்லப்பட்டது; இற்கு வஸ்துக்களை பரமார்த்தமென்றுகொள்ளுகிற மதஸ்தர் இந்தசுலோகத்தில் தூஷணஞ்சொல்லுகின்றார்கள் இந்தஜ்ஞாநமானது வஸ்துவைப் பற்றியதாகின்றது அறியப்படும் வஸ்துவில்லாதபோது அறிவுக்கு ஸத்தைகூடுமோ; நிர்விஷயமாக ஜ்ஞாநத்தைக் கண்டதில்லையன்றே. இனிஜ்ஞாநமேவ

ஸ்துவாகத்தோற்றுகின்றதென்ருலும் நாநாரூபமாகத் தோற்றுவதுகூடுமோ; ஒருஜ்ஞாந த்திற்கு அனேக ஆகாரங் கூடாதன்ருே. இனி உபாதியினுல் பலவித ஆகாரந் தோற்று கின்றதென்ருலும், ஜ்ஞாநத்தைவிட வேருன உபாதிகளை ஒப்புக்கொள்ள வேண்டுகின் றமையால் ஜ்ஞாநமே தத்வம், மற்றவை பொய்யென்று சொல்லப்போகாது. இந்த விசித்திர ஜ்ஞாநம் ப்ரத்யக்ஷ ஸித்தமாகையா லிதை இல்லை என்பது ஸாத்யமன்று. ஆகையால் நாங்கள் சொல்லுகிறபடி வஸ்துக்களும் பரமார்த்தங்களேயாம். இதுவு மன்றி, நெருப்புமுதலிய வஸ்துக்கள் உஷ்ணம் முதலியவற்ருல் துன்பத்தை விளைக் கின்றன. சந்தநம்முதலியவை கந்தம் முதலியவற்ருல் இன்பத்தை விளைக்கின்றன. இதுவும் ப்ரத்யக்ஷமா யிருக்கின்றது. ஆகையால் அநேக வஸ்துக்கள் பரமார்த்தங்க ளென்று கொள்ளவேண்டும். ஒரு ஜ்ஞாநமேயாயின் ஸுகமாயே தோற்றவேணும். அல் லது துன்பமாயே தோற்றவேணும் இரண்டுவிதமாயு மொருவஸ்து தோற்ருது. ஆகை யால் த்வைதவாதம் யுக்தமேயாகின்றது.

௨௫. ப்ரஜ்ஞப்தேஸ்ஸநிமித்தத்வமிஷ்யதே யுக்திதர்சநாத்|
நிமித்தஸ்யாநிமித்தத்வமிஷ்யதே பூததர்சநாத்||

౨౫. ప్రజ్ఞప్తేస్సనిమిత్తత్వమిష్యతే యుక్తిదర్శనాత్।
నిమిత్తస్యానిమిత్తత్వమిష్యతే భూతదర్శనాత్॥

ஸமா-ஹா. நீசெய்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகின்ருேம். யுக்தியினு லன்ருே நாநா வஸ்துக்களையு மொப்புக் கொள்ள வேணுமென்ருய். நீ சொல்லிய படி யுக்தியினுல் ஜ்ஞாநமே தத்வமென்று ஸித்திக்கு மாயின், அதையு மொப்புக் கொள்ள வேணுமன்ருே. பரமார்த்தத்தில் நிரூபித்துப் பார்க்கும் போது இந்த த்வைத வஸ்துக் களெல்லாம் பொய் என்றே விளங்குகின்றது. காரணமாகிய மண்ணை விடவேருய் காரி யமாகிய கடமொன் றுண்டோ. காரணமாகிய நூலைவிட காரியமாகிய வஸ்திர மொன் றுண்டோ, இப்படியே அந்தநூலும் தனக்குக் காரணமான பஞ்சை விட வேருனதோ; ஆனதால் காரணத்தைவிட கார்யம் வேறில்லை என்பது விளங்கினமையால் ஸர்வ காரணமான ஜ்ஞாநத்தைவிட மற்ருென்றும் வாஸ்தவமில்லை. ஆகையால் யுக்தியுடைய மத மொப்புக்கொள்ளத்தக்க தென்கிற நிலையில் நிற்பாயாகு லத்வைத மதத்தை நீயே யொப்புக்கொள்வாய். நீசொன்ன ப்ரத்யக்ஷங்களெல்லாம் பாமர ஜ்னங்களுக்குண்டாவ தேயன்றி தத்வஜ்ஞாநிக்கல்ல. ஆகையால், ஜ்ஞாநமே பரமார்த்தம். மற்றவை பொய் யென்பது எந்த யுக்திக்கும் விருத்தமல்ல. பாமரஜனங்களுக்கு கயிற்றில் பாம்புபோல் த்வைதம் தோற்றுகிறதென்று பலமுறை சொன்ேனம்.

பதாந்வயார்த்தபேதங்கள்.

பூததர்சநாத், என்கிற விடத்தில் அபூததர்சநாத் என்றும் பூததர்சநா த் என்றும் இரண்டு ப்ரகாரமாக பஹம்பரிக்கப் பட்டிருக்கின்றது. இவ்விர ண்டு விதமான பதங்களுக்கும் சேர்த்து. பாஷ்யத்தில் கருத்தெழுதப்பட்ட து. இரண்டு மிரண்டு பொருளைக் கூறுகின்றமையால் இரஜ்ஜுஸர்ப்ப த்ரு ஷ்டாந்தமும் நூல் வஸ்திரங்களின் த்ருஷ்டாந்தமும் பெறப்பட்டது.

௨௬. சித்தம் ந ஸம்ஸ்ப்ருசத்யர்த்தம் நார்த்தாபாஸம் ததைவ ச|
அபூதோ ஹி யதச்சார்த்தோ நார்த்தாபாஸஸ்தத: ப்ருதக்||

౨౬. చిత్తం న సంస్పృశత్యర్థం నార్థాభాసం తథైవ చ।
అభూతో హి యతశ్చార్థో నార్థాభాసస్తతః పృథక్॥

ஶம்-ஹா. இங்ஙனம் வஸ்துக்களெல்லாம் பொய்யென்பது ஸித்தமாகையால் சித்தமென்கிற அர்தக்கரணமானது வாஸ்தவத்தில் விஷயங்களென்கிற வஸ்துககளோடு ஸம்பந்தப்பட்டதல்ல. ஸவப்நத்தில் தோற்றுகிற வஸ்துக்களைப்போலவே ஜாக்ரத்தசையில் தோற்றுகிற விஷயங்களையும் நெஞ்சு தொடுகிறதில்லை. ஸ்வப்நத்தில் போலவே ஜாகரத சையிலும் வஸ்துக்களெல்லாம் பொய்யேயன்றோ. இதுவுமன்றி இந்தவிஷயா பாஸங்களெல்லாம் சித்தமென்கிற நெஞ்சைவிட வேறானதல்ல. இந்தசித்தமே வஸ்துக்களாய் காணப்படுகின்றது.

உஎ. நிமித்தம் ந ஸதா சித்தம் ஸம்ஸ்ப்ருஶத்யத்வஸு த்ரிஷு |
அநிமித்தோ விபர்யாஸ꞉ கதம் தஸ்ய பவிஷ்யதி ||

౨౭. నిమిత్తం న సదా చిత్తం సంస్పృశత్యధ్వసు త్రిషు ।
అనిమిత్తో విపర్యాసః కథం తస్య భవిష్యతి ॥

ஶம்-ஹா. கீழ்சுலோகத்தில் சொல்லிய ப்ரகாரம் இந்தகடாதி ஜ்ஞானங்களை ப்ராந்தி என்றால், ப்ராந்தி யதார்த்த ஜ்ஞானத்தாலே பிறக்கவேணு மாகையால் இந்த ஜ்ஞானத்தைப்போல் யதார்த்த ஜ்ஞாநமு முண்டென்பதுநிச்சயம். ஆக, அந்தயதார்த்த ஜ்ஞாநத்தில் விஷயமாகியகடாதிகள் மெய்யேயாமாகையால் ஜ்ஞாநத்தை யொழிந்தமற்றவை பொய்யென்று சொல்வது கூடாதென்று வருகிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதாநம் சொல்லுகின்றார். ஒருகாலத்திலும் நெஞ்சானது விஷயங்களைப் பற்றுகிறதில்லை. ஆகையால் பூதபவிஷ்யதவர்தமாந காலங்கள் மூன்றிலும் ஜ்ஞாநகோசர வஸ்துக்கள் பொய்யேயாம். வஸ்துஸம்பந்த மில்லாமையால் எப்போதும் யதார்த்த ஜ்ஞாநமுண்டாகாது. இதற்குக்கருத்து ப்ராந்திபிறந்தால் யதார்த்த ஜ்ஞாநமிருக்கவேண்டிய நியமமில்லை. அவித்யையினால் ப்ரமம் வருகிறதென்று ஒப்புக்கொள்ளுகின்றோம். ஆனதால் நீ சொல்வது யுக்தமல்லவென்பதாம்.

உஅ. தஸ்மாந்ந ஜாயதே சித்தம் சித்தத்ருஶ்யம் ந ஜாயதே |
தஸ்ய பஶ்யந்தி யே ஜாதிம் கே வை பஶ்யந்தி தே பதம் ||

౨౮. తస్మాన్న జాయతే చిత్తం చిత్తదృశ్యం న జాయతే।
తస్య పశ్యంతి యే జాతిం ఖే వై పశ్యంతి తే పదమ్॥

ஶம்-ஹா. கடம் படம்முதலிய வஸ்துக்களை இல்லை என்பது அத்வைதிகளுக்கு ஸம்மதமாகையால் சித்தவிகாரமே இவை எல்லாமென்கிற பௌத்தபக்ஷத்தைக்கொண்டுபாஹ்யவஸ்து வாதிகளான த்வைதிகளை நிரஸித்தார். இனிசித்தமும் பிறப்பதில்லை என்றுபௌத்தனை தூஷிக்கின்றார். சித்தமும் ஜந்மத்தையடைவதில்லை. சித்தத்தால் காணப்படுகிற வஸ்துக்களும் ஜந்மத்தை யடைவதில்லை. இப்படியிருக்க, சித்தத்தை ஜந்மமுடையதென்றுகூறுவது ஆகாயாத்தில் பறவையின் காலடியைக்கண்டேனென்று சொல்லுகிற வார்த்தையைப்போல் பொய்யானது. சூந்யவாதி சொல்லும்வார்த்தை ஆகாயத்தைக்கையால் பிடித்துவிட்டேனென்பதுபோல் மிகவும் பொய்யானது.

உகூ. அஜாதம் ஜாயதே யஸ்மாதஜாதி꞉ ப்ரக்ருதிஸ்தத꞉ |
ப்ரக்ருதேரந்யதாபாவோ ந கதஞ்சித்பவிஷ்யதி ||

౨౯. అజాతం జాయతే యస్మాదజాతిః ప్రకృతి స్తతః ।
ప్రకృతేరన్యథాభావో నకథంచిద్భవిష్యతి॥

ஶம்-ஹா. ஆக, ப்ரம்மம் அஜமென்று ஸித்தித்தமையால் உத்பத்திமுதலியவிகாரமில்லாமையால் அதற்கு ஜந்மமில்லை. மற்றவைபொய்யாகையா லதற்கு ஜந்மமில்லை

ப்ரக்ருதிமாறுதென்பது ஸித்தமன்றோ. ஆனதால் கடம்முதலிய வஸ்துக்களெல்லாம் பொய். ப்ரம்மமேபரமார்த்தமென்று நிச்சயிக்கப்பட்டது.

௩௦. அநாதே:

அநந்ததா வாதிமதோ மோக்ஷஸ்ய ந பவிஷ்யதி||

30. అనాదేరంతవత్త్వంచ సంసారస్యన సేత్స్యతి।
అనంతతాచాదిమతో మోక్షస్యన భవిష్యతి॥

பா௦ஷ்யா. இனி ஸம்ஸாரம் மோக்ஷம் இவற்றைமெய்யென்று ஒப்புக்கொண்டு, ஸம்ஸாரத்தை யனாதியென்றும் மோக்ஷத்தை அழிவில்லாததென்றும் சொல்லுகிறவாதிகள் தூஷிக்கப்படுகிறார்கள். அனாதியாகியவஸ்து அழியாதென்கிற நியமமுண்டாகையால், ஸம்ஸாரமழியாதாம். ஆதியுடையவஸ்து அழிவுடையதாகையால் மோக்ஷமேன்பது ஆதியுடையதாகையால் அழிவுடையதாம். ஆகையால் பந்தமோக்ஷங்கள் பொய்யென்கிற அத்வைதபக்ஷமே யுக்தம். ஜ்ஞானம் பிறந்தபோது மோக்ஷமுண்டாகிறதென்று மோக்ஷத்தை ஆதியுடையதாக ஒப்புக்கொள்ளுகிறார்களன்றோ. இனி சிலயுக்திகளைக் கொண்டு ஸாதிக்கப்பார்த்தாலும் அவைமுன்னே கண்டிக்கப்பட்டவை என்றறிக. அவை யாவன, பீஜாங்குரந்யாய முதலியவையாம்.

௩௧. ஆதாவந்தே ச யந்நாஸ்தி வர்த்தமாநேऽபி தத்ததா |
விததை: ஸத்ருசா: ஸந்தோ விததா இவ லக்ஷிதா:||

௩௨. ஸப்ரயோஜநதா தேஷாம் ஸ்வப்நே விப்ரதிபத்யதே|
தஸ்மாதாத்யந்தவத்த்வேந மித்யைவ கலு தே ஸ்ம்ருதா:||

31. ఆదావంతేచయన్నాస్తి వర్తమానేపితత్తథా।
వితథైస్సదృశాస్సంతో వితథాఇవలక్షితాః॥

32. సప్రయోజనతా తేషాంస్వప్నే విప్రతిపద్యతే।
తస్మాదాద్యంతవత్త్వేన మిథ్యైవఖలు తేస్మృతాః॥

பா-ஷ்யா. இவ்விரண்டு சுலோகங்களும் வைதத்ய ப்ரகரணத்தில் வ்யாக்யானம் பண்ணப்பட்டவையாயினும் ஸம்ஸாரமும் பொய்மோக்ஷமும் பொய்யென்கிற இந்த ப்ரகரணத்தில் ப்ரஸங்கத்தால் படிக்கப்பட்டன.

பதாந்வயார்த்தபேதங்கள்.

ஸ்ரீ வேதார்த்த ஸங்கிரஹம் என்கிற பகவத்ராமாநுஜாசார்யர்செய்தருளியக்ரந்தத்தில் இந்த விஷயங்களெல்லாம் பூர்வபக்ஷமாய் விரிவாய்பேசப்பட்டிருக்கின்றன. இந்த இரண்டுசுலோகங்களும் வைதத்ய ப்ரகரணத்தில் ஆறுவது சுலோகமாகவும் ஏழாவது சுலோகமாகவுங் கூறப்பட்டிருக்கிறது.

௩௩. ஸர்வே தர்மா ம்ருஷா ஸ்வப்நே காயஸ்யாந்தர்நிதர்சநாத்||
ஸம்வ்ருதேऽஸ்மிந் ப்ரதேசே வை பூதாநாம் தர்சநம் குத:||

33. సర్వేధర్మా మృషాస్వప్నే కాయస్యాంతర్నిదర్శనాత్।
సంవృతేస్మిన్ ప్రదేశే వై భూతానాం దర్శనం కుతః॥

பா௦-ஷ்யா. இந்த சுலோகங்களால் "நிமித்தஸ்யா நிமித்தத்வமிஷ்யதே பூததர்சநாத்" என்கிறசுலோகத்தின் பொருள்விஸ்தரிக்கப்படுகிறது.

பதாந்வயார்த்தபேதங்கள்.

ஸ்வப்நத்தில் சரீரத்திற்குள் காரணப்படுகின்றமையாலந்த வஸ்துக்கள் பொய்யாவதுபோல ஜாக்ரத்தசையிலும் விராட்புருஷனுடையசரீரத்திற்குள் ஸகலவஸ்துக்களுங் காணப்படுகின்றமையாலவை எல்லாம் பொய்யாவதிலை யமில்லை. தக்கவிடமில்லாமையினால் ஸ்வப்நம் பொய்யாகின்றதாயின், ப்ரம்மமும் நிரவயமாகையா லிடமுடையதன்று. ஆகையாலந்த ப்ரம்மத்தில்தோற்றுகிற ஸகலவஸ்துக்களும் பொய்யேயாம். ஆக எந்தஹேதுக்களால் ஸ்வப்நத்தைப் பொய்யென்கிறோமோ, அந்த ஹேதுக்கள் ஜாகரிதத்திலும் ஸமாநங்களாகையால் ஜகத்துபொய்யேயாகின்றது. ஜந்மம்முதலியதோஷங்களில்லா தஜ்ஞாநமாத்திரமாகிய ப்ரம்மமே ப்ரமார்த்தமென்பது ஸித்தமாயிற்று

௩௪. ந யுக்தம் தர்சநம் கத்வா காலஸ்யாநியமாத் கதௌ |
ப்ரதிபுத்தச்ச வை ஸர்வஸ் தஸ்மிந் தேசே ந வித்யதே ||

34. న యుక్తం దర్శనం గత్వా కాలస్యానియమాద్గతౌ ।
ప్రతిబుద్ధశ్చ వై సర్వస్తస్మిందేశే న విద్యతే ॥

ஸம். பா. ஸ்வப்நத்தில் தேசாந்தரம்போய்வஸ்துக்களைக் காண்பதில்லை. தேசகால நியமமில்லாமையாலெங்க. இராமேச்வரத்திலிருப்பவன் அந்தக்ஷணத்தில் காசியிலிருப்பதாக ஸ்வப்நங்காண்கிறான். விழித்துக்கொண்டு பார்த்தால், தான் இந்தஸ்வப்நத்திற்குமுன் எவ்விடத்தி லிருந்தானோ அவ்விடத்திலிருக்கிறானே யன்றி, காசியிலிருப்பதில்லை. ஆகையால் ஸ்வப்நம் பொய்யாகிறது. இவ்வாறே ஸம்ஸாரமாகிற நித்திரை நீங்கிவிழித்துக்கொண்டு பார்த்தால் ஸ்வப்நமாகிய ஜகத்திலிருப்பதில்லை. ப்ரம்மஸ்வரூபத்திலிருக்கிறானன்றோ. ஆகையால் ஜகத்துபொய்யென்பதற்கு ஸந்தேஹமில்லை.

௩௫. மித்ராத்யை: ஸஹ ஸம்மந்த்ர்ய ஸம்புத்தோ ந ப்ரபத்யதே |
க்ருஹீதம் சாபி யத்கிஞ்சித் ப்ரதிபுத்தோ ந பச்யதி ||

35. మిత్రాద్యైస్సహ సంమంత్ర్య సంబుద్ధో న ప్రపద్యతే ।
గృహీతం చాపి యత్కించిత్ప్రతిబుద్ధో న పశ్యతి ॥

ஸம். பா. ஸ்வப்நத்தில்தான் பலஸ்நேஹிதர்களோடு பேசிக்கொண்டிருக்கக்கண்டவன், விழித்துக்கொண்டால் அவர்களைக் காண்பதில்லை. ஸ்வப்நத்தில் கிடைத்த தநதாந்யங்களை விழித்துக்கொண்டபின் காண்பதில்லை. ஆதலால் ஸ்வப்நம்பொய்யாவதுபோல இந்த ப்ரபஞ்சத்திலுமிந்த குணமுண்டாகையாலிதுவும் பொய்யேயாம்.

௩௬. ஸ்வப்நே சாவஸ்துக: காய: ப்ருதகந்யஸ்ய தர்சநாத் |
யதா காயஸ் ததா ஸர்வம் சித்தத்ருச்யமவஸ்துகம் ||

36. స్వప్నే చావస్తుకః కాయః పృథగన్యస్య దర్శనాత్ ।
యథా కాయస్తథా సర్వం చిత్తదృశ్యమవస్తుకమ్ ॥

ஸம். பா. ஸ்வப்நத்தி லொருசரீரத்தோடு தேசாந்தர ஸஞ்சரம செய்வதாய் காண்கிறான். அப்போது அவனுடையசரீரம் அவனுடைய படுக்கையில் கிடக்கிறதன்றோ. ஆகையால் அந்த சரீரமஸத்தாகின்றது. அவ்வாறே சித்தமும் சித்தத்தால்காணப்படுகிற பொருள்களும். ஆகையாலதுபோல ஜாகரதசையிலும் சரீரம் முதலியவை யஸத்துக்களேயாம்.

௩௭. க்³ரஹணாஜ்ஜாக³ரிதவத்தத்³தே⁴து: ஸ்வப்ந இஷ்யதே |
தத்³தே⁴துத்வாத்து தஸ்யைவ ஸஜ்ஜாக³ரிதமிஷ்யதே ||

౩౭. గ్రహణాజ్జాగరితవత్తద్ధేతుః స్వప్న ఇష్యతే।
తద్ధేతుత్వాత్తు తస్యైవ సజ్జాగరితమిష్యతే॥

ஸ௦-ஸா. ஜாகரிதத்தில் போலக் ரகிக்கப்படுகையால் ஸ்வப்நத்திற்கு ஜாகரிதம் ஹேதுவாகின்றது. ஸ்வப்நம், காண்பவனுக்கே ஸத்யமாய்த் தோற்றுவதுபோல ஜாகரிதமும் அவனுக்கே ஸத்தாகித் தோற்றுகின்றது.

௩௮. உத்பாத³ஸ்யாப்ரஸித்³த⁴த்வாத³ஜம் ஸர்வமுதா³ஹ்ருதம் |
ந ச பூ⁴தாத³பூ⁴தஸ்ய ஸம்ப⁴வோ(அ)ஸ்தி கத²ஞ்சந ||

౩౮. ఉత్పాదస్యాప్రసిద్ధత్వాదజం సర్వముదాహృతమ్।
న చ భూతాదభూతస్య సమ్భవోఽస్తి కథంచన॥

ஸ௦-ஸா. ஸ்வப்ந காரணமாகிய ஜாகரிதம் ஸ்வப்நம்போல பொய்யாகாது. ஜாகரிதம் ஸ்திரமாகக் காணப்படுகிறது ஸ்வப்நமோ க்ஷணிகமாகக் காணப்படுகிறது. இந்த பேதத்தால் ஜாகரிதம் ஸ்வப்நம்போல பொய்யல்லவென்றால்; இது அவிவேகிகள் சொல்லும் வார்த்தை. விவேகிகளுக்காயின் ஸ்வப்ந ஜாகரிதங்களில் ஒரு விசேஷமுமில்லை. ஆகையால் ஜாகரிதத்தில் வாஸ்தவமாய் ஒன்றுக்கும் பிறப்புமுதலியவை யொன்றுமில்லை. ஜாகரிதத்திலிருந்து ஸ்வப்ந முண்டாகிறதென்று சொல்வதும் தக்கதல்ல. அஸத்திற்குப் பிறப்புண்டோ முயற்கொம்புண்டாகுமோ.

௩௯. அஸஜ்ஜாக³ரிதே த்³ருஷ்ட்வா ஸ்வப்நே பஶ்யதி தந்மய: |
அஸத்ஸ்வப்நே(அ)பி த்³ருஷ்ட்வா ச ப்ரதிபு³த்³தோ⁴ ந பஶ்யதி ||

౩౯. అసజ్జాగరితే దృష్ట్వా స్వప్నే పశ్యతి తన్మయః।
అసత్స్వప్నేఽపి దృష్ట్వా చ ప్రతిబుద్ధో న పశ్యతి॥

ஸ௦-ஸா. ஸ்வப்நத்தில் ஜாகரதசையில் கயிற்றில் கற்பிக்கப்பட்ட பாம்புபோல் பொய்யாயிருக்கிற அனேக வஸ்துக்களைக் கண்டு அந்த பாவனையால் பாவிக்கப்பட்ட நெஞ்சையுடையவனும், அந்த ரூபத்தை யடைந்து ஸ்வப்நத்தில் ஜாகரிதத்தில்போல அனேக வஸ்துக்களைக் காண்கிறான். ஸ்வப்நத்தில் கண்டவற்றை விழித்துக்கொண்ட போது பார்ப்பதில்லை. ஜாகரிதத்தில் கண்ட வஸ்துக்களிலும் சில வஸ்துக்களைக் காண்பதில்லை. ஆக இவ்வாறு ஸ்வப்ந ஜாகரிதங்களுக்கு காரிய காரணபாவத்தைக் கொள்ள வேணும். பரமார்த்தமாகிய ஜாகரிதத்தால் அபரமார்த்தமாகிய ஸ்வப்ந முண்டாகிறதென்று சொல்லப்போகாது.

௪௦. நாஸ்த்யஸத்³தே⁴துகமஸத்ஸத³ஸத்³தே⁴துகம் ததா² |
ஸச்ச ஸத்³தே⁴துகம் நாஸ்தி ஸத்³தே⁴துகமஸத்குத: ||

౪౦. నాస్త్యసద్ధేతుకమసత్సదసద్ధేతుకం తథా।
సచ్చ సద్ధేతుకం నాస్తి సద్ధేతుకమసత్కుతః॥

ஸ௦-ஸா. வாஸ்தவத்தில் கார்யகாரண பாவமென்பதொன்றுக்குங் கூடாது. ஏனென்றால், அஸத்தாகிய முயற்கொம்பு முதலிய பொருள் அஸத்தாகிய ஆகாயத் தாமரை முதலியவற்றுக்கு உத்பத்தி யடையாமையால் அஸத்திற்கு அஸத்து காரணமாகா

தென்பது விளங்கிற்று. ஸத்தாக த்வைதிகளால் ஒப்புக்கொள்ளப்படுகிற கடபடாதி வஸ்துக்கள் அஸத்தாகிய ஆகாயத்தாமரை முயற்கொம்பு முதலியவற்ருல் உண்டாகா தென்று த்வைதிகளை ஒப்புக்கொள்ளுகின்றமையால் அஸத்து ஸத்துக்குக் காரணமாகா தென்பது விளங்கிற்று. ஸத்தாக த்வைதிக ளொப்புக்கொள்ளுகிற ஒரு கடத்தால் ஸத்தாக அவர்களால் ஒப்புக்கொள்ளப்படுகிற மற்ருெரு கடமுண்டாகாமையினுல் ஸத்து ஸத்திற்குக் காரணமாகாதென்பது விளங்கிற்று. ஆகையால் அஸத்துக்கு ஸத்து காரணமாமென்பதில்லை என்பது ஸித்தமன்ருே. ஆனதால், அஸத்தான ப்ரபஞ்சத்திற்கு ஸத்தான ப்ரம்மம் காரணமாமென்று சிலர் சொல்லுவது மிகவும் விருத்தமானது. முதற் பாதத்தால் சூந்யவாதி மதமும் இரண்டாம் பாதத்தால் தார்க்கிகர் மதமும் மூன்ரும் பாதத்தால் ஸாங்கியர்மதமும் தூஷிக்கப்பட்டது. இம்மூன்று மதங்களைப்போலவே மித்யையாகிய ப்ரபஞ்சத்திற்கு ஸத்யமான ப்ரமங் காரணமென்று சொல்லுகிற மதமும் தக்கதல்லவென்று கருத்து. ஆகையால் ஒருவிதத்தாலும் வாஸ்தவத்தில் காரியகாரண பாவங் கிடையாது என்பது ஒருவராலு மழிக்கமுடியாதது. வாஸ்தவத்தில் காரியகாரண பாவத்தை யொருவன் கண்டதுமில்லை. அதற்கு யுக்தியுமில்லை.

௪௧. விபர்யாஸாத்யதா ஜாக்ரதசிந்த்யாந்பூதவத்ஸ்ப்ருஶேத்|
தயா ஸ்வப்நே விபர்யாஸாத்தர்மாம்ஸ்தத்ரைவ பஶ்யதி||

౪౧. విపర్యాసాద్యథా జాగ్రదచిన్త్యాన్భూతవత్స్పృశేత్ ।
తథా స్వప్నే విపర్యాసాద్ధర్మాంస్తత్రైవ పశ్యతి॥

௱௦-ஹா. ஸ்வப்நம் ஜாகரம் இவற்றிற்குக் காரிய காரண பாவமில்லை என்பதை மீளவும் விளக்கிக்கொண்டு ஜகத்து பொய்யென்பதை ஸ்தாபிக்கின்ருர். எவ்வாறு ஜாக்ரத்தசையிலும், 'இப்படியுண்டாயிற்று' 'இக்காலத்திலுண்டாயிற்று' என்று சிந்திக்கப் போகாத பொய்யான ரஜ்ஜுஸர்பமென்கிற கயிற்றுப் பாம்புமுதலிய வஸ்துக்களை விவேகமில்லாமையினுல் வாஸ்தவமாகவே ப்ரமிக்கிருனோ அவ்வாறே ஸ்வப்நத்திலும் அவிவேகத்தினுல் அநேக வஸ்துக்களை வாஸ்தவமாக ப்ரமிக்கிருன். இவ்வளவொழிய ஒன்றுக்கொன்று காரணமன்றென்று கருத்து.

௪௨. உபலம்பாத்ஸமாசாராதஸ்திவஸ்துத்வவாதிநாம்|
ஜாதிஸ்து தேஶிதா புத்தைரஜாதேஸ்த்ரஸதாம் ஸதா||

౪౨. ఉపలమ్భాత్సమాచారాదస్తివస్తుత్వవాదినామ్ ।
జాతిస్తు దేశితా బుద్ధైరజాతేస్త్రసతాం సదా॥

௱௦-ஹா. ப்ரத்யக்ஷத்தாலு மாசாரத்தாலுமுண்மையென்று வஸ்துக்களை யொப்புக்கொண்டு அத்வைதஸ்வரூபத்தி லாத்மநாசம் வருமென்று பயந்தவருக்கு அவர்கள் மதிக்குச் சமாநமாய் பண்டிதர்களால் ஜந்மமுதலியவை கூறப்பட்டன. க்ரமத்தி லத்வைதத்திலார்களென்று என்று கீழ்சொலலப்பட்ட தன்ருே.

௪௩. அஜாதேஸ்த்ரஸதாம் தேஷாமுபலம்பாத்வியந்தி யே|
ஜாதிதோஷா ந ஸேத்ஸ்யந்தி தோஷோऽப்யல்போ பவிஷ்யதி||

౪౩. అజాతేస్త్రసతాం తేషాముపలమ్భాద్వియన్తి యే ।
జాతిదోషా న సేత్స్యన్తి దోషోఽప్యల్పో భవిష్యతి॥

ஸ௦-ஹா. எவர்கள் அத்வைதாத்ம ஸ்வரூபத்தை சாஸ்திரங்களா லறிந்து, ப்ரத்யக்ஷத்தால் த்வைதத்தைக் காண்கிறபடியாலும் ஆத்மநாசம் வருமென்கிற பயத்தாலும் த்வைதத்தை யடைகிறார்களோ அவர்களும் க்ரமத்தில் நற்கதியை யடைகின்றார்கள். அவர்களுக்கு அத்வைதத்தில் ச்ரத்தை யுண்டாகையால் அவர்களுக்கு ஜாதி தோஷங்கள் வாராவாம். வரினு மிகவும் ஸ்வல்பமாய் வரும். வந்தாலும் க்ரமத்தில் கழியும்.

௪௪. 𑌉𑌪𑌲𑌮𑍍𑌭𑌾𑌤𑍍𑌸𑌮𑌾𑌚𑌾𑌰𑌾𑌨𑍍𑌮𑌾𑌯𑌾𑌹𑌸𑍍𑌤𑍀𑌯𑌥𑍋𑌚𑍍𑌯𑌤𑍇 ।
𑌉𑌪𑌲𑌮𑍍𑌭𑌾𑌤𑍍𑌸𑌮𑌾𑌚𑌾𑌰𑌾𑌦𑌸𑍍𑌤𑌿𑌵𑌸𑍍𑌤𑍁𑌤𑌥𑍋𑌚𑍍𑌯𑌤𑍇 ॥

౪౪. ఉపలమ్భాత్సమాచారాన్మాయాహస్తీయథోచ్యతే ।
ఉపలమ్భాత్సమాచారాదస్తివస్తుతథోచ్యతే ॥

ஸ௦-ஹா. பேதப்பட்ட அனேக வஸ்துக்கள் ப்ரத்யக்ஷமாய் காணப்படுகின்றமையாலும் அந்தந்த வஸ்துக்களால் அந்தந்த காரியங்கள் பிறக்கின்றமையாலும் மெய்யேயாமென்று ஸாதிக்கமுடியாது. மாயையினுலுண்டாகிய பொய்யான வஸ்துக்களிலும் அவை யுண்டாகின்றமையாலென்க. மாயையினுலொரு யானையை ப்ரத்யக்ஷமாய்க் காண்கிறோம். அதின்மேலேறுகின்றோம் ஆயினும் அந்த யானை மெய்யாகுமோ. அப்படியே த்வைதமும் மெய்யாகாதென்றுணர்க.

௪௫. 𑌜𑌾𑌤𑍍𑌯𑌾𑌭𑌾𑌸𑌂𑌚𑌲𑌾𑌭𑌾𑌸𑌂𑌵𑌸𑍍𑌤𑍍𑌵𑌾𑌭𑌾𑌸𑌂𑌤𑌥𑍈𑌵𑌚 ।
𑌅𑌜𑌾𑌚𑌲𑌮𑌵𑌸𑍍𑌤𑍁𑌤𑍍𑌵𑌂𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌂𑌶𑌾𑌨𑍍𑌤𑌮𑌦𑍍𑌵𑌯𑌮𑍍 ॥

౪౫. జాత్యాభాసంచలాభాసంవస్త్వాభాసంతథైవచ।
అజాచలమవస్తుత్వంవిజ్ఞానంశాన్తమద్వయమ్॥

ஸ௦-ஹா. பிறப்புடையதாயுங் க்ரியை யுடையதாயும் நாம ரூபங்களையுடையதாயும் தோற்றுனின்ற, பிறப்பு க்ரியை நாமரூபங்கள் இவை இல்லாதிருக்கின்ற ஜ்ஞாநஸ்வரூப சுத்தாத்வைத ப்ரம்மமே பரமார்த்தமாய் சாந்தமாய் ஸுகரூபமாயிருப்பது. மற்றவை பொய்யாய் விகாரியாய் துக்கமாயிருப்பனவென்றுணர்க.

௪௬. 𑌏𑌵𑌂𑌨𑌜𑌾𑌯𑌤𑍇𑌚𑌿𑌤𑍍𑌤𑌮𑍇𑌵𑌂𑌧𑌰𑍍𑌮𑌾𑌅𑌜𑌾𑌃𑌸𑍍𑌮𑍃𑌤𑌾𑌃 ।
𑌏𑌵𑌮𑍇𑌵𑌵𑌿𑌜𑌾𑌨𑌨𑍍𑌤𑍋𑌨𑌪𑌤𑌨𑍍𑌤𑌿𑌵𑌿𑌪𑌰𑍍𑌯𑌯𑍇 ॥

౪౬. ఏవన్నజాయతేచిత్తమేవన్ధర్మాఅజాస్స్మృతాః।
ఏవమేవవిజానన్తోనపతన్తివిపర్యయే॥

ஸ௦-ஹா. கீழ்ச்சொல்லிய யுக்திகளால் சித்தமு முண்டாவதில்லை. ஆத்மாக்களு முண்டாவதில்லை. ஆத்மாக்கள் நித்யர்களாகவே ப்ரம்மவித்துக்களா லெண்ணப்படுகிறார்கள். இப்படி யறிந்தவர் அவித்யையாகிய இருளடைந்த ஸமுத்திரத்தில் விழுந்து தபியார். "தத்ரகோமோஹஃ கச்சோக ஏகத்வமநுபச்யதஃ" என்கிற மந்திரத்தில் அத்வைத ஜ்ஞாநமுடையவனுக்கு துன்பமில்லை யென்று சொல்லுகின்றதன்றோ.

௪௭. 𑌋𑌜𑍁𑌵𑌕𑍍𑌰𑌾𑌦𑌿𑌕𑌾𑌭𑌾𑌸𑌮𑌲𑌾𑌤𑌸𑍍𑌪𑌨𑍍𑌦𑌿𑌤𑌂𑌯𑌥𑌾 ।
𑌗𑍍𑌰𑌹𑌣𑌗𑍍𑌰𑌾𑌹𑌕𑌾𑌭𑌾𑌸𑌂𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑍍𑌪𑌨𑍍𑌦𑌿𑌤𑌂𑌤𑌥𑌾 ॥

౪౭. ఋజువక్రాదికాభాసమలాతస్పన్దితంయథా ।
గ్రహణగ్రాహకాభాసంవిజ్ఞానస్పన్దితంతథా॥

ஸம்-ஹா. எவ்வாறு உல்க்கை என்கிற கொள்ளியானது தான் சலிப்பதினுல் கோணலாயும் நேராயுந் தோற்றுகின்றதோ; அவ்வாறே ஜ்ஞாநஸ்ரூபமே வ்யத்யாஸத்தினுல் அறிபவனுயும் அறியப்படும் பொருளாயுந் தோற்றுகின்றது.

௪௮. அஸ்பந்தமாநமலாதமநாபாஸமஜம் யதா |
அஸ்பந்தமாநம் விஜ்ஞாநமநாபாஸமஜம் ததா ||

౪౮. అస్పన్దమానమలాతమనాభాసమజం యథా।
అస్పన్దమానంవిజ్ఞానమనాభాసమజన్తథా॥

ஸம்-ஹா. அந்தகொள்ளியானது சலியாதபோது வளைதல் குவிதல் நீளுதல் முதலிய விகாரமடையாமலிருப்பதுபோல ஜ்ஞாநமும் அவித்யை நீங்கிசலியாதிருக்கும் போது நிர்விகாரமாய் கீழ்ச்சொன்ன பேதங்களின்றி விளங்குகின்றது.

௪௯. அலாதே ஸ்பந்தமாநே வை நாபாஸா அந்யதோபுவ꞉ |
ந ததோ(அ)ந்யத்ர நிஸ்ஸ்பந்தாந்நாலாதம் ப்ரவிஶந்தி தே ||

౪౯. అలాతేస్పన్దమానేవై నాభాసాఅన్యతోభువః ।
నతతోన్యత్రనిస్స్పన్దాన్నాలాతమ్ప్రవిశన్తితే॥

ஸம்-ஹா. இந்த கொள்ளிசலிக்கும்போது தோற்றிய வளைவுமுதலிய ஆபாஸங்கள் இது அசையும்போது மற்றென்றிலிருந்து இந்த கொள்ளியிற் சேர்ந்தவையல்ல. இது சலியாதபோது இவை இதிலடங்கிப் போயினவென்று சொல்வதற்கில்லை. ஆனதால் தோற்றமேயாகின்றமையால் அந்த விகாராபாஸங்கள் பொய்யேயாகின்றன. அவ்வாறே இந்த ஜ்ஞாநத்தில் தோற்றுகிற ஜீவாபாஸம் முதலியவை எல்லாம் பொய்யேயாம்.

௫௦. ந நிர்கதா அலாதாத்தே த்ரவ்யத்வாபாவயோகத꞉ |
விஜ்ஞாநே(அ)பி ததைவ ஸ்யுராபாஸஸ்யாவிஶேஷத꞉ ||

౫౦ ననిర్గతాఅలాతాత్తేద్రవ్యత్వాభావయోగతః ।
విజ్ఞానేపితథైవస్యురాభాసస్యావిశేషతః॥

ஸம்-ஹா. இந்த கொள்ளியிலுண்டாகிற விகாராபாஸங்கள் ஓரிடத்திலிருந்து வந்தன, ஓரிடத்திற்குப் போயின, என்று சொல்வதற்கில்லை. த்ரவ்யமாயின் ஒரு மனிதன் ஒரு வீட்டிலிருந்து புறப்பட்டு மற்றொரு வீடு சேர்ந்து அவ்விடத்திலிருந்து புறப்பட்டு மற்றோரிடஞ் சேருவதுபோல், வரவும் போகவுங் கூடும். இந்த வளைவு முதலிய விகாராபாஸங்கள் த்ரவ்யமல்லவன்றோ. ஆனதாலென்க. இவ்வாறே விஜ்ஞாந ஸ்வரூபத்தில் தோற்றுகிற ஸகல பேதவிகாரங்களும் ஓரிடத்திலிருந்து வந்தவையுமல்ல மற்றோரிடத்திற்குப் போமவையுமல்லவென்றுணர்க. ஆகவே பொய்யென்பது விளங்குகின்றது.

௫௧. விஜ்ஞாநே ஸ்பந்தமாநே வை நாபாஸா அந்யதோபுவ꞉ |
ந ததோ(அ)ந்யத்ர நிஸ்ஸ்பந்தாந்ந விஜ்ஞாநம் விஶந்தி தே ||

௫௨. ந நிர்கதாஸ்தே விஜ்ஞாநாத்த்ரவ்யத்வாபாவயோகத꞉ |
கார்யகாரணதாபாவாத்யதோ(அ)சிந்த்யா꞉ ஸதைவ தே ||

౫౧. విజ్ఞానేస్పన్దమానేవై నాభాసాఅన్యతోభువః ।
నతతోన్యత్రనిస్స్పన్దాన్నవిజ్ఞానంవిశన్తితే॥

౫౨. న నిర్గతా విజ్ఞానా ద్ద్రవ్యత్వాభావయోగతః ।
కార్యకారణతాభావాద్యతోఽచింత్యాస్సదైవతే॥

ஸம்-ஹா. கொள்ளியோடு விஜ்ஞானம் ஸமானமேயாம். ஆயினும் விஜ்ஞான மெப்போதும், சலியாது. காரிய காரணபாவத்தில் சிந்திக்க முடியாமையால் ஸகல விகாரங்களும் பொய்யே யாகின்றன. எவ்வாறு வளைவுமுதலிய விகாரா பாசங்களில்லாத கொள்ளியில் வளைவு முதலிய விகாரங்கள் காணப்பட்டனவோ; அவ்வாறே பேதப்பட்ட விகாரங்கள் விஜ்ஞாநத்திலில்லா விடினும் அவித்யையினு லிருப்பவைபோலக் காணப்பட்டன. ஆக, ஜகத்து பொய்யென்பது ஸாதிக்கப்பட்டது.

பதாந்வயார்த்தபேதங்கள்.

"அலாதேஸ் பந்தமாநேவை" என்கிற (49 வது) சுலோகத்திலும், "நநிக்கதா அலாதாத்தே" என்கிற (50 வது) சுலோகத்திலும், கொள்ளியில் தோற்றுகிற விகாரங்கள் பொய்யென்பதிற் சொன்ன காரணங்களே, விஜ்ஞாநத்தில் தோற்றுகிற பேதப்பட்ட தருமங்கள் பொய்யென்பதிலு முண்டாயிருக்கின்றன வென்று அந்த சுலோகங்களிற் கூறிய தோஷங்களை இவ்விரண்டு சுலோகங்களிலுங் காட்டினுரென் றுணர்க.

௫௩. த்ரவ்யம் த்ரவ்யஸ்ய ஹேது: ஸ்யாதந்யதந்யஸ்ய சைவ ஹி।
த்ரவ்யத்வமந்யபாவோ வா தர்மாணாம் நோபபத்யதே॥

౫౩. ద్రవ్యం ద్రవ్యస్య హేతుస్స్యాదన్యదన్యస్య చైవహి ।
ద్రవ్యత్వమన్యభావో వా ధర్మాణాం నోపపద్యతే॥

ஸம்-ஹா. திரவ்யம் த்ரவ்யத்திற்குக் காரணமாம். குணம் குணத்திற்குக் காரணமாம். இந்த ஜீவாத்மாக்கள். தரவயமுமல்ல. குணங்களுமல்ல, ஆகையால் ஆத்மா ஒன்றுக்குங் காரணமல்ல. நித்யமாய் ஒன்றுயிருக்கின்றது. அவயவம் அவயவி என்கிற பேதங்களொன்று மில்லாத ஆத்மாவுக்கு ஒருவித விகாரமு மில்லை யென்ற தாயிற்று.

௫௪. ஏவம் ந சித்தஜா தர்மாஶ்சித்தம் வாபி ந தர்மஜம்।
ஏவம் ஹேதுபலாஜாதிம் ப்ரவிஶந்தி மநீஷிண:॥

౫౪. ఏవం న చిత్తజా ధర్మాశ్చిత్తం వాపి న ధర్మజమ్ ।
ఏవం హేతుఫలాజాతిం ప్రవిశంతి మనీషిణః॥

ஸம்-ஹா. கீழ்ச்சொல்லிய காரணங்களால் சித்தமானது ஆத்மவிஜ்ஞாநஸ்வரூபமே யாகையால் பேதப்பட்ட தருமங்கள் சித்தத்தாலுண்டானவையல்ல. சித்தமும் பேத தருமங்களா லுண்டாகியதன்று. எல்லாம் விஜ்ஞாநத்தின் ஆபாஸங்களேயன்றே. இப்படியே, காரிய காரணங்களிலும் காரியத்தால் காரணமாவது காரணத்தால் காரியமாவது பிறப்பதில்லை என்று ஹேதுபலங்களென்கிற காரண காரியங்களுக்கு அஜாதியை (அதாவது - பிறப்பில்லாமை) புத்திமான்களான ப்ரம்மவித்துகள் நிச்சயிக்கின்றார்கள். ஆக ஆத்ம ஸ்வரூபத்திற்குக் காரியகாரண பாவங் கூடாததேயாம்.

௫௫. யாவத்தேதுபலாவேஶஸ்தாவத்தேதுபலோத்பவ:।
க்ஷீணே ஹேதுபலாவேஶே நாஸ்தி ஹேதுபலோத்பவ:॥

౫౫. యావద్ధేతుఫలావేశస్తావద్ధేతుఫలోద్భవః ।
క్షీణే హేతుఫలావేశే నాస్తి హేతుఫలోద్భవః॥

ஸ0-ஹா. கீழ்ச்சொல்லியபடி தத்வஜ்ஞாநத்தில் நிலையுண்டாகி காரிய காரண பாவத்தைப் பொய்யென்றறிந்தவருக்கு இந்த ஸம்ஸார பரம்பரை நீங்குகின்றது. எவர் இதை மெய்யென்று ப்ரமிக்கிறார்களோ அவர்களுக்கு அந்த ப்ரமமுள்ளவரையில் ஸம்ஸார பந்தம் நீங்காது.

௫௬. 𑌯𑌾𑌵𑌦𑍍𑌧𑍇𑌤𑍁𑌫𑌲𑌾𑌵𑍇𑌶𑌸𑍍𑌸𑌂𑌸𑌾𑌰𑌸𑍍𑌤𑌾𑌵𑌦𑌾𑌯𑌤𑌃 ।
𑌕𑍍𑌷𑍀𑌣𑍇 𑌹𑍇𑌤𑍁𑌫𑌲𑌾𑌵𑍇𑌶𑍇 𑌸𑌂𑌸𑌾𑌰𑌂 𑌨 𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 ॥

౫౬. యావద్ధేతుఫలావేశస్సంసారస్తావదాయతః ।
క్షీణే హేతుఫలావేశే సంసారం న ప్రపద్యతే ॥

ஸ0-ஹா. நான் இப்போது உபாயாநுஷ்டானம்செய்கிறேன் இது காலாந்தரத்தில் பலிக்கப்போகிறது அப்போது நான் ஜீவித்திருந்து இந்த பலத்தை யநுபவிக்கப்போகிறேன். என்கிற ப்ரமம் நீங்குகிறவரையில் இந்த அவித்யாபந்தங் கழியாது.

௫௭. 𑌸𑌂𑌵𑍃𑌤𑍍𑌯𑌾 𑌜𑌾𑌯𑌤𑍇 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑌂 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 𑌤𑍇𑌨 𑌵𑍈 ।
𑌸𑌦𑍍𑌭𑌾𑌵𑍇𑌨 𑌹𑍍𑌯𑌜𑌂 𑌸𑌰𑍍𑌵𑌮𑍁𑌚𑍍𑌛𑍇𑌦𑌸𑍍𑌤𑍇𑌨 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 𑌵𑍈 ॥

౫౭. సంవృత్యా జాయతే సర్వం శాశ్వతం నాస్తి తేన వై ।
సద్భావేన హ్యజం సర్వముచ్ఛేదస్తేన నాస్తి వై ॥

ஸ0-ஹா. இந்த ஸம்ஸாரமெல்லா மவித்யையினாலுண்டாகின்றதாகையால் மாறி மாறி யழிவது மாவதுமாய் பரம்பரையாய் வருகின்றது; ஆகையால்இது நித்யமல்ல. வாஸ்தவத்தில் பரமார்த்த ஸத்தாகியது ப்ரம்மமேயாம். ஆகையால், அஜ்ஞாநிக்குஸம்ஸாரமுண்டாகுமென்று சொல்லியது தக்கதேயாமென்று கருத்து.

௫௮. 𑌧𑌰𑍍𑌮𑌾 𑌯 𑌇𑌤𑌿 𑌜𑌾𑌯𑌨𑍍𑌤𑍇 𑌜𑌾𑌯𑌨𑍍𑌤𑍇 𑌤𑍇 𑌨 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌤𑌃 ।
𑌜𑌨𑍍𑌮 𑌮𑌾𑌯𑍋𑌪𑌮𑌂 𑌤𑍇𑌷𑌾𑌂 𑌸𑌾 𑌚 𑌮𑌾𑌯𑌾 𑌨 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 ॥

౫౮. ధర్మా య ఇతి జాయంతే జాయంతే తే న తత్త్వతః ।
జన్మ మాయోపమం తేషాం సా చ మాయా న విద్యతే ॥

ஸ0-ஹா. ப்ராந்தி யுடையவராகி அவித்யை யிலகப்பட்டுக்கொண்டு கிடக்கிறவர்களுக்கு ஆத்மாக்களென்றும் விஷயங்களென்று மெவையுண்டாகின்றனவோ; அவையெல்லாம் வாஸ்தவத்தி லுண்டானவையல்ல. மாயையினாலே யுண்டானவையாம். அந்த மாயையும் ஒரு வஸ்துவல்ல. அதுவும் பொய். மாயையென்றாலில்லை என்று பொருள் என்று கருத்து.

௫௯. 𑌯𑌥𑌾 𑌮𑌾𑌯𑌾𑌮𑌯𑌾𑌦𑍍𑌬𑍀𑌜𑌾𑌜𑍍𑌜𑌾𑌯𑌤𑍇 𑌤𑌨𑍍𑌮𑌯𑍋𑌽𑌙𑍍𑌕𑍁𑌰𑌃 ।
𑌨𑌾𑌸𑍌 𑌨𑌿𑌤𑍍𑌯𑍋 𑌨 𑌚𑍋𑌚𑍍𑌛𑍇𑌦𑍀 𑌤𑌦𑍍𑌵𑌦𑍍𑌧𑌰𑍍𑌮𑍇𑌷𑍁 𑌯𑍋𑌜𑌨𑌾 ॥

౫౯. యథా మాయామయాద్బీజాజ్జాయతే తన్మయోఽఙ్కురః ।
నాసౌ నిత్యో న చోచ్ఛేదీ తద్వద్ధర్మేషు యోజనా ॥

ஸ0-ஹா. கீழ்ச்சொல்லிய விஷயங்களுக்கு மாயையினால் ஜந்மமென்பதற்கு த்ருஷ்டாந்தங் கூறுகின்றார். உலகத்தில் மாயாவியானவன் ஒரு க்ஷணத்தில் மாஞ்செடியை யுண்டாக்கி அதில் பூக்களை பலங்களை யுண்டாக்குகிறான் உடனே அது அழிந்துவிடுகின்றது. ஆகையா லவ்விடத்தில் வாஸ்தவமாய் ஒன்றும் பிறக்கவுமில்லை. அழியவுமில்லை மாயையினா லப்படி தோற்றியது. அதுபோலவே இந்த பேதப்பட்ட வஸ்துக்

களென்கிற விஷயங்களுக்கும், வாஸ்தவத்தில் ஜந்மம் முதலியவை யொன்றுமில்லை. ஆகையினாலெல்லாம் மாயையினாலென்றுணர்க.

௬௰. 𑌨𑌾𑌜𑍇𑌷𑍁𑌸𑌰𑍍𑌵𑌧𑌰𑍍𑌮𑍇𑌷𑍁𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑌾𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑌾𑌭𑌿𑌧𑌾 ।
𑌯𑌤𑍍𑌰𑌵𑌰𑍍𑌣𑌾𑌨𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇𑌵𑌿𑌵𑍇𑌕𑌸𑍍𑌤𑌤𑍍𑌰𑌨𑍋𑌚𑍍𑌯𑌤𑍇 ॥

౬౦. నాజేషుసర్వధర్మేషుశాశ్వతాశాశ్వతాభిధా।
యత్రవర్ణానవర్తంతేవివేకస్తత్రనోచ్యతే॥

ஸா०-ஹா. பரமார்த்த பூதர்களாய் நிர்விகாரிகளாய் நித்யர்களாயிருக்கிற ஆத்மஜ்ஞப்தி என்கிற ரஸமாத்திரஸ்வரூபர்களா யிருக்கிற ஜீவாத்மாக்களிடத்தில் நித்யாநித்ய விபாகமில்லை. பதங்களால் சொல்லப்படமாட்டார்கள். இது இப்படிப்பட்டதென்கிற வ்யவஹாரங் கிடையாது. "யதோவா சோநிவர்தந்தே" என்று வாக்கினால் சொல்லப் படமாட்டாதென்று சுருதியினால் வெளியிடப்பட்டதன்றோ.

௬௧. 𑌯𑌥𑌾𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑍇𑌦𑍍𑌵𑌯𑌾𑌭𑌾𑌸𑌂𑌚𑌿𑌤𑍍𑌤𑌂𑌚𑌲𑌤𑌿𑌮𑌾𑌯𑌯𑌾 ।
𑌤𑌥𑌾𑌜𑌾𑌗𑍍𑌰𑌦𑍍𑌦𑍍𑌵𑌯𑌾𑌭𑌾𑌸𑌂𑌚𑌿𑌤𑍍𑌤𑌂𑌚𑌲𑌤𑌿𑌮𑌾𑌯𑌯𑌾 ॥

௬௨. 𑌅𑌦𑍍𑌵𑌯𑌂𑌚𑌦𑍍𑌵𑌯𑌾𑌭𑌾𑌸𑌂𑌚𑌿𑌤𑍍𑌤𑌂𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑍇𑌨𑌸𑌂𑌶𑌯𑌃 ।
𑌅𑌦𑍍𑌵𑌯𑌂𑌚𑌦𑍍𑌵𑌯𑌾𑌭𑌾𑌸𑌸𑍍𑌤𑌥𑌾𑌜𑌾𑌗𑍍𑌰𑌨𑍍𑌨𑌸𑌂𑌶𑌯𑌃 ॥

౬౧. యథాస్వప్నేద్వయాభాసంచిత్తంచలతిమాయయా ।
తథాజాగ్రద్ద్వయాభాసంచిత్తంచలతిమాయయా॥

౬౨. అద్వయంచద్వయాభాసంచిత్తంస్వప్నేనసంశయః ।
అద్వయంచద్వయాభాసస్తథాజాగ్రన్నసంశయః॥

ஸா०-ஹா. விஞ்ஞாநமாத்திரரூபமாகிய இந்த ஆத்மஸ்வரூபத்தில் பரமார்த்தத்தில் வாகிந்திரியப்ரவ்ருத்தியில்லை. அதுப்ரமம் இதை யுணர்த்துவதற்கு இந்த சுலோகங் ளும் படிக்கப்பட்டன.

௬௩. 𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑌦𑍃𑌕𑍍𑌪𑍍𑌰𑌚𑌰𑌨𑍍𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑍇𑌦𑌿𑌕𑍍𑌷𑍁𑌵𑍈𑌦𑌶𑌸𑍁𑌸𑍍𑌥𑌿𑌤𑌾𑌨𑍍 ।
𑌅𑌣𑍍𑌡𑌜𑌾𑌨𑍍𑌸𑍍𑌵𑍇𑌦𑌜𑌾𑌨𑍍𑌵𑌾𑌪𑌿𑌜𑍀𑌵𑌾𑌨𑍍𑌪𑌶𑍍𑌯𑌤𑌿𑌯𑌾𑌨𑍍𑌸𑌦𑌾 ॥

௬௪. 𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑌦𑍃𑌕𑍍𑌚𑌿𑌤𑍍𑌤𑌦𑍃𑌶𑍍𑌯𑌾𑌸𑍍𑌤𑍇𑌨𑌵𑌿𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑍇𑌤𑌤𑌃𑌪𑍃𑌥𑌕𑍍 ।
𑌤𑌥𑌾𑌤𑌦𑍍𑌦𑍃𑌶𑍍𑌯𑌮𑍇𑌵𑍇𑌦𑌂𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑌦𑍃𑌕𑍍𑌚𑌿𑌤𑍍𑌤𑌮𑌿𑌷𑍍𑌯𑌤𑍇 ॥

౬౩. స్వప్నదృక్ప్రచరన్స్వప్నేదిక్షువైదశసుస్థితాన్।
అండజాన్స్వేదజాన్వాపిజీవాన్పశ్యతియాన్సదా॥

౬౪. స్వప్నదృక్చిత్తదృశ్యాస్తేనవిద్యంతేతతఃపృథక్ ।
తథాతద్దృశ్యమేవేదంస్వప్నదృక్చిత్తమిష్యతే॥

ஸா०-ஹா. இந்த ஜீவனானவன் ஸ்வப்நத்தில் அண்டஜம்ஸ் வேதஜம் என்று சொல்லப்படுகிற நாலுவிதங்களான எந்த ஜந்துக்களை எல்லாதிக்குக்களிலும் பார்க்கிறானோ, அவை அவனுடைய சித்தத்திற்குத் தோற்றுமவையே யன்றி வேறாயிருப்பவை யல்ல. இப்படியே ஸ்வப்நங்காண்கிறவனைவிட வேறு சித்தமென்பது மொன்றில்லை.

௬௫. 𑌚𑌰𑌞𑍍𑌜𑌾𑌗𑌰𑌿𑌤𑍇𑌜𑌾𑌗𑍍𑌰𑌦𑍍𑌦𑌿𑌕𑍍𑌷𑍁𑌵𑍈𑌦𑌶𑌸𑍁𑌸𑍍𑌥𑌿𑌤𑌾𑌨𑍍 ।
𑌅𑌣𑍍𑌡𑌜𑌾𑌨𑍍𑌸𑍍𑌵𑍇𑌦𑌜𑌾𑌨𑍍𑌵𑌾𑌪𑌿𑌜𑍀𑌵𑌾𑌨𑍍𑌪𑌶𑍍𑌯𑌤𑌿𑌯𑌾𑌨𑍍𑌸𑌦𑌾 ॥

௬௬. 𑌜𑌾𑌗𑍍𑌰𑌚𑍍𑌚𑌿𑌤𑍍𑌤𑍇𑌕𑍍𑌷𑌣𑍀𑌯𑌾𑌸𑍍𑌤𑍇 𑌨𑌵𑌿𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌤𑌤𑌃 𑌪𑍃𑌥𑌕𑍍 |
𑌤𑌥𑌾 𑌤𑌦𑍍𑌦𑍃𑌶𑍍𑌯𑌮𑍇𑌵𑍇𑌦𑌂 𑌜𑌾𑌗𑍍𑌰𑌤𑌶𑍍𑌚𑌿𑌤𑍍𑌤𑌮𑌿𑌷𑍍𑌯𑌤𑍇 ||

౬౫. చరన్జాగరితేజాగ్రద్దిక్షువైదశసుస్థితాన్ ।
అండజాన్ స్వేదజాన్వాపిజీవాన్పశ్యతియాన్సదా ॥

౬౬. జాగ్రచ్చిత్తేక్షణీయాస్తేనవిద్యంతేతతఃపృథక్ ।
తథాతద్దృశ్యమేవేదంజాగ్రతశ్చిత్తమిష్యతే ॥

ஸ0-ஹா. இப்படியே ஜாகரதசையிலும் ஜீவனால் க்ரஹிக்கப்படுகிற வஸ்துக்கள் அப்போதுண்டாயிருக்கிற சித்தத்தின் விகாரங்களேயாம். அந்த சித்தமும் அந்த ஜீவனேயாம். மற்றவை முன்போலவே அறியலாம்.

௬௭. 𑌉𑌭𑍇𑌹𑍍𑌯𑌨𑍍𑌯𑍋𑌨𑍍𑌯𑌦𑍃𑌶𑍍𑌯𑍇𑌤𑍇 𑌕𑌿𑌂𑌤𑌦𑌸𑍍𑌤𑍀𑌤𑌿 𑌚𑍋𑌚𑍍𑌯𑌤𑍇 |
𑌲𑌕𑍍𑌷𑌣𑌾𑌶𑍂𑌨𑍍𑌯𑌮𑍁𑌭𑌯𑌂 𑌤𑌨𑍍𑌮𑌤𑍇𑌨𑍈𑌵 𑌗𑍃𑌹𑍍𑌯𑌤𑍇 ||

౬౭. ఉభేహ్యన్యోన్యదృశ్యేతేకింతదస్తీతిచోచ్యతే ।
లక్షణాశూన్యముభయంతన్మతేనైవగృహ్యతే ॥

ஸ0-ஹா. மநஸ்ஸும் மநஸ்ஸினால் காணப்படுகிற வஸ்துக்களும், ஒன்றுக்கொன்று தோற்றுகின்றன. ஜீவாத்மாவாகிய விஷயத்தை சித்தமானது வேண்டுகின்றது. ஆகையால் சித்தமாவது விஷயங்களாவது வாஸ்தவத்திலில்லை. ஸ்வப்நத்தில் யானை முதலிய வஸ்துக்களும், சித்தமும் பொய்யேயன்றோ. அதுபோலவே ஜாகரதசையிலும், பரமார்த்த ஸத்ஸ்வரூபத்தைவிட வேறொன்றுமில்லை என்று, விவேகிகள் கூறுகின்றார்கள். இவ்விரண்டும் வாஸ்தவத்தில் இல்லை என்பது, உண்டென்பதில் ப்ரமாணமில்லையாகையால் த்வைதிகளும் ஒப்புக்கொள்ளவேணும். வஸ்துவைவிட்டு ஜ்ஞாநந்தோற்றுவதில்லை. ஜ்ஞாநத்தைவிட்டு வஸ்துதோற்றுவதில்லை. ஆகையால் இவ்விரண்டையும் தனியே ப்ரமாணப்ரமேயங்களாக கல்பிப்பதற்குந்யாய முண்டாகாது. ஆகையாலிந்த சித்தமும் விஷயங்களும் கல்பிக்கப்பட்டவையேயாம்.

௬௮. 𑌯𑌥𑌾𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑌮𑌯𑍋𑌜𑍀𑌵𑍋𑌜𑌾𑌯𑌤𑍇 𑌮𑍍𑌰𑌿𑌯𑌤𑍇𑌪𑌿𑌚 |
𑌤𑌥𑌾𑌜𑍀𑌵𑌾𑌅𑌮𑍀𑌸𑌰𑍍𑌵𑍇 𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 𑌨𑌭𑌵𑌨𑍍𑌤𑌿𑌚 ||

௬௯. 𑌯𑌥𑌾𑌮𑌾𑌯𑌾𑌮𑌯𑍋𑌜𑍀𑌵𑍋𑌜𑌾𑌯𑌤𑍇 𑌮𑍍𑌰𑌿𑌯𑌤𑍇𑌪𑌿𑌚 |
𑌤𑌥𑌾𑌜𑍀𑌵𑌾𑌅𑌮𑍀𑌸𑌰𑍍𑌵𑍇 𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 𑌨𑌭𑌵𑌨𑍍𑌤𑌿𑌚 ||

௭௦. 𑌯𑌥𑌾 𑌨𑌿𑌰𑍍𑌮𑌿𑌤𑌕𑍋𑌜𑍀𑌵𑍋𑌜𑌾𑌯𑌤𑍇 𑌮𑍍𑌰𑌿𑌯𑌤𑍇𑌪𑌿𑌵𑌾 |
𑌤𑌥𑌾𑌜𑍀𑌵𑌾𑌅𑌮𑍀𑌸𑌰𑍍𑌵𑍇 𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 𑌨𑌭𑌵𑌨𑍍𑌤𑌿𑌚 ||

౬౮. యథాస్వప్నమయోజీవోజాయతేమ్రియతేపిచ ।
తథాజీవాఅమీసర్వేభవంతినభవంతిచ ॥

౬౯. యథామాయామయోజీవోజాయతేమ్రియతేపిచ ।
తథాజీవాఅమీసర్వేభవంతినభవంతిచ ॥

౭౦. యథానిర్మితకోజీవోజాయతేమ్రియతేపివా ।
తథాజీవాఅమీసర్వేభవంతినభవంతిచ ॥

ஸ0-ஹா. ஸமஸ்த வஸ்துக்களையும் பொய்யென்றால் மநுஷ்யன் பிறப்பதும் சாவதும் ப்ரத்யக்ஷமா யிருக்கின்ற தாகையா லிதை யொருவரு மொப்பமாட்டார்,

என்று ஆக்ஷேபிக்கிறவனுக்கு ஸமாதாநமாக இந்த மூன்று சுலோகங்கள் கூறப்பட்டன. இவற்றின் கருத்து ஸப்நத்திலும் இந்திரஜாலம் முதலிய மாயையிலும் மந்திரம் ஒஷதி இவற்றின்வ்யாபாரத்திலும் அண்டஜம், ஸ்வேதஜம் ஜராயுஜம்முதலிய அனேகஜீவராசிகளுந்தோற்றவில்லையோ; ஆயினும் அவை பொய்யேயன்றோ. அப்படியே உலகத்தில் பிறப்பது சாவது எல்லாம்பொய். ஆகையால் ஸம்வித்தென்கிற ஜ்ஞாநஸ்வரூபமாகிய ப்ரம்மமே மெய்யானது என்பதாம்.

௭௧. நகஶ்சிஜ்ஜாயதே ஜீவஸ்ஸம்பவோ(அ)ஸ்ய நவித்யதே ।
ஏதத்ததுத்தமம் ஸத்யம் யத்ர கிஞ்சிந்ந ஜாயதே ॥

౭౧. నకించిజ్జాయతేజీవస్సమ్భవోఽస్యనవిద్యతే ।
ఏతత్తముత్తమంసత్యంయత్రకించిన్నజాయతే॥

ஸா௦-ஹா. வ்யவஹார ஸத்யமாகிய ஜீவாதிகளுக்குப் பிறப்புமுதலியவை ஸ்வப்நம் மாயை முதலியவற்றில் தோற்றுகிற ஜீவர்களுக்குப் போலவென்று ரூபித்தோம். பரமார்த்தத்திற்கு பிறப்புமுதலியவை யில்லை. மற்றவிசேஷங்கள் முன்சொன்னோம்.

௭௨. சித்தஸ்பந்திதமேவேதம் க்³ராஹ்யக்³ராஹகவத்³த்³வயம் ।
சித்தம் நிர்விஷயம் நித்யமஸங்க³ம் தேந கீர்த்திதம் ॥

౭౨. చిత్తస్పన్దితమేవేదంగ్రాహ్యగ్రాహకవద్ద్వయమ్।
చిత్తన్నిర్విషయన్నిత్యమసఙ్గన్తేనకీర్తితమ్॥

ஸா௦-ஹா. த்வைதமெல்லாஞ் சித்தத்தின் தோஷத்தால் வந்தது. வாஸ்தவத்தில் சித்தமென்பது ஆத்மஸ்வரூபமே யாகையாலதற்கு தோஷமில்லை. தோஷமாவது விஷயஸங்கம். அதாவது ஆத்மாவுக்கு இல்லையென்று சுருதியினால் வெளியாகின்றது.

௭௩. யோ(அ)ஸ்தி கல்பிதஸம்வ்ருத்யா பரமார்த்தே²ந நாஸ்த்யஸௌ ।
பரதந்த்ராபி⁴ஸம்வ்ருத்யா ஸ்யாந்நாஸ்தி பரமார்த்த²த꞉ ॥

౭౩. యోఽస్తికల్పితసంవృత్యాపరమార్థేననాస్త్యసౌ ।
పరతంత్రాభిసంవృత్యాస్యాన్నాస్తిపరమార్థతః॥

ஸா௦-ஹா. வைதிகரும் சாஸ்திரம் ஆசாரியன் சிஷன் எனப் பலவிஷயங்களை யொப்புக்கொண் டிருக்கின்றார் ஆனதால் நிர்விஷயமென்று கூறுவது தகாதென்றால் பரமார்த்தஜ்ஞாநத்திற்கு உபாயமாக அவை கல்பிக்கப்பட்டவையென்று முன்சொல்லியிருக்கிறோம். இதரமதத்தில் ஒப்புக்கொள்ளுகிற வஸ்துக்கள் அஜ்ஞாந கல்பிதங்களென்று ஸ்பஷ்டம். ஆகையால் நிர்விஷயமாவதில் விரோதமில்லை.

௭௪. அஜ꞉ கல்பிதஸம்வ்ருத்யா பரமார்த்தே²ந நாப்யஜ꞉ ।
பரதந்த்ராபி⁴நிஷ்பத்த்யா ஸம்வ்ருத்யா ஜாயதே து ஸ꞉ ॥

౭౪. అజఃకల్పితసంవృత్యాపరమార్థేననాప్యజః।
పరతంత్రాభినిష్పత్త్యాసంవృత్యాజాయతేతుసః॥

ஸா௦ ஹா. வேத சம்மதமாகிய சிஷ்யாசார்யபேதம் முதலியவை யெல்லாம் பொய்யாயின், ஆத்ம ஸ்வரூபத்திற்கு நித்யத்வம் முதலியவையும் சாஸ்திரத்தாலே யோதப்படுகின்றமையால் அவையும் பொய்யாகையால் ஆத்மஸ்வரூபமஜமானது என்பது முதலிய கீழ்ச்சொல்லிய ஸ்வரூபங்களும் பொய்யாகவேண்டியதே யன்றோ, என்கிற ஆக்ஷேபத்திற்கு சமாதாநமிந்த சுலோகம். நாம் கீழ்ச்சொல்லியது அவாஸ்தவமே ஜக்

மபரிணாமாதி கல்பனை இல்லையென்பதற்கு கல்பிக்கப்பட்டவையே அவையும் ஸ்வரூ
மே ஸத்யமாகின்றது.

௭௫. 𑌅𑌭𑍂𑌤𑌾𑌭𑌿𑌨𑌿𑌵𑍇𑌶𑍋𑌽𑌸𑍍𑌤𑌿 𑌦𑍍𑌵𑌯𑌂 𑌤𑌤𑍍𑌰 𑌨 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 |
𑌦𑍍𑌵𑌯𑌾𑌭𑌾𑌵𑌂 𑌸 𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌵𑍈𑌵 𑌨𑌿𑌰𑍍𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑍋 𑌨 𑌜𑌾𑌯𑌤𑍇 ||

౭౫. అభూతాభినివేశోఽస్తి ద్వయం తత్ర న విద్యతే ।
ద్వయాభావం స బుద్ధ్వైవ నిర్నిమిత్తో న జాయతే ॥

௭௫-ஹா. த்வைத விஷயத்தில் ப்ரமத்தாலாக்ரஹப்படுவதொழிய வாஸ்தவத்தில் த்வைதமில்லை. ஆகையாலிது ப்ராந்தியென்று அறிந்தபோதே காரணமில்லாமையால்

௭௬. 𑌯𑌦𑌾 𑌨 𑌲𑌭𑌤𑍇 𑌹𑍇𑌤𑍂𑌨𑍁𑌤𑍍𑌤𑌮𑌾𑌧𑌮𑌮𑌧𑍍𑌯𑌮𑌾𑌨𑍍 |
𑌤𑌦𑌾 𑌨 𑌜𑌾𑌯𑌤𑍇 𑌚𑌿𑌤𑍍𑌤𑌂 𑌹𑍇𑌤𑍍𑌵𑌭𑌾𑌵𑍇 𑌫𑌲𑌂 𑌕𑍁𑌤𑌃 ||

౭౬. యదా న లభతే హేతూనుత్తమాధమమధ్యమాన్ ।
తదా న జాయతే చిత్తం హేత్వభావే ఫలం కుతః ॥

௭௬-ஹா. அந்தந்தஜாதி ஆச்ரமங்களுக்கு, விதித்த தருமங்களை அந்தந்த தருமங்களுக்கு பலமாக விதித்திருக்கிறபலனை விரும்பாமல் அதருமங்கள் கலவாமல், செய்வதினால் அடையக்கூடிய தேவத்வமுதலிய உத்தம பலங்களையும் அதருமங்கலந்த தருமத்தாலடையக்கூடிய மநுஷ்யத்வ முதலிய மத்யமபலன்களையும் அதருமங்களையே செய்வதினாலடையக்கூடிய திர்யக்த்வமுதலிய அதம பலன்களையும், அவித்யையினால் கல்பிக்கப்பட்டவை யென் றுணர்ந்தவனுக்கு அந்தந்த கதிகளுக்குக் காரணங்களான அவித்யை ஸம்பந்தப்பட்ட கருமம் தருமம் முதலியவை நீங்கியபடியால் அவை யுண்டாகிறதில்லை. ஆத்ம தத்வமொன்றே கல்பனையில்லாததென் றுணர்ந்தவன் துன்பங்களையடைவனோ. அறியாதார் ஆகாயத்தில் அழுக்கு முதலியவற்றை சிறுவர் காண்பதுபோல் ப்ரம்மத்தில் விகாரங்களைக் காண்கிறார்கள். ஜ்ஞாநிகளுக்கு அந்த காரணங்கள் ழிகின்றமையால் அவையுண்டாகா. காரணமில்லாது காரியம் பிறக்குமோ. விதையில்லாமல் செடி முளைக்குமோ. ஆகையா லந்த சித்த விகாரங்கள் அப்போது பிறப்பதில்லை.

௭௭. 𑌅𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑌸𑍍𑌯 𑌚𑌿𑌤𑍍𑌤𑌸𑍍𑌯 𑌯𑌾𑌨𑍁𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑌿𑌃 𑌸𑌮𑌾𑌦𑍍𑌵𑌯𑌾 |
𑌅𑌜𑌾𑌤𑌸𑍍𑌯𑍈𑌵 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌚𑌿𑌤𑍍𑌤𑌦𑍃𑌶𑍍𑌯𑌂 𑌹𑌿 𑌤𑌦𑍍𑌯𑌤𑌃 ||

౭౭. అనిమిత్తస్య చిత్తస్య యానుత్పత్తిస్సమాద్వయా ।
అజాతస్యైవ సర్వస్య చిత్తదృశ్యం హి తద్యతః ॥

௭௭-ஹா. இந்த சித்தமாவது ஆத்மஸ்வரூபஸ்புரணமாகையால பரமம நீங்கிய போது ஸ்வதஸ் ஸித்தமாகின்றது. ஆகையால் எப்போதும் அத்வயமாய், நிர்விசேஷமாயிருக்கின்றது.

பதாந்வயார்த்தபேதங்கள்.

இந்த சுலோகத்தில் சொல்லப்பட்ட யுக்திகள் இந்தஸந்தர்பத்திற்காக இங்கும் சொல்லப்பட்டவை யாகையால், இங்கு விசேஷமாய் விஸ்தரிக்கவில்லை.

௭௮. 𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌵𑌾𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑌤𑌾𑌂 𑌸𑌤𑍍𑌯𑌾𑌂 𑌹𑍇𑌤𑍁𑌂 𑌪𑍃𑌥𑌗𑌨𑌾𑌪𑍍𑌨𑍁𑌵𑌨𑍍 |
𑌵𑍀𑌤𑌶𑍋𑌕𑌂 𑌤𑌥𑌾 𑌕𑌾𑌮𑌮𑌭𑌯𑌂 𑌪𑌦𑌮𑌶𑍍𑌨𑍁𑌤𑍇 ||

౭౮. బుద్ధ్వానిమిత్తతాంసత్యాంహేతుంపృథగనాప్నువన్।
వీతశోకంతదాకామమభయమ్పదమశ్నుతే॥

ஸ௦-ஹா. ஆக, கீழ்ச்சொல்லிய காரணங்களால் காரிய காரண பாவங்களில் பரமார்த்தமில்லை யென்று ஸித்தித்தமையால் நிமித்தமில்லை யென்பது ஸத்யமென் றுணர்ந்து ஜந்மகாரணங்களான தருமா தருமங்களைவிட்டு, ஆசாபாசம் முதலிய அநர்த்தங்களி லகப்படாமலிருப்பவன், அவித்யா ஸம்பந்தங் கழிந்து ஜந்மமில்லாதவனாகிறான்.

௭௯. 𑌅𑌭𑍂𑌤𑌾𑌭𑌿𑌨𑌿𑌵𑍇𑌶𑌾𑌦𑍍𑌧𑌿𑌸𑌦𑍃𑌶𑍇𑌤𑌤𑍍𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 ।
𑌵𑌸𑍍𑌤𑍍𑌵𑌭𑌾𑌵𑌂𑌸𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌵𑍈𑌵𑌨𑌿𑌸𑍍𑌸𑌙𑍍𑌗𑌂𑌵𑌿𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 ॥

౭౯. అభూతాభినివేశాద్ధిసదృశ్యేతత్ప్రవర్తతే।
వస్త్వభావంసబుద్ధ్వైవనిస్సఙ్గంవినివర్తతే॥

ஸ௦-ஹா. இல்லாதவஸ்துவி லிருப்பதாக ப்ரமித்திருந்தபோது அந்தப்ரமத்திற்குத் தக்கபடி அந்த சித்தமானது ப்ரவர்திக்கின்றது. வாஸ்தவத்தில் வஸ்துக்களில்லை என்றறிந்தபோது ஸங்கம்விட்டு அதில் நின்றும் நிவ்ருத்திக்கின்றது.

௮௦. 𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌸𑍍𑌯𑌾𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌸𑍍𑌯𑌨𑌿𑌶𑍍𑌚𑌲𑌾𑌹𑌿𑌤𑌦𑌾𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌃 ।
𑌵𑌿𑌷𑌯𑌸𑍍𑌸𑌹𑌿𑌬𑍁𑌦𑍍𑌧𑌾𑌨𑌾𑌂𑌤𑌤𑍍𑌸𑌾𑌮𑍍𑌯𑌮𑌜𑌮𑌦𑍍𑌵𑌯𑌮𑍍 ॥

౮౦. నివృత్తస్యాప్రవృత్తస్యనిశ్చలాహితదాస్థితిః।
విషయస్సహిబుద్ధానాంతత్సామ్యమజమద్వయమ్॥

ஸ௦-ஹா. இவ்வாறு வஸ்து சூந்யத்தை யறிந்து இதரவிஷயங்களில் செல்லாமல் எக்காலத்தில் நிச்சலமாய் மநஸ்ஸு நிற்கின்றதோ. அக்காலத்தில் ஸ்வரூபத்தில் ப்ரவேசித்ததாகின்றது.

௮௧. 𑌅𑌜𑌮𑌨𑌿𑌦𑍍𑌰𑌮𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑌂𑌪𑍍𑌰𑌭𑌾𑌤𑌂𑌭𑌵𑌤𑌿𑌸𑍍𑌵𑌯𑌮𑍍 ।
𑌸𑌕𑍃𑌦𑍍𑌵𑌿𑌭𑌾𑌤𑍋𑌹𑍍𑌯𑍇𑌵𑍈𑌷𑌧𑌰𑍍𑌮𑍋𑌧𑌾𑌤𑍁𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌤𑌃 ॥

౮౧. అజమనిద్రమస్వప్నమ్ప్రభాతమ్భవతిస్వయమ్।
సకృద్విభాతోహ్యేవైషధర్మోధాతుస్వభావతః॥

ஸ௦-ஹா. உலகத்தில் வஸ்துக்கள் ப்ரகாசிக்கும்போது ஸூரியன் விளக்குமுதலியவற்றின் ஸஹாயம் வேண்டப்படுகின்றது. அப்படியன்றி ஆத்மஸ்வரூபம் ஒருஸஹாயத்தையும் வேண்டாது தானேப்ரகாசிக்கும். எப்போது மிவ்வாறேப்ரகாசிக்கின்றது. இது பரமார்த்தஸ்வரூபமானது.

௮௨. 𑌸𑍁𑌖𑌮𑌾𑌵𑍍𑌰𑌿𑌯𑌤𑍇𑌨𑌿𑌤𑍍𑌯𑌂𑌦𑍁𑌃𑌖𑌂𑌵𑌿𑌵𑍍𑌰𑌿𑌯𑌤𑍇𑌸𑌦𑌾 ।
𑌯𑌸𑍍𑌯𑌕𑌸𑍍𑌯𑌚𑌧𑌰𑍍𑌮𑌸𑍍𑌯𑌗𑍍𑌰𑌹𑍇𑌣𑌭𑌗𑌵𑌾𑌨𑌸𑍌 ॥

౮౨. సుఖమావ్రియతేనిత్యందుఃఖంవివ్రియతేసదా।
యస్యకస్యచధర్మస్యగ్రహేణభగవానసౌ॥

ஸ௦-ஹா. இவ்வாறு பரமார்த்ததத்வமாகிய ப்ரம்மஸ்வரூபாபிந்நமாகிய ஆத்மஸ்வரூபமானது பலவிதங்களா லுபதேசிக்கப்படாமலும் இதை லோகத்தா ரங்கீகரியாததற்குக்காரணங் கூறுகின்றார். இந்தத்வைத ப்ரமத்தால் ஸுகஸ்வரூபம் மறைக்கப்படுகின்ற

மையாலும் இந்த பரமார்த்த ஸ்வரூபத்தை யறிவது வருத்தமாகையாலும், ஆசாரியர்களாலும் பல வேதாந்தங்களாலும் முறையிடப்பட்டாலும், இதில் சிரத்தை யுண்டாகிறதில்லை. இவ்வாறு மாயாவியான ஈச்வரன் செய்விக்கிறான்.

அங. 𑌅𑌸𑍍𑌤𑌿 𑌨𑌾𑌸𑍍𑌤𑍍𑌯𑌸𑍍𑌤𑌿 𑌨𑌾𑌸𑍍𑌤𑍀𑌤𑌿 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 𑌨𑌾𑌸𑍍𑌤𑍀𑌤𑌿 𑌵𑌾 𑌪𑍁𑌨𑌃 ।
𑌚𑌲𑌸𑍍𑌥𑌿𑌰𑍋𑌭𑌯𑌾𑌭𑌾𑌵𑍈𑌰𑌾𑌵𑍃𑌣𑍋𑌤𑍍𑌯𑍇𑌵 𑌬𑌾𑌲𑌿𑌶𑌃 ॥

౮౩. అస్తినాస్త్యస్తినాస్తీతినాస్తినాస్తీతివాపునః ।
చలస్థిరోభయాభావైరావృణోత్యేవబాలిశః॥

ஸ0-ஹா. இந்தகாரணத்தாலும் பரமார்த்த நிச்சய மெளிதிலுண்டாகிறதில்லை தார்க்கிகர் தேஹத்தைவிட வேறாய்ப்ரமாதாவாய் ஓராத்மா இருக்கிறானென்று கூறுகின்றனர். க்ஷணிகவாதிகளான பௌத்தர்கள் தேஹத்தைக்காட்டில் வேறாயினும் க்ஷணிகமாகிய புத்தியைவிட வேறான ஆத்மாவில்லை யென்கிறார்கள். திகம்பரமவாதிகள், ஆத்மா இல்லையென்பதுதான் நிச்சயமென்றுரைக்கின்றார்கள், இவ்வாறு பண்டிதர்களுக்கெல்லாம் அபிநிவேசத்தால் தத்வம்தெரியாதபோது மூடஜனங்களுக்கு தத்வஜ்ஞானம் பிறவாமை யாச்சரியமன்று.

அச. 𑌕𑍋𑌟𑍍𑌯𑌶𑍍𑌚𑌤𑌸𑍍𑌰 𑌏𑌤𑌾𑌸𑍍𑌤𑍁 𑌗𑍍𑌰𑌹𑍈𑌰𑍍𑌯𑌾𑌸𑌾𑌂 𑌸𑌦𑌾𑌵𑍃𑌤𑌃 ।
𑌭𑌗𑌵𑌾𑌨𑌾𑌭𑌿𑌰𑌸𑍍𑌪𑍃𑌷𑍍𑌟𑍋 𑌯𑍇𑌨 𑌦𑍃𑌷𑍍𑌟𑌃 𑌸 𑌸𑌰𑍍𑌵𑌦𑍃𑌕𑍍 ॥

౮౪. కోట్యశ్చతస్రఏతాస్తుగ్రహైర్యాసాంసదావృతః।
భగవానాభిరస్పృష్టోయేనదృష్టస్ససర్వదృక్॥

ஸ0-ஹா. இவ்வாறு ஆத்மஸ்வரூபத்தை யாவரித்துக்கொண்டு தத்வநிச்சயம் பிறவாமலிருக்கும்படி யெப்போது மிருக்கிற இந்த அஸ்தி முதலிய நாலுகோடிகளிலிருந்து விடப்பட்டு சுத்தமான ஆத்மஸ்வரூபத்தை யறிந்து தெளிந்தவன் ஸமஸ்தத்தையு மறிந்தவனாகிறான்.

அரு. 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 𑌸𑌰𑍍𑌵𑌜𑍍𑌞𑌤𑌾𑌂 𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌾𑌂 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑍍𑌯𑌂 𑌪𑌦𑌮𑌦𑍍𑌵𑌯𑌮𑍍 ।
𑌅𑌨𑌾𑌪𑌨𑍍𑌨𑌾𑌦𑌿𑌮𑌧𑍍𑌯𑌾𑌨𑍍𑌤𑌂 𑌕𑌿𑌮𑌤𑌃 𑌪𑌰𑌮𑍀𑌹𑌤𑍇 ॥

౮౫. ప్రాప్యసర్వజ్ఞతాంకృత్స్నాంబ్రాహ్మణ్యమ్పదమద్వయమ్ ।
అనాపన్నాదిమధ్యాన్తంకిమతఃపరమీహతే॥

ஸ0-ஹா. இப்படி ஸமஸ்த ஸ்வரூபத்திலு முத்க்ருஷ்டமாகிய ஸர்வஜ்ஞத்வமென்கிற ச்ரேயஸ்ஸையடைந்து, அத்வைதரூபமாகிய ப்ராம்மண்ய மென்கிற ஸ்தாநத்தைப் பெற்று, ஆதிமத்யாந்த மில்லாத ரூபமாகி, பின்பொருதுக்கத்தையு மடைகிறதில்லை.

அசா. 𑌵𑌿𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌂 𑌵𑌿𑌨𑌯𑍋 𑌹𑍍𑌯𑍇𑌷 𑌶𑌮𑌃 𑌪𑍍𑌰𑌾𑌕𑍃𑌤 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 ।
𑌦𑌮𑌃 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌦𑌾𑌨𑍍𑌤𑌤𑍍𑌵𑌾𑌦𑍇𑌵𑌂 𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑍍 𑌶𑌮𑌂 𑌵𑍍𑌰𑌜𑍇𑌤𑍍 ॥

౮౬. విప్రాణాంవినయోహ్యేషశమఃప్రాకృతఉచ్యతే।
దమఃప్రకృతిదాంతత్వాదేవంవిద్వాన్శమంవ్రజేత్॥

ஸ0-ஹா. விப்ரர்களுக்கு விநயமும் சமமும் தமமும், ஸ்வபாவமானது; இந்த விநயம் முதலியவற்றின் ஸ்வரூபம் ப்ரம்மரூபமேயாம்.

௮௭. ஸவஸ்துஸோபலம்பஞ்சத்வயம்லௌகிகமிஷ்யதே।
அவஸ்துஸோபலம்பஞ்சஶுத்தம்லௌகிகமிஷ்யதே॥

౮౭. సవస్తుసోపలమ్భఞ్చద్వయంలౌకికమిష్యతే ।
అవస్తుసోపలమ్భఞ్చశుద్ధంలౌకికమిష్యతే॥

ஸ0-ஹா. கீழ்ச்சொல்லியபடி ஒன்றுக்கொன்று விருத்தமாகையாலும், ராகத்வேஷங்களுக்குக் காரணங்களாகின்றமையாலும், ஸம்ஸாரத்தை வ்ருத்திசெய்யுமவையாகையாலும் இவை பொய்யானவையென்று யுக்திகளாள் நிரூபித்துக்காட்டி, முன்காட்டிய நான்குகோடிகளும் நீங்கியதாய், ராகத்வஷ முதலியவை யில்லாததாய், ஸ்வபாவமாய் சாந்த ரூபத்தையுடையதாயிருக்கிற அத்வைத மதமேசுத்தமான மதமென்று ஸாதித்தார். இனி அத்வைத மதபரிஷ்காரத்தைக் காட்டத்தடங்குகின்றார். வஸ்துக்களோடு கூடியதும், அறிவோடு கூடியதும், க்ராஹ்ய க்ராகக பேதமுடையதும், லோகஸித்தமானதுமாகிய இந்த அவஸ்தையை ஜாகரிதமென்று ஒப்புக்கொள்ளுகிறோம். ஸமஸ்தவ்யவஹாரங்களும் இந்த அவஸ்தையிலுண்டாகின்றன. இப்படி வேதாந்தத்திற்கு ஸம்மதமான பொருள். வஸ்து சூந்யமாய், வஸ்துவில்லாவிடினும், வஸ்துஜ்ஞாநத்தையுடையதாய், சுத்தமாய், ஸமஸ்த ப்ராணிகளுக்கும் ஸாதாரணமாயுமிருப்பது ஸ்வப்நமென்று ஒப்புக்கொள்ளப்படுகிறது.

௮௮. அவஸ்த்வநுபலம்பஞ்சலோகோத்தரமிதிஸ்ம்ருதம்।
ஜ்ஞாநம்ஜ்ஞேயஞ்சவிஜ்ஞேயம்ஸதாபுத்தை꞉ப்ரகீர்திதம்॥

౮౮. అవస్త్వనుపలమ్భఞ్చలోకోత్తరమితిస్మృతమ్ ।
జ్ఞానంజ్ఞేయఞ్చవిజ్ఞేయంసదాబుద్ధైఃప్రకీర్తితమ్॥

ஸ0-ஹா. வஸ்து சூந்யமாய் ஜ்ஞாந சூந்யமாய், க்ராஹ்யம் க்ராகம் என்கிற லோகநீதி நீங்கியதாயிருக்கிற இந்த அவஸ்தை ஸுஷுப்தி என்று சொல்லப்படுகிறது. ஆக, கீழ்ச்சொல்லிய மூன்றவஸ்தைகளுக்குள் ஜ்ஞாநம் ஜ்ஞேயம், என்கிற பேதமெல்லாமடங்கியிருக்கின்றது. பரமார்த்த விஜ்ஞாநஸ்வரூபம் துரீயமெனப்படுகிறது. இப்படி ப்ரம்மவித்துக்கள் கண்டறிந்து சொல்லுகிறார்கள்.

௮௯. ஜ்ஞாநேசத்ரிவிதேஜ்ஞேயேக்ரமேணவிதிதேஸ்வயம்।
ஸர்வஜ்ஞதாஹிஸர்வத்ரபவதீஹமஹாதிய꞉॥

౮౯. జ్ఞానేచత్రివిధేజ్ఞేయేక్రమేణవిదితేస్వయమ్ ।
సర్వజ్ఞతాహిసర్వత్రభవతీహమహాధియః॥

ஸ0-ஹா. இங்ஙனம் ஜ்ஞாநமும் மூன்றுவிதமான ஜ்ஞேயங்களும், க்ரமமாக அறியப்பட்டால் அந்த மஹா புத்திமானுக்கு ஸர்வஸ்வரூபஜ்ஞாநரூப முண்டாகின்றது. அதற்கு எக்காலத்திலு மெந்த தேசத்திலு மழிவில்லை. இந்தப்படி ஸ்தாநத்ரயத்திலுமில்லாத பரமார்த்த துரீயஸ்வரூபமறியப்பட்டால் தத்வஜ்ஞாநமுண்டாகின்றது.

௯௦. ஹேயஜ்ஞேயாப்யபாக்யாநிவிஜ்ஞேயாந்யக்ரயாணத꞉।
தேஷாமந்யத்ரவிஜ்ஞேயாதுபலம்பஸ்த்ரிஷுஸ்ம்ருத꞉॥

౯౦. హేయజ్ఞేయాప్యపాక్యానివిజ్ఞేయాన్యగ్రయాణతః॥
తేషామన్యత్రవిజ్ఞేయాదుపలమ్భస్త్రిషుస్మృతః॥

ஸ0-ஹா. கீழ் லௌகிகங்களான வஸ்துக்களையும் க்ரமமாக அறியவேண்டுமென்று சொல்லியதால் அவையும் மெய்யேயென்று சங்கைப்படவேண்டாமென்று கூறுகின்றார். நாம் கீழ்ச்சொல்லிய மூன்றவஸ்தைகளும், ஹேயங்களென்பதற்காக அதை யறியும்படி சொன்னோம்; அறியத்தக்கது முன்சொன்ன நாலுகொடிகளும் நீங்கிய பரமார்த்த தத்வமேயாம். ஈஷணத்ரயங்களையும் விட்டவனால், பாண்டித்யம் பால்யம் மௌநமென்கிற ஸாதநங்களடையத்தக்கவை. ராகத்வேஷ முதலியவை பரிபக்வ தசையையடையும்படி செய்யத்தக்கவை. இந்த விபாகஜ்ஞாநத்திற்காக ஸந்யாஸியினால் எல்லாமறியவேண்டியவையாயின. முதலில் பரமார்த்த ஸத்ய ஸ்வரூபமே அறியத்தக்கது.

பதாந்வயார்த்தபேதங்கள்.

பாண்டித்யமாவது வேதாந்தங்களின் கருத்தை நன்குணர்ந்திருப்பது. அதாவது அத்வைத வஸ்து விசாரத்தால் பிறந்த ஜ்ஞாந சாதுர்யமே, அதுச்ரவணத்தாலுண்டாகின்றது. பால்யமாவது அஹங்காரம் மதம் முதலிய துர்க்குணங்களில்லாதிருப்பது. மௌநமாவதுதான் வேதாந்தங்களில் ஆசாரியனிடத்தில்கேட்ட அத்வைதத்தை யுக்திகளைக்கொண்டு சிந்திப்பது. மற்றவை முன்சொல்லப்பட்டபடி யுணர்க. இது ம்ரம்மவித்துக்கள் மதமென்றும் அவித்யையினால் இவையெல்லாம் தோற்றுமென்றும் முன்சொன்னபடி ரூபிக்கப்படுகிறது.

௯௧. 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑍍𑌯𑌾𑌕𑌾𑌶𑌵𑌜𑍍𑌜𑍍𑌞𑍇𑌯𑌾𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑍇𑌧𑌰𑍍𑌮𑌾𑌅𑌨𑌾𑌦𑌯𑌃।
𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇𑌨𑌹𑌿𑌨𑌾𑌨𑌾𑌤𑍍𑌵𑌂𑌤𑍇𑌷𑌾𑌂𑌕𑍍𑌵𑌚𑌨𑌕𑌿𑌞𑍍𑌚𑌨॥

౯౧. ప్రకృత్యాకాశవజ్జ్ఞేయాస్సర్వేధర్మాఅనాదయః ।
విద్యతేనహినానాత్వం తేషాంక్వచనకిఞ్చన॥

ஸ0-ஹா. பரமார்த்த ஸ்வரூபத்தை யாலோசித்துப் பார்க்கும்போது இந்த ஜீவாத்மாக்கள் ஸ்வபாவத்தால் ஆகாயம்போல ஸூக்ஷ்ம ரூபமுடையவர்கள். தோஷமில்லாதவர்கள், எங்கும் நிறைந்தவர்கள். ஆதியில்லாதவர்கள். இவ்வாறு முமுக்ஷுக்கள், ஆத்மஸ்வரூபத்தை யறியவேணும். எப்போதும் அவர்களுக்கு எவ்விதத்திலும் பேதமில்லை. இங்கு நாம் ஆத்மாக்களென்று பன்மையாற் சொல்லியது கல்பித பேதத்தை யநுசரித்தென்றறிக.

௯௨. 𑌆𑌦𑌿𑌬𑍁𑌦𑍍𑌧𑌾𑌃𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑍍𑌯𑍈𑌵𑌸𑌰𑍍𑌵𑍇𑌧𑌰𑍍𑌮𑌾𑌃𑌸𑍁𑌨𑌿𑌶𑍍𑌚𑌿𑌤𑌾𑌃।
𑌯𑌸𑍍𑌯𑍈𑌵𑌂𑌭𑌵𑌤𑌿𑌕𑍍𑌷𑌾𑌨𑍍𑌤𑌿𑌸𑍍𑌸𑍋𑌽𑌮𑍃𑌤𑌤𑍍𑌵𑌾𑌯𑌕𑌲𑍍𑌪𑌤𑍇॥

౯౨. ఆదిబుద్ధాఃప్రకృత్యైవసర్వేధర్మాస్సునిశ్చితాః।
యస్యైవమ్భవతిక్షాన్తిస్సోఽమృతత్వాయకల్పతే॥

ஸ0-ஹா. இந்த ஆத்மாக்களெல்லாரும் ஸ்வயம் ப்ரகாச ரூபமுடையவர்கள். எப்போதும் இப்படி விளங்குகிறவர்களாகையால் ஸந்தேஹமின்றி நிச்சயிக்கப்பட்ட ஸ்வரூபத்தை யுடையவர். ஆகையால் ஆத்மாக்களுக்கு ஜ்ஞேயத்தை வாஸ்தவமாக நினைக்கக்கூடாது. இவ்வாறு எவனறிந்து க்ருதக்ருத்திய[illegible]ய் சமத்தையடைகிறானோ; அவன் மோக்ஷத்திற்கு அதிகாரியாகிறான். இந்த ஆத்ம ப்ரகாசத்திற்கு ஸூரியனை த்ருஷ்டாந்தமாக எடுத்துக்கொள்ளவேண்டியது. ஸூர்யன் ஸ்வயமாகவே ப்ரகாசிக்கிறானன்றோ. அவன் ப்ரகாசிப்பதற்கு மற்றொரு தேஜஸ்ஸு வேண்டுவதில்லையன்றோ.

௯௩. 𑌆𑌦𑌿𑌶𑌾𑌨𑍍𑌤𑌾𑌹𑍍𑌯𑌨𑍁𑌤𑍍𑌪𑌨𑍍𑌨𑌾𑌃𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑍍𑌯𑍈𑌵𑌸𑍁𑌨𑌿𑌰𑍍𑌵𑍃𑌤𑌾𑌃।
𑌸𑌰𑍍𑌵𑍇𑌧𑌰𑍍𑌮𑌾𑌸𑍍𑌸𑌮𑌾𑌭𑌿𑌨𑍍𑌨𑌾𑌅𑌜𑌂𑌸𑌾𑌮𑍍𑌯𑌂𑌵𑌿𑌶𑌾𑌰𑌦𑌮𑍍॥

౯౩. ఆదిశాంతాహ్యనుత్పన్నాః ప్రకృత్యైవసునిర్వృతాః।
సర్వేధర్మాస్సమాభిన్నా అజంసామ్యంవిశారదమ్॥

பா0-ஹா. மோக்ஷமும் பரமார்த்தமன்று. நித்யமுக்தராயிருக்கிற ஆத்மாக்களுக்கு ஒருநாளில் முக்தியென்பது கூடுமோ. அவர்களுக்கு உத்பத்தி யுண்டோ. ஸமஸ்வரூப முடையவர்களன்றோ. பேதமில்லாதவர்களன்றோ. பரிசுத்தாத்மஸ்வரூப மிப்படிப்பட்டதாகையால் ஒருவராலும் ஒருபோது மொன்று மிதற்குச் செய்யவேண்டுவதில்லை. நித்யனும் எப்போதும் மாருத ஒரே ஸ்வபாவமுடையவனுக்கு ஒரு வ்யாபாரத்தால் பயனுண்டோ.

௯௪. 𑌵𑍈𑌶𑌾𑌰𑌦𑍍𑌯𑌂𑌤𑍁𑌵𑍈𑌨𑌾𑌸𑍍𑌤𑌿𑌭𑍇𑌦𑍇𑌵𑌿𑌚𑌰𑌤𑌾𑌂𑌸𑌦𑌾।
𑌭𑍇𑌦𑌨𑌿𑌮𑍍𑌨𑌾𑌃𑌪𑍃𑌥𑌗𑍍𑌵𑌾𑌦𑌾𑌸𑍍𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌤𑍇𑌕𑍃𑌪𑌣𑌾𑌃𑌸𑍍𑌮𑍃𑌤𑌾𑌃॥

౯౪. వైశారద్యంతువైనాస్తిభేదేవిచరతాంసదా।
భేదనిమ్నాఃపృథగ్వాదాస్తస్మాత్తేకృపణాస్స్మృతాః॥

பா0-ஹா. இவ்வாறு பரமார்த்த தத்வத்தை யறிந்தவரே தங்யரானவர்கள், மற்றோர்கள் க்ருபணர்களே யாவர்கள். அவர்கள் வஸ்துக்களுக்கு பேதத்தைக் கூறுகின்றார்களன்றோ. ஆகையால் அவர்கள் நீசர்களேயாகிறார்கள். பேதவாதிகள் தத்வஜ்ஞாநமில்லாதவர்களாகையா லவர்களுக்கு சுத்தியில்லை யன்றோ. அவித்யையினால் காணப்படுகிற பேதத்தில் புத்தியுடையவர்க ளாகிறார்களன்றோ. ஆகையா லவர்கள் நீசரே யாவர். இது தக்கதேயாமென்று கருத்து.

௯௫. 𑌅𑌜𑍇𑌸𑌾𑌮𑍍𑌯𑍇𑌤𑍁𑌯𑍇𑌕𑍇𑌚𑌿𑌦𑍍𑌭𑌵𑌿𑌷𑍍𑌯𑌨𑍍𑌤𑌿𑌸𑍁𑌨𑌿𑌶𑍍𑌚𑌿𑌤𑌾𑌃।
𑌤𑍇𑌹𑌿𑌲𑍋𑌕𑍇𑌮𑌹𑌾𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌸𑍍𑌤𑌚𑍍𑌚𑌲𑍋𑌕𑍋𑌨𑌗𑌾𑌹𑌤𑍇॥

౯౫. అజేసామ్యేతుయేకేచిద్భవిష్యంతిసునిశ్చితాః।
తేహిలోకేమహాజ్ఞానాస్తచ్చలోకోనగాహతే॥

பா0-ஹா. இவ்வாறு பரமார்த்த ஸ்வரூபத்தை நிச்சயமாயறிந்தவரே மகாத்மாக்களாகிறார். ஒரு பெண்பிள்ளையாயினுமிந்த தத்வஜ்ஞாநமுடையளானால் அவளுக்கு தத்வஜ்ஞாநமில்லாத மகா பண்டிதனு மொப்பாகமாட்டான். அப்படிப்பட்டவர்களிடம் மகிமையை இவ்வுலக மறியாது. அப்படியில்லாத த்வைதிகளாகிய நீசர்களால் இந்த தத்வமடையப்படமாட்டாது.

### பதாந்வயார்த்தபேதங்கள்.

இவ்விரண்டு சுலோகங்களில் முதல் சுலோகத்தில் த்வைதிகளை தூஷித்தார். இரண்டாவது சுலோகந்தா லத்வைதிகளைக் கொண்டாடினார், இது அத்வைதத்தி லனைவருக்கும் விருப்பமுண்டாவதற்காகவாம்.

௯௬. 𑌅𑌜𑍇𑌷𑍍𑌵𑌜𑌮𑌸𑌂𑌕𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑌂𑌧𑌰𑍍𑌮𑍇𑌷𑍁𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌿𑌷𑍍𑌯𑌤𑍇।
𑌯𑌤𑍋𑌨𑌕𑍍𑌰𑌮𑌤𑍇𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌸𑌙𑍍𑌗𑌂𑌤𑍇𑌨𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌤𑌮𑍍॥

౯౬. అజేష్వజమసంక్రాన్తం ధర్మేషు జ్ఞానమిష్యతే।
యతో న క్రమతే జ్ఞానమసఙ్గం తేన కీర్తితమ్॥

ஶ௦-ஹா. ப்ரமேயமென்றும் ப்ரமாணமென்றும் ப்ரமாதாவென்றும் பேதங்கள் தத்வநிச்சயத்தி லேற்படுகிறபடியால் அபேதங் கூடுமோவென்றால் இதற்குவிடையளிக்கின்றார். நித்யர்களான ஜீவாத்மாக்களுக்கு அஸங்கமான நித்யஜ்ஞாநஸ்வரூபத்தை யொப்புக்கொள்ளுகிறோம். ஸ்வரூபமே ப்ரமேயமாகின்றது. ஆகாயம்போல ஸங்கமான ஜ்ஞாநத்திற்கு எல்லலாங் கூடும். இங்கும் ஸூர்ய ப்ரகாசத்தை திருஷ்டாந்தமாகக் கொள்க.

௯௭. 𑌅𑌣𑍁𑌮𑌾𑌤𑍍𑌰𑍇𑌽𑌪𑌿𑌵𑍈𑌧𑌰𑍍𑌮𑍍𑌯𑍇𑌜𑌾𑌯𑌮𑌾𑌨𑍇𑌽𑌵𑌿𑌪𑌶𑍍𑌚𑌿𑌤𑌃।
𑌅𑌸𑌙𑍍𑌗𑌤𑌾𑌸𑌦𑌾𑌨𑌾𑌸𑍍𑌤𑌿𑌕𑌿𑌮𑍁𑌤𑌾𑌵𑌰𑌣𑌚𑍍𑌯𑍁𑌤𑌿𑌃॥

౯౭. అణుమాత్రేఽపి వైధర్మ్యే జాయమానేఽవిపశ్చితః।
అసఙ్గతా సదా నాస్తి కిముతావరణచ్యుతిః॥

ஶ௦-ஹா. அத்வைதிகளல்லாத வாதிகளுக்கு ஜ்ஞாநம் ஸவிஷயிகமென்று மதமாகையால், அஸங்கத்வமில்லை. அஸங்கத்வமில்லாமையால் ஸம்ஸார நிவ்ருத்தியில்லை.

௯௮. 𑌅𑌲𑌬𑍍𑌧𑌾𑌵𑌰𑌣𑌾𑌃𑌸𑌰𑍍𑌵𑍇𑌧𑌰𑍍𑌮𑌾𑌃𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌨𑌿𑌰𑍍𑌮𑌲𑌾𑌃।
𑌆𑌦𑍗𑌬𑍁𑌦𑍍𑌧𑌾𑌸𑍍𑌤𑌥𑌾𑌮𑍁𑌕𑍍𑌤𑌾𑌬𑍁𑌧𑍍𑌯𑌨𑍍𑌤𑌇𑌤𑌿𑌨𑌾𑌯𑌕𑌾𑌃॥

౯౮. అలబ్ధావరణాస్సర్వే ధర్మాః ప్రకృతినిర్మలాః।
ఆదౌ బుద్ధాస్తథా ముక్తా బుధ్యన్త ఇతి నాయకాః॥

ஶ௦-ஹா. இதனால் அத்வைதிகள் மதத்தில் ஆவரணமென்கிற ஸம்ஸார பந்தமில்லை. ஸ்வபாவத்தாலே சுத்தரானவர்கள் ஜீவாத்மாக்கள் அநாதி ஸ்வயம் ப்ரகாசர்கள். நித்யமுக்த ஸ்வரூபர்கள். ஜ்ஞாநசக்தியை ஸ்வபாவமாக உடையவர்கள்; தங்களுக்கு தாங்களே ப்ரபுக்கள். ஆகையா லத்வைதத்திற்கு ஒரு தோஷமுமில்லை.

௯௯. 𑌕𑍍𑌰𑌮𑌤𑍇𑌨𑌹𑌿𑌬𑍁𑌦𑍍𑌧𑌸𑍍𑌯𑌜𑍍𑌞𑌾𑌨𑌂𑌧𑌰𑍍𑌮𑍇𑌷𑍁𑌤𑌾𑌯𑌿𑌨𑌃।
𑌸𑌰𑍍𑌵𑍇𑌧𑌰𑍍𑌮𑌾𑌸𑍍𑌤𑌥𑌾𑌜𑍍𑌞𑌾𑌨𑌂𑌨𑍈𑌤𑌦𑍍𑌬𑍁𑌦𑍍𑌧𑍇𑌨𑌭𑌾𑌷𑌿𑌤𑌮𑍍॥

౯౯. క్రమతే న హి బుద్ధస్య జ్ఞానం ధర్మేషు తాపినః।
సర్వే ధర్మాస్తథా జ్ఞానం నైతద్బుద్ధేన భాషితమ్॥

ஶ௦-ஹா. பரமார்த்தத்தை யறிந்தவனுக்கு இதரவிஷயங்களில் ஜ்ஞாநம் போகாது ஆகாச ஸ்வரூபமாகியதன்றோ ஜ்ஞாநம். ஜீவாத்மாக்களும் ஆகாசத்தோடு ஸமாந ரூபமுடையராகையாலே, சலியாமலிருக்கின்றார்கள். ஜ்ஞாநம் ஜ்ஞேயம், ஜ்ஞாதா, என்கிற பேதமில்லாத அத்வைத மதமானது புத்தனால் சொல்லப்பட்டதன்று. அத்வைதத்திற்கு ஸமீபமாக பாஹ்ய வஸ்துக்களில்லை யென்பது ஜ்ஞாநமே யுள்ளதென்பது இவை புத்தனால் சொலலப்பட்டன. ஆயினும் பரமார்த்தமான அத்வைத தத்வம் வேதாந்தங்களில் கண்டறியத்தக்கதேயாம். வேதாந்தங்களாவன "நஹித்ரஷ்டுர்த்ருஷ்டேர்விபரிலோபோவித்யதே" என்பதுமுதலியவையாம். இவற்றிற்குப்பொருள் ஜ்ஞாநமேஸத்யம் மற்ற வஸ்துக்கள் பொய்யென்பதாம்.

௧௦௦. 𑌦𑍁𑌰𑍍𑌦𑌰𑍍𑌶𑌮𑌤𑌿𑌗𑌮𑍍𑌭𑍀𑌰𑌮𑌜𑌂𑌸𑌾𑌮𑍍𑌯𑌂𑌵𑌿𑌶𑌾𑌰𑌦𑌮𑍍।
𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌵𑌾𑌪𑌦𑌮𑌨𑌾𑌨𑌾𑌤𑍍𑌵𑌂𑌨𑌮𑌸𑍍𑌕𑍁𑌰𑍍𑌮𑍋𑌯𑌥𑌾𑌬𑌲𑌮𑍍॥

౧౦౦. దుర్దర్శమతిగమ్భీరమజం సామ్యం విశారదమ్।
బుద్ధ్వాపదమనానాత్వం నమస్కుర్మో యథాబలమ్॥

௱ஆ. சாஸ்திரஸாரத்தை எடுத்துச்செய்த கௌடபாதகாரிகையென்ற ப்ரபந்தமானது முடிவுபெறுகின்றமையால், முடிவில் மங்களத்தோடு முடிப்பதற்கு பரமார்த்த தத்வத்தை வணங்குவதாகிய நமஸ்கார மங்களத்துடன் முடிக்கின்ருர். இதனு லத்வைதம் வணங்கத்தக்கியதென்று சொல்லப்படுகின்றனமயால் இதற்கு சமானமாகிய மதமொன்று மில்லையென்று ஸ்துதிசெய்யப்பட்டதாயிற்று. பரமார்த்ததத்வ மெப்படிப்பட்டது? ஸத்தென்றும், அஸத்தென்றும் ஸதஸத்தென்றும் ஸதஸத்விலக்ஷண மென்றும் பலவகையாக விகல்பிக்கப்படுகின்றமையால் ஸுலபமா யறியக்கூடாதது. ஆகையா லறிவிலாதார்க்கு எளிதி லறியப்பார்த்தாலும் ஸமுத்ரம்போல் அவகாகிக்கமுடியாதது. நித்யமாய் ஸமமாய் ஸமர்த்தமாயிருப்பது. பேதங்கள் நீங்கியது, இப்படிப்பட்ட பரமார்த்த ப்ரம்மஸ்வரூபத்தை நன்குணர்ந்து அந்த ப்ரம்மஸ்வரூபத்தோடு ஐக்யத்தையடைந்து அந்த ப்ரம்மத்தை வணங்குவோமாக. அது வ்யவஹாரத்திற்கு கோசரமாகாததாயினும் நம்முடைய சக்திக்குத்தக்கப்படி வ்யவகாரத்திற்குக் கொண்டுவந்து நமஸ்கரிப்போமாக.

𑌇𑌤𑌿 𑌗𑍌𑌡𑌪𑌾𑌦𑌕𑌾𑌰𑌿𑌕𑌾𑌯𑌾𑌂
𑌚𑌤𑍁𑌰𑍍𑌥𑌂 𑌅𑌲𑌾𑌤𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌪𑍍𑌰𑌕𑌰𑌣𑌮𑍍.

## பதாந்வயார்த்தபேதங்கள்.

கௌடபாதகாரிகையின் ப்ரகரணங்கள் நாலுக்கும் அத்வைத மதாசாரியராகிய சங்கராசாரியர் வ்யாக்நமாகச் செய்த பாஷ்யங்களையும் ஆனந்த கிரியாசாரியர் செய்த டீகையையும் அநுஸரித்து பண்டிதர்களி னபிப்ராயங்களையும்சேர்த்து அத்வைதமத ஸ்தாபநமான வ்யாக்யாநக் கருத்துமாத்திர மெழுதப்பட்டது. பதார்த்தங்களை இதைக்கொண்டே அறிந்துகொள்க. இதுவுமன்றி த்வைத மதகண்டநரூபமாகிய இந்த க்ரந்தத்தில் சொல்லிய யுக்தியே புத்திமாங்களுக்கு முக்யமா யறியத்தக்கது. வேத மந்திரங்களுக்குப்போல பதார்த்தம் முக்யமல்ல, ஆகையால் பதார்த்த மெழுதவில்லை. விசேஷக்ரந்த விஸ்தரபயத்தா லென்றறிக.

## சங்கராசாரியர் கௌடபாதகாரிகை பாஷ்யத்தின் முடிவில்செய்த மங்களசுலோகங்கள்.

அஜமபிஜநியோகம் ப்ராபதைச்வர்ய யோகாதகதிச கதிமத்தாம் ப்ராப தேகம்ஹ்யநேகம், விவிதவிஷய தர்மக்ராஹிமுக்தே க்ஷணாம் ப்ரணதபயவிஹந்த்ரு ப்ரம்மயத்தந் நதோஸ்மி “க”

ப்ரஜ்ஞாவைசாகவேதக்ஷுபிதஜலநிதேர் வேதநாம்நோந்தரஸ்த்தம் பூதாந்யாலோக்யமக்நாந்யவிரத ஜநநக்ராஹகோரேஸமுத்ரே, காருண்யாதுத்ததாராம்ருதமிதமமரைர் துர்லபம்பூதஹேதோர்யஸ்தம்பூஜ்யாபிபூஜ்யம்பரமகுருமமும்பாதபாதைர்நதோஸ்மி ‘உ”

யத்ப்ரஜ்ஞாலோகபாஸாப்ரதிஹதிமகமத்ஸ்வாந்தமோகாந்தகாரோமஜ்ஜோந்மஜ்ஜச்சகோரேஹ்யஸக்ருதுபஜநோதந்வதித்ராஸநேமே,யத்பாதாவாச்ரிதாநாம்ச்ருதிசமவிநயப்ராப்திரக்ராஹ்யமோகாதத்பாதெளபாவநீயஎபவபயவிநுதெளஸர்வபாவைர்நமஸ்யே’௩.

## முதல்சுலோகத்திற்குக்கருத்து.

ஸமஸ்தோப நிஷத்துக்களிலும் பரமார்த்த தத்வமென்று ப்ரஸித்தமாய், தன்னை வணங்கினோர்க்கவித்யை முதலிய தோஷபயங்களை நீக்குவதும், ஜந்மம் முதலிய விகாரங்களில்லாததும் தன்னுடைய ஐச்வர்யத்தால் ஜங்மத்தையுடையதும் சலநமிலலாததும் கதியுடையதும் ஒன்றாகியதும் மூடர்களுக்குப் பலவாகியது மாகிய ப்ரம்மத்தை வணங்குகின்றே னென்பதாம்.

## இரண்டாவதுசுலோகத்திற்குக்கருத்து.

உலகத்தில் பிறப்பிறப்பு முதலிய துன்பக்கடலில் மூழ்கிக்கிடக்கிற ஜந்துக்களிடத்தில் கருணைகொண்டு வேதமாகிய சமுத்திரத்தில் தம்முடைய அறிவென்கிற மத்தினால் கடைந்து இந்த க்ரந்தமாகிய அம்ருதத்தை யெடுத்துத்தந்த வரும் பரமகுருவுமாகிய இவரடிபணிந்து வணங்குகின்றேன்.

## மூன்றாவதுசுலோகத்திற்குக்கருத்து.

இந்தஸம்ஸாரஸாகரத்தில் மோகாந்த காரமானது எவருடைய ஜ்ஞானத்தாலே எனக்குநீங்கிற்றோ. எவருடைய அடிவணங்கினோர்க்கு சமதமாதிகுணங்களுண்டாகின்றனவோ; அவருடைய பாவநமான திருவடிகளை ஸமஸ்த ப்ரகாரத்தாலும் நமஸ்கரிக்கின்றேன்.

## பதாந்வயார்த்தபேதங்கள்.

சங்கராசாரியர் கௌடபாதகாரிகைக்கு பாஷ்யம்செய்து முடித்து அந்தபாஷ்ய மனைவராலு மாதரிக்கப்படவேண்டுமென்று மூன்று சுலோகங்களால் மங்களம் செய்தார். அதில் முதல் சுலோகத்தில் ப்ரமத்தை வணங்கினார். இரண்டாவது சுலோகத்தால் க்ரந்தகர்தாவை வணங்கினார். மூன்றாவது சுலோகத்தால் தம்முடைய ஆசாரியரை வணங்கினாரென்றறிக.

கௌடபாதகாரிகை முற்றிற்று.

ஸ்ரீமத்குருப்யோநமஃ.

ஶ்ரீ:

ஶ்ரீபரப்ரம்மணேநம:.

# 𑌸𑌂𑌕𑍍𑌷𑌿𑌪𑍍𑌤𑌷𑌡𑍁𑌪𑌨𑌿𑌷𑌦𑍍 𑌦𑍍𑌰𑌾𑌵𑌿𑌡𑌮𑌧𑍍𑌵𑌭𑌾𑌷𑍍𑌯𑌾𑌰𑍍𑌥𑌃.

## 𑌸𑌂𑌕𑍍𑌷𑌿𑌪𑍍𑌤𑌈𑌶𑌾𑌵𑌾𑌸𑍍𑌯𑍋𑌪𑌨𑌿𑌷𑌦𑍍𑌦𑍍𑌰𑌾𑌵𑌿𑌡

## 𑌮𑌧𑍍𑌵𑌭𑌾𑌷𑍍𑌯𑌾𑌰𑍍𑌥𑌃.

பதாந்வயார்த்தபேதங்கள்.

ஈசாவாஸ்யோப நிஷத்து, கேநோப நிஷத்து, கடோப நிஷத்து, ப்ரச்நோபநிஷத்து, முண்டகோப நிஷத்து, மாண்டூக்யோப நிஷத்து. இந்த ஆறு உபநிஷத்துக்களுக்கும் முன்மத்வ பாஷ்யத்திலுள்ள விசேஷார்த்தங்க ளெழுதப்படாமையால், இந்த ஆறு உபநிஷத்துகளுக்கும் மத்வமதாறு ஸாரமாகச்செய்த பாஷ்யங்களிலுள்ள விசேஷார்த்தங்க ளெழுதப்படுகின்றன. தைத்திரீயம் முதல், நாலுஉபநிஷத்துகளுக்கும் மற்ற இரண்டு பாஷ்யங்களோடு இந்த பாஷ்யமும் எழுதப்படும். அர்த்தபேதங்க ளுள்ளவிடத்தில் மாத்திரமே அந்தந்த அர்த்தபேதங்க ளெழுதப்படுமென்றறிக.

ஈசாவாஸ்யமத்வபாஷ்யாவதாரிகை.

இந்த ஈசாவாஸ்யோப நிஷத்து ஸ்வாயம்புவமநுவினல் கண்டுபிடிக்கப்பட்டு யஜ்ஞஸ்வரூபியாகிய பகவானை ஸ்தோத்திரம் பண்ணுகிற க்ரமத்திலே வெளியிடப்பட்டது. அந்தவிஷ்ணுவுக்கு யஜ்ஞமூர்த்தியென்றுபெயர். இதின் விஸ்தரம் ப்ரம்மாண்ட புராணத்திலும் பாகவதத்திலும் விளங்கும்.

ஈ - க, ம - பா. ப்ரக்ருதி என்கிற இந்த லோகதத்வமானது விஷ்ணுவினல் நடத்தப்படுகிறது. ஸ்வயமாக இதற்கு ப்ரவர்த்திக்க சக்தியில்லை. அந்த விஷ்ணுகொடுத்த பொருளைக்கொண்டு புசிக்கவேணும். ப்ரம்மாண்டபுராண மிவ்வாறே கூறுகின்றது.

ஈ - உ, ம - பா. கருமங்கள் செய்துவந்தாலும் ஜ்ஞாநிக்கு அவை முக்திக்கு விரோதமாகிய தந்தம்பயனைத் தராவாம். அஜ்ஞாநி க்ருஷ்ணமூர்த்தியை உபாஸநம் செய்யாதவனுக்கே கருமங்கள் மோக்ஷவிரோதமாக தந்தம்பயனைத் தருகின்றன. இவ்வாறு நாரதீயபுராணத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது.

ஈ - ங, ம - பா. விஷ்ணுவை யுபாஸியாதவர்கள், துன்பத்தைத்தருவது மஸுரர்களா லடையப்படுவதுமான நரகலோகத்தை யடைகிறார்கள். இதுதப்பாது. இவ்வாறு வாமநபுராணத்திலுங் கூறப்பட்டது.

ஈ - ச, ம - பா. இந்த சுருதியின் பொருள் ப்ரம்மாண்டபுராணத்தில் சொல்லப்பட்டது.

ஈ - ரு, ம - பா. இந்த சுருதியின்படி தத்வஸம்ஹிதையில் கூறப்பட்டது.

ஈ - சு, ம - பா. ஆத்மஸ்வரூபத்தை யறிந்தவனுக்கு பயமில்லை. இந்த விஷயம் ஸௌகராயண ச்ருதியிலுஞ் சொல்லப்படுகிறது.

ஈ - எ, ம - பா. எல்லாபூதங்களிலு மிருக்கின்றவர் பரமாத்மா ஒருவரே, என்றறிந்தவனுக்கு சோகமோஹங்களொன்றுமில்லை. ஜீவபரமாத்மாக்களுக்கு ஐக்யமில்லை.

இந்தப்பொருள் பிப்பலாதசாகையிலுள்ள ச்ருதியில் நன்றாய் விளங்குகின்றது. கீழ்சுருதியில் கூறிய விஷயத்தையே இங்குங்கூறியது பரமாத்மா எங்குமிருக்கிறானென்பதில் தாத்பர்யத்தை விளக்குவதற்காம்.

ஈ - அ, ம - பா. இவ்வுலகம் பொய்யல்ல மெய்யாய் சாச்வதமானது. இதை விஷ்ணுபடைத்தார். இது வராஹபுராணத்தில் விரிவாய் கூறப்பட்டிருக்கிறது. இந்த பரமாத்மா ஸர்வசுத்தர்.

ஈ - கூ, க0, கக, கஉ, கூ, கச, ம - பா. இந்த சுருதிகளின்பொருள் கூர்மபுராணத்தில் வெளியிடப்பட்டிருக்கின்றது.

ஈ - கரு, கசு, கஎ, ம - பா. இங்கு ஸூர்யமண்டலத்திலிருக்கும் பரமாத்மாவையுபாஸிக்கிற ப்ரகாரஞ்சொல்லப்படுகிறது; இவ்விஷயம் இராமஸம்ஹிதையில் கூறப்பட்டது. இதனால் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதம் ஸாதிக்கப்பட்டது.

ஈ - கஅ, ம - பா. இந்த சுருதிக்கும் இராமஸம்ஹிதையின் வசநப்படி தத்வத்தில் பொருள்கொள்க.

ஈ - ககூ, ம - பா. இந்த ச்ருதிக்கு ப்ரம்மதர்க்கவசநத்தை வ்யாக்யாநமாகக் கொள்க. நித்யமும் பக்தர்களை விஷ்ணுஸ்மரிக்கிறார் என்றுகருத்து.

ஈ - உ0, ம - பா. ஜ்ஞாநபக்திகளுடன் உன்னை வணங்குகிறோம் எங்களுக்குப் பாபத்தைப்போக்கி ஜ்ஞாநத்தைத் தரவேணும் இச்தசுருதிக்கு, ஸ்காந்தபுராணத்தில் விவரணம் செய்யப்பட்டது.

பதாந்வயார்த்தபேதங்கள்.

கீழ்ச்சொல்லிய அந்தந்த புராணாதிகளிலிருந்து வசநங்கள் ப்ரமாணங்களாக எடுக்கப்பட்டு அந்தந்த சுலோகவாக்யங்க ளங்கங்கெழுதப்பட்டன. இதனால் அந்தவசநங்கள் அந்தச்ருதிகளுக்கு உபப்ரம்மணங்க ளாகையாலந்த வசநங்களுக்கிணங்க அந்தசுருதிகளுக்குப் பொருள் சொல்லவேணும். ஆகையா லத்வைதத்திற் கிடமில்லை என்றுகருத்து வெளியிடப்பட்டது. அந்தந்தச் லோக வாக்யங்களையெல்லா மிங்கெழுதி அவற்றிற் கெல்லாம் பொருள் கூறுவதில் விஸ்தரமாகுமென்று விசேஷக்கருத்துக்களே யெழுதப்பட்டன. எழுதாத விடங்களில் இராமாநுஜ பாஷ்யத்தின் கருத்துப்போலவே என்று கண்டுகொள்க. அவ்விரண்டுபாஷ்யங்களிலும் இவ்வுபநிஷத்து பதினெட்டு மந்திரங்களாகப் பிரிக்கப்பட்டாலும் இந்த பாஷ்யத்தில் இருபது மந்திரங்களாகப் பிரிக்கப்பட்டது. "யோஸாவஸௌ புருஷஸ் ஸோஹமஸ்மி" என்கிற வாக்யத்தையும், "ஓங்க்ரதோஸ்மரக்ருதம்ஸ்மர" என்கிற இரட்டித்துப் படிக்கப்பட்ட இந்தவாக்யத்தையும் தனிமந்திரமாகக் கொண்டபடியால், இருபது மந்திரங்களாயின வென்றறிக.

ஸ்ரீபரப்ரம்மணேநம:

ஈசாவாஸயோபநிஷத்திற்குமத்வபாஷ்யம் முற்றிற்று.

ஸ்ரீபரப்ரம்மணேநம:.

கேநோபநிஷத³ர்த²விஷய ஸ்வபா⁴ஷ்யவ்யாபாரஃ.

ம - பா. இவவுபநிஷத்து நான்குகண்டங்களுக்கும் பொருள் ப்ரம்மஸாரத்தில் விஸ்தரிக்கப்பட்டிருக்கிறது. சதுர்முகப்ரம்மாவை, உருத்திரன் விஷ்ணுதத்வத்தை யறியவிரும்பி, ப்ரச்நம்பண்ணினதற்கு சதுர்முகப்ரம்மா இந்த உபநிஷதர்த்தத்தை யுபதேசித்திருக்கின்றார். பார்க்கடலில் கண்வளர்ந்தருளுகிற மகாவிஷ்ணுவை இந்த உபநிஷத்து ப்ரதிபாதிக்கின்றது. இதனாலும் ஜீவாத்மாக்களுக்கும் ப்ரம்மத்திற்கும் பேதமேவெளியிடப்பட்டது. இதனால் ஸமஸ்ததேவதைகளிலும் விஷ்ணுவேசிறந்தவரென்று காட்டப்பட்டது. இந்த உபநிஷத்தி லர்த்தத்தை சிலவிடங்களில் மற்றும்சில சுருதிகளும், கீதையும் சப்தநிர்ணயமும் வித்யாநிர்ணயமும் வெளியாக்குகின்றன.

பதாந்வயார்த்தபேதங்கள்.

இவ்வுபநிஷத்திற்கு வ்யாக்யாநமாக ப்ரம்ம ஸாரத்தில் சுலோகங்களையேஎழுதி யிருக்கிறார். முடிவில்சப்தநிர்ணயம் முதலியவற்றையும் ப்ரமாணமாகக் காட்டியிருக்கிறார். மற்றசில பதார்த்தங்கள் மிகவும் பேதப்படவில்லை. ஒவ்வொரு மந்திரத்திற்கும் தனியே வ்யாக்யாநம் செய்யப்படவில்லை என்றறிக.

ஸ்ரீபரப்ரம்மணேநம:.

கேநோபநிஷத்திற்கு மத்வபாஷ்யம் முற்றிற்று.

ஸ்ரீபரப்ரம்மணேநம:.

கடோபநிஷத³ர்த²விஷய ஸ்வபா⁴ஷ்யவ்யாபாரஃ.

ம - பா. இவ்வுபநிஷத்தில் முதலத்யாயம் முதல்வல்லியில், அக்நியிலிருக்கிற பகவானை யுபாஸிக்கும் க்ரமம்முதலியவை சொல்லப்படுகின்றன. இந்தவல்லியிற் சொல்லுகிற அர்த்தங்களுக்கு வ்யாக்யாநங்களாக ப்ரம்மஸாரம், கதிஸாரம், பாத்மம், தத்வஸாரம் ப்ரம்மாண்டம், இவற்றிலுள்ள வசநங்களைக் காண்க. சிலவிடங்களில் கீதாதிவசநங்களையும் ஸம்வாதமாகக்கொள்க. இந்தவல்லி பகவத்ஸ்வரூபத்தைப் பற்றியதேயாம். கேவல மக்நிஸ்வரூபமாத்திரத்தால் அந்தந்த லோகப்ராப்திபலம் ஸித்தியாமையாலென்க. முக்தாத்மஸ்வரூபத்துக்கு நியாமகனாகிய பரமாத்மாவின் ஸ்வரூபத்தை ப்ரச்நம் பண்ணுகிறது. சிவன்முதலிய தேவதாந்தரங்களை முக்திப்ரதராக நினைக்கக்கூடாது.

ம - பா. இவ்வுபநிஷத்து முதலத்யாயம் இரண்டாவதுவல்லியில் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதஞ்சொல்லப்பட்டது. இதற்கு முன்பின்ஸந்தர்பங்கள் அநுகூலங்களாயிருக்கின்றன. அபேதவாதத்திற்கு பூர்வோத்தர விரோதங்களும் யுக்திவிரோதங்களும் ஸந்தர்பவிரோதங்களுமுண்டு. ஆகையா லத்வைதமதம் யுக்தமானதல்ல. மற்ற சுருதிபுராணங்களும் இதற்கு ஸம்வாதங்களாயிருக்கின்றன. அத்வைதமதத்திற்கு யுக்திவிரோதங்

கள் பலவிருக்கின்றனவென்பது புத்திமான்களுக்கு ஸ்புடமேயாம். ஆகையால் ஜீவ பரமாத்மாக்களுக்கு வாஸ்தவத்தில் பேதமுண்டென்பது விளங்கும்.

ம - பா. இந்த கடோபநிஷத்து முதலத்யாயம் மூன்றுவது வல்லியில் ஸமஸ்ததேவதைகளினு முத்தமஞன ஸ்ரீமந்நாராயணனை த்யாநம் செய்யவேண்டுமென்று விதிக்

பதாந்வயார்த்தபேதங்கள்.

கடோபநிஷத்து முதலத்யாயம் மூன்று வல்லிக்கும் முக்யக் கருத்து மாத்திரமே யெழுதப்பட்டது. மற்ற பதார்த்தங்களில் பேதங்களில்லை. இதற்கு சில விடங்களிலிருந்து சில வசநங்கள் ஸம்வாதமாக எழுதப்பட்டன. ஒவ்வொரு மந்திரத்திற்கும் தனித்தனியே வ்யாக்யாநம் செய்யப்படவில்லை.

ம - பா. கடோபநிஷத்து இரண்டாவது அத்யாயம் முதல் வல்லியிலும் பரமாத்மாவுக்கும் ஜீவாத்மாவுக்கும் பேதம் வாஸ்தவமென்றறிவிப்பதற்கு ஜீவாத்மபரமாத்ம ஸ்வரூபத்தை விரிவாய்ச்சொல்லுகிறது. உறக்கம் முதலிய தோஷங்களையுடையவன்ஜீவன், ஜீவர்களுறங்கும்போதும் தான் விழித்துக்கொண் டிருப்பவனும் சுத்தனுமியவன், பரமாத்மா; இவ்வாறு ஜீவபரமாத்மாக்களுக்கு பேதம் வாஸ்தவமென்பதற்கு பலயுக்திகள் சொல்லப்படுகின்றன. ஆக இவ்வாறு ஜீவபரமாத்மாக்களுக்கு பேதத்தைக் கூறியதால் சிலர் குணங்களுக்கும் அவ்வோ குணங்களையுடைய த்ரவ்யத்திற்கும் பேதத்தைச் சொல்லுகின்றுர்கள். அது கூடாதென்று தூஷிக்கின்றது. இப்படி யேகாரண விஷ்ணுஸ்வரூபத்திற்கும் அவதாரங்களில் விஷ்ணுஸ்வரூபத்திற்கும் பேதமில்லாதிருக்க பேதத்தை நினைப்பது கூடாது. இவ்விரண்டு விஷ்ணுஸ்வரூபமும் பரப்ரம்மமேயாம். விஷ்ணு என்றுலும் பரப்ரம்மம் என்றுலும் பொருளொன்றே யாமென்றறிக.

ம - பா. கடோபநிஷத்து இரண்டாவது அத்யாயம் இரண்டாவது வல்லியிலும், ஜீவபரமாத்மாக்களுடைய ஸ்வரூபத்தை சோதித்து, பேதத்தை நிலைநிறுத்தி பரமாத்மாவுக்குவ்யாப்தியைச்சொல்லி கீழ்ச்சொன்னவற்றையே விஸ்தரித்திருக்கின்றது. இந்த வல்லியில்கூறிய இந்த விஷயங்களைத் தெளிவாகச் சொல்லுகிற கூர்மபுராணத்தியவசநங்களையும் மஹாவராஹ புராணவசநங்களையும் இந்த வல்லிக்கு வ்யாக்யாநமாகக்

ம - பா. கடோபநிஷத்து இரண்டாவது அத்யாயம் மூன்றுவது வல்ல

ஜகத்து ஸத்யமென்றும் ப்ரவாஹநித்யமென்றும் இதற்கு ஹரிஎன்கிற பரப்ரம்மமே மூலமாயிருக்கின்ற தென்றும் அந்த ஹரி, ஜீவர்களுக்குள் வஸிக்கிறுரென்றும். இவ்விடத்திலிருக்கின்ற ஹரியை ஜ்ஞாநத்ருஷ்டியாலே யறியலாம். கண்ணுடியில் முகம்போல பித்ருலோகத்திலறியலாம். கந்தர்வலோகத்தில் அதைவிட ஸ்பஷ்டமாய்க்காணலாம். ப்ரம்மலோகத்தில் மிகவும் ஸ்பஷ்டமாய்க்காணலாம். என்றும், ஸர்வ தேவதைகளினும் விஷ்ணுவே உத்தமோத்தமரென்றும். இதை யறிந்தவன் ஸம்ஸாரபந்தத்திலிருந்து விடுபடுவானென்றும், ஸ்ருஷ்டிலயங்களுக்கு விஷ்ணுவே காரணமென்றும், சொல்லப்பட்டது. ஆகையால் விஷ்ணுவே ஸர்வோத்தம தேவதை யென்பது ஸித்தமாயிற்று.

ஸ்ரீபரப்ரம்மணே நம:

கடோபநிஷத்திற்கு மத்வபாஷ்யம் முற்றும்.

பரப்ரம்மணே நம:

ப்ரச்நோபநிஷத்பாஷ்யப்ரகாஶ:.

ம - பா. ப்ரஜைகளை பரிபாலநம் செய்வதினால் ப்ரஜாபதியென்று பெயரையுடைய விஷ்ணுவானவர், ஸூர்யனென்கிற பெயரையுடைய வாயுவையும், சந்திரனென்று பெயரையுடைய ஸரஸ்வதியையும், ஸூர்யசந்திரர்களிடத்தில் ஸ்ருஷ்டித்து, அவர்களிடத்திலாவேசித்து, ஸமஸ்தத்தையும் ஸ்ருஷ்டித்தார். அமூர்தங்களாகிய வஸ்துக்களில் வாயுவும், மூர்தங்களாகிய வஸ்துக்களில் ஸரஸ்வதியுமிருக்கின்றார்கள். என்று ஸ்ருஷ்டிவிஸ்தரம் ப்ரச்நோபநிஷத்து முதலாவது ப்ரச்நத்தில் சொல்லப்படுகிறது; இதற்கு வ்யாக்யாநமாக ப்ரஜாபதி ஸம்ஹிதையிலுள்ள வசநங்களைக்காண்க.

ம - பா. ப்ரச்நோபநிஷத்து இரண்டாவது ப்ரச்நத்தில், வாயுரக்நி:, என்கிற மந்திரத்தில் வாயுசப்தத்தால் பூதவாயுவைச் சொல்லுகிறது. ப்ராணசப்தத்தால் ப்ரதாநவாயுவைச் சொல்லுகின்றதென்றுணர்க.

ம - பா. ப்ரச்நோபநிஷத்து மூன்றாவது ப்ரச்நத்தில் ஆத்மந:, என்கிற பதத்திற்கு பரமாத்மாவினிடத்திலிருந்து, என்று பொருள். அந்த பரமாத்மா விஷ்ணு. அந்த விஷ்ணுவினிடத்திலிருந்து வாயு உண்டானான். அந்த வாயுவினிடத்திலிருந்து ஸமஸ்த தேவதைகளுமுண்டானார்கள். அந்த வாயுவே பஞ்சப்ராண ஸ்வரூபியாய்க்கொண்டு, மோக்ஷம் முதலிய வற்றைத் தருகின்றான். என்று சொல்லுகிறது. இந்த ப்ரச்நத்திற்கு வ்யாக்யாநமாக ப்ரபஞ்சநத்திலுள்ள வசநங்களைக்காண்க.

ம - பா. ப்ரச்நோபநிஷத்து நாலாவது ப்ரச்நத்தில், பரமாத்மாவுக்கு ஜீவர்கள் சரீரம்போன்றவைகளென்றும் அசேதநமாகிய சரீரத்திற்கு ஸுகங்கூடாமையால் ஜீவர்களிடத்தில் ஸுகமுண்டாகின்றதென்றும், சொல்லப்பட்டிருக்கின்றது. இதற்கும் புராண வசநங்களை வ்யாக்யாநமாகக்காண்க.

ம - பா. ப்ரச்நோபநிஷத்து ஐந்தாவது ப்ரச்நத்தில், ப்ரணவத்தினால் ஹரி என்று நாமத்தையுடைய பரமாத்மாவாகிய நாராயணனை த்யாநம்செய்து ப்ரம்மலோகத்தை யடைந்து அங்கு ப்ரம்மாவினால் தத்வஜ்ஞாநத்தைப் பெற்று, முக்திபெறுகிறானென்பதில் ஸந்தேஹமில்லை என்று சொல்லப்பட்டது.

ம - பா. ப்ரச்நோபநிஷத்து ஆறாவது ப்ரச்நத்தில், ஸமஸ்தகாரணமாகியவன் வாஸுதேவனென்று நாமத்தையுடைய பரமாத்மா. அவனைவிட வேறொருவரும் உத்தமரில்லை என்று சொல்லவேண்டுவதில்லை; ஸமாநரேயில்லை யன்றே. ஆகையாலவனை யறிந்து முக்தனுவானென்றும், உத்பத்தியில் க்ரமமும் சொல்லப்பட்டது. ஸமுத்திரத்தில் சேர்ந்த நதிஜலங்களுக்கு வேறு நாமரூபங்களுண்டாயிருந்தாலும் மூடரால் அறியப்படாதது போல பரமாத்மாவையடைந்த ஜீவர்களுக்கு பேதப்பட்ட அநந்தநாமரூபங்களுண்டாயிருக்கின்றன. பேதப்பட்டவை யென்பதினால்சூந்யமாயழிந்தனவென்று பொருள்சொல்லுகிறவர்கள்மிகவுமறிவிலாதவர்கள். பேதசப்தத்தை விநாசப்பொருளில் ப்ரயோகிப்பதில்லை. குடம் பேதப்பட்டது பிந்நமாயிற்றென்றாலும், அநேகாவயவங்களாய்ப் பிறிந்ததென்று பொருளாகிறதேயன்றி யழிந்ததென்று பொருளில்லை. அங்கு குடமழிந்ததென்பது வ்யங்க்யமாய்த் தோற்றுகின்றது. "பித்யேதேதாஸாம்நாமரூபே" என்கிற விடத்தில் வ்யங்க்யமாயுங்கூட நாசந்தோற்றாது. நாமரூபங்களுக்கு கபாலமுதலிய வற்றைப் போல் நாநாபாவங்கூடாமையாலென்க. ஆகையால் பிந்நமாகிற தென்பதற்கு இவ்விட

த்தில் பரமாத்மாவுக்குண்டாகிய நாமரூபங்களைவிட வேறான நாமரூபங்களையுடையவர்களாகின்றார்கள் முக்தஜீவாத்மாக்களென்றே பொருள். இத்தால் முக்தியிலும் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதமுண்டென்பது ஸ்பஷ்டமாய் விளங்குகின்றதன்றோ. "அராஇவ ரதநாபௌகலாயஸ்மின்ப்ரதிஷ்டிதா:" என்று சொல்லுகிற த்ருஷ்டாந்தத்தாலுமிது விளங்கும். ஆகையால் முக்தியிலும் நாமரூபங்கள் ஜீவாத்மாக்களுக்குண்டென்றறியவேணும். சிலர், 'பரமாத்மாவில் ஜீவாத்மாக்கள் அஸ்தமிக்கிறார்கள்' என்றதினால் ஜீவர்களழிந்து போனார்களென்று தோற்றுகிறதென்று ஐய்யமுறுவர், அங்ஙனல்ல. 'ஸூரியன் அஸ்தமிக்கிறான்' என்றால் காணப்படுவதில்லையென்று பொருளேயன்றி, அழிந்துபோனானென்று பொருளல்லவன்றோ. அப்படியே ஜீவாத்மாக்களையப்போது அறிவிலாதாறறியார்களென்று அஸ்தமிக்கிறார்களென்று சொல்லிற்றேயன்றி அழிந்துபோகின்றார்களென்று சொல்லவில்லை. ஆகையாலஸ்தமிக்கிறார்களென்பதினால் அழிகிறார்களென்று பொருள்கூறுவது யுக்தமல்ல. "நாமரூபாத்விமுக்த:" என்கிற விடத்தில் நாமரூபங்களால் விடுபட்டவனென்று பொருள் சொல்லக்கூடாது. முக்த சப்தத்திற்கு விடுபட்டவனென்று பொருளாயினும் விமுக்த சப்தத்திற்கு அப்பொருள் சொல்லக்கூடாது. எப்படியென்றால், ப்ரியமென்றால் இஷ்டமென்று பொருள். விப்ரியமென்றால் அந்தப்பொருள் இல்லை. அநிஷ்டமென்று பொருளாகிறதன்றோ. அப்படியே இங்கும் விமுக்த: என்கிற பதத்திற்கு நாமரூபங்களாலே விடுபடாதவனென்றே பொருளாகும். இப்படியே பல உதாகரணங்களையுங்காண்க. "நாமரூபேவிஹாய" என்கிற விடத்திலும் 'நாமரூபே, அவிஹாய' என்று பதவிபாகம் செய்து நாமரூபங்களை விடாதவனையென்று பொருள் சொல்லக்கடவது. "அநந்தம்வைநாமாநந்தாவிச்வேதேவா:" என்றும், "யத்ரபூர்வேஸாத்யாஸ்ஸந்திதேவா:" என்றும் இப்படி பல ச்ருதிகளாலும் அநேகரூபநாமங்களையடைந்திருப்பதாகச் சொல்லியிருக்கின்றதன்றோ. ஆகையால்தன்னில்பேதப்பட்ட அநந்தமுக்தர்களிலு முத்தமானாய் பரமாத்மா நாராயணன் விளங்குகிறானென்பதுஸித்தம். இவ்விடத்திற்குப் பலவிடங்களிலுள்ள சுருதிஸ்ம்ருதி புராணவசநங்களை வ்யாக்யாநமாகக்காண்க.

ஸ்ரீபரப்ரம்மணேநம:.

ப்ரச்நோபநிஷத்திற்கு மத்வபாஷ்யம் முற்றிற்று.

---

ஸ்ரீபரப்ரம்மணேநம:

## முண்டகோபநிஷத் மத்வபாஷ்யாரம்ப:.

ம - பா. வைவஸ்வதமநுவுக்கு ஆதியில் ப்ரம்மாவினிடத்திலிருந்து, அதர்வா என்பவன்பிறந்தான். பின்பு, மித்திரனும் வருணனும் ஹோதியும், ப்ரஹோதியும்,பிறந்தார்கள். ப்ரம்மாவினுடைய முதல் கல்பத்தில் சிவன் பிறந்தான். வராஹகல்பத்தில் ஸநகாதிகளுண்டானார்கள். இந்தப்ரம்மா விஷ்ணுவுக்குத் தலைமகனானவன். இருக்குமுதலிய வேதங்கள்விஷ்ணுவைஸ்தோத்திரம் செய்வதினால் பரவித்யையாகின்றன.இல்லாதபோது அபரவித்யையாகின்றன. பராத்பரனாகியவிஷ்ணுவையே இதிஹாஸபுராணம்முதலிய ஸமஸ்தமும் பேசுகின்றது. இந்த விஷ்ணுவைப் புருஷோத்தமனென்றறிகிறவர்கள் மகாபாகவதர்களாகிறார்கள். வேதம் ராமாயணம் பாரதம் இவை யெல்லாவற்றிலும், முதலிலும் நடுவிலும் முடிவிலும், விஷ்ணுவே சொல்லப்படுகிறார். ஆகையாலே விஷ்ணுவே பூஜிக்கத்தக்கவர் த்யாநிக்கத்தக்கவர், நமஸ்கரிக்கத்தக்கவர். இந்த விஷ்ணுபூஜைக் குபயோக

மாகிய வேதங்களே பரவித்யைகள். கருமத்திற்குபயோகப்பட்டவை அபரவித்யைகள். இவ்விடத்திற்கு விஸ்தரவ்யாக்யாநமாக பரஸம்ஹிதை ப்ரம்மாண்ட புராணம், வராஹ புராணம் பாரதம் நாராயண ஸம்ஹிதை முதலியவற்றிலுள்ள வசநங்களைக்காண்க. வேதவ்ரதம் செய்தவனுக்கே வித்யாதிகாரமுள்ளது, இது வ்யாஸஸ்ம்ருதியிலும் விளங்குகின்றது. இது முதல் முண்டகம் முதல்கண்டம் போதிக்கின்றது.

ம - பா. நிவ்ருத்தி தருமம் மிகவும் சிறந்தது. காமத்தை விடுதல் முக்யம். வ்யாஸ ஸ்ம்ருதியையும் காண்க. ஆயினும் ஸங்கமில்லாதவனாய் கருமங்களை யநுஷ்டிக்கவேணும். பலசுருதிஸ்ம்ருதிகளை யுதாகரணமாக இவ்விடத்திற்கு அறியக்கூடும். இது முதல் முண்டகம் இரண்டாவது கண்டத்திற்குக் கருத்து.

ம - பா. அக்ஷரமென்றால் ப்ரக்ருதி, அதற்கு மேலான அக்ஷரம் லக்ஷ்மி, அதற்கு மேலான அக்ஷரம் பரவாஸுதேவன், இது இரண்டாவது முண்டகம் முதல் கண்டத்தில் விசேஷம். இங்கும் பல ப்ரமாணங்களுண்டு.

ம - பா. ஜ்ஞாநிகளுக்கு கோசரிக்கிற பரமாத்மா ஜ்ஞநசக்தி முதலிய குணங்களுடையவன் ஜீவர்களை நியமிக்கிறவன். குணஸ்வரூபம் முன் சொல்லப்பட்டது. இது இரண்டாவது முண்டகம் இரண்டாவது கண்டத்திற்கு விசேஷம். பாகவதம் முதலியவற்றிலிருக்கிற வசநங்களை அதற்கு வ்யாக்யாநமாகக் காண்க.

ம - பா. ஜீவன், கருமபலத்தை போக்யமாக நினைத்து புசிக்கிறான். வாஸ்தவத்தில் அது ஸ்வாதுவல்ல. பரமாத்மா புசிப்பதில்லை. இதனால் ஜீவபேதம் ஸித்தமாயிற்று. தத்வஸாரம் முதலிய வற்றிலுள்ள வசநங்களை வ்யாக்யாநமாகக் காண்க. இது மூன்றாவது முண்டகம் முதல் கண்டத்தில் விசேஷம்.

ம - பா. மூன்றாவது முண்டகம் இரண்டாவது கண்டத்தில், பரமாத்மா ப்ராணனை அதிஷ்டித்து ஆவேசிக்கிறானென்றும், பிசாசு முதலியவை யாவேசித்து புருஷனைச் சேர்ந்து ஸுகாதிகளை யநுபவிப்பதை இதற்கு த்ருஷ்டாந்தமாகக் கொள்ளவேணு மென்றும், ஹரி என்கிற பகவானை யடைவது முக்தியென்றும், ப்ரம்மலோகத்தி லிருப்பவர்களுக்கு ப்ரம்மாவின் அந்தகாலத்தி லவனுடன் முக்தியென்றும், இந்த முக்தி ப்ரம்மத்துடன் ஐக்யமல்ல; அவிரோதத்தாலும் ஸாத்ருச்யத்தாலும், ஏகதேசத்தி லிருப்பதாலும், ஐக்ய முண்டென்று சொல்லப்படுகிற தென்றும் அது ஸ்வரூபத்தாலல்ல வென்றும், நித்யமும் பிந்நரூப முடையவர்களுக்கு, ஸமுத்திரத்தில் கலந்த நீருக்குப்போலவே ஐக்யங் கூடாதென்றும், நாமரூபங்களில்லை யென்பது அந்த நாமரூபங்களை யறிவது முக்தி பெறாதவருக்கு அஸாத்யமாகையா லென்றும், ஸமுத்திரத்தில் கலந்திருக்கிற நதீ ஜலத்தை தனித்தறிவதற்கு நம்போல் வாருக்குச் சக்தியில்லை யாயினும் அதைத் தனியே வாயுவானவ னறிந்து மேகங்களி லேற்றுகிறானென்றும், முக்தர்களான மநுஷ்யர்களிலும் தேவதைகளுக்கு ஏற்றமுண்டு இவ்வாறே மற்றோரிடத்திலும் தாரதம்யத்தை யறியவேணுமென்றும் அறியாதபோது நற்கதி யடைவது அஸாத்யமென்றும், ஆகையால் குணபூர்ணனான விஷ்ணுவே உத்தமனென்றும்; கருத்து அடங்கியிருக்கின்றது, இதைமுக்தவிவேகம் மகாவராஹம் முதலிய க்ரந்தங்களால் தெளிவாயறியலாம்.

ஸ்ரீபரப்ரம்மணேநமঃ.

## கோபநிஷத்திற்கு மத்வபாஷ்யம்

𑌮𑌾𑌣𑍍𑌡𑍂𑌕𑍍𑌯𑍋𑌪𑌨𑌿𑌷𑌦𑍍𑌭𑌾𑌷𑍍𑌯𑌮𑍍.

ஸ்ரீபரப்ரம்மணேநம:.

𑌮𑌾𑌣𑍍𑌡𑍂𑌕𑍍𑌯𑍋𑌪𑌨𑌿𑌷𑌦𑍍𑌭𑌾𑌷𑍍𑌯𑌪𑍍𑌰𑌾𑌰𑌂𑌭𑌃.

## அவதாரிகை.

ம - பா. இந்த மாண்டூக்யோபநிஷத்தினுல் நான்குரூபங்களேயுடைய நாராயணனை மண்டூகரூபியாகிய வருணன் ஸ்துதிசெய்தான். இது பாத்மபுராணத்தில் சொல்லப் பட்டது.

ம - பா. ஜகத்துக்கெல்லா மாதாரமாயிருக்கின்றமையால் ஓமென்று பரமாத்மா சொல்லப்படுகிறுன். ப்ருஹத்ஸம்ஹிதையிலிது விஸ்தரிக்கப்பட்டிருக்கிறது. ஆக பூர்ணனுகின்றமையால் ஓங்காரமே எல்லாமென்று, ஸ்துதிசெய்கிறது. இந்த உபநிஷத்து நாலுகண்டங்களின் கருத்தும் ப்ரம்மதர்க்கம் ப்ரம்மாண்டம் முதலியவற்றில் விரிவாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

## பதாந்வயார்த்த பேதங்கள்.

இந்த மாண்டூக்யோபநிஷத் பாஷ்யத்தில் புராணவசநங்கள் விசேஷமாயெழுதப்பட்டிருக்கின்றன. பலவிஷயங்களில் இராமாநுஜபாஷ்யத்திற்போலவே கருத்து கொள்ளப்பட்டிருக்கிறது.

மாண்டூக்யோபநிஷத்திற்கு மத்வபாஷ்யம் முற்றும்.

ஸ்ரீபரப்ரம்மணேநம:.

ஓம்

பரப்ரமமணேநம:

# தைத்திரீயோபநிஷத்

## த்ராவிடபாஷ்யப்ராரம்ப:

தைத்திரீயோபநிஷத்திற்குச் சங்கராசாரியர் செய்த பாஷ்யத்தில் மங்களச்லோகங்கள்.

க. 𑌯𑌸𑍍𑌮𑌾𑌜𑍍𑌜𑌾𑌤𑌂 𑌜𑌗𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌂 𑌯𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌨𑍇𑌵 𑌪𑍍𑌰𑌲𑍀𑌯𑌤𑍇 |
𑌯𑍇𑌨𑍇𑌦𑌂 𑌧𑌾𑌰𑍍𑌯𑌤𑍇 𑌚𑍈𑌵 𑌤𑌸𑍍𑌮𑍈 𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌤𑍍𑌮𑌨𑍇 𑌨𑌮𑌃 ||

உ. 𑌯𑍈𑌰𑌿𑌮𑍇 𑌗𑍁𑌰𑍁𑌭𑌿𑌃 𑌪𑍂𑌰𑍍𑌵𑌂 𑌪𑌦𑌵𑌾𑌕𑍍𑌯𑌪𑍍𑌰𑌮𑌾𑌣𑌤𑌃 |
𑌵𑍍𑌯𑌾𑌖𑍍𑌯𑌾𑌤𑌾𑌃 𑌸𑌰𑍍𑌵𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌾𑌸𑍍𑌤𑌾𑌨𑍍𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌪𑍍𑌰𑌣𑌤𑍋𑌽𑌸𑍍𑌮𑍍𑌯𑌹𑌮𑍍 ||

౧. యస్మాజ్జాతంజగత్సర్వంయస్మిన్నేవప్రలీయతే ।
యేనేదంధార్యతేచైవతస్మైజ్ఞానాత్మనేనమః॥

౨. యైరిమేగురుభిఃపూర్వంపదవాక్యప్రమాణతః ।
వ్యాఖ్యాతాస్సర్వవేదాన్తాస్తాన్నిత్యంప్రణతోఽస్మ్యహమ్॥

முதல்மங்களசுலோகத்தின் கருத்து.

இவ்வுலகத்திற்கு எவன் முதற்காரணமும், நிமித்தகாரணமு மாகின்றனோ; னிடத்தில் இவ்வுலகு லயம்பெறுகின்றதோ; எவனாலிவ்வுலகு தரிக்கப்படுகின்றதோ அந்தஜ்ஞானமூர்த்தியை நாம் வணங்குவோமாக.

இரண்டாவதுமங்களசுலோகத்திற்கு கருத்து.

எந்த பூர்வாசாரியர்களால் வேதாந்தங்களுக்கு தர்க்கவ்யாகரண ப்ரமாணங்க இணங்க வ்யாக்யாநம்செய்யப்பட்டதோ; அவர்களைஎப்போதும்யான்வணங்குகின்றே

சங்கரபாஷ்யத்தில் ப்ரதிஜ்ஞைசுலோகம்.

𑌤𑍈𑌤𑍍𑌤𑌿𑌰𑍀𑌯𑌕𑌸𑌾𑌰𑌸𑍍𑌯 𑌮𑌯𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌤𑌃 |
𑌵𑌿𑌸𑍍𑌪𑌷𑍍𑌟𑌾𑌰𑍍𑌥𑌰𑍁𑌚𑍀𑌨𑌾𑌂 𑌹𑌿 𑌵𑍍𑌯𑌾𑌖𑍍𑌯𑍇𑌯𑌂 𑌸𑌂𑌪𑍍𑌰𑌣𑍀𑌯𑌤𑍇 ||

తైత్తిరీయకసారస్య మయాచార్యప్రసాదతః ।
విస్పష్టార్థరుచీనాంహివ్యాఖ్యేయంసమ్ప్రణీయతే॥

இதற்குக் கருத்து.

இந்த தைத்திரீயோபநிஷத்திற்கு, குருகடாக்ஷத்தினல் இவ்வுபநிஷத்தில் பது தக்கருத்துக்களை யறியவிரும்புகிறவர்களுக்கு உபகாரமாக என்னால் வ்யாக்யாநம் செ ய்யப்படுகிறது.

## தைத்திரீயோபநிஷத்பாஷ்யம்.

### சங்கரபாஷ்யத்தி லவதாரிகை.

பூர்வகாண்டத்தில், பலாபிஸந்தி என்கிற பலகாமனையோடு கூடியவர்களுக்கு ஜ்யோதிஷ்டோமம்முதலிய காம்யகருமங்களும், பலகாமனையில்லாதவர்களுக்கு கீழ்ச்செய்துள்ள பாபகருமங்களைக் கழித்துத்தருகிற தருமங்களும், கூறப்பட்டன. ஆக, கருமாநுஷ்டாநம் ஸம்ஸாரத்திற்குக் காரணமாகின்றது. ஆகையால், ஸம்ஸாரகாரணமாகிய கருமாநுஷ்டாநத்திற்குஹேதுவான காமத்தை நீக்குவதற்கு ப்ரம்மவித்யை உபநிஷத்தில் கூறப்படுகின்றது. வேதத்தால் கருமம் விதிக்கப்பட்டாலு மிதி லாசையுடையவனிதைச் செய்யக்கடவனென்று விதிக்கப்படுகின்றமையால் காமமென்கிற ஆசையில்லாதவன் செய்யவேண்டுவ தில்லையாகையால் கருமத்தை யநுஷ்டிக்கச்செய்கிறது காமமேயாம், காமத்தாலன்றோ கருமத்தில் ப்ரவர்திக்கின்றான். காமங்களையடைந்தவர்களாயின், ஆத்மசுகத்தி லிருக்கின்றமையால், காமமற்றவர்களாகின்றமையால் ஒன்றிலும் ப்ரவர்திக்கமாட்டார்களன்றோ. ஒருமனிதனொன்றை விரும்பினவன் அதை யடைந்தபின் மற்றொன்றை விரும்புகிறானேயன்றி அதையேவிரும்புகின்ற தில்லையன்றோ. ஆகையா லெல்லாமடைந்தானாகில் ஒன்றையும் விரும்பானன்றோ. இவ்வாறு எல்லாமடைந்தவனை அவாப்தஸமஸ்த காமனென்றும் ஆப்தகாமனென்றுஞ் சொல்லுவர். ஆக, ஆப்தகாமன், தனக்கொன்றிலு மாசையில்லாமையினாலே ஒன்றிலும் ப்ரவர்திக்கமாட்டான் தன்னிலேதான்நிற்பான். இப்படி தன்னில்தான்நின்றபின், ஆத்மசுகத்தை யநுபவிக்கிறான். ஆத்மசுகத்தை யநுபவித்தா லவாப்தஸமஸ்தகாமனாகிறான். 'ஆத்மா' என்றாலும் 'தான்' என்றாலும், பொருளொன்றேயாமென்றுணர்க. ஆக, காமங்களையடைவதே காமநிவ்ருத்திக்கு ஹேதுவாகையால், ப்ரம்மவித்யை காரணமாகாமையால் காமநிவ்ருத்திக்காக ப்ரம்மவித்யையென்று சொல்லிய தெங்ஙனமென் றய்யமுற வழியில்லை. ஏனென்றால் ப்ரம்மவித்யையினால் ஆத்மஜ்ஞாநமுண்டாகிறது. ஆத்மாவே ப்ரம்மம். இத்தால் ப்ரம்மவித்யையினா லாத்மஜ்ஞாநமுண்டாவதெங்ஙனமென்கிற ஸந்தேஹம்தீரும். இந்த ஆத்மஜ்ஞாநமாவது, ஆத்மாவேஸத்யம் மற்றவையெல்லாம் அஸத்யமென்பதாம். மெய்யானவஸ்துவில் ஆசையுண்டாகுமேயன்றி பொய்யானவஸ்துக்களி லாசையுண்டாகாது. ஆகையால் ஆத்மஜ்ஞாநத்தால் ஆசைஎன்கிற காமம் நீங்குகின்றது. ஆனதால் ஆசைப்பட்ட வஸ்துக்களையடைந்தவனுக்கு ஆசைநீங்குவதுபோல் ஆத்மஜ்ஞாந முடையவனுக்கும் காமமென்கிற ஆசை நீங்குகின்றமையால் ஆத்மஸ்வரூபத்தை யறிந்தவனை ஆப்தகாமனென்று சொல்லுகிறது. இவ்வாறு ப்ரம்மவித்யையினால் காமங்கள் கழிந்துபோகின்றமையாலென்க. இப்படி யறிந்தவனுக்கு மோக்ஷத்தைச்சொல்லுகிறது. மோக்ஷமாவது அவித்யைநீங்கி யாத்மஸ்வரூபத்தி லிருப்பதேயாம். அவித்யையாவது இதரவஸ்துக்களை ஸத்யமென்றுநினைத்திருப்பது இந்த அவித்யை நீங்குவது ஆத்மாவே ஸத்யமென்கிற வித்யையினாலே

இப்படி சுருதிகள் போதிக்கின்றன. அவையாவன, "அபயம்ப்ரதிஷ்ட
ந்தே" "ஏதமாநந்தமயமாத்மாந முபஸங்க்ராமதி" இவைமுதலியவ
ற்றிற்குப்பொருள். ஆத்ம ஸ்வயம்ப்ரகாசாநுபவமே மோக்ஷமெ
ஆக இப்படிப்பட்ட மோக்ஷத்திற்கு விரோதியான ஸம்ஸாரத்திற்கு
வாயிருக்கிற கருமங்களுக்குக் காரணங்களான காமங்களை யுண்டுபல
அவித்யை நீங்குவதற்கு ப்ரம்மவித்யை உபநிஷத்தில் கூறப்படுகி
யால், உபநிஷத்து மிகவும் முக்யமானது. இதனால் எல்லாசுகங்களு
த்தினாலாகின்றனவாகையால் அந்த கருமத்தைச் சொல்லுகிற பூ
டமே முக்யமென்றும் உபநிஷத்து அநவச்யகமென்றும் கூறுவது
என்பது விளங்கிற்று. இனிகாம்யகருமங்களைச் செய்யாமல் பாபகரு
யும் விட்டிருந்தால் இதற்குமுன்செய்த பாபகருமங்கள் துக்காநு
லொழிந்துபோ மாகையால் ப்ரம்மவித்யை யின்றியே மோக்ஷமுண்ட
ன்றுவது, மோக்ஷமென்பது மகாசுகமாகையால் ஸ்வர்கமென்பதும்
மேயாகையால், ஸ்வர்க்கத்திற்கு கருமமேஸாதநமென்று சுருதி
கின்றமையால் கருமாநுஷ்டாநத்தாலே மோக்ஷமும் ஸித்திக்குமெ
சொல்லலாமேயெனில்; அதுபொருந்தாது; அநேகபூர்வஜந்மங்களில்
கருமங்கள் பலவாயும் விருத்தங்களாயு மிருக்கின்றமையால் இந்
திலே ஸமஸ்தகருமங்களு மநுபவித்துக்கழிக்க முடியாவாம். நர
வான கருமத்தையும் ஸ்வர்க்கஹேதுவான கருமத்தையு மிந்த
லநுபவித்துக்கழிப்பது எப்படிகூடும். முன்செய்த கருமங்களில் இ
த்தில் பலனைத்தருகிற கருமங்கள்பல. ஜந்மாந்தரத்தில் பலனைத்த
பல இவ்வாறு பலகருமங்க ளிருக்கின்றமையாலென்க. ஆனதா லி
த்தி லநுபவித்த கருமங்கள்போக மற்றுள்ள கருமங்களால் ஜந்மாந்
யடைவதுகூடும். இத்தாலிந்த ஜந்மத்தி லநுபவித்தறாத க்ரமசேஷங்
டென்று நிலைநிறுத்தப்பட்டது. இவ்வாறே சுருதிஸ்ம்ருதிகள்பலவும்
யிடுகின்றன. அவையாவன "தத்ய இஹரமணீயசரணாः" "ததச்சே
இவைமுதலியவை. இவற்றிற்குப்பொருள். ஒருஜந்மத்தில் சிலகரு
களை யநுபவித்து கருமசேஷங்களால் புண்யபாபங்களுக்குத் தக்கப
ந்தரங்களை யடைகின்றார்களென்பதாம். இனி, நீங்கள்கூறும்வண்ணம்
கள் பலவுளவாயினும் அவையெல்லா மநுபவத்தா லொழியாவாயினு
பவத்தாலழிந்த கருமங்களை யொழிந்த கருமசேஷங்கள் நித்யகரு
கிய ஸந்த்யாவந்தந பஞ்சமஹாயஜ்ஞாதிகளா லழிந்துபோமாகையா
யத்நமின்றியே மோக்ஷம் ஸித்திக்குமென்று சொல்லவழியில்லை.
றால்; நித்யகருமங்கள் செய்யாதபோது பாபத்தை போதிக்கின்றமை
ன்க. அதாவது, நித்யகருமங்கள் அவற்றைச்செய்யாவிடில் வருகிறபா
வரவொட்டாமற் செய்வதற்கு செய்யப்படுகின்றனவேயன்றி கிழ்
பாபங்களைப் போக்குவதற்கன்று. அப்படிச்ருதிவிதியாமையால்.ஆ

இவற்றைச் செய்யாவிட்டால் வரப்போகிற துன்பம்வாராமலிருப்பதற்காக நித்யகருமங்கள் செய்யப்படுகின்றனவேயன்றி கீழ்ச்செய்துள்ள பாபங்களைத் துலைப்பதற்கன்றென்று அனைவரு மொப்புக்கொள்ளவேணு மென்றவாறு ஆகையால் வேறுயத்நமின்றியே மோக்ஷம் ஸித்திக்குமென்பது கூடாதாயிற்று. கருமசேஷத்தால் ஜந்மாந்தரமே வருமாகையாலென்க. உங்களிஷ்டப்படி முன்செய்த கருமங்களையும் நித்யகருமங்கள் போக்குமென்று ஒப்புக்கொண்டாலும் பாபகர்மங்களைப் போக்குமேயன்றி புண்யகர்மங்களைப்போக்காது. ஏனென்றால் நித்யகருமங்களும் புண்யரூபங் ளாகின்றமையால் புண்யகருமங்களோடு இவற்றிற்கு விரோதமில்லை. ஒருவன், தனக்குவிரோதியையழிப்பானேயன்றி தன்னோடுசேர்ந்தவனைத் தானழிக்கமாட்டான். ஆகையால் விரோதிகளானபாபகர்மங்களை நித்யகருமங்கள் போக்குமேயன்றி விருத்தங்களாகாத புண்யங்களைப் போக்கமாட்டாவன்றோ. புண்யத்தோடு புண்யம் விரோதிக்குமோ. ஆகையாலே புண்யஜந்மங்களாலே மோக்ஷந்தடைப்படும். இதுவுமன்றி, இந்த ஜந்மத்தில் காம்யகர்மங்களைச் செய்யாமலிருப்பதும் தத்வஜ்ஞாநமில்லாதவனுக்கு ஸாத்யமன்று. ஏனென்றால் தத்வஜ்ஞாநமில்லாத போது காம்யகருமங்களைச் செய்வதற்குக் காரணமான காமங்கள் நீங்காமையால், காரணமுண்டாயிருக்கக் காரியம் பிறவாதிராமையாலென்க. ஆத்மஜ்ஞாநமில்லாதவனுக்கு காமங்கள்நீங்குமோ; இனி ஆத்மஜ்ஞாந முடையவர்களுக்கும், காமமிருக்கக்காண்கின்றமையால், தத்வஜ்ஞாநமும் காமநிவ்ருத்திக்கு ஹேதுவல்லவென் றையப்படவேண்டாம். தத்வஜ்ஞாநிக்குக் காமிக்கப்படும் பொருளேயில்லாமையால் காமமொருபோதுங்கூடாது. ஆத்மாவே ப்ரம்மமென்று முன்பேசொன்னோம். ஆகையால் ப்ரம்மத்தையடையவேணுமென்கிற காமமுமில்லையன்றோ. இதுவுமன்றி, நித்யகருமங்களைச் செய்யாமலிருக்கப்போகாதென்று ஒப்புக்கொண்டபடியால் அந்த நித்யகருமங்களாலுண்டாகிற புண்யபலத்தை நீக்குவதற்கு உபாயமில்லாமையாலும் மோக்ஷத்திற்கு வழியில்லை. புண்யபாபங்களிரண்டும் மோக்ஷத்திற்கு விருத்தங்களன்றோ. நித்யகருமங்கள் புண்யத்திற்கு ஹேதுவல்ல; பாபம்பிறவாமலிருப்பதற்கு ஹேது என்று முன்சொல்லப்பட்டதே யென்றால் அதுபொருந்தாது; ஏனென்றால், அபாவத்தினால் ஒருவஸ்துவும் பிறவாது என்பது எல்லோருமங்கீகரித்தவிஷயம். நித்யகருமங்களைச்செய்யாமையினால் பாபமுண்டாகிறதென்றும் அந்தபாபத்தை நித்யகருமங்கள் நீக்குகின்றனவென்றும் சொல்லும்போது பாபமென்கிறவஸ்து நித்யகருமங்களைச் செய்யாமையாகிற அபாவத்தாலுண்டாகிற தென்று ஒப்புக்கொள்ளப்பட்டதாகிறது. அதுவிருத்தமன்றோ. "அகுர்வந்விஹிதம்கர்ம" என்கிறவசநத்தில் நித்யகருமங்களைச் செய்யாமையினால் பாபமுண்டாமென்று சொல்லப்பட்டபடியால் நித்யங்களைச் செய்யாமையாகிற அபாவத்தால் பாபமாகிறவஸ்து பிறக்குமென்று ஒப்புக்கொள்ளவேணும். அபாவத்தால் ஒருவஸ்துவும் பிறவாதென்பது இக்

தவசநத்திற்கு விருத்தமாகையால் நம்பத்தக்கதல்லவென்றால், இதுதக்கதன்று. ஏனென்றால் இந்தவசநத்தில் நித்யகருமங்களைச் செய்யாமையினால் பாபமுண்டாமென்று சொல்லப்படவில்லை. நித்யகருமங்களைச் செய்யாததுகொண்டு இவனுக்குப் பாபம்கழிந்ததில்லை என்று அறிவுடையோ ரூகிக்கின்றார்கள் என்று சொல்லுகிறது. பாபம்நீங்கியவனுக்கே நித்யகருமங்களி னனுஷ்டானத்தி லாசையுடனனுஷ்டிப்பது கூடுமாகையால் நித்யகருமங்களைச்செய்யாதவனைப் பாபியென் றூகிக்கலாமன்றோ. ஆகையா லந்தவசநத்திற்குப் பொருளறியாமல் நித்யகருமங்களைச் செய்யாமையாகிற அபாவத்தினால் பாபமென்கிறவஸ்து உண்டாகும்; அந்தபாபமானது நித்யகருமங்களைச்செய்வதினாலுண்டாகாமலிருக்கு மென்பதற்கு யுக்தியில்லை. ஆகையால் நித்யகருமங்களால் புண்யமேயுண்டாகிறது. அந்தபுண்யத்தால் மோக்ஷவிரோதம்வரும். ஆக இப்படி பலவழியாலும், புண்யம் பாபம், என்கிற கருமங்களை நீக்கப்போகாமையால், தத்வஜ்ஞாநமில்லாமலே, காம்யகர்மம் நிஷித்தகர்மம் இவற்றைச்செய்யாமலிருந்தால் தனக்குத்தானே மோக்ஷம் ஸித்திக்குமென்றும் இதற்காக ப்ரம்மவித்யை வேண்டுவதில்லையென்றும் சொல்லுகிறமுதல் பக்ஷம் தள்ளப்பட்டது. இனி, ஸ்வர்கம்போல உத்தமசுகமான மோக்ஷமும் கருமானுஷ்டாநத்தாலே யுண்டாகுமாகையா லதற்காகப்ரம்மவித்யை வேண்டுவதில்லை என்றுசொல்லுகிற இரண்டாவதுபக்ஷமும் தக்கதன்று. ஏனென்றால், நித்யமாகியது ஒன்றாலுண்டுபண்ணப்படமாட்டாது மோக்ஷமென்பது நித்யமானதாகையால் கருமானுஷ்டாநத்தா லுண்டாகாதன்றோ. யாதொன்று உண்டாக்கப்படுகின்றதோ அது அநித்யமாயிருப்பது உலகத்தில் காணப்பட்டிருக்கிறது. ஆகையால் நித்யமானமோக்ஷம் கருமானுஷ்டாநத்தா லுண்டுபண்ணப்படமாட்டாது. வித்யையோடு கூடிய கருமானுஷ்டாநத்திற்கு நித்யமான மோக்ஷத்தை யுண்டுபண்ணுகிற சக்தியுண்டென்று, ஒப்புக்கொள்ளுகிறோமென்றால் அதுவிருத்தம். நித்யமாகியது உண்டாகிறது என்பது கூடுமோ. இனி, ஒருபொருளழிந்தால் அதுவே மீண்டும்பிறப்பதில்லையாகையால் அந்த அழிவுக்கு அழிவில்லை. ஆகையால், த்வஸமென்கிற அந்த அழிவு நித்யமாயிருந்தாலும் ஒருகாரணத்தா லுண்டாகின்றதன்றோ. அதுபோல அழிவில்லாமையாலே நித்யமான மோக்ஷமும் கருமானுஷ்டாநமாகிற காரணத்தாலே யுண்டாகுமென்பதில் விரோதமில்லையென்றால் அதுவும் சேராது. அபாவரூபமாகிய த்வஸமென்கிற அழிவு நித்யமாயிருக்கையில் அதுகாரணத்தாலே யுண்டானது அபாவரூபமாகையாலே; ஆகையால் வஸ்துவாகிய மோக்ஷம் நித்யமாகையால் காரணத்தாலுண்டாகாது. மோக்ஷம் அபாவரூபமல்லவன்றோ. வாஸ்தவத்தில் நிரூபித்துப்பார்த்தால், த்வஸமென்கிற அழிவுகாரணத்தா லுண்டாகிறதென்பதும் ப்ரமமேயாகின்றது. அதற்கொருவிசேஷமுங்கூடாதன்றோ. ஆகையால்த்வஸமும் உண்டாகிறதில்லை. இந்தத்வம்ஸத்திற்கு உத்பத்தியாவது ஸத்தாஸம்பந்தமென்றாவது விகாரஸம்பந்தமெ

ன்றுவது மற்றொருவிதமென்றுவது சொல்லமுடியாது. அவற்றை அப்ராவ த்தி லங்கீகரிக்கவில்லையன்றே. த்வம்ஸமும் அபாவமேயன்றோ. ஆகையால் நிர்விசேஷமமான இந்தத்வம்ஸத்தை யுண்டாயிற் றென்பது ப்ரமமேயாம். இதுவுமன்றி அபாவரூபமாகியத்வம்ஸத்தில் உத்பத்திமுதலிய விசேஷங்களை யங்கீகரிக்கவழியில்லை. இது ஒருவஸ்துவைப்பற்றி வ்யவஹரிக்கப்படுமேய ன்றி தனியே வ்யவஹரிக்கப்படாது. ஆகையால் கடம் படம் என்று வஸ்து பேதத்தை வ்யவஹரிப்பதுபோல் கடாபாவம், படாபாவம், கடத்வம்ஸம், படத்வம்ஸம், என்றுக்ரியைமுதலியவற்றைச்சேர்த்து த்ரவ்யம்போல வ்யவ ஹரிக்கப்படுகிறது. வாஸ்தவத்தில் நிர்விசேஷமாகையால் இது ப்ரமமேயாகி ன்றது. இதுவுமன்றி, "நீலோத்பலம்" - 'கருநெய்தல்' என்கிற விடத்தில் கருமைபூவுக்கு விசேஷணமாயும் கருமைக்கு பூவிசேஷ்யமாயும் தோற்றுவ துபோல "கடத்வம்ஸம்" என்கிறவிடத்தில் த்வம்ஸத்திற்குகடம் விசேஷண மாயும், கடத்திற்கு த்வம்ஸம் விசேஷ்யமாயும் தோற்றுகிறதன்றோ. த்ருஷ் டாந்தமாகிய "கறுநெய்தல்" என்கிறவிடத்தில் விசேஷ்யமாகிய பூவானது விசேஷணமாகிய கறுமையோடு கூடியிருப்பதுபோல 'கடத்வம்ஸம்' என் கிறவிடத்தில் த்வம்ஸமென்கிற விசேஷ்யமாகிய அழிவானது விசேஷணமா கிய கடத்தோடு கூடியிருப்பதில்லையன்றோ. அப்படிகூடியிருக்குமாகில் கட த்தோடுகூடியிருக்கிற ஒருதேசம்போல த்வஸமும்ஒருவஸ்துவேயாமன்றோ, ஆகையா லொருவழியாலும் அபாவரூபமாகிய த்வஸ முதலிய வற்றிற்கு விசேஷஸம்பந்தஞ் சொல்லப்போகாமையால், இதனை உத்பத்தி முதலிய தருமங்களோடு கூடியதாகநினைப்பது ப்ரமமேயாம், ஆகையால் அழிவில்லா மையால் நித்யமான த்வம்ஸம் ஒருகாரணத்தா லுண்டாவதுபோல அழிவில் லாமையால் நித்யமான மோக்ஷமும் கருமாநுஷ்டாநமாகிய காரணத்தால் உண்டாகலாமென்று சொல்லநினைப்பது மிகவுங்கூடாததாயிற்று. ஆகை யால் கருமாநுஷ்டாநத்தினுல் மோக்ஷ முண்டாகுமென்பது தகாது. இனி மோக்ஷம் நித்யமானலும், வித்யை கருமாநுஷ்டாநம் இவைகளுக்கிடமாகிய ஆத்மா நித்யனுகையால் கங்காப்ரவாஹம் அழிவின்றிப் பெருகுவதுபோல் நித்யமான கருமாநுஷ்டாந ப்ரவாஹத்தால் மோக்ஷப்ரவாஹம் நித்யமாயி ருக்கக்கூடுமென்று சொல்லுவதும் யுக்தமல்ல. மோக்ஷத்தை மிகவும் ஸுக ரூபமாக ஒப்புக்கொண்டபடியால் மோக்ஷத்திற்கு கருமாநுஷ்டாந ப்ரவா ஹம் வேணுமென்றுல் கருமத்தை யநுஷ்டிப்பது வருத்தமாயிருப்பதுபற்றி துக்கமுண்டாமாகையால் மோக்ஷத்திலும் துக்கத்தை யொப்புக்கொள்ளவே ண்டுகின்றமையாலும் கருமாநுஷ்டாந மில்லையென்றுல் காரணமில்லாமை யாலே மோக்ஷத்திற்கு அழிவு வருகின்றமையாலுமென்க. ஆகையால் தத்வ ஜ்ஞாநமின்றி யொருவழியாலும் மோக்ஷம் ஸித்தியாமையால், உலகமெல் லாம்பொய் ஆத்மா ஒருவனே பரமார்த்தபூதனென்று பிறக்கிற தத்வஜ்ஞா நத்தால் காமிக்கத்தகுந்த வஸ்துக்களில்லையென் றுணர்ந்தமையால் வஸ்துக்

களை மெய்யென்றெண்ணியிருந்த அஜ்ஞாநமாகிற அவித்யையும், காமமுங் கழிந்து கருமங்களில் ப்ரவ்ருத்தியின்றி ஆத்மஸுகத்தில் நிலைநிற்கையே மோக்ஷமாகையால், ப்ரம்மமேயாகிய ஆத்மஸ்வரூபத்தை அறிவதற்கு ப்ரம்ம வித்யையே காரணமாகையால் அந்த ப்ரம்மவித்யையை ப்ரதிபாதிக்கிற உப நிஷத்து ப்ராரம்பிக்கப்படுகிறது. கர்பம் ஜந்மம் ஜரைமுதலிய துக்கங்களை நீக்குவதினால் ப்ரம்மவித்யைக்கு உபநிஷத்தென்று பெயரா யிருக்கிறது. அந்த ப்ரம்மவித்யையை வெளியிடுகிறபடியால் வேதாந்தபாகத்திற்கும் உப நிஷத்தென்று பெயராயிற்று,

இவ்வுபநிஷத்தின் மத்வபாஷ்யத்திலுள்ள மங்களச்லோகம்.

ஸத்யம் ஜ்ஞாநமநந்தாநந்தம் ப்ரஹ்ம ஸர்வஶக்த்யேகம் ।
ஸர்வைர்தேவைரீட்யம் விஷ்ண்வாக்யம் ஸர்வதைவ நதோஸ்ம்யேதம் ॥

సత్యం జ్ఞానమనన్తానన్దం బ్రహ్మ సర్వశక్త్యేకమ్ ।
సర్వైర్దేవైరీడ్యం విష్ణ్వాఖ్యం సర్వదైవ నతోఽస్మ్యేతమ్ ॥

இதற்குக் கருத்து.

ஸமஸ்ததேவதைகளாலும் ஸ்துதிசெய்யப்படுகிறதாய் மிகவும் ப்ரியமா யிருப்பதாய், ஸத்யஜ்ஞாநாநந்த ஸ்வரூபமாய் ஆநந்தஸாகரமாய் ஸர்வசக்தி யுடையதாயிருக்கிற விஷ்ணுவென்கிற அத்விதீயப்ரம்மத்தை எப்போதும் வணங்குகின்றேனென்பதாம்.

இவ்வுபநிஷத்தின் மத்வபாஷ்யத்தி லவதாரிகை.

ஸூர்யமண்டலத்தி லிருக்கிற விஷ்ணுமூர்த்தியினிடத்தி லிருந்து வேதா ந்தரஹஸ்யங்களை ப்ரம்மாகேட்டு வருணனுக் குபதேசித்தார். வருணன் ப்ருகுவுக்கு உபதேசித்தான். ப்ருகு அந்தப்படி வேதாந்தரஹஸ்யங்களால் விஷ்ணுவை ஸ்துதிசெய்தார். இந்த உபநிஷத்தால் அவை வெளியிடப்படுகி ன்றன. இதை யஜுஸ்ஸம்ஹிதையில் காண்க.

இவ்வுபநிஷத்தின் இராமாநுஜபாஷ்யத்திலுள்ள
மங்களச்லோகங்கள்.

அதஸீகுச்சஸச்சாயமஞ்சிதோரஸ்ஸ்தலம் ச்ரியா ।
அஞ்ஜநாசலச்ருங்காரமஞ்ஜலிர்மம காஹதாம் ॥

అతసీగుచ్ఛసచ్ఛాయమఞ్చితోరస్స్థలం శ్రియా ।
అఞ్జనాచలశృఙ్గారమఞ్జలిర్మమ గాహతామ్ ॥

வ்யாஸம் லக்ஷ்மணயோகீந்த்ரம் ப்ரணம்யாந்யாந் குரூநபி ।
தைத்திரீயகவேதாந்தவிவ்ருதிம் கரவாண்யஹம் ॥

వ్యాసం లక్ష్మణయోగీన్ద్రం ప్రణమ్యాన్యాన్ గురూనపి ।
తైత్తిరీయకవేదాన్తవివృతిం కరవాణ్యహమ్ ॥

இவற்றுள் முதல்சுலோகத்திற்குக் கருத்து

கறுத்த திருநிறத்தையுடையனாய் திருமார்பில் லக்ஷ்மியோடுகூடினவனாய், திருவேங்கடமலையி லெழுந்தருளியிருக்கிற ஸ்ரீநிவாஸனுக்கு நான்செய்கிற அஞ்சலிப்ரீதியை வளர்க்கவேணும் என்பதாம்.

இரண்டாவது சுலோகத்திற்குக்கருத்து.

ப்ரம்மஸூத்ரம்செய்த வ்யாஸரையும் பாஷ்யகாரரான பகவல்லக்ஷ்மண யோகீந்த்ரரையும் மற்றுமுள்ள ஆசாரியர்களையும் வணங்கி தைத்திரீயோபநிஷத்திற்கு நான் வ்யாக்யாநம் செய்கிறேனென்பதாம்.

இவ்வுபநிஷத்திற்கு இராமாநுஜபாஷ்யத்தி லவதாரிகை.

இந்த தைத்திரீயோபநிஷத்தில் ப்ரம்மப்ராப்திக்கு ஸாதநமான பரவித்யை கூறப்படுகிறது.

𑌹𑌰𑌿𑌃 𑌓𑌮𑍍॥ 𑌶𑌂 𑌨𑍋 𑌮𑌿𑌤𑍍𑌰𑌃 𑌶𑌂 𑌵𑌰𑍁𑌣𑌃 । 𑌶𑌂 𑌨𑍋 𑌭𑌵𑌤𑍍𑌵𑌰𑍍𑌯𑌮𑌾 । 𑌶𑌂 𑌨 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑍋 𑌬𑍃𑌹𑌸𑍍𑌪𑌤𑌿𑌃 । 𑌶𑌂 𑌨𑍋 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌰𑍁𑌰𑍁𑌕𑍍𑌰𑌮𑌃 । 𑌨𑌮𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍇 । 𑌨𑌮𑌸𑍍𑌤𑍇 𑌵𑌾𑌯𑍋 । 𑌤𑍍𑌵𑌮𑍇𑌵 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌸𑌿 । 𑌤𑍍𑌵𑌾𑌮𑍇𑌵 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌵𑌦𑌿𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 । 𑌋𑌤𑌂 𑌵𑌦𑌿𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 । 𑌸𑌤𑍍𑌯𑌂 𑌵𑌦𑌿𑌷𑍍𑌯𑌾𑌮𑌿॥ ௧॥

హరిః ఓమ్॥ శన్నో మిత్రశ్శం వరుణః । శన్నో భవత్వర్యమా । శన్న ఇంద్రో బృహస్పతిః । శన్నో విష్ణురురుక్రమః । నమో బ్రహ్మణే । నమస్తే వాయో । త్వమేవ ప్రత్యక్షమ్బ్రహ్మాసి । త్వామేవ ప్రత్యక్షమ్బ్రహ్మ వదిష్యామి । ఋతం వదిష్యామి । సత్యం వదిష్యామి॥ ౧॥

(ப-ம்.) 𑌮𑌿𑌤𑍍𑌰𑌃 - மித்திரனென்கிற ஸூர்யன், 𑌨𑌃 - நமக்கு, 𑌶𑌮𑍍 - ஸுகமாக, 𑌭𑌵𑌤𑍁 - ஆகவேணும், (ஸூர்யன் ஸுகத்தைத் தரவேணுமென்றவாறு; இவ்வாறே மேலுங்காண்க) 𑌵𑌰𑍁𑌣𑌃 - வருணதேவதை, 𑌨𑌃 - நமக்கு, 𑌶𑌮𑍍 - ஸுகமாக, 𑌭𑌵𑌤𑍁 - ஆகவேணும், 𑌅𑌰𑍍𑌯𑌮𑌾 - அர்யமா, என்கிறஸூர்யன், 𑌨𑌃 - நமக்கு, 𑌶𑌮𑍍 - ஸுகமாக, 𑌭𑌵𑌤𑍁 - ஆகவேணும், 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌃 - இந்திரனும், 𑌬𑍃𑌹𑌸𑍍𑌪𑌤𑌿𑌃 - இந்திரனுக்கு ஆசாரியராகிய ப்ருஹஸ்பதியும், 𑌨𑌃 - நமக்கு, 𑌶𑌮𑍍 - ஸுகமாக, 𑌭𑌵𑌤𑍁 - ஆகவேணும், 𑌉𑌰𑍁𑌕𑍍𑌰𑌮𑌃 - உரு - பெரிதான, க்ரம: - அடிவைப்புடைத்தாயிருக்கிற, 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌃- விஷ்ணுவானவர், 𑌨𑌃 - நமக்கு, 𑌶𑌮𑍍 - ஸுகமாக, 𑌭𑌵𑌤𑍁 - ஆகவேணும், (த்ரிவிக்கிரமாவதாரத்தில் உலகை அடியிட்டளந்த விஷ்ணு ஸுகத்தைத்தரவேணுமென்றவாறு.) "சந்நோபவத்வர்யமா" என்கிற வாக்யத்தி லிருக்கிற 'பவது' என்கிறபதத்தை மற்றவாக்யங்களிலும் கூட்டிக்கொண்டு பொருளுரைக்கப்பட்டிருக்கிறது. 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍇-(𑌸𑌂) வாயுவுக்கு, (𑌸𑌾) வேதத்திற்கு, 𑌨𑌮𑌃 - நமஸ்காரம் செய்கிறேன், 𑌵𑌾𑌯𑍋 - வாயுபகவானே, 𑌤𑍇- உனக்கு, 𑌨𑌮𑌃 - நமஸ்காரம், 𑌤𑍍𑌵𑌮𑍇𑌵-நீயே, 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌂 - ப்ரத்யக்ஷமான, 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮- ப்ரம்மமாக, 𑌅𑌸𑌿 - ஆகிறாய், 𑌤𑍍𑌵𑌾𑌮𑍇𑌵 - உன்னையே, 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌂 - ப்ரத்

தாகையாலும் கர்மங்களாலே யுண்டுபண்ணப்படும் பயன்கள் அழிவுள்ளனவாகக் காண ப்படுதலாலும் கர்மங்களாலுண்டுபண்ணப்படும். மோக்ஷமென்றும் பயனும் அழிவுள்ள தாக யேற்படுமாதலால். அப்படி சொல்ல வொண்ணாது வித்தையை யங்கமாகச் செய்து கர்மங்களாலேயே மோக்ஷம் பெறலாமென்பதும் வித்தையையும் கர்மங்களையும் சரியா கச்செய்து மோக்ஷம்பெறலாமென்கிறது. மேற்கூறிய காரணங்களாலேயே கூடாது. ஆனால் வித்தையும் கர்மங்களும் மோக்ஷத்தையுண்டாக்கும் காரணங்களல்ல. விலக்கு களை நீக்குகிறவைகள் ஆதலால் மோக்ஷமழிவில்லை யென்பதற்குக் குறையில்லை. வித்தை யினாலும் கர்மங்களாலும் விலக்குகள் நீக்கப்பட்டாய் "ஸௌர்யத்வாரேண தயோர்த்தவ மாயன்" என்கிற சுருதிகளின்படியே மோக்ஷத்தை யடையலாமென்னில் மோக்ஷம் எல்லாவிடத்திலும் வியாபித்ததாலும் மோக்ஷமென்பது ப்ரம்மத்தைக் காட்டிலும் வே றானதல்லவாகையாலும் மோக்ஷத்தை யடைகிறவர்களும் அந்த ப்ரம்மத்தைக் காட்டி லும் வேறுபட்டவர்களல்லாமையாலும் மோக்ஷம் அடையவேண்டுவதாகிய வேறுவஸ்து வல்ல ஒரு வஸ்துவை யடைகிற தென்றால் அடையப்பட்ட பொருள் அடைகிற பொரு ளைக்காட்டிலும் வேறுபட்டதாயன்றோ இருக்கவேண்டும். அப்படி ஏற்படவில்லை "தத் ஸ்ருஷ்ட்வா ததேவானுப்ராவிஶத் க்ஷேத்ரஜ்ஞம்சாபிமாம்வித்திஸர்வக்ஷேத்ரேஷு" என்கிற சுருதிஸ்மிருதிகளாலிரண்டும் ஒன்றே யென்று ஏற்படுகிறது. ஆனால் அடைகி றான் என்றும் சுகங்களை யவ்விடத்திலனுபவிக்கிறான் என்றும் சொல்லியிருக்கிற "ஸஏ கதா; ஸயதிபித்ருலோககாமஃ ஸ்த்ரிபிர்வாயானைர்வா" என்கிற சுருதிகளுக்கு யென்ன வழியென்னில் அவைகள் காரிய ப்ர்ம்மத்தைச் சொல்லுகின்றன. காரணமாகிய ப்ரம்ம த்தினிடத்தில் "ஏகமேவாத்விதீயம்; யத்ரநாந்யத்பஶ்யதி; தத்கேநகம்பஶ்யேத்" என்கிற சுருதிகளின்படியே பேதங்களில்லையன்றோ மேலும் வித்தைக்கும் கர்மங்களுக்கும் விரோதமாதலால் இரண்டும் ஒன்றுசேரமாட்டாது. ஏனெனில் வித்தையோ ப்ர்ம்மம் ஒன்றேயுளது. மற்ற பேதங்கள் பொய்யானவைகள் என்கிற அறிவு கர்மங்களோ செய் கிறவன் தேவதை கருவிகள் முதலிய வனேக பேதமுள்ளது. இவை யிரண்டும் சத்ய மானவையென்று சொல்லவொண்ணாதாகையால் "யத்ரஹித்வைதமிவபவதி; ம்ருத்யோ ஸ்ஸம்ருத்யுமாப்னோதி; அதயத்ராந்யத்பஶ்யதிததல்பம்; அந்யோஸாவந்யோஹமஸ்மிதி; உதரமந்தரம்குருதே அததஸ்யபயம்பவதி" என்கிற சுருதிகளினாலும் "ஏகதைவாநுத்ரஷ்டவ்யம்; ஏகமேவாத்விதீயம் ப்ரஹ்மைவேதம்ஸர்வம் ஆத்மைவேதட்ஸர்வம்" என்கிற சுரு திகளினாலும் ஒன்று என்கிற வறிவே மெய்யறிவென்றும் பேதங்களைக் காட்டுமறிவு பொய்யறிவென்றும் ஏற்படுகிறது. ஆனால் வேதங்களில் கர்மங்களைச் செய்யவேண்டு மென்று ஏற்படுகிறதே வேதங்களோ புருஷர்களுக்குப் பயன்கொடுக்கு மவைகளைச் சொல்லுகின்றன வென்கிறதற்கு விரோதிக்காதோ வென்னில் வித்தையைச் சொல்லு கிற சுருதிகள் சம்சாரத்திலிருந்து சீவனுக்கு முத்தியைத்தரவேண்டி சம்சாரத்திற்கு காரணமாகிய அவித்தை வித்தையால் போய்விடுகிறது என்று சொல்லுகிறது. கர்மங்க ளைச் சொல்லும் சுருதிகளோ கர்மங்களைச்செய்து அதினால் மோக்ஷத்தை யடையவேண் டியவர்களுக்குபாயத்தை நீக்குகிறதையும் அல்லாதவர்களுக்கு பசு பிள்ளை முதலிய வைகளை யடைகிறதென்கிற பயன்களைச் சொல்லுகிறதே தவிர அவைகளில் சொல்லிய மேற்கூறிய பேதங்களை மெய்யென்று சொல்லுவதில் அவைகளுக்குக் கருத்தில்லை. உபாய மாகிய விலக்கு இருந்தால் மேற்கூறிய வித்தையுதிக்கமாட்டாது. வித்தை யுதியாவிடில் அவித்தை நீங்கமாட்டாது. அவித்தை நீங்காவிடில் சம்சாரம் ஒழியாது. ஆகையால் பாபங்களைப் போக்குவதற்குக் கர்மங்களைச் செய்யவேண்டுவதாதலால் கர்மங்களைச் செய்யவேண்டுமென்கிற சுருதிகளுக்கு விரோதமில்லை. மேற்கூறிய காரணங்களால் கர்

மங்கள் வித்தைக்கு விலக்குகளாயிருக்கிற பாவங்களைப்போக்கி வைக்கிறதாகையால் வித்தையுண்டானவனுக்குக் கர்மங்களால் பயனில்லை. அக்நிஹோத்திரம் முதலான கர்மங்களில் இல்லறமில்லாதவர்களுக் கதிகாரமில்லா திருந்தபோதிலும், எல்லாருக்கும் பொதுவாகப் பேசப்பட்ட சத்யம் சொல்லுதல் முதலிய கர்மங்களைக்கொண்டு மற்றவர்களுக்கும் வித்தையுதிக்கலாம்.

(ரா - ஹா.) பதார்த்தம்போலே கருத்து.

ஶம் நோ மித்ர꞉ ஶம் வருண꞉ । ஶம் நோ ப⁴வத்வர்யமா । ஶம் ந இந்த்³ரோ ப்³ருஹஸ்பதி꞉ । ஶம் நோ விஷ்ணுருருக்ரம꞉ । நமோ ப்³ரஹ்மணே । நமஸ்தே வாயோ । த்வமேவ ப்ரத்யக்ஷம் ப்³ரஹ்மாஸி । த்வாமேவ ப்ரத்யக்ஷம் ப்³ரஹ்மாவாதி³ஷம் । ருதமவாதி³ஷம் । ஸத்யமவாதி³ஷம் ॥௧॥ தந்மாமாவீத் । தத்³வக்தாரமாவீத் । ஆவீந்மாம் । ஆவீத்³வக்தாரம் । ஓம் ஶாந்தி꞉ ஶாந்தி꞉ ஶாந்தி꞉ । ஸத்யமவாதி³ஷம் பஞ்ச ச ॥

శన్నో మిత్రశ్శం వరుణః । శన్నో భవత్వర్యమా । శన్న ఇన్ద్రో బృహస్పతిః । శన్నో విష్ణురురుక్రమః । నమో బ్రహ్మణే । నమస్తే వాయో । త్వమేవ ప్రత్యక్షం బ్రహ్మాసి । త్వామేవ ప్రత్యక్షం బ్రహ్మావాదిషం । ఋతమవాదిషం । సత్యమవాదిషం ॥ ౧ ॥ తన్మామావీత్ । తద్వక్తారమావీత్ । ఆవీన్మాం । ఆవీద్వక్తారం ఓం శాంతిః శాంతిః శాంతిః । సత్యంవదిష్యామి పఞ్చ చ ॥

(ப - ம்.) மித்ர꞉ - சூரியன், ந꞉ - நமக்கு, ஶம் - சுகத்தைத்தருபவனாக, ப⁴வது - ஆகட்டும், வருண꞉ - வருணன், ந꞉ - நமக்கு, ஶம் - சுகத்தைக்கொடுக்கிறவனாக, ப⁴வது - ஆகட்டும், அர்யமா - துவாதசாதித்தவர்களில் ஒருவனான யமனானவன், ந꞉ - நமக்கு, ஶம் - சுகத்தைக்கொடுக்கிறவனாக, ப⁴வது - ஆகட்டும், இந்த்³ர꞉ - இந்திரனும், ந꞉ - நமக்கு, ஶம் - சுகத்தைக்கொடுக்கிறவனாக, ப⁴வது - ஆகட்டும், ப்³ருஹஸ்பதி꞉ - பிருகஸ்பதியானவன், ந꞉ - நமக்கு, ஶம் - சுகத்தைக்கொடுக்கிறவனாக, ப⁴வது - ஆகட்டும், உருக்ரம꞉ - விஸ்தாரமான வடிவைப்பையுடைய, விஷ்ணு꞉ - விஷ்ணுவானவர், ந꞉ - நமக்கு, ஶம் - சுகத்தைக்கொடுக்கிறவராக, ப⁴வது - ஆகட்டும், ப்³ரஹ்மணே - வாயுவின்பொருட்டு, நம꞉ - சேவிக்கிறேன், (ரா) - ப்³ரஹ்மணே - வேதத்தின்பொருட்டு, நம꞉ - சேவிக்கிறேன், ஹே வாயோ - வாராய் வாயுவே, தே - உன்பொருட்டு, நம꞉ - சேவிக்கிறேன், த்வமேவ - நீதானே, ப்ரத்யக்ஷம் - புலப்படக்கூடிய, ப்³ரஹ்ம - ப்ரம்மமாக, அஸி - ஆகிறாய், த்வாமேவ - உன்னைத்தானே, ப்ரத்யக்ஷம் - புலப்படும்படியான, ப்³ரஹ்ம - ப்ரம்மமாக, அவாதி³ஷம் - சொன்னேன், ருதம் - சாஸ்திரத்தின்படி நிச்சயிக்கப்பட்ட பொருளாக. (ரா) ருதம் - தோஷமில்லாத சப்தத்தை, அவாதி³ஷம் - சொன்னேன், ஸத்யம் - அப்படி நிச்சயித்து வாயினாலே சொல்லப்பட்டும் சரீரத்தால் செய்யப்பட்டுமிருக்கும் பொருளாக, (ரா) ஸத்யம் - மெய்ப்பொருளடங்கின வார்த்தையை, அவாதி³ஷம் - சொன்னேன், தத் - யென்

ளுல் ஸ்தோத்திரம் செய்யப்பட்ட வாயுவென்று பெயர்கொண்ட ப்ரம்மமானது, (ஈம்) தஸ் - யென்ளுல் ஓதப்பட்ட வேதமானது, ஊம் - வேதமோதுகிற வென்னே, ஆவது - காப்பாற்றிவிட்டது. தஸ் - அந்த வாயுமென்கிற ப்ர்ம்மமானது, (ஈம்) தஸ் - அந்த வேதமானது, வக்தாரம் - ஓதுவித்த வாசிரியனே, ஆவீஸ் - காப்பாற்றிவிட்டது, ஊம் - என்னே, ஆவீஸ்-காப்பாற்றிவிட்டது, வக்தாரம் - ஓதுவித்தவனே, ஆவீஸ் - காப்பாற்றிவிட்டது. அதிக ஆதரம் தோற்றுகைக்காக ஒன்றையே யிரட்டிப் பேசுகிறது, ஶாந்தி: - விரோதிகளுடைய சாந்தியானது, (ஆஸ்து - உண்டாகட்டும்).

(ஶம்-ஹாரா-ஹா.) இரண்டு பாஷியங்களும் பதார்த்தம்போலே.

ஶீக்ஷாவல்லீ ஸம்பூர்ணம்.

## ஆநந்தவல்லீ.

ஹரி:ஓம்|ஸஹ நாவவது|ஸஹ நௌ பு நக்து|ஸஹவீர்யம்கரவாவஹை | தேஜஸ்வி நாவதீதமஸ்து மாவித்விஷாவஹை | ஓம்ஶாந்திஶ்ஶாந்திஶ்ஶாந்தி:|ப்ரஹ்மவிதாப்நோதிபரம் | ததேஷாப்யுக்தா|ஸத்யம்ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்மயோவேத நிஹிதம்குஹாயாம்பரமேவ்யோமந் ||௧||

ஸோऽஶ்நுதே ஸர்வாந்காமாந்ஸஹ|ப்ரஹ்மணாவிபஶ்சிதேதி|தஸ்மாத்வா ஏதஸ்மாதாத்மந ஆகாஶஸ்ஸம்பூத: | ஆகாஶாத்வாயு: | வாயோரக்நி: | அக்நேராப: | அத்ப்ய:ப்ருதிவீ | ப்ருதிவ்யா ஓஷதய: | ஓஷதீப்யோऽந்நம் | அந்நாத்புருஷ: ||௨||

ஸவா ஏஷ புருஷோऽந்நரஸமய: | தஸ்யேதமேவஶிர: | அயம்தக்ஷிண:பக்ஷ: | அயமுத்தர:பக்ஷ:| அயமாத்மா | இதம்புச்சம்ப்ரதிஷ்டா|ததப்யேஷ ஶ்லோகோ பவதி | இதிப்ரதமோऽநுவாக:||

హరిఃఓమ్ సహనావవతు । సహనౌభునక్తు । సహవీర్యంకరవావహై । తేజస్వినావధీతమస్తుమావిద్విషావహై । ఓంశ్శాంతిశాంతిశ్శాంతిః॥ బ్రహ్మవిదాప్నోతిపరం తదేషాభ్యుక్తా। సత్యం జ్ఞానమనంతంబ్రహ్మ। యోవేదనిహితం గుహాయాంపరమేవ్యోమన్ ॥ ౧ ॥

సోఽశ్నుతేసర్వాన్ కామాన్ సహ । బ్రహ్మణావిపశ్చితేతి।తస్మాద్వాఏతస్మాదాత్మనఆకాశస్సంభూతః । ఆకాశాద్వాయుః । వాయోరగ్నిః । అగ్నేరాపః । అద్భ్యఃపృథివీ । పృథివ్యాఓషధయః । ఓషధీభ్యోఽన్నం । అన్నాత్పురుషః ॥ ౨ ॥

సవాఏషపురుషోఽన్నరసమయః । తస్యేదమేవశిరః । అయందక్షిణఃపక్షః । అయముత్తరః పక్షః । అయమాత్మా । ఇదంపుచ్ఛంప్రతిష్ఠా । తదప్యేషశ్లోకోభవతి ॥

(ப - ம்.) நௌ - சிஷ்யன் ஆசிரியன் ஆகிய நம்மிருவர்களையும், ஸஹ - ஒரேகாலத்தில், அவது - ப்ரம்மவித்தையானது காப்பாற்றட்டும், நௌ - நம்மை, ஸஹ - ஒரேகாலத்தில், பு4நக்து - ப்ரம்மத்தை யனுபவிக்கும்படி செய்யட்டும், (வா) பு4நக்து - காப்பாற்றட்டும், வீர்யம் - ப்ரம்மவித்தைக் குரிய சாமர்த்தியத்தை (வா) வீர்யம் - பயனை சீக்கிரம் விளைவிக்கும் சாமர்த்தியத்தை, ஸஹ - ஒரேகாலத்தில், கரவாவஹை - செய்யக்கடவோமாக, நௌ - நம்மிருவர்களுடைய, அதீ4தம் - ஓதப்பட்ட வேதமானது, தேஜஸ்வி - பயனை விளைவிக்கிறதாக, அஸ்து - ஆகட்டும், மா வித்3விஷாவஹை ஒருவர்க்கொருவர் த்வேஷத்தை யடையக்கடவோமல்லோம், விக்4நாநாம் - (ப்ரம்மவித்தைக்குண்டாகிற தடங்கல்களுக்கு), ஶாந்தி: - முடிவானது, (அஸ்து - உண்டாகட்டும்), ப்3ரஹ்மவித் - ப்ரம்மத்தை யறிந்தவன், பரம் - உயர்ந்த ப்ரம்மத்தை, ஆப்நோதி - அடைகிறான், (வா) ப்3ரஹ்மவித் - ப்ரம்மத்தை தியானிக்கிறவன், தத் - முன்வாக்யத்தின் பொருளில், ஏஷா - இந்த ருக்கானது, அப்4யுக்தா - ஓதப்பட்டது, தஸ்மிந்-மேல்வாக்கியத்தில்கூறிய ப்ரம்மத்தைக் குறித்து, ஏஷா - இந்த ருக்கானது, உக்தா - சொல்லப்பட்டது. ப்3ரஹ்ம - ப்ரம்மமானது, ஸத்யம் - விகாரமுள்ள வஸ்துக்களைக் காட்டிலும் வேறுபட்டது. ஜ்ஞாநம்-அறிவில்லாத வஸ்துக்களைக் காட்டிலும் வேறுபட்டது, அநந்தம்-முடிவுள்ள வஸ்துக்களைக்காட்டிலும் வேறுபட்டது, (வா) ஸத்யம் - எப்பொழுதும் ஒரேவடிவுள்ளது, ஜ்ஞாநம் - எப்பொழுதும் சுருக்கமில்லாத வறிவையே வடிவாகவுடையது அநந்தம்-முடிவில்லாதது, பரமே - இருதயத்திலிருக்கிற, வ்யோமந் - ஆகாயத்திலிருக்கிற, கு3ஹாயாம்-அறிவில், நிஹிதம் - வைக்கப்பட்டிருக்கிற ப்ரம்மத்தை, ய: - எவன், வேத3 - அறிகிறானோ, ஸ: - அவன், விபஶ்சிதா - எல்லாவற்றையு முணர்ந்த, ப்3ரஹ்மணா-ப்ரம்மரூபத்தினால் அதாவது எல்லாவற்றையு முணர்ந்த ப்ரம்மத்துடன் ஒன்றாய், ஸஹ - ஒரேகாலத்தில், ஸர்வாந் - எல்லா, காமாந் - இஷ்டமான சுகங்களை, அஶ்நுதே - அனுபவிக்கிறான், (வா) அநந்தம்-விஷ்ணுவை, கு3ஹாயாம் - இருதயகுகையில், நிஹிதம் - வைக்கப்பட்டவனாக, ய: - எவன், வேத3 - அறிகிறானோ, ஸ: - அவன், பரமேவ்யோமந் - பரமபதத்தில், விபஶ்சிதா - எல்லாமுணர்ந்த, ப்3ரஹ்மணாஸஹ - ப்ர்ம்மத்தோடுகூட, ஸர்வாந் - எல்லா, காமாந் - அந்த ப்ரம்மத்தின் குணங்களையும், அஶ்நுதே - அனுபவிக்கிறான், இதி - என்று (இருக்கு சொல்லப்பட்டது), தஸ்மாத்3வா ஏதஸ்மாத் - மேற்கூறிய ப்ராம்மணத்தினால் சுருக்கமாயும் மந்திரத்தால் விரிவாயும் சொல்லப்பட்ட, ஆத்மந: - ப்ர்ம்மத்தினிடத்தில் நின்றும், ஆகாஶ: - ஆகாயமானது, ஸம்பூ4த: - உண்டாயிற்று,

ஆகாஶாத் - ஆகாயத்தில் நின்றும், வாயு꞉ - காற்றானது, ஸம்பூ⁴த꞉ - உண்டாயிற்று, வாயோ꞉ - காற்றினிடத்தில் நின்றும், அக்³நி꞉ - நெருப்பானது, ஸம்பூ⁴த꞉ - உண்டாயிற்று, அக்³நே꞉ - நெருப்பினிடத்தில் நின்றும், ஆப꞉ - ஜலம், ஸம்பூ⁴தா꞉ - உண்டாயிற்று, அத்³ப்⁴ய꞉-ஜலங்களில் நின்றும், ப்ருதி²வீ - பூமியானது, ஸம்பூ⁴தா - உண்டாயிற்று, ப்ருதி²வ்யா꞉ - பூமியில் நின்றும், ஓஷத⁴ய꞉ - கொடிசெடிகள், ஸம்பூ⁴தா꞉ - உண்டாயின, ஓஷதீ⁴ப்⁴ய꞉ - கொடிசெடிகளில் நின்றும், அந்நம்-உணவானது, ஸம்பூ⁴தம் - உண்டாயிற்று, அந்நாத் - ஆகாரத்தில் நின்றும், புருஷ꞉ - புருடன், ஸம்பூ⁴த꞉ - உண்டானான், ஸவைஏஷ꞉ - அந்த இந்த, புருஷ꞉ - புருஷன், அந்நரஸமய꞉ - ஆகாயத்தில் சாரமான பாகத்தால் உண்டானவன், தஸ்ய - அந்த புருஷனுக்கு, இத³மேவ - இந்த கண்ணால் காணப்படுகிறதலை தானே, ஶிர꞉ - தலை, அயம் - இந்த வலது கையானது' த³க்ஷிண꞉ - வலது, பக்ஷ꞉ - இறகு, அயம் - இந்த இடது கையானது, உத்தர꞉ - இடது, பக்ஷ꞉ - இறகு, அயம் - இந்த சரீரத்தின் இடைப்பாகம் அதாவது நாபிக்கு மேலும் கழுத்துக்குக் கீழுமான பாகம், ஆத்மா - ஆத்மா, இத³ம் - இந்த நாபிக்குக் கீழ்பாகமானது, ப்ரதிஷ்டா² - ஆதாரமான, புச்ச²ம் - வால், தத் - மேற்கூறிய பொருளில், ஏஷ꞉ - இந்த, ஶ்லோக꞉ - மந்திரமும், ப⁴வதி - இருக்கிறது.

(ஶம் - பா.) முன் சீக்ஷாவல்லியில் அறியப்பட்ட ப்ரம்மவித்தைக்கு உண்டாகிய விக்நங்களுடைய சாந்தியைக் குறித்து ப்ரார்த்தனை செய்யப்பட்டது. இப்போது இனியோதப்போகிற ப்ரம்மவித்தையினுடைய விக்நசாந்தியைச் சாந்திச் சாந்தி யென்கிற வரையில் கூறுகிறது. ஸம்ஹிதையில் செய்யவேண்டிய தியானங்களைச் சொல்லி பிறகு வ்யாக்ருதி வழியாக ஸ்வாராஜ்யம் என்கிற பலத்தினுலேயும் ஆன்மாவின் ஞானமுண்டாகுமென்று சொல்லப்பட்டது. அதினால் சம்சாரத்திற்குக் காரணமான வக்யானம்கூட விருத்தலால் மேற்கூய வக்யானம் வேறுடன் பிடுங்கப்பட்டதாகாது. ஆகையால் மேற்கூறிய வக்யானம் வேறுடன் போகும்பொருட்டு எல்லா பேதங்களும் ஒழிந்த பரிசுத்தமான ஆத்மாவின் உபாஸநம் சொல்லப்படுகிறது. அதில் "ப்ரம்மவிதாப்நோதி பரம்.' என்கிற வாக்யத்தால் பயன் அதை யடைகிறவன் இதை யடையவுபாயம் இவையென சுருங்கச்சொல்லப்படுகின்றன. இதில் ப்ரம்மத்தை யறிந்தவன் பாப்ரம்மத்தை யடைகிறான்என்றுசொல்லப்பட்டிருக்கிறது. ப்ரம்மமானது எல்லாவிடத்திலும் நிறைந்ததென்றும் எல்லாவஸ்துக்களுடனும் பேதமில்லாததென்றும் மேல்சொல்லப்போகிறது. அடைகிறான் என்பது தன்னையொழிய அடையும் வஸ்து வேறு இருந்தாலன்றோ சொல்லக்கூடும் எல்லாவிடத்திலும் நிறைந்து கலந்திருக்கும் வஸ்துவை யடையவேண்டுவதில்லையே. ஆகையால் இங்கு அடைகிறான் என்பது கூடுமோவென்னில் அடைகிறான் என்பது பார்க்கிறான் என்கிற பொருளை எடுத்துக்கொள்ளுகிறதாதலால் ப்ரம்மம் எல்லாவிடத்திலும் நிறைந்திருந்தபோதிலும் சரீரத்தையே ஆத்மாவாகப் பிரமித்து அதினால் தன்னுடைய தன்மையும் ப்ரம்மத்தின் தன்மையும் உள்ளபடி யறியாத விவன்மேற் சொல்லப்போகிற தியானத்தைச்செய்து; அதினால் ப்ரம்மத்தைப் பார்க்கிறான் என்று

சொல்லத்தட்டில்லை. கீழ்ச்சொன்ன ப்ரம்மத்தின் ஸ்வரூபத்தை விவரித்துச் சொல்லவும் ப்ரம்மத்தை தன்னுடன் வேறுபடாததாகத் தியானம்செய்யவேண்டுமென்று சொல்லவும் அப்படி தியானம் செய்து ப்ரம்மத்தை யடைகிறதென்று சொல்லப்பட்ட பயனும சம்சாரங்களையும் அதற்குக் காரணமான அவித்தையையும் நீங்கு பரிசுத்தமான ப்ரம்மத்துடன் ஒன்றாகுதலே யென்று சொல்லவும், மேல் இருக்குக்கள்உதகரிக்கப்படுகின்றன. சத்யம் ஞானம் அனந்தம் ; என்கிற மூன்று பதங்களும் ப்ரம்மம் என்கிற பதத்திற்கு விசேஷணங்கள். ஆதலால் விசேஷணங்கள் பெரும்பாலும் தன்னுடைய விசேஷ்யத்தை அதின் ஒரேசாதியான வஸ்துக்களில் நின்றும் வேறுபடுத்தும் தன்மையுள்ளன. அதெப்படி யென்றால், கறுத்ததாமரை இங்கு கறுத்த என்கிற விசேஷணம் தன்னுடைய விசேஷ்யமான தாமரையை அதின் ஒரேசாதியாகிய வெண்டாமரை செந்தாமரை முதலிய தாமரை வர்க்கங்களைக் காட்டிலும் வேறுபடுத்திக் காண்பிக்கிறது. அதெப்படியே இங்கும் ஒரேசாதியாகிய ப்ரம்மம் அனேக மிருந்தாலல்லவோ ஸத்ய முதலிய பதங்கள் விசேஷணமாய்க்கொண்டு ப்ரம்மத்தை யதின் வர்க்கத்தில் நின்றும் வேறுபடுத்தும் ப்ரம்மம் ஒன்றே யாதலால் இவ்விசேஷணங்கள் வீண் அல்லவோவென்னில் ப்ரம்மம் ஒன்றாயிருந்தபோதிலும் அதை யறியாதவன் ப்ரம்மம் எவ்விதமாக இருக்குமென்று வினவில் அந்த ப்ரம்மத்தின் அடையாளத்தைச் சொல்லியதைத் தெரியப்படுத்தவேண்டுமல்லவோ. எப்படியெனில் ஆகாயம் ஒன்றேயாகிலும் இடைவெளியாயிருப்பது ஆகாயமென்று அதின் அடையாளத்தைச் சொல்லித் தெரியப்படுத்தும் வண்ணமாக இங்கும் ப்ரம்மத்தின் அடையாளங்களைச் சொல்லித் தெரியப்படுத்துகிற தாதலால் வீணல்ல. இங்கு ஞானமென்றால் அறிவுமென்று அர்த்தம் ஆதலால் அறிவே ப்ரம்மமென்று சொல்லப்பட்டது. அதுசரியல்ல வெனனில் "தஸ்மாத்வாஏதஸ்மாதாத்மந:" என்றும் "ஏதமாநந்தமயமாத்மாநமுபஸம்க்ராமதி"என்றும்"தத்ஸ்ருஷ்ட்வாததேவாநுப்ராவிஶத்" என்றும் ப்ரம்மத்தை ஆத்மாவாக வோதப்படுதலாலும் ஆத்மாவே யறிகிறவன் என்று உலகத்தில் வழங்கி வருதலாலும் "ஸோகாமயத" என்று ஆசைப்படுகிறதாகச்சொல்லியிருத்தலாலும் அறிகிறவனே யாசைப்படுகிறவனுனதாலும் ஞானம் என்று சொல்லுகிறது. "ஞ்ஞா" என்கிற தாதுவின் பொருளாதலால் தாதுவின் பொருள்களெல்லாம் கருவிகளால் செய்யப்படுதலாலும் ஆதலால் ப்ரம்மத்தை அநித்யமென்று சொல்லவேண்டிவருமாதலாலும் தாதுவின் பொருள்கள்; தனது கருவிகளுக்கு வசப்பட்டுவருமாதலால் இங்கு ஞானத்தை ப்ரம்மமென்றுசொல்லி ப்ரம்மம் வேறுவஸ்துவுக்கு வசப்படவேண்டிவருதலாலும் அறிகிறவனையே ப்ரம்மமென்று சொல்லவேண்டுமென்னில் மேற்கூறிய தாதுவின் பொருளாகச் சொல்லப்பட்டவறிவும் ப்ரம்மமென்று சொல்லப்பட்டவறிவும் வேறுபட்டதாதலால் ப்ரம்ம அநித்யமாகவும் ஒன்றுக்கு வசப்பட்டதாகவும் ஆகவேண்டுவதில்லை. அதாவது கண் முதலிய வைம்புலன்களின் வழியாய் வெளியில் பரவி யந்தந்த வஸ்துக்களின் உருவமாய்த் தோற்றுகிற அறிவாகிய தாதுவின்பொருள் ப்ரம்மமோ சூரியன் ஒளிபோல் எப்பொழுதும் குன்றாமல் பிரகாசித்துக்கொண்டிருக்குமறிவு அதற்கு வேறு கருவிகள் வேண்டுவதில்லை. அந்த அறிவு மிகவும் சூக்ஷ்மமாதலால் அதற்குப் புலப்படாத வஸ்துக்கள் எப்பொழுதுமில்லை. ஆதலாலது எல்லாவற்றையும் அறியும் தன்மையுள்ளது. அப்படியே சுருதிகளில் சொல்லப்பட்டிருக்கின்றது. "அபாணிபாதோஜவநோக்ருஹீதாபஶ்யத்யசக்ஷுஸ்ஸஶ்ருணோத்யகர்ண: ஸவேத்திவேத்யம்நசதஸ்யாஸ்திவேத்தாதமாஹுஸ்யக்ரயம்புருஷம்மஹாந்தம்மிதி" என்றும் "நஹிவிஞ்ஞாதுர்விஞ்ஞாதேர்விபரிலோபோவித்யதே" என்றும் அனந்தமென்றால் முடிவில்லாதது என்று பொருள் அது மூன்றுவிதம் இடத்தால் முடிவில்லாததென்றும் காலத்தால் முடிவில்லாத

தென்றும் பொருளால் முடிவில்லாததென்றும், இடத்தால் முடிவில்லாதது. ஆகாயம் ஏனெனில் எல்லாவிடங்களிலும் நிறைந்திருத்தலால் அப்படியே ப்ரம்மமும் காலத்தால் முடிவில்லாதது. ப்ரம்மம் எல்லா வஸ்துக்களும் முந்தியில்லாமல் ஒருகாலத்தின் உண்டாக்கிய தாதலால் காலத்தால் மூடிவுபெற்றவைகள். ப்ரம்மமோ ஒன்றினுலும் உண்டாக்கப்படாமல் எப்பொழுதும் ஒரேவிதமாக விருத்தலால் காலத்தால் முடிவில்லா தது. அப்படியே பொருள்களால் முடிவு இல்லாததும் ப்ரம்மமே பொருளினுல் முடிவா வது மற்றொரு பொருள்களைக் காட்டிலும் வேறுபட்டிருக்கை. எல்லா வஸ்துக்களும் ஒன்றுக்கொன்று வேறுபட்டிருத்தலால் ப்ரம்மம் ஒன்றே எல்லாவஸ்துக்களாக விருத்த லாலும் அதுவே பொருளினுல் முடிவில்லாதது. அப்படியே "வாசாரம்பணம்விகாரோ நாமயேயம்ம்ருத்திகேத்யேவஸத்யம்; ஸதேவஸத்யம்" என்கிற சுருதிகளினுல் எல்லா வஸ்துக்களும் ப்ரம்மத்தினிடத்திலிருந்து உண்டானவைகளாதலால் அதைக்காட்டிலும் வேறுபட்டவைகளல்லவென்றும் ப்ரமமமொன்றுமே நிஜமென்றும் மற்றவைகள் பொய் யென்றும் ஏற்பட்டிருக்கிறது. மேல்ஞான ஸ்வரூபியான ப்ரம்மத்தைக் காண்பிவைத்த ற்கு முதலில் கிளையைக்காட்டி அதின்வழியாக சந்திரனைக்காட்டுவதுபோல் நாம் இது காலம் வரையில் ஆத்மாவென்று ப்ரமித்திருந்த சரீரத்தை முற்படக்கூறி உள்ளிருக்கும் மேன்மேலும் சூக்ஷ்மங்களான வஸ்துவைக் காண்பித்துக்கொண்டு போகிறது.

(ரா - ஹா.) உயர்ந்த பொருளான பரமாத்மாவையும் அவனை யடைவதற்கு இத மான வுபாயமும் மனிதர்களுடைய பேறும் ஓதப்படுகிறது. இந்த ஆனந்தவல்லியில் இதில் "ப்ரம்மவித்" என்கிற விடத்தில் "ஆவ்ருத்திரஸக்ருதுபதேஸாத்" என்கிற வதி கரணத்தில் சொல்லிய நியாயத்தால் ப்ரம்மத்தை யறிந்தவனென்றால் ப்ர்மத்தைத் தியானம் செய்தவனென்றே யர்த்தம் இங்கு ப்ர்ம்மம் அதின் அறிவு அடைகிறது. அடையவேண்டிய பொருள். இன்னுங்கும் இவ்வாக்கியத்தில் சொல்லப்பட்டிருக்கிற தல்லவோ. அவைகளில் "ப்ரமம்" என்கிறது என்ன? அதின் அறிவு எப்படிப்பட்டது? அடைகிறது எவ்வண்ணமாக? அடையவேண்டிய வஸ்து எம்மாதிரியானது? என்கிறகேள் விகளுக்கு மறுமொழியுரைக்க மேல்மந்திரம் கூறப்படுகிறது. அதில் "ஸத்யம்" என் றால் எப்பொழுதும் ஒரேமாதிரியாக இருக்கிறது என்று பொருள் இதனுல் எப்பொழு தும் மாறிமாறியிருக்கு முருவத்தையுடைய வறிவில்லாத வஸ்துக்களிலும் அவைகளோ டே சேர்ந்திருக்கிற பத்தர் என்கிற ஆத்மாக்களிலும் ப்ரம்மத்திற்கு அதாவது பரமாத்மா வுக்கு வேறுபாடுதோற்றுகிறது. அந்த வஸ்துக்கள் வெவ்வேறு பெயர்களை யடையத் தக்க வெவ்வேறு மாறுதல்களை யடைகின்றனவாதலால் அவைகள் ஸத்யமென்று சொல்லத்தக்கவைகளல்ல. "ஜ்ஞாநம்" என்பது எப்பொழுதும் குறுகாமல் எல்லா வஸ் துக்களிலும் வியாபித்த அறிவையே குணமாகவும் உருவமாகவுமுடையவனென்றும் சொல்லுகிறது. இதனுல் சிலகாலம் சம்சாரமண்டலத்திலிருந்து பிறகு மோக்ஷத்தை யடைந்த முத்தரென்று சொல்லப்பட்ட ஜீவர்கள் வேறுபாடு தோற்றுகிறது. அவர்கள் முக்தியடைந்திருக்கும் காலத்தில் எல்லா வஸ்துக்களிலும் வியாபித்த ஞானத்தையுடை யவர்களாக விருந்தபோதிலும் எப்பொழுதும் அப்படிப்பட்ட ஞானத்தையுடையவர்க ளல்ல சம்சாரத்தில் இருந்தகாலத்தில் செய்வினைகளால் அவர்கள் அறிவு குறுகியிருத்த லால், "அநந்தம்" என்கிறது. உருவத்தாலும் குணங்களாலும் முடிவில்லாதது என்பது இத்தால் மேற்கூறிய பத்தர் முக்தர் என்கிற விருவகைப்பட்ட ஜீவர்களைக்காட்டிலும் வேறுபட்டவர்களான. நித்தியர் என்று சொல்லப்பட்ட ஜீவர்களைக்காட்டிலும் வேறு பாடுதோற்றுகிறது. அவர்கள் குணங்களால் முடிவுபெற்றவர்கள் பரமாத்மாவின் குண ங்களில் குறைந்த குணமுடையவர்களாதலால் இங்கு அனந்தம் என்பது மூவகைப்பட்

டது. அதாவது இடத்தாலும் காலத்தாலும் பொருள்களாலும் முடிவில்லாதது. இதில் இடத்தால் முடிவாவது இந்த வஸ்து இந்த விடத்தில்தான் அந்த விடத்திலில்லை என்பது விடத்தால் முடிவு. இந்தகாலத்தில்தான் அந்தகாலத்திலில்லை. என்பது காலத்தினால் முடிவு. இந்தப்பொருள் இதைக்காட்டிலும் தாழ்ந்தது என்பது பொருளினால் முடிவு. பரமாத்மாவோ வென்றால் எல்லாவிடங்களிலும் வியாபித்திருத்தலாலும் நித்யமானதால் எப்பொழுதும் அழிவில்லாதிருத்தலாலும், "நாந்தம்குணாநாம்கச்சந்தி தேநாநந்தோயமுச்யதே" என்கிற ஸ்மிருதியின்படியே குணங்களினாலும் உருவத்தினாலும் எல்லாப்பொருளிலும் உயர்ந்ததாதலாலும் மேற்கூறிய மூவகைப்பட்ட முடிவுகளுமில்லாதவனென்று சொல்லப்படுகிறான். இதினால் ப்ரம்மத்தின் ஸ்வரூபத்தைச் சொல்லி "யோவேதநிஹிதம்குஹாயாம்" என்கிறதினால் அதின் அறிவையும் சொல்லி மேல்பாகங்களினால் அடையவேண்டிய பயனையும் சொல்லுகிறது.

𑌅𑌨𑍍𑌨𑌾𑌦𑍍𑌵𑍈 𑌪𑍍𑌰𑌜𑌾𑌃 𑌪𑍍𑌰𑌜𑌾𑌯𑌨𑍍𑌤𑍇 । 𑌯𑌾𑌃 𑌕𑌾𑌶𑍍𑌚 𑌪𑍃𑌥𑌿𑌵𑍀𑌂 𑌶𑍍𑌰𑌿𑌤𑌾𑌃 । 𑌅𑌥𑍋 𑌅𑌨𑍍𑌨𑍇𑌨𑍈𑌵 𑌜𑍀𑌵𑌨𑍍𑌤𑌿 । 𑌅𑌥𑍈𑌨𑌦𑌪𑌿𑌯𑌨𑍍𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑌤𑌃 । 𑌅𑌨𑍍𑌨𑌂 𑌹𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌜𑍍𑌯𑍇𑌷𑍍𑌠𑌮𑍍 । 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑍌𑌷𑌧𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 । 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌵𑍈 𑌤𑍇𑌽𑌨𑍍𑌨𑌮𑌾𑌪𑍍𑌨𑍁𑌵𑌨𑍍𑌤𑌿 । 𑌯𑍇𑌽𑌨𑍍𑌨𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍋𑌪𑌾𑌸𑌤𑍇 । 𑌅𑌨𑍍𑌨𑌂 𑌹𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌜𑍍𑌯𑍇𑌷𑍍𑌠𑌮𑍍 । 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑍌𑌷𑌧𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 ॥௧॥

𑌅𑌨𑍍𑌨𑌾𑌦𑍍𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌜𑌾𑌯𑌨𑍍𑌤𑍇 । 𑌜𑌾𑌤𑌾𑌨𑍍𑌯𑌨𑍍𑌨𑍇𑌨 𑌵𑌰𑍍𑌧𑌨𑍍𑌤𑍇 । 𑌅𑌦𑍍𑌯𑌤𑍇𑌽𑌤𑍍𑌤𑌿 𑌚 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 । 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑌨𑍍𑌨𑌂 𑌤𑌦𑍁𑌚𑍍𑌯𑌤 𑌇𑌤𑌿 । 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌵𑌾 𑌏𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑌨𑍍𑌨𑌰𑌸𑌮𑌯𑌾𑌤𑍍 । 𑌅𑌨𑍍𑌯𑍋𑌽𑌨𑍍𑌤𑌰 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌪𑍍𑌰𑌾𑌣𑌮𑌯𑌃 । 𑌤𑍇𑌨𑍈𑌷 𑌪𑍂𑌰𑍍𑌣𑌃 । 𑌸 𑌵𑌾 𑌏𑌷 𑌪𑍁𑌰𑍁𑌷𑌵𑌿𑌧 𑌏𑌵 । 𑌤𑌸𑍍𑌯 𑌪𑍁𑌰𑍁𑌷𑌵𑌿𑌧𑌤𑌾𑌮𑍍 । 𑌅𑌨𑍍𑌵𑌯𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑌵𑌿𑌧𑌃 ॥௨॥

𑌤𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌾𑌣 𑌏𑌵 𑌶𑌿𑌰𑌃 । 𑌵𑍍𑌯𑌾𑌨𑍋 𑌦𑌕𑍍𑌷𑌿𑌣𑌃 𑌪𑌕𑍍𑌷𑌃 । 𑌅𑌪𑌾𑌨 𑌉𑌤𑍍𑌤𑌰𑌃 𑌪𑌕𑍍𑌷𑌃 । 𑌆𑌕𑌾𑌶 𑌆𑌤𑍍𑌮𑌾 । 𑌪𑍃𑌥𑌿𑌵𑍀 𑌪𑍁𑌚𑍍𑌛𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌾 । 𑌤𑌦𑌪𑍍𑌯𑍇𑌷 𑌶𑍍𑌲𑍋𑌕𑍋 𑌭𑌵𑌤𑌿 । 𑌇𑌤𑌿 𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑍋𑌽𑌨𑍁𑌵𑌾𑌕𑌃 ॥

అన్నాద్వై ప్రజాః ప్రజాయంతే ॥ యాః కాశ్చ పృథివీగ్ం శ్రితాః । అథో అన్నేనైవ జీవంతి । అథైనదపియంత్యంతతః । అన్నగ్ం హి భూతానాం జ్యేష్ఠం తస్మాత్సర్వౌషధముచ్యతే । సర్వం వై తే౽న్నమాప్నువంతి । యే౽న్నం బ్రహ్మోపాసతే । అన్నగ్ం హి భూతానాం జ్యేష్ఠం । తస్మాత్సర్వౌషధముచ్యతే ।౧॥

అన్నాద్భూతాని జాయంతే । జాతాన్యన్నేన వర్ధంతే । అద్యతే౽త్తి చ భూతాని । తస్మాదన్నం తదుచ్యత ఇతి । తస్మాద్వా ఏతస్మాదన్నరసమయాత్ । అన్యో౽ంతర ఆత్మా ప్రాణమయః । తేనైష పూర్ణః । స వా ఏష పురుషవిధ ఏవ । తస్య పురుషవిధతాం । అన్వయం పురుషవిధః ॥ ౨ ॥

తస్య ప్రాణ ఏవ శిరః । వ్యానో దక్షిణః పక్షః । అపాన ఉత్తరః పక్షః । ఆకాశ ఆత్మా । పృథివీ పుచ్ఛం ప్రతిష్ఠా । తదప్యేష శ్లోకో భవతి ॥

(ப் - ம்.) 𑌯𑌾𑌃 𑌕𑌾𑌶𑍍𑌚 - எல்லா, 𑌪𑍃𑌥𑌿𑌵𑍀𑌂 - பூமியை, 𑌶𑍍𑌰𑌿𑌤𑌾𑌃 - அடைந்திருக்கிற, 𑌪𑍍𑌰𑌜𑌾𑌃 - ஜங்கமம் ஸ்தாவரம் என்று சொல்லப்பட்ட பிரஜைகள், 𑌅𑌨𑍍𑌨𑌾𑌦𑍍𑌵𑍈 - அன்னத்தில் நின்றன்றோ, 𑌪𑍍𑌰𑌜𑌾𑌯𑌨𑍍𑌤𑍇 - உண்

டாகிறார்கள், 𑌅𑌥𑍋 - அப்படியுண்டான பிறகு, 𑌅𑌨𑍍𑌨𑍇𑌨𑍈𑌵 - அன்னத்தினாலே தானே, 𑌜𑍀𑌵𑌨𑍍𑌤𑌿 - சீவிக்கிறார்கள், 𑌅𑌥 - அப்படி சீவித்த பிறகு 𑌅𑌨𑍍𑌤𑌤𑌃 - ஜீவதசையின் முடிவில், 𑌏𑌤𑌤𑍍- இந்த அன்னத்தை, 𑌅𑌪𑌿𑌯𑌨𑍍𑌤𑌿 - லயிக்குமிடமாகச் சேருகிறார்கள், 𑌹𑌿 யாதொரு காரணத்தால், 𑌅𑌨𑍍𑌨𑌂 - அன்னமானது, 𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 - உலகத்திலுள்ள வஸ்துக்களுக்குள், 𑌜𑍍𑌯𑍇𑌷𑍍𑌠𑌂 சிரேஷ்டமானதோ, 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 - ஆதலால், 𑌸𑌰𑍍𑌵𑍌𑌷𑌧𑌂 - எல்லாவற்றிற்கும் மருந்தாக, 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 - சொல்லப்படுகிறது. 𑌯𑍇 - எவர்கள், 𑌅𑌨𑍍𑌨𑌂 - அன்னத்தை, 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 - ப்ரம்மமாக, 𑌉𑌪𑌾𑌸𑌤𑍇 - தியானம் செய்கிறார்களோ, 𑌤𑍇 - அவர்கள், 𑌸𑌰𑍍𑌵𑌂 - எல்லா, 𑌅𑌨𑍍𑌨𑌮𑍇𑌵 - போக்ய வஸ்துவைத்தானே, 𑌆𑌪𑍍𑌨𑍁𑌵𑌨𑍍𑌤𑌿 - அடைகிறார்கள், 𑌹𑌿-யாதொரு காரணத்தாலே 𑌅𑌨𑍍𑌨𑌂 - அன்னமானது, 𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 - உலகத்திலுள்ள வஸ்துக்களுக்குள், 𑌜𑍍𑌯𑍇𑌷𑍍𑌠𑌂 - உயர்ந்ததோ, 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 - ஆகையாலே, 𑌸𑌰𑍍𑌵𑍌𑌷𑌧𑌂 - எல்லாவற்றிற்கும் மருந்தாக, 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 - சொல்லப்படுகிறது. (௩௦) 𑌹𑌿 - யாதொரு காரணத்தினாலே, 𑌅𑌨𑍍𑌨𑌂 - அன்னமானது, 𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 - ஆகாளம் முதலிய பஞ்சபூதங்களுக்குள், 𑌜𑍍𑌯𑍇𑌷𑍍𑌠𑌂 - உயர்ந்ததோ, 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 - ஆகையாலே, 𑌸𑌰𑍍𑌵𑍌𑌷𑌧𑌂 - சகலமான வோஷதிகளில் நின்றுமுண்டானதாக, 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 - சொல்லப்படுகிறது. 𑌅𑌨𑍍𑌨𑌾𑌤𑍍 - அன்னத்தில் நின்றும், 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 - பிராணிகள், 𑌜𑌾𑌯𑌨𑍍𑌤𑍇 - உண்டாகிறதுகள், 𑌜𑌾𑌤𑌾𑌨𑌿 - உண்டான வஸ்துக்கள், 𑌅𑌨𑍍𑌨𑍇𑌨 - அன்னத்தினாலே, 𑌵𑌰𑍍𑌧𑌨𑍍𑌤𑍇 - விருத்தியடைகிறதுகள், (𑌭𑍂𑌤𑍈𑌃 - பிராணிகளாலே), 𑌅𑌦𑍍𑌯𑌤𑍇 - புசிக்கப்படுகிறது. 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 - பிராணிகளை, 𑌅𑌤𑍍𑌤𑌿 - புசிக்கிறது (அதாவது மரணமடைவிக்கிறது), 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 - ஆகையாலே, 𑌤𑌤𑍍 - அந்த வன்னமானது, 𑌅𑌨𑍍𑌨𑌮𑌿𑌤𑌿-அன்னம் என்று, 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 - சொல்லப்படுகிறது. 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌵𑌾 𑌏𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 - அந்த இந்த, 𑌅𑌨𑍍𑌨𑌰𑌸𑌮𑌯𑌾𑌤𑍍 - அன்னரஸமயமென்று சொன்ன ப்ரம்மத்திற்காட்டிலும், 𑌅𑌨𑍍𑌯𑌃 - வேறுபட்டும், 𑌅𑌨𑍍𑌤𑌰𑌃-உள்ளுமிருக்கிற, 𑌪𑍍𑌰𑌾𑌣𑌮𑌯𑌃- வாயுரூபியானவன், 𑌆𑌤𑍍𑌮𑌾 - பரமாத்மா, 𑌏𑌷𑌃 - இந்த வன்னமயமானது, 𑌤𑍇𑌨 - அந்த ப்ராணமயனாலே, 𑌪𑍂𑌰𑍍𑌣𑌃 - நிறைந்தது. 𑌸𑌵𑌾𑌏𑌷𑌃 - அந்த இந்த பிராணமயனானவன், 𑌪𑍁𑌰𑍁𑌷𑌵𑌿𑌧𑌏𑌵 - புருடர்களின் ஆகிருதியுள்ளவன் தான், 𑌤𑌸𑍍𑌯 - அந்த வன்னமயனுடைய, 𑌪𑍁𑌰𑍁𑌷𑌵𑌿𑌧𑌤𑌾𑌂 𑌅𑌨𑍁 - புருஷாகிருதியாயிருத்தலை யனுஸரித்து, 𑌅𑌯𑌂 - இந்த ப்ராணமயனானவன், 𑌪𑍁𑌰𑍁𑌷𑌵𑌿𑌧𑌃 - புருஷர்களின் ஆகிருதியுள்ளவன், 𑌤𑌸𑍍𑌯- அந்த ப்ராணமயனுக்கு, 𑌪𑍍𑌰𑌾𑌣𑌏𑌵 - பிராணவாயுவே, 𑌶𑌿𑌰𑌃 - தலை, 𑌵𑍍𑌯𑌾𑌨𑌃 - வியானனானவன், 𑌦𑌕𑍍𑌷𑌿𑌣𑌃 - வலது, 𑌪𑌕𑍍𑌷𑌃 - பார்சுவம், 𑌅𑌪𑌾𑌨𑌃-அபானனானவன், 𑌉𑌤𑍍𑌤𑌰𑌃 - இடது, 𑌪𑌕𑍍𑌷𑌃-பார்சுவம், 𑌆𑌕𑌾𑌶𑌃 - ஆகாயமானது, 𑌆𑌤𑍍𑌮𑌾 - ஆத்மா, 𑌪𑍃𑌥𑌿𑌵𑍀 - பூமியானது, 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌾 - ஆதாரமான, 𑌪𑍁

ஸம் - வால், தத் - முன்சொன்னவற்றில், ஏஷ꞉ - இந்த, ஶ்லோக꞉ - சுலோகமும், பவதி - இருக்கிறது.

(ஸம-ஹா.) அன்னத்தால் ஜனித்தும் அதனால் சீவனத்தை யடைந்தும், அதனால் மரணத்தையுமடைகிறபடியால் அன்னத்தையே ப்ரம்மமென்று சொல்லுகிறது. எவர்கள்அன்னத்தில் பிறந்துவளர்ந்து இறப்பவர்களாகையால் நாமே அன்னம்என்று தியானம் சொல்லுகிறார்களோ அவர்கள் எல்லாப்பொருளிலும் உயர்ந்த வன்னத்தை யடைகிறார்கள். அன்னமயன் முதலாக வானந்தமயனிறுதியாக அதிசூட்சமமாயுள்ள ஜீவாத்மாவை இனி காண்பிக்கப் புகுகிறதாக அவித்தையாலுண்டாகப்பட்ட இந்த வைம்பூதங்களையும் நீக்கிசலிப்பதால், உமிதவுடுகளை அரிசியில் நின்றும் பிரிப்பதுபோல் அன்னமயனைக்காட்டிலும் நுட்பமாயும் அன்னமயனிடத்தில் சொன்ன வண்ணமாக பக்ஷபுச்சாத்மாக்களோடும் கூடியிருக்கும் பிராணமயனைக் காட்டுகிறது. இங்கு உயிர்ப்பிப்பதால் பிராணனென்றும், சரீரமெல்லாம் வியாபித்திருக்கும் காற்றுக்கு வியானனென்றும், பிருஷ்டபாகத்திலிருக்கும் காற்றிற்கு அபானனென்றும், ஆகாயம் காற்றிற்கு சஞ்சரிக்குமிடமாதலால் அதைநிடலான ஆத்மாவென்றும், உதானன் என்று சொல்லப்பட்ட உயரநோக்கி வாயுவால் காற்று வெளியில் போகாத வண்ணமாக பூமியின் தேவதையானது தாங்குதலாலும், மேற்கூறிய வாகாயத்திற்கும் பூமியாதாரமாயிருத்தலாலும், பிராணமயனுக்கு பூமியையும் யாதாரமாகச் சொல்லப்பட்டது.

(ரா-ஹா.) அடியில் "ப்ரம்மவிதாப்நோதிபரம்" என்கிற பிராம்மணத்திலும் "ஸத்யம்ஞ்ஞாநமநந்தம்ப்ரம்ம" என்கிற மந்திரத்திலும் ப்ரம்மமே சகல ஜகத்திற்கும் காரணமென்றும், சகல சகத்திலும் அந்தர்யாமியாயிருக்கிற தென்றும் ஏற்பட்டது. அந்த ஆத்மாவானது எதுவென்று கேள்வி பிறக்கும் காலத்தில் ஆநந்தமயனே அந்த ஆத்மாவென்று காண்பிவைக்கிறதற்காக, அருந்ததி நக்ஷத்திரத்தைப்பார்க்க விருப்பமுள்ளவனுக்கு அந்த சிறியதான அருந்ததி நக்ஷத்திரத்திற்கு சமீபத்திலிருக்கும், பெரிய நக்ஷத்திரத்தை இதுவே அருந்ததியென்று சொல்லி யனேக்குமந்த நக்ஷத்திரம்,புலப்பட்டவாறே அப்படி புலப்பட்ட நக்ஷத்திறத்திற்கு சமீபத்திலிருக்கும் மெய்யான அருந்ததியை எளிதில் புலப்படுத்தும் வண்ணமாக பெரியதான உடலிலிருக்கும் ப்ராணமயனை ஆத்மாவாக முதலில் சொல்லுகிறது. எவன் அன்னத்தை ப்ரம்மமாகத் தியானம் செய்கிறானோ அவன் இச்சித்தபடி யெல்லாம் அன்னத்தை யடைகிறான், ப்ரம்மம் எப்படி படைத்தல் காத்தல் அழித்தல் இவைகளுக்குக் காரணமோ, அப்படியே அன்னமும் மேற்கூறியவைகளுக்குக் காரணமாகையால் ப்ரம்மமென்று தியானிக்கக் குறையில்லை.

ப்ராணம்தேவா அநுப்ராணந்தி | மநுஷ்யா꞉பஶவஶ்சயே | ப்ராணோஹிபூதாநாமாயு꞉ | தஸ்மாத்ஸர்வாயுஷமுச்யதே | ஸர்வமேவதஆயுர்யந்தி | யேப்ராணம்ப்ரஹ்மோபாஸதே | ப்ராணோஹிபூதாநாமாயு꞉ | தஸ்மாத்ஸர்வாயுஷமுச்யதஇதி | தஸ்யைஷஏவ ஶாரீரஆத்மா | ய꞉பூர்வஸ்ய ||௧||

தஸ்மாத்வா ஏதஸ்மாத்ப்ராணமயாத் | அந்யோऽந்தரஆத்மாமநோமய꞉ | தேநைஷபூர்ண꞉ | ஸவாஏஷபுருஷவிதஏவ | தஸ்யபுருஷவிததாம் | அந்வயம்புருஷவித꞉ | தஸ்யயஜுரேவஶிர꞉ | ருக்தக்ஷிண꞉

பக்ஷ꞉ | ஸாமோத்தர꞉ பக்ஷ꞉ | ஆதேஶ ஆத்மா ||௨|| அதர்வாங்கிரஸ꞉ புச்சம் ப்ரதிஷ்டா | ததப்யேஷ ஶ்லோகோ பவதி ||இதி த்ருதீயோऽநுவாக꞉||

ప్రాణం దేవా అనుప్రాణంతి । మనుష్యాః పశవశ్చ యే । ప్రాణో హి భూతానామాయుః ।
తస్మాత్సర్వాయుషముచ్యతే । సర్వమేవత ఆయుర్యంతి । యే ప్రాణం బ్రహ్మోపాసతే | ప్రాణో
హి భూతానామాయుః । తస్మాత్సర్వాయుషముచ్యత ఇతి।తస్యైష ఏవ శారీర ఆత్మా । యః పూర్వస్య।
తస్మాద్వా ఏతస్మాత్ప్రాణమయాత్ | అన్యోఽంతర ఆత్మా మనోమయః । తేనైష పూర్ణః। స వా
ఏష పురుషవిధ ఏవ । తస్య పురుషవిధతాం । అన్వయం పురుషవిధః। తస్య యజురేవ శిరః । ఋగ్దక్షిణః
పక్షః। సామోత్తరః పక్షః।ఆదేశ ఆత్మా॥ అ॥ అథర్వాంగిరసః పుచ్ఛం ప్రతిష్ఠా|తదప్యేష శ్లోకో భవతి ।

(ப - ம்.) தேவா꞉-அக்நிமுதலிய தேவர்களும், யே-எந்த, மநுஷ்யா꞉-மனிதர்களோ, பஶவ꞉-பசுக்களுமோ, (தே-அவர்கள்), ப்ராணம்-ப்ராணவாயுவை அநுப்ராணந்தி - அனுசரித்து ஜீவிக்கிறார்கள், ஹி - யாதொரு காரணத்தினாலே, ப்ராண꞉ - பிராணனானது, பூதாநாம் - பிராணிகளுக்கு, ஆயு꞉ - ஆயுளோ, தஸ்மாத் - ஆதலால், ஸர்வாயுஷம் - எல்லார்க்குமாயுளாக, உச்யதே - சொல்லப்படுகிறது. யே - எவர், ப்ராணம் - ப்ராணவாயுவை, ப்ரஹ்ம - ப்ரம்மமாக, உபாஸதே - தியானம் செய்கிறார்களோ, தே - அவர்கள், ஸர்வம் - பூர்ணமான, ஆயுரேவ-ஆயுளைத்தானே, யந்தி-அடைகிறார்கள், ஹி - யாதொரு காரணத்தாலே, ப்ராண꞉-ப்ராணனானது, பூதாநாம் - ப்ராணிகளுக்கு, ஆயு꞉ - ஆயுளோ, தஸ்மாத் - ஆதலால், ஸர்வாயுஷம் - எல்லார்க்குமாயுளென்று, உச்யதே - சொல்லப்படுகிறது. இதி - என்று, தஸ்ய - அந்த ப்ராணனுக்கு, ஏஷ꞉ - இந்த, ஶாரீரஏவ - சரீரத்திலிருக்கும் ப்ராணன்தானே, ஆத்மா - ஆத்மா, ய꞉ - யாதொரு ஆத்மாவானது, பூர்வஸ்ய - முன்னன்னமய ப்ரம்மத்திற்கோ, தஸ்மாத்வா ஏதஸ்மாத் ப்ராணமயாத் - அந்த இந்த ப்ராணமயனைக் காட்டிலும், அந்ய꞉-வேறுபட்ட, அந்தர꞉ - உள்ளிருக்கும், ஆத்மா-ஆத்மாவானது, மநோமய꞉-மனது ரூபியானது, ஏஷ꞉ - இந்த ப்ராணமயமானது, தேந-அந்தமனோமயனாலே, பூர்ண꞉-நிறைந்தது. ஸவா ஏஷ꞉-அந்த இந்த மனோமயனவன், புருஷவிதஏவ - புருஷாக்ருதியுள்ளவன்தான், தஸ்ய - அந்த ப்ராணமயனுடைய, புருஷவிததாம் - புருஷாக்ருதியாயிருக்கும் தன்மையை, அநு - அனுஸரித்து, அயம் - இந்த மனோமயனும், புருஷவித꞉ - புருஷாக்ருதியுள்ளவன், தஸ்ய-அந்த மனோமயனுக்கு, யஜுரேவ-யசுர்வேதமே, ஶிர꞉ - சிரசு, ருக் - ருக்வேதமானது, தக்ஷிண꞉ - வலது, பக்ஷ꞉ - பக்கம், ஸாம - சாமவேதமானது, உத்தர꞉ - இடது, பக்ஷ꞉ - பக்கம், ஆதேஶ꞉ - வேதத்தின் ப்ராம்மணமென்கிற பாகமானது, ஆத்மா - ஆத்மா, அதர்வாங்கிரஸ꞉ - அதர்வர் என்றும் அங்கிரா என்றும் சொல்

லப்பட்ட இருஷிகளால் கண்டுபிடிக்கப்பட்ட அதர்வணவேதமானது, ப்ரதி ஷ்டா - ஆதாரமான, புச்சம் - வால்-தல-மேற்கூறிய வர்த்தத்தில், ததபி- இந்த, ச்லோக:ச்ச்வி - சுலோகமும், பவதி - இருக்கிறது.

(மநோ - ஸா.) இந்த அனுவாகத்தில் மேற்கூறிய ப்ராணமயனைக் காட்டிலும், நுட் பமான மனோமயனை ஆத்மாவாகச் சொல்லுகிறது. இந்த மனோமயனுக்கு சிரசு வலது பக்கம் இடது பக்கங்களை யசுர்வேதமாகவும் ருக்வேதமாகவும் சாமவேதமாகவும் சொல் லப்பட்டது. யசுஸ் முதலிய பெயர்கள் மந்திரங்களுக்கே யாதலாலும், மந்திரங்கள் மன திலேயே ஆவர்த்திக்கப்படவேண்டுமாகையாலும் அவைகள் மனோவிருத்திகள் என் பதுகொண்டு, ஆதலால் மனோவிருத்தியிலிருந்துகொண்டும் யசுஸ் முதலிய பெயர்களைப் பெற்றும், ஒருகாலத்திலும் அழிவில்லாமலும் உற்பத்தியில்லாமலும், இருக்கிறது. ஆத்மா என்கிற சைதந்யம். இப்படி ஆத்மசைதந்யமே மனோவிருத்தியிலிருந்து, யசுஸ்முதலிய மந்திரங்களானதுகொண்டு வேதங்களை நித்தியமென்று சொல்லுகிறது. அப்படி வேதங் களை நித்தியமென்று சொல்லாவிடில், "ஸர்வேவேதாயத்ரைகம்பவந்திஸமாநஸீந ஆத்மா" என்றும் "ருசோஅக்ஷரேபரமேவ்யோமன்யஸ்மின்தேவா அதிவிஸ்வாநிஷே து:" என்றும் நித்யமான ஆத்மாவோடு வேதங்களை ஒன்றாகச்சொல்லும் சுருதி விரோ திக்கும், இங்கு ஆதேசம் என்று சொல்லுவது கட்டளையிடவேண்டிய காரியங்களை சொல்லு கிற வேதத்தின் ப்ராம்மணமென்கிற பாகத்தை.

(ரா-ஸா.) சிரம் முதலியதாகப் பேசப்பட்ட யசுஸ்முதலிய பதங்களுக்கு இங்கு யசுர்முதலிய வேதங்களின் அறிவுக்குக் காரணமாகிய மனதின் செய்கையைச் சொல் லுகிறது. இல்லாவிடில் யசுர்முதலிய வேதங்களுக்கும், மனதுக்கும் கிஞ்சித்தேனும் சம் பந்தமில்லாததால், மேற்கூறிய வேதங்களை சிரம் முதலியதாக ரூபிக்கவொண்ணாது. "ஆதேச:" என்பது இதைச்செய் இதைச்செய்யாதே என்கிற விதிவிலக்குகளுடைய அறிவுக்குக் காரணமான மனதின் செயலைச் சொல்லுகிறது. "அதர்வாங்கிரஸ:" என் கிற விடத்திலும் அதர்வணவேதத்தின் அறிவுக்குக் காரணமான மனதின் செயல் என் பது அர்த்தம்.

யதோ வாசோ நிவர்த்தந்தே | அப்ராப்ய மநஸா ஸஹ | ஆநந்தம் ப்ரஹ்மணோ வித்வாந் || ந பிபேதி கதாசநேதி | தஸ்யைஷ ஏவ சாரீர ஆத்மா | ய: பூர்வஸ்ய | தஸ்மாத்வா ஏதஸ்மாந் மநோமயாத் | அந்யோந்தர ஆத்மா விஜ்ஞாநமய: | தேநைஷ பூர்ண: | ஸ வா ஏஷ புருஷவித ஏவ ||௩|| தஸ்ய புருஷவிததாம் | அந்வயம் புருஷவித: | தஸ்ய ச்ரத்தைவ சிர: | ருதம் தக்ஷிண: பக்ஷ: | ஸத்யமுத்தர: பக்ஷ: | யோக ஆத்மா | மஹ: புச்சம் ப்ரதிஷ்டா | ததப்யேஷ ச்லோகோ பவதி | இதி சதுர்த்தோ நுவாக:

యతో వాచో నివర్తంతే । అప్రాప్య మనసా సహ । ఆనందం బ్రహ్మణో విద్వాన్ । న బిభేతి కదాచనేతి । తస్యైష ఏవ శారీర ఆత్మా । యః పూర్వస్య । తస్మాద్వా ఏతస్మాన్మనోమయాత్ । అన్యోంతర ఆత్మా విజ్ఞానమయః । తేనైష పూర్ణః । స వా ఏష పురుషవిధ ఏవ ॥ 3 ॥

తస్య పురుషవిధతాం అన్వయం పురుషవిధః । తస్య శ్రద్ధైవ శిరః । ఋతం దక్షిణః పక్షః । సత్యముత్తరః పక్షః । యోగ ఆత్మా । మహః పుచ్ఛం ప్రతిష్ఠా । తదప్యేష శ్లోకో భవతి ॥ అను ॥ ౪ ॥

(ப - ம்.) யத꞉ - யாதொன்றினிடத்தில், வாச꞉ - வாக்குக்களானவை கள், மநஸா ஸஹ - மனதுடன்கூட, அப்ராப்ய - முடிவையடையாமல், நிவர்த்தந்தே - திரும்புகிறதுகளோ, ப்ரஹ்மண꞉ - ப்ரம்மத்தினுடைய, ஆநந்தம் - ஆனந்தத்தை, வித்வாந் - அறிந்தவன், கதாசந - ஒருக்காலும், ந பி பேதி - பயப்படுவதில்லை. இதி - என்று, தஸ்ய - அந்த ப்ராணமயனுக்கும், ஏஷ꞉ - இந்த, ஶாரீர ஏவ - சரீரத்திலிருக்கிற மனதுதானே, ஆத்மா - ஆத்மா, ய꞉ - யாதொன்றுனது, பூர்வஸ்ய - முன்கூறப்பட்ட பிராணமயனுக்கோ, தஸ்மாத்வா ஏதஸ்மாத் - அந்த இந்த, மநோமயாத்-மனோமயனைக் காட்டிலும், அந்ய꞉ - வேறுபட்ட, அந்தர꞉-உள்ளிருக்கிற, ஆத்மா - ஆத்மாவானது, விஜ்ஞாநமய꞉ - நிச்சயரூபமான அறிவு, (ஸ) விஜ்ஞாநமய꞉ - அறிவைக்காட்டிலும் வேறுபட்ட ஜீவன், தேந-அந்த விஞ்ஞானமயனாலே, ஏஷ꞉ - இந்த மனோமயன், பூர்ண꞉ - நிறைந்தவன், ஸவா ஏஷ꞉ - அந்த இந்த விஞ்ஞானமயனனவன், புருஷவித ஏவ - புருஷனுடைய வுருவமுள்ளவன்தான், தஸ்ய - அந்த மனோமயனுடைய, புருஷவிததாம் - புருஷனுடைய உருவுள்ள தன்மையை, அந்வ - அனுஸரித்து, அயம், இந்த விஞ்ஞானமயனும், புருஷவித꞉ - புருஷனுடைய உருவுள்ளவன்- தஸ்ய-அந்த விஞ்ஞானமயனுக்கு, ஶ்ரத்தைவ - சிரத்தைதானே, ஶிர꞉ - சிரம், ருதம் - மெய்யான சப்தமே, தக்ஷிண꞉ - வலது, பக்ஷ꞉ - பக்கம், ஸத்யம் - அர்த்தத்தின் மெய்யானது, உத்தர꞉ - இடது, பக்ஷ꞉ - பக்கம், யோக꞉ - சமாதானமானது, (ஸ) யோக꞉ ஆத்மா இதி உக்தம் - என்று சொல்லப்பட்ட அறிவு, ஆத்மா - ஆத்மா, மஹ꞉ - மகாந் என்று சொல்லப்பட்ட தத்வமானது, (ஸ) மஹ꞉ - மேற்கூறிய யோகத்தின் விரோதிகளைத் தடுக்கும் சாமர்த்தியம், ப்ரதிஷ்டா - ஆதாரமான, புச்சம் - வால், தத் - அந்த வர்த்தத்தில், ஏஷ꞉ - இந்த, ஶ்லோக꞉ அபி - சுலோகமும், பவதி - இருக்கிறது.

(ஶா - ஸா.) மனோமயனை ஆத்மாவை அறியவும் சொல்லவும் வேறொருமனது முதலியதில்லை யாதலாலும் தன்னைத்தானறிய நிலமில்லாமையாலும், மேற்கூறிய மனோமயனை வாக்குக்கும் மனதுக்கும் நிலமில்லாதவனென்று சொல்லுகிறது. மேற்கூறிய தியானத்திற்குப் பயனான ஆனந்தத்தை யறிகிறவன் கர்ப்பவாஸம் முதலிய துன்பங்களுக்கு பயப்படான் என்று சொல்லுகிறது. மனோமயனை ஆத்மா வேதங்களின் உருவமென்று சொல்லப்பட்டதால், அர்த்தவேதங்களின் உண்மையான அறிவையே விஞ்ஞானமயமென்று சொல்லப்படுகிறது. அது மனதின் செயலானதால் மேல் இந்த விஞ்ஞானமே யக்யங்களைச் செய்கிறது என்று சொல்லப்போகிறது. வேதங்களின் பொருள்களை முடிவாக அறிந்து யக்யம்செய்யவேண்டுமென்பதை நினைத்து; இப்படி முடிவான அறிவுள்ளவனுக்கு ஒவ்வொரு காரியத்திலும் சிரத்தை முற்பட்டதாகையால் அதைச் சிரமாகவும் சமாதானமுள்ளவனுக்கு அங்கமாக சிரத்தையிருந்தால், உண்மையான பொருளை யறிய சக்தியுண்டாகுமாதலால், யோகமென்கிற சமாதனத்தை ஆத்மாவாகவும் மகான்

என்கிற தத்வமானது "மஹத்யக்ஷம்ப்ரதமஜம்வேத" என்று சுருதியில் சொல்லியபடியே எல்லா அறிவுகளுக்கும் காரணமாகையால், தன்னிடத்திலுண்டான செடி மரம் முதலியவைகளுக்கு பூமி எவ்வண்ணமாக வாதாரமோ அவ்வண்ணமாக அதுவே ஆதாரமாகையால் மகானை புச்சமாகச்சொல்லப்பட்டது.

(ஸா - ஹா.) யாதொரு ப்ரத்தினுடைய ஆனந்தத்தில் நின்றும் வாக்கும் மனதும் இவ்வளவுதான் முடிவு என்கிற கரையை யடையாமல் திரும்பிவிடுகின்றன, அப்படிப்பட்ட ப்ரம்மத்தின் ஆனந்தத்தை, "த்ருஶ்யதே த்வக்ர்யயா புத்த்யா; மநஸா து விஶுத்தேந" என்கிறபடியே பரிசுத்தமான மனதினால் அறிந்தவன் ஒருகாலத்திலும் பயப்படமாட்டான். இந்த ப்ரம்மானந்தத்தைப்பற்றியும் புகழ்ந்தபோலும் பரிசுத்தமான மனதாலறியவேண்டுமென்று சொல்லியிருத்தலால், மனோமயனைக் குறித்தும் சொல்லப்பட்டதென்று கருத்து. அன்னமயன் ப்ராணமயன் மனோமயன் இம்மூன்றுகளுக்கும், ஆத்மாவொருவன் அவன்யார் என்றால் விஜ்ஞானமயன் என்று சொல்லப்பட்ட ஜீவன் (மய) என்கிற விகுதியிருத்தலால் அதின் பகுதியான அறிவையுடைகிறவனைக் காட்டுகிறது. அவன் ஜீவன் இங்கு அன்னமயன் தொடங்கி சொல்லப்பட்ட ஆத்மாக்களுக்கு அவைகளின் அவயவங்களையே தலைமுதலிய உருப்புகளாக ரூபித்து விஜ்ஞானமயனுக்குமட்டில் அவனில் வேறுபட்ட சிரத்தை முதலியவைகளை சொல்வது கூடுமோவென்னில், சிரத்தை முதலிய பதங்களுக்கு அந்தந்த குணங்களையுடைய புருஷனே பொருளாதலால் விரோதமில்லை.

விஜ்ஞாநம் யஜ்ஞம் தநுதே | கர்மாணி தநுதேபி ச | விஜ்ஞாநம் தேவாஸ்ஸர்வே | ப்ரஹ்ம ஜ்யேஷ்டமுபாஸதே | விஜ்ஞாநம் ப்ரஹ்ம சேத்வேத | தஸ்மாச்சேந்ந ப்ரமாத்யதி | ஶரீரே பாப்மநோ ஹித்வா | ஸர்வாந் காமாந் ஸமஶ்நுத இதி | தஸ்யைஷ ஏவ ஶாரீர ஆத்மா | ய: பூர்வஸ்ய ||௧||

தஸ்மாத்வா ஏதஸ்மாத்விஜ்ஞாநமயாத் | அந்யோ‌உந்தர ஆத்மா‌உ‌ஆநந்தமய: | தேநைஷ பூர்ண: | ஸ வா ஏஷ புருஷவித ஏவ | தஸ்ய புருஷவிததாம் | அந்வயம் புருஷவித: | தஸ்ய ப்ரியமேவ ஶிர: | மோதோ தக்ஷிண: பக்ஷ: | ப்ரமோத உத்தர: பக்ஷ: | ஆநந்த ஆத்மா ||௨|| ப்ரஹ்ம புச்சம் ப்ரதிஷ்டா | ததப்யேஷ ஶ்லோகோ பவதி | இதி பஞ்சமோ‌உநுவாக: ||

విజ్ఞానంయజ్ఞంతనుతే। కర్మాణితనుతేపిచ। విజ్ఞానం దేవాస్సర్వే। బ్రహ్మజ్యేష్ఠముపాసతే। విజ్ఞానంబ్రహ్మచేద్వేద। తస్మాచ్చేన్నప్రమాద్యతి। శరీరేపాప్మనోహిత్వా। సర్వాన్కామాన్సమశ్నుతఇతి। తస్యైషఏవశారీరఆత్మా। యఃపూర్వస్య॥౧॥

తస్మాద్వాఏతస్మాద్విజ్ఞానమయాత్। అన్యోంతరఆత్మానందమయః। తేనైషపూర్ణః। సవాఏషపురుషవిధఏవ। తస్యపురుషవిధతాం। అన్వయంపురుషవిధః। తస్యప్రియమేవశిరః। మోదోదక్షిణఃపక్షః। ప్రమోదఉత్తరఃపక్షః। ఆనందఆత్మా॥౨॥ బ్రహ్మపుచ్ఛంప్రతిష్ఠా। తదప్యేషశ్లోకోభవతి॥

(ப் - ம்.) விஜ்ஞாநம்-மேற்கூறிய முடிவான அறிவையுடையவன், (ஸம்) ஜ்ஞாநம் - ஜீவனானது, யஜ்ஞம் - யக்யத்தை, தநுதே - பண்ணுகிறது

கர்மாணி - காரியங்களை, தநுதெவிவ-செய்யவும் செய்கிறது. ஸவெ எல்லா, தெவா - தேவர்களும், ஜெஷ்டம் - எல்லாக்காரியங்களுக்கும் முதன்மையான, விஜ்ஞாநம் - மேற்கூறிய அறிவையே, ப்ரஹ்ம-ப்ரம்மமாக, உபாஸதெ - தியானம் செய்கிறார்கள், (ஸ) ப்ரஹ்மஜெஷ்டம் - ப்ரம்மம் என்று சொல்லப்பட்ட ப்ரக்ருதியைக்காட்டிலு முயர்ந்ததான, விஜ்ஞாநம் - ஜீவனை, உபாஸதெ - தியானம் செய்கிறார்கள், விஜ்ஞாநம்-விஞ்ஞானத்தை, ப்ரஹ்ம-ப்ரம்மமாக, வெதவெத் - அறிவானேயானால், தஸ்மாத் - அந்த தியானத்தில் நின்றும், நப்ரமாத்யதிவெத் - பிசகாமலிருப்பனேயானால், ஶரீரெ - உடலில், பாப்மநஃ - பாவங்களை, ஹித்வா - விட்டு, (ஶ) ஶரீரெ - உடலானது, (வர்த்தமாநவ - இருக்கும் காலத்திலேயே), பாப்மநஃ - பாவங்களை, ஹித்வா - விட்டு, ஸர்வாந் - எல்லா, காமாந் - சுகங்களை, ஸமஶ்நுதெ - அனுபவிக்கிறான், இதி - என்று, தஸ்ய - அந்த விக்யானமயனுக்கு, ஏஷஃ - இந்த வானந்தமயன்தானே, ஶாரீரஃ - சரீரத்தினுண்டான, ஆத்மா - ஆத்மா, யஃ - யாதொருவன், பூர்வஸ்ய - முன் விஞ்ஞானமயனுக்கு ஆத்மாவோ, தஸ்மாத்வா ஏதஸ்மாத் - அந்த இந்த, விஜ்ஞாநமயாத் - விக்யானமயனைக் காட்டிலும், அந்யஃ - வேறுபட்ட, அந்தரஃ - உள்ளிருக்கிற, ஆத்மா - ஆத்மாவானவன், ஆநந்தமயஃ - ஆனந்தமயனென்று பெயர் கொண்டவன், தெந - அந்த வானந்தமயனாலே, ஏஷஃ - இந்த விக்யானமயன், பூர்ணஃ - நிறைந்தவன், ஸவா ஏஷஃ - அந்த இந்த வானந்தமயனும், புருஷவிதஏவ - புருஷனுருவமுள்ளவன்தான், தஸ்ய - அந்த விஞ்ஞானமயனுடைய, புருஷவிததாம் - புருஷனுருவமுள்ள தன்மையை, அநு - அநுஸரித்து, அயம்-இந்த வானந்தமயனும், புருஷவிதஃ - புருஷனுருவமுள்ளவன், தஸ்ய - அந்த வானந்தமயனுக்கு, ப்ரியமெவ - இஷ்டவஸ்துக்களைப் பார்க்கிறதாலுண்டான சுகமே, ஶிரஃ - தலை, மோதஃ - அதை யடைவதாலுண்டான சுகம், தக்ஷிணஃ - வலது, பக்ஷஃ - பக்கம், ப்ரமோதஃ - மேற்கூறியப் பிரியவஸ்துவை இஷ்டப்படி யுபயோகப்படுத்துவதாலுண்டான சுகம், உத்தரஃ - இடது, பக்ஷஃ - பக்கம், ஆநந்தஃ - மிகுந்த சுகமானது, ஆத்மா - நடுவுடன், ப்ரஹ்ம - ப்ரம்மமானது, ப்ரதிஷ்டா-ஆதாரமான, புச்சம் - வால், தத் - அந்த வர்த்தத்தில், அபி - இந்த, ஶ்லோகஃ - சுலோகமும், பவதி - இருக்கிறது.

(பாஷ - ஹா.) எல்லா மனிதர்களும் எல்லாக் காரியங்களை முற்படவறிந்து சிரத்தையுண்டாய் பிறகு செய்கிறார்களாகையால், எல்லாக் காரியங்களுக்கும் அறிவே முதன்மையான காரணம். ஆகையால் ஞானத்தையே ப்ரம்மமாக எவன் தியானிக்கிறானோ, அந்த அறிவைவிட அன்னமயாதிகளில் ஆத்மாவென்கிற அறிவைச் செலுத்தாமலிருக்கிறானோ அவன் தலையில் பிடித்த குடையை எடுத்தால் அதின் நிழல் தன்னடியே நீங்கு

வதுபோல், சரீரமே ஆத்மாவென்கிற எண்ணம் நீங்கினபடியால் அதிலுண்டான பாவம் தானே நீங்கி அந்த பாவங்களைச் சரீரத்திலேயேவிட்டு ஞானமயமான ப்ரம்மத்தோடொன்ருய் எல்லா சுகங்களையுமனுபவிக்கிருன். அந்த விஞ்ஞானமயனை ஆத்மாவைக் காட்டிலும், உள்ளிருக்கிறவன் ஆனந்தமயன் என்று பெயர்கொண்ட ஆத்மா இங்கு ஆனந்தமயனென்றது ப்ரம்மத்தையன்று. ஏனெனில் (மய) என்கிற விக்ருதியிருத்தலால் அந்த விகுதியும் ஒன்றிலிருந்து உண்டானதை (அன்னமய) என்கிற இடத்தில் அன்னத்திலிருந்துண்டான சரீரத்தைச் சொல்வதுபோல் சொல்லுமாதலாலும், "ஆநந்தமயமாத்மாநமுபஸம்க்ராமதி" என்று மேல் ஆத்மாவினுல் அடையவேண்டியதாகச் சொல்லுகையால் ப்ரம்மம் எல்லாவிடத்திலும் நிறைந்ததாதலால் அடையவேண்டிய ஆத்மாவோடொன்ருகையால் அடையவேண்டியதாகாமையாலும், "அதுஸ்யேஅநாமய்யேஅநிருக்தே; அஸ்தூலமநணு" என்கிற சுருதிகளால் அவயவமில்லையென்று ஏற்படுவதால் இங்கு,தலை முதலிய உருவங்கள் சொல்லி யிருத்தலாலும், "ப்ரம்மபுச்சம்ப்ரதிஷ்டா" என்று ப்ரம்மத்தைத் தனியாக மேற்கூறிய ஆனந்தமயனுக்கு ஆதாரமாகச் சொல்லுதலாலும், இங்கு ஆனந்தமயனென்பது. மேற்கூறிய தியானங்களினுலும் கர்மங்களினுலும் உண்டான பயன்களை அனுபவிக்கும்போது உண்டான சுகத்தைச் சொல்லுகிறது. மேற்கூறிய சுகங்களுக்காகவே கர்மங்களும் தியானங்களும் செய்யப்படுதலால,மேற்கூறிய விக்யானமயனுக்கு ஆனந்தமயன் ஆத்மாவென்பது நியாயமே. மேற்கூறிய ஆனந்தங்களுக்கு அவித்தையால் செய்யப்பட்ட பேதங்களுக்கெல்லாம் கடைசியாய் அத்வைதமான ப்ரம்மமே ஆதாரம்.

(ரா-ஹா.) இங்கு விஞ்ஞானமென்று சொன்னது முன்னனுவாகத்தில் விஞ்ஞானமயனென்று சொல்லப்பட்ட ஜீவனையே ஆத்மாவின் ஸ்வரூபம் தனக்குத்தானே விளங்குகிறதாதலால் ஞானமென்றே சொல்லவேண்டியது. மேலும், "அத்யல்லயுடோபஹுலம்" என்கிற வியாகரண சூத்திரத்தின்படியே அறிகிறவன் என்கிற பொருளையும், (விஞ்ஞாநம்) என்கிற பதமானது கொடுக்கும் மேற்கூறிய பதம் அறிவு என்கிற வர்த்தத்தைத் தருமாகில், "யஞ்ஞாம்தநுதே கர்மாணிசநுதேபிச" என்று உலக நடவடிக்கைகளையும் யக்யம் முதலிய வேதத்தில் ஓதப்பட்ட காரியங்களையும் செய்கிறது என்கிறது விரோதிக்கும் அந்தர்யாமி ப்ராம்மணத்தில் மாத்தியந்தின பாடத்தில், "யஆத்மநிதிஷ்டன்" என்று சொல்லியிருக்கிறது. காண்வபாடத்தில் அதேயாத்மாவைச் சொல்லவேண்டிய விடத்தில், "யோவிஞ்ஞாநேதிஷ்டன்" என்று சொல்லியிருக்கிறது. ஆகையால், "விஞ்ஞாந" என்பது ஆத்மாவைச் சொல்லுகிறது. ப்ரக்ருதியைக்காட்டிலு முயர்ந்த ஜீவனை எவன் ப்ரசாபதிவாக்யத்தில் சொல்லியிருக்கிறபடி ஜீவனை ப்ரம்மமாக தியானம் செய்கிருனே,எவன் அந்ததியானத்தில்நின்றும் கடைசிவரையில்நழுவாமலிருக்கிருனே, அவன் இந்த சரீரமிருக்கிற காலத்திலேயே முன்செய்த பாவங்களை தன்னைவிட்டு நீக்கி பின் செய்யப்புகுகிற பாவங்களையும் தன்னிலொட்டாமற் செய்து எல்லா சுகங்களையுமனுபவிக்கிருன். அந்த ஆத்மாவுக்கு முள்ளிருக்குமது வானந்தமயன் என்று சொல்லப்பட்ட ப்ரம்மம் இங்கு ஆனந்தத்தை நடுவுடலாகவும், ப்ரம்மத்தைப் புச்சமாகவும் பிரித்துச் சொல்லியிருக்கிறபடியால், ஆனந்தமே ப்ரம்மமென்று சொல்லவெப்படி யெனில்; ப்ரம்மமும் ஆனந்தமும் ஒன்ருயிருந்தபோதிலும்,ப்ரம்மமே ஆனந்தமென்று பெயர்கொண்டதாய் நடுவுடலாகவும், ப்ரம்மமென்று பெயர்கொண்டதாய் புச்சமாகவுமிருக்கக் குறையில்லை. ப்ரம்மம் ஆனந்தமாகில் ஆனந்தமயனென்று ஆனந்தத்தால் வியாபரிக்கப்பட்டவனென்று சொல்லக் கூடுமோவென்னில், மேல் தலை முதலிய அவயவங்களாக ரூபிக்கப்பட்ட ப்ரியம் முதலிய உட்பிரிவுகளால் வியாபரிக்கப்பட்டவன் என்று சொல்லக் குறையில்லை. மேலும், "ப்ரம்மவிதாப்நோதிபரம்" என்று தொடங்கி கடைசியில்,

“ப்ரம்மபுச்சம்ப்ரதிஷ்டா” என்று ப்ரம்மத்தை அவயவமாக எடுத்தபடியால் ப்ரம்மமே ஆனந்தமயனென்று ஏற்படுகிறது.

அஸந்நேவ ஸ ப⁴வதி | அஸத்³ப்³ரஹ்மேதி வேத³ சேத் | அஸ்தி ப்³ரஹ்மேதி சேத்³வேத³ | ஸந்தமேநம் ததோ விது³ரிதி | தஸ்யைஷ ஏவ ஶாரீர ஆத்மா | ய꞉ பூர்வஸ்ய | அதா²தோ(அ)நுப்ரஶ்நா꞉ | உதாவித்³வாநமும் லோகம் ப்ரேத்ய | கஶ்சந க³ச்ச²தி | ஆஹோ வித்³வாநமும் லோகம் ப்ரேத்ய ||க|| கஶ்சித் ஸமஶ்நுதா ||உ||௩||

ஸோ(அ)காமயத | ப³ஹு ஸ்யாம் ப்ரஜாயேயேதி | ஸ தபோ(அ)தப்யத | ஸ தபஸ்தப்த்வா | இத³ꣳ ஸர்வமஸ்ருஜத | யதி³த³ம் கிஞ்ச | தத்ஸ்ருஷ்ட்வா | ததே³வாநுப்ராவிஶத் | தத³நுப்ரவிஶ்ய | ஸச்ச த்யச்சாப⁴வத் | நிருக்தம் சாநிருக்தம் ச | நிலயநம் சாநிலயநம் ச | விஜ்ஞாநம் சாவிஜ்ஞாநம் ச | ஸத்யம் சாந்ருதம் ச ஸத்யமப⁴வத் | யதி³த³ம் கிஞ்ச | தத்ஸத்யமித்யாசக்ஷதே | தத³ப்யேஷ ஶ்லோகோ ப⁴வதி | இதி ஷஷ்டோ²(அ)நுவாக꞉ ||

అసన్నేవ స భవతి । అసద్బ్రహ్మేతి వేద చేత్ । అస్తి బ్రహ్మేతి చేద్వేద । సంతమేనం తతో విదురితి । తస్యైష ఏవ శారీర ఆత్మా । యః పూర్వస్య । అథాతోఽనుప్రశ్నాః । ఉతావిద్వానముం లోకం ప్రేత్య । కశ్చన గచ్ఛతి । ఆహో విద్వానముం లోకం ప్రేత్య ॥౧॥ కశ్చిత్సమశ్నుతా॥ 3॥

౬॥ సోఽకామయత । బహు స్యాం ప్రజాయేయేతి । స తపోఽతప్యత । స తపస్తప్త్వా । ఇదగ్ సర్వమసృజత । యదిదం కించ । తత్సృష్ట్వా । తదేవానుప్రావిశత్ । తదనుప్రవిశ్య । సచ్చ త్యచ్చాభవత్ । నిరుక్తం చానిరుక్తం చ । నిలయనం చానిలయనం చ । విజ్ఞానం చావిజ్ఞానం చ । సత్యం చానృతం చ సత్యమభవత్ । యదిదం కించ । తత్సత్యమిత్యాచక్షతే । తదప్యేష శ్లోకో భవతి॥ అను॥ ౬॥

(ப - ம்.) ப்³ரஹ்ம - ப்ரம்மமானது, அஸத் - இல்லை, இதி - என்று, வேத³ சேத் - அறிகிறானேயானால், ஸ꞉ - அவன், அஸந்நேவ - இல்லாதவனாகத்தானே, ப⁴வதி - ஆகிறான், ப்³ரஹ்ம - ப்ரம்மமானது, அஸ்தி - இருக்கிறது. இதி - என்று, வேத³ சேத் - அறிகிறானேயானால், ஏநம் - இவனை, தத꞉ - அந்தகாரணத்தால், ஸந்தம் - இருக்கிறவனாக, விது³꞉ - அறிகிறார்கள், இதி - என்று, அதை ஶ்லோக꞉ - என்பதில் சேர்க்கவும், தஸ்ய - அந்த விஞ்ஞானமயனுக்கு, ஏஷ ஏவ - இந்த ஆனந்தமயன்தானே, ஶாரீர꞉ - சரீரத்திலிருக்கிற; ஆத்மா - ஆத்மா, ய꞉ - எவன், பூர்வஸ்ய - மேல்கூறிய விஞ்ஞானமயனுக்கோ, அத² - பிறகு, அத꞉ - ப்ரம்மம் எல்லா வியவகாரத்தையும் தாண்டினதென்கிற காரணத்தால், அநு - ஆசிரியன் சொன்னதற்குப் பிறகு, ப்ரஶ்நா꞉ - சிஷ்யனுடைய கேள்விகள், உத அவித்³வாந் - மேற்கூறிய ப்ரம்மத்தை யறியாதவனும், அமும் - இந்த, லோகம் - ப்ரம்மத்தை, ப்ரேத்ய - இவ்விடத்தில் நின்றும்போய், க³ச்ச²தி - அடைகிறானா; ஆஹோ - இல்லா

விட்டால், வித்வாந் - அறிந்தவன், ப்ரேத்ய - இவ்விடத்திலும் நின்றும் போய், அமும் - இந்த, லோகம் - ப்ரம்மத்தை, ஸமஶ்நுதே - அடைகிறான், (வா) வித்வாந் - மேற்கூறிய ப்ரம்மத்தை தியானம் செய்கிறவன்,(இத:- இவ்விடத்தில் நின்றும்), ப்ரேத்ய - போய், அமும் - அந்த, லோகம் - பரமபதத்தை, கச்சதி - அடைகிறான், ஆஹோ - இல்லாவிடில், வித்வாந் - மேற்கூறிய ப்ரம்மத்தைத் தியானம்செய்கிறவன், (இத: - இவ்விடத்திலிருந்து), ப்ரேத்ய - போய், அமும் - அந்த, லோகம் - ப்ரம்மத்தை, ஸமஶ்நுதே - அனுபவிக்கிறான், ஸ: - அந்த பரமாத்மாவானவன், பஹு - அநேகமாக, ஸ்யாம் - ஆகக்கடவேன், ப்ரஜாயேய - உண்டாகக்கடவேன், இதி - என்று, அகாமயத - இச்சித்தது, ஸ: - அந்த பரமாத்மாவானவன், தப: - ஆலோசனையை, அதப்யத - பண்ணினான், ஸ: - அந்த பரமாத்மாவானவன், தப: - ஆலோசனையை, தப்த்வா - செய்து, இதம் - இந்த, ஸர்வம் - எல்லாத்தையும், அஸ்ருஜத - ஸ்ருஷ்டித்தான், இதம் - இந்த, யதிதம் - எதுவெதுவோ, தத் - அதை, ஸ்ருஷ்ட்வா - படைத்து, ததேவ - அதையே, அநுப்ராவிஶத் - உள் நுழைந்தது, தத் - அதை, அநுப்ரவிஶ்ய - உள் நுழைந்து, ஸச்ச - உருவமுள்ள வஸ்துக்களாயும், த்யச்ச - உருவமில்லாத வஸ்துக்களாயும், அபவத் - ஆச்சுது, நிருக்தம் ச - பெயரிடப்பட்ட வஸ்துக்களாயும், அநிருக்தம் ச - பெயரில்லாத வஸ்துக்களாயும், நிலயநம் ச - ஒன்றுக்காதாரமான வஸ்துவாயும், அநிலயநம் ச - ஒன்றுக்காதாரமில்லாத வஸ்துவாயும், விஜ்ஞாநம் ச - அறிவுள்ள வஸ்துவாகவும், அவிஜ்ஞாநம் ச - அறிவில்லாத வஸ்துவாகவும், ஸத்யம் ச - வியவகாரதசையில் சத்தியமென்று சொல்லப்பட்ட பொருளாகவும், அந்ருதம் ச - வியவகாரதசையில் பொய்யான பொருளாகவும் ஸத்யம் - சத்தியமான ப்ரம்மமானது, அபவத் - ஆச்சுது, இதம் - இந்த, யதிதம் - எதுவெதுவோ, தத் - அந்தப் பொருள்களை, ஸத்யமிதி - சத்தியம் ஒன்றே, ஆசக்ஷதே - சொல்லுகிறார்கள், தத் - அந்த வர்த்தத்தில், அபி - இந்த, ஶ்லோக: - சுலோகமும், பவதி - இருக்கிறது. (வா) ஸச்ச - எப்பொழுதும் ஒரேரூபமாயிருக்கிற ஜீவனையும், த்யச்ச - எப்பொழுதும் மாறிமாறிவருகிற வஸ்துவாகவும், நிருக்தம் ச - அவ்வவைகளின் சாதி தொழில் குணம் இவைகளால் ஏற்பட்ட பெயரையுடைய வஸ்துவாகவும், அநிருக்தம் ச - மேற்கூறிய சாதி தொழில் குணம் இவைகளில்லாமையால் அப்பெயர்களால் சொல்லப்படா ஆத்மாவாகவும் நிலயநம் ச - ஒன்றை ஆதாரமாக வடைந்திருக்கிற வஸ்துக்களும், அநிலயநம் ச "ந தாஸ்வேதேஷு ப்ரஜாஸ்வேதேஷு ப்ரஜாஸ்வவஸ்திதா:" - என்று சொல்லியிருக்கிறபடி அறிவில்லாத வஸ்துக்களுக்காதாரமான ஜீவனாகவும், விஜ்ஞா

நம் - தானே ப்ரகாசிக்கும் தன்மையுடைய வஸ்துவாகவும், விஜ்ஞாநம் - பிறர்க்கு வேறொன்றினால் தோற்றும் பொருளாகவும், ஸத்யம் - விகாரமில்லாத வஸ்துவாகவும், அந்ருதம் - விகாரமுடைய வஸ்துவாகவும், அப வத் - ஆயிருந்தபோதிலும், ஸத்யம் - தானெப்பொழுதும் விகாரமில்லாத மில்லாத உருவத்தோடு கூடினதாக, அபவத் - ஆச்சுது, இதம் - இந்த, யத் கிஞ்ச - எதுவெதுவோ, தத் - அதை, ஸத்யம் - ப்ரம்மத்தின் சரீரமென்றே, இத்யாசக்ஷதே - சொல்லுகிறார்கள்.

(ஸ0 - ஹா.) ப்ரம்மமில்லை யென்றறிந்தவனுக்குப் பயனொன்றுமில்லை யாதலால் அவனிருந்து மில்லாததற்குச் சரியானவன் ப்ரம்மமுண்டென்றறிந்தவன் எல்லாப் பயனையுமடைவானாதலால், அவனே இருப்பையுடையவன்மேலும் ப்ரம்ஹ்வமுண்டென்றறிந்தால் ப்ரம்மத்தையுள்ளபடி யறிவதற்குறிய வர்ணம் ஆசிரமம் இவைகளின் கர்மங்களை செய்யாமையால் அவன் கெட்டவன். ப்ரம்மமுண்டென்று அறிந்தவனே அதையுள்ளபடி அறிவதற்குறிய மேற்கூறிய வர்ணாதிகளின் கர்மங்களை செய்கிறானதால் அவன் நல்லவன். இதற்குமேல் சிஷ்யனுடைய கேள்விகள்: அவைகளாவன. ப்ரம்மம் அறிந்தவனுக்கும் அதையறியாதவனுக்கும் பொதுவாகையால் இவரிருவர்களும் ப்ரம்மத்தை யடைகிறார்களா? இல்லையா? என்பது இதில், "அஸந்ப்ரம்மேதிவேதசேத்; அஸ்திப்ரம்மேதி சேத்வேத" ப்ரம்மம் இல்லையென்றுணர்ந்தானே யாகில் ப்ரம்மமுண்டென்றுணர்ந்தானே யாகில் என்றிரண்டையும் சொல்லியிருக்கிறதே அதில் ப்ரம்மம் உண்டென்பது மெய்யா? அல்லது இல்லையென்பது; மெய்யா? என்பது முதன்மையான சந்தேகம் இவற்றில் ப்ரம்மமில்லை யென்பதே மெய். ஏனெனில் எதுவுலகத்திலிருக்கிறதோ அது உலகத்தாருக்கு செம்மையாய்த் தெரிந்திருக்கும் எப்படியெனில் வீடு மரம் குன்று இவைகள் உளதாகையாலுலகத்தாருக்கு செம்மையாய்த் தெரிந்திருக்கிறது. முயலின் கொம்போவென்றால் அவ்வஸ்து வில்லாமையாலொருவருக்கும் தெரியவில்லை. அப்படியே ப்ரம்மமும், "யத்ததத்ரேஸ்யமஸ்ராஹ்ய" மென்கிறபடியே உலகத்தாராலறியக் கூடாமையாவில்லையென்றே சொல்லக்கூடும். என்பதற்குமேல் சமாதானம் சொல்லப்படுகிறது. ப்ரம்மமுண்டென்பதே மெய். ஆகாயம் முதலிய எல்லாப்பொருள்களுக்கும் காரணமாயிருத்தலால், எதுகாரணமோ அதுதானிருந்தே தன் காரியத்தை யுண்டுபண்ணும், அதெப்படியெனில், மண் விதை முதலிய வஸ்துக்கள், குடம் மரம் முதலிய காரியங்களைத் தானிருந்தே யுண்டாக்கின்றன. அம்மாதிரியே ப்ரம்மமும் தானிருந்துதான் ஆகாயம் முதலிய காரியங்களைச் செய்திருக்கவேண்டும். ஆதலால் தான், "ததமஸதஸ்ஸஞ்ஞாயேத" என்று சுருதியில் சொல்லியிருக்கிறது. ஆனால் மண் விதை இவைகளைப்போல் ப்ரம்மமும் காரணமென்றுரைத்தால் அவைகளைப்போல அதுக்கு அறியுந்தன்மையில்லாதிருக்கவேண்டாவோ வென்னில், "ஸோகாமயத" என்றுரைசைப்படுகிற தென்று சொல்லியிருக்கிறபடியால் ஆசைப்படுவதற்கு அறிவு அவசியமிருக்கவேண்டுமாதலாலும், அப்ரம்மத்திற்கு அறியுந்தன்மையுண்டென்றே சொல்லவேண்டும் ப்ரம்மம் அவயவமில்லாததாகையால் தானே அனேகங்களாக ஆய்விட்டதென்று சொல்லுவது கூடுமோவென்னில், ஆகாயம் அவயவமில்லாதிருந்தபோதிலும், குடத்தில் அடங்கிய ஆகாயமென்றும், வீட்டில் அடங்கிய ஆகாயமென்றும், தனித்தனியே பிரிந்து தோன்றி சிறியது பெரியது வென்று எப்படி வியவகாரமுண்டாகிறதோ, அப்படியே ப்ரம்மத்திற்கும் வேறு வஸ்துக்களின் சம்பந்தத்தால் பேதங்கள் புலப்படுகின்றன. ஆகையால் ஒன்றையே பலவகை

யாகப் பிரித்துச்சொல்லுகைகூடும். ப்ரம்மமிவ்வுலகத்திலெல்லா வஸ்துக்களேயும் படைத்து அவற்றுள் தானுமைழந்ததென்று சொல்லப்பட்டிருக்கிறதே, அதெப்படி மண் தானே குடமாயின பிறகு அதற்குள் தானெப்படி நுழையும் தானே தன் வாய்க்குள் கையை நுழைப்பதுபோல் தானுன காரியத்தில் தானே நுழைந்ததென்னில், ப்ரம்மத்திற்கு அவயவங்களில்லாமையாலும், ப்ரம்மம் தான் வியாபரிக்காத விடமில்லாமையாலும், அது சரியல்ல ஜலத்தில் சூரியன் ப்ரதிபலிப்பதுபோல் தோற்றுகிறதென்னில், ப்ரம்மம் உலகமெல்லாம் நிறைந்தபொருளாகையாலும், உருவமில்லாததாகையாலும், சூரியனைப் போல் ப்ரதிபலிக்கிறதென்று சொல்லவொண்ணுது. ஆகையால் தன்காரியத்தில் தான் நுழைந்ததென்பதெப்படியெனில், "ஸத்யம்ஞ்ஞாநமநந்தம்ப்ரம்ம ; யோவேதநிஹிதம் குஹாயாம்" என்று அறிவென்கிற குகையிலிருப்பதாகப் பொதுப்படச்சொல்லி பிறகு அன்னமயன் முதலாக உள்ளிருக்கும் ஆத்மாக்களே விஞ்ஞானமயன் அளவாக விவரித்துச்சொல்லி அதன் பிறகு, "ப்ரம்மபுச்சம்ப்ரதிஷ்டா" என்று சொல்லி அறிவாகிற விஞ்ஞானமயனுக்குள் ப்ரம்மமிருப்பதாகக் கடைசியாய்ச் சொல்லியிருத்தலால், இங்கும் அந்த அறிவிலிருப்பதையே உள்நுழைந்திருப்பதாகச் சொல்லுகிறது. அதாவது ப்ரம்மமெல்லாவிடத்திலும் நிறைந்திருந்தபோதிலும், அந்த ப்ரம்மத்தை யறியுமிடம் மேற்கூறிய அறிவென்கிற குகையே ஆதலால் அதில் நுழைந்திருப்பதாகச் சொ

(ரா - ஹா.) "ப்ரம்மபுச்சம்ப்ரதிஷ்டா" என்று கீழ்ச்சொல்லி பிறகு, "அஸந்நேவஸபவதி" என்கிற விடத்தில் ப்ரம்மத்தையே சொல்லுகிறபடியால் கீழ் அன்னமயன் முதலான விடங்களில், அன்னம் பிராணன் என்று ஆரம்பித்துச் சொல்லுகிற வண்ணமாக இங்கும் ஆனந்தமயனேயே ப்ரம்மமாகச் சொல்லியதையே ஆரம்பித்தலால், ஆனந்தமயமே ப்ரம்மமென்று சொன்னதாயிற்று. இந்த ஆனந்தமயனுக்குள் வேறு ஆத்மா கிடையாது. இவனே அன்னமயன் முதலிய ஆத்மாக்களுக்கும் ஆத்மாவாகயிருப்பவன் என்பது ப்ரம்மத்தை இவனவயவமாகச் சொல்லியிருத்தலாலும், முன்னுத்மாக்களேப் போல், "தஸ்மாத்வாஏதஸ்மாதந்யோந்தரஆத்மா" என்று ஆரம்பிக்காமல் முடித்தலாலும் தோற்றுகிறது. இங்கு, "ப்ரம்மவிதாப்நோதிபரம்" என்கிற விடத்தில் சொல்லியிருக்கிற அடைதலே விவரிக்கிறதற்கு கேள்விகள் கேட்கப்படுகின்றன. அவைகளாவன, ப்ரம்மத்தைத் தியானம் செய்கிறவன், இந்த உலகத்திலிருந்தும்போய் பரமபதமென்கிற விடத்தையடைந்து ப்ரம்மத்தையடைகிருனு? அல்லது இவ்விடத்திலேயே அதையடைகிருனு? ப்ரம்மத்தை யனுபவிக்கிருனு? ப்ரம்மத்துடனென்ருகிருனு என்பவைகள். இவைகளுக்கு விடைகொடுக்க உலகங்களேப் படைப்பதற்குறிய குணங்களோடுகூடிய ப்ரம்மதை யடையவேண்டுமென்று சொல்லுவதற்காக முற்படவதின் படைப்பைச் சொல்லுகிறது. மேற்கூறிய பரமாத்மாதேவர் மனிதர் முதலியவர்களாக ஆகவேண்டிய ஆகாயம் முதலிய பூதங்களாக ஜனிக்கக்கடவேனென்று இச்சித்து அவைகளேப் படைத்து அவைகளுக்குள் தானும் நுழைந்தது. அதாவது, தான் எல்லா விடத்திலும் நிறைந்திருந்தபோதிலும் ஒவ்வொரு பொருள்களின் உள்ளிருக்கும் தன் ஸ்வரூபமே எல்லா குணங்களேயும் சக்திகளேயு முள்ளதென்றெண்ணும்படி அவைகளுக்குள் பொருந்தியவைகளுக்குள்ள ஆத்மாவாக நின்றது. இத்தால், "ஸத்யம்ஞ்ஞாநமநந்தம்ப்ரம்ம ; யோவேதநிஹிதம்குஹாயாம்" என்றதின் பொருள் விவரிக்கப்பட்டது. ஆதலால் எல்லாவற்றிற்கும் ப்ரம்மமே ஆத்மாவாயிருந்தபடியால், அப்படி ஆத்மாவாக விருந்தபோதிலும், அவைகளுக்குள் விகாரங்களால் சம்பந்தப்படாமலிருந்தமையாலும், ஸத்யமென்று பெயர்கொண்டது. ஆதலால் தான் பராசரமுதலிய விருஷிகள், "ஹரேர்நகிம்சித்தயதிரிக்தம்ஸ்தி ; ஜ்யோதிம்ஷிவிஷ்ணுர்புவநாநிவிஷ்ணுः" என்று சொல்லியிருக்கிருர்கள்.

𑌅𑌸𑌦𑍍𑌵𑌾 𑌇𑌦𑌮𑌗𑍍𑌰 𑌆𑌸𑍀𑌤𑍍 | 𑌤𑌤𑍋 𑌵𑍈 𑌸𑌦𑌜𑌾𑌯𑌤 | 𑌤𑌦𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌸𑍍𑌵𑌯𑌮𑌕𑍁𑌰𑍁𑌤 | 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌤𑌤𑍍𑌸𑍁𑌕𑍃𑌤𑌮𑍁𑌚𑍍𑌯𑌤 𑌇𑌤𑌿 | 𑌯𑌦𑍍𑌵𑍈 𑌤𑌤𑍍𑌸𑍁𑌕𑍃𑌤𑌂| 𑌰𑌸𑍋 𑌵𑍈 𑌸𑌃 | 𑌰𑌸𑌂 𑌹𑍍𑌯𑍇𑌵𑌾𑌯𑌂 𑌲𑌬𑍍𑌧𑍍𑌵𑌾𑌽𑌽𑌨𑌨𑍍𑌦𑍀 𑌭𑌵𑌤𑌿 | 𑌕𑍋 𑌹𑍍𑌯𑍇𑌵𑌾𑌨𑍍𑌯𑌾𑌤𑍍𑌕𑌃 𑌪𑍍𑌰𑌾𑌣𑍍𑌯𑌾𑌤𑍍 | 𑌯𑌦𑍇𑌷 𑌆𑌕𑌾𑌶 𑌆𑌨𑌨𑍍𑌦𑍋 𑌨 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍| 𑌏𑌷 𑌹𑍍𑌯𑍇𑌵𑌾𑌨𑌨𑍍𑌦𑌯𑌾𑌤𑌿 ||௧||

𑌯𑌦𑌾 𑌹𑍍𑌯𑍇𑌵𑍈𑌷 𑌏𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌨𑌦𑍃𑌶𑍍𑌯𑍇𑌽𑌨𑌾𑌤𑍍𑌮𑍍𑌯𑍇𑌽𑌨𑌿𑌰𑍁𑌕𑍍𑌤𑍇𑌽𑌨𑌿𑌲𑌯𑌨𑍇𑌽𑌭𑌯𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌾𑌂 𑌵𑌿𑌨𑍍𑌦𑌤𑍇 | 𑌅𑌥 𑌸𑍋𑌽𑌭𑌯𑌂 𑌗𑌤𑍋 𑌭𑌵𑌤𑌿 | 𑌯𑌦𑌾 𑌹𑍍𑌯𑍇𑌵𑍈𑌷 𑌏𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌨𑍁𑌦𑌰𑌮𑌨𑍍𑌤𑌰𑌂 𑌕𑍁𑌰𑍁𑌤𑍇 | 𑌅𑌥 𑌤𑌸𑍍𑌯 𑌭𑌯𑌂 𑌭𑌵𑌤𑌿 | 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑍇𑌵 𑌭𑌯𑌂 𑌵𑌿𑌦𑍁𑌷𑍋𑌽𑌮𑌨𑍍𑌵𑌾𑌨𑌸𑍍𑌯 | 𑌤𑌦𑌪𑍍𑌯𑍇𑌷 𑌶𑍍𑌲𑍋𑌕𑍋 𑌭𑌵𑌤𑌿 ||

అసద్వా ఇదమగ్ర ఆసీత్ । తతో వై సదజాయత । తదాత్మానగ్ స్వయమకురుత । తస్మాత్తత్సుకృతముచ్యత ఇతి । యద్వై తత్సుకృతం । రసో వై సః । రసగ్ హ్యేవాయం లబ్ధ్వాఽఽనందీ భవతి । కో హ్యేవాన్యాత్కః ప్రాణ్యాత్ । యదేష ఆకాశ ఆనందో న స్యాత్ । ఏష హ్యేవానందయాతి ॥౧॥

యదా హ్యేవైష ఏతస్మిన్నదృశ్యేఽనాత్మ్యేఽనిరుక్తేఽనిలయనేఽభయం ప్రతిష్ఠాం విందతే । అథ సోఽభయంగతో భవతి । యదా హ్యేవైష ఏతస్మిన్నుదరమంతరం కురుతే । అథ తస్య భయం భవతి । తత్త్వేవ భయం విదుషోఽమన్వానస్య । తదప్యేష శ్లోకో భవతి ॥

(ப - ம்.) 𑌇𑌦𑌂 - இவ்வுலகமானது, 𑌅𑌗𑍍𑌰𑍇 - படைப்புக்கு முற்காலத்தில், 𑌅𑌸𑌤𑍍 - பெயர் உருவமில்லாததாக, 𑌆𑌸𑍀𑌤𑍍 - இருந்தது, 𑌤𑌤𑍋 𑌵𑍈 - பிறகு தான், 𑌸𑌤𑍍 - பெயர் உருவமுள்ளதாக, 𑌅𑌜𑌾𑌯𑌤 - ஆச்சுது. 𑌤𑌤𑍍 - அந்த ப்ரம்மமானது, 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 - தன்னை, 𑌸𑍍𑌵𑌯𑌂- தான், 𑌅𑌕𑍁𑌰𑍁𑌤- எண்ணித்து, 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 - ஆகையால், 𑌤𑌤𑍍 - அந்த ப்ரம்மமானது, 𑌸𑍁𑌕𑍃𑌤𑌂 - தானே செய்கிறதென்று அல்லது புண்ணியமென்று, 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 - சொல்லப்படுகிறது. 𑌇𑌤𑌿 - என்று, இதை (𑌶𑍍𑌲𑍋𑌕𑌃) என்பதுடன் சேர்த்துக்கொள்ளுக, 𑌯𑌦𑍍𑌵𑍈 𑌤𑌤𑍍 - யாதொரு இந்த ப்ரம்மமானது, 𑌸𑍁𑌕𑍃𑌤𑌂 - சுக்ருதமென்று சொல்லப்பட்டதோ, 𑌸𑌃 - அதுவானது, 𑌰𑌸𑌃 - உருசி, (𑌵𑌾) 𑌰𑌸𑌃 - ஆனந்தம், 𑌅𑌯𑌂 - இந்த ஜீவனானவன், 𑌰𑌸𑌂 𑌹𑍍𑌯𑍇𑌵- உருசியைத்தானே, (𑌵𑌾) 𑌰𑌸𑌂 𑌹𑍍𑌯𑍇𑌵 - ஆனந்தமான ப்ரம்மத்தைத் தானே, 𑌲𑌬𑍍𑌧𑍍𑌵𑌾 - அடைந்து, 𑌆𑌨𑌨𑍍𑌦𑍀 - ஆனந்தத்தையுடையவனாக, 𑌭𑌵𑌤𑌿- ஆகிறான், 𑌏𑌷𑌃 - இந்த, 𑌆𑌕𑌾𑌶𑍇 - ஹிருதய குகையிலிருக்கும் ஆகாயத்தில், 𑌆𑌨𑌨𑍍𑌦𑌃 - ஆனந்தமானது, 𑌨 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍𑌯𑌦𑌿 - இல்லாமற்போய் விடுமேயானால், 𑌕𑌃 𑌹𑍍𑌯𑍇𑌵 - எவன்தான், 𑌅𑌪𑌾𑌨𑍍𑌯𑌾𑌤𑍍 - அபானவாயுவின் வியாபாரத்தைச் செய்யக்கடவன், 𑌕𑌃 - எவன், 𑌪𑍍𑌰𑌾𑌣𑍍𑌯𑌾𑌤𑍍 - பிராணவாயுவின் வியாபாரத்தைச் செய்யக்கடவன், (𑌵𑌾) 𑌏𑌷𑌃 - இந்த பரமாத்மாவானவன்,

